# A

# TRANSLATION IN TAMIL

OF THE

# RULINGS OF THE SUDDER UDALUT

**From 1805 to 1861.**

BY S. VADANAYAGUM PILLAI,

*District Moonsiff of Mayaveram.*

---

௲௮௱௫௵ முதல் ௲௮௬௰௧௵ வரையில் உள்ள

சதர்க்கோர்ட்டாரவர்களின்

# சித்தாந்தசங்கிரகம்.

மாயூரம் தாலூகா முன்சீப்

ச. வேதநாயகம் பிள்ளையால்

செய்யப்பட்டது.

MADRAS:

PRINTED AT THE SCOTTISH PRESS,—BY GRAVES AND CO.

1862.

# PREFACE.

THE necessity of an intimate acquaintance with the Rulings of the Sudder Udalut, on the part of Vakeels, suitors, and others who are in any way connected with the administration of Justice, cannot fail to be universally acknowledged. But these Rulings are interspersed through so many volumes, that even those who are familiar with the English language, and have Copies of those volumes within their reach, experience much difficulty in making themselves at home with the principles and rules laid down therein. Under these circumstances, it is not to be expected that parties unacquainted with the English language, will ever attempt a study of the Sudr decisions, and regulate their procedure in conformity thereto ; and it is therefore not a matter of surprise that these parties should frequently rush into Courts with such claims and pleas as have been repeatedly declared by the Sudder Court to be unsustainable in law, and thus expose themselves to the risk of unnecessary expense, trouble and other inconveniences. My position as a Moonsiff having afforded me frequent opportunities of observing all these anomalies, I have been induced to undertake the translation, in Tamil, of the Sudr Rulings from 1805 to 1861, for the benefit of those Judicial officers, pleaders and parties, who are ignorant of the English language. From a conviction of the immense labor and useless waste of time involved in the task of translating, verbatim, the Sudr decisions which extend over a period of nearly 60 years, I have contented myself with translating only such parts of them as embrace Rulings capable of universal application, except in some

cases where, for the sake of perspicuity, I have deemed it necessary to give an outline of details. At the end of each Ruling, the No. and year of the suit to which it relates, are given. To avoid unnecessary repetitions and for the purposes of easy reference, I have annexed to each chapter an alphabetical list showing the Nos. of all the Rulings bearing on the subject of that chapter, though they may have been inserted in different chapters. I have also, in proper places, brought in a great portion of the Rules of Practice recently promulgated by the Sudder Court.

This work will be found to contain precedents enough to meet a great majority of cases in which doubts generally arise; and it is hoped that the alphabetical arrangement of the subjects which I have adopted, will facilitate reference to any part of the work. It is my intention to publish the translation of the Rulings of 1862 and subsequent years at the end of each year.

S. VADANAYAGUM PILLAI.

MAYAVERAM,
*5th September* 1862.

# CONTENTS.

# முகவுரை.

---

வக்கீல்களும், வியாஜ்யக்காரர்களும், நியாயபரிபாலந விஷயத்தில் எவ்வகையிலாவது சம்பந்தப்பட்ட இதரர்களும், சதர்க்கோர்ட்டாரவர்களுடைய சித்தாந்தங்களை ஸ்பஷ்டமாக அறிந்திருக்க வேண்டியது அவசியமென்பது, ஸகலரும் அங்கீகரிக்கும்படியான விஷயமேயன்றி வேறல்ல. ஆனால் அந்தவிதிகள் அநேகபுஸ்தகங்களில் சிதறிக்கிடக்கிறபடியால், இங்கிலீஷ்பாஷை தெரிந்தவர்களும் அந்தப்புஸ்தகங்கள் ஸ்வாதீநம் உள்ளவர்களுங்கூட, அந்த விதிகளை அறிந்துகொள்வது மஹாபிரயாசமாயிருக்கின்றது. அப்படியிருக்க இங்கிலீஷ்தெரியாத வியாஜ்யக்காரர்கள் சதர்க்கோர்ட்டின் சித்தாந்தங்களை வாசித்து அந்தப்படி அநுஷ்டானம் செய்வது அசாத்தியமானபடியால், நியாயப்பிரமாணப்படி செல்லாதென்று சதர்க்கோர்ட்டாரவர்களால் பல பிரகிருதங்களில் நிஷித்தம் செய்யப்பட்டிருக்கிற ஸ்வரூபத்தையுடைய வியவகாரங்களுடனேயும், சம்வாதங்களுடனேயும் கட்சிக்காரர்கள் அடிக்கடி கோர்ட்டுகளுக்கு வருவதும் அதனால் விருதாவியயத்திற்கும் சிரமத்திற்கும் அசௌக்கியங்களுக்கும் அவர்கள் உள்ளாவதும் ஆச்சரியமான காரியமல்ல. இந்த அசந்தர்ப்பங்களையெல்லாம் அறியும்படியான சமயங்கள் என்னுடைய முன்சீப் உத்தியோகமூலமாக எனக்குக் கிடைத்திருப்பதால், ௧௮௦௫௵ முதல் ௧௮௬௨௵ வரையிலுள்ள சதர்க்கோர்ட்டின் ஸித்தாந்தங்களைத் திராவிடபாஷாரூபமாகச் செய்வது, இங்கிலீஷ் தெரியாத நியாயாதிபதிகளுக்கும் வக்கீல்களுக்கும் கட்சிக்காரர்களுக்கும் பிரயோஜநகரமாயிருக்குமென்றெண்ணி, அந்தப்படி பாஷாந்தரஞ்செய்ய உடன்பட்டேன். சற்றேறக்குறைய ௬௰௵-காலம்வரையில் விரிந்திருக்கிற ஷை ஸித்தாந்தங்களைப் பதம்பதமாய்ப் பூரணபாஷியம் செய்கிறதாயிருந்தால், விஸ்தாரமான பரிசிரமத்திற்கும் வியர்த்தகாலக்ஷேபத்திற்கும் ஹேதுவாகுமானதால், அந்தச் சித்தாந்தங்களில் சர்வலோக உபயுக்தமான விதிகள் அடங்கிய பாகங்களைமட்டும் மொழிபெயர்ப்பது போதுமென்றெண்ணி, அந்தப்படி சங்கிரஹம் செய்திருக்கிறேன். சிலவிஷயங்க

ளில் அர்த்தம் பிரகாசமாகும்பொருட்டு, வியவகாரவிஷயங்களைச் சங்க்ஷேபமா யெடுத்துக்காட்டவேண்டியது அகத்தியமென்று நினைத்து, அந்தப்படி விவரித்திருக்கிறேன். ஒவ்வொரு விதியின் அந்தத்தில் அதைச்சேர்ந்த வியாஜிய லக்ஷ்யமும் அருஷையும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு விஷயத்திற்குச் சம்பந்தமானவிதிகள் பல அதிகாரங்களில் கலந்துவருவதால், அந்த விதிகளையெல்லாம் ஒவ்வொரு அதிகாரத்திலும் அநாவசியகமாய்ப் புநருக்தி செய்யாமலிருக்கவேண்டியதற்காகவும், யாவரும் ஸூக்ஷ்மகிரஹணம் செய்யும்படியாகவும், ஒவ்வொரு அதிகாரத்தின் அடியில் அதற்கு அநுபந்தமானவிதிகளை இன்னின்ன அதிகாரங்களிற் காணலாமென்கிற விவரத்தை அகராதிவரிசையாய்க் காட்டியிருக்கிறேன். சதுர்க்கோர்ட்டாரவர்களால் நூதநமாய்ப் பிரசுரஞ்செய்யப்பட்ட "ரூல்ஸ்ஆப்பிராக்டைஸ்" என்கிற அநுஷ்டாநவிதிகளை அவைகளுக்குத் தகுதியான இடங்களில் அநேகமாகச் சேர்த்திருக்கிறேன். சந்தேஹம் ஜநிப்பிக்கத்தக்க அநேகவியாஜியங்களுக்குத்தகுந்த துணையான மூலவிதிகள் இந்தக்கிரந்தத்தில் அடங்கியிருப்பதுந்தவிர, ஒவ்வொரு அதிகாரமும் அகராதிக்கிரமமாய்ச் சேர்க்கப்பட்டிருப்பதால், இந்தக் கிரந்தத்தில் எந்தப்பாகத்தைப் பார்க்கவேண்டியிருந்தாலும் வாசிக்கிறவர்கள் எளிதாய்க் கண்டுகொள்வார்களென்று நம்புகிறேன். ௧௮௬௨ ௵ முதல் அதற்குப் பிந்தின வருஷங்களின் ஸித்தாந்தங்களைப் பிரதிவருஷாந்தத்திலும் பாஷாந்தரஞ்செய்து பிரசித்தம்செய்ய அபீஷ்டம் உள்ளவனாயிருக்கிறேன்.

மாயூரம்.
௧௮௬௨ ௵ செப்
டெம்பர் ௴ ௫௳.

ச. வேதநாயகம்பிள்ளை.
மாயூரம் முன்சீப்.

# அதிகார அட்டவணை.

பக்கம்.

# சங்கேதாக்ஷரவிவரணம்.

ச-அ-வி.—சதர்க்கோர்ட்டு அநுஷ்டான விதி.

ச-உ.—சதர்க்கோர்ட்டு உத்தரவு.

ச-டை.—சதர்க்கோர்ட்டு டைரி.

ச-பு.—சதர் புரொசீடிங்ஸ்.

ச-லெ.—சதர் லெட்டர்.

ச-வி.—சதர்க்கோர்ட்டு விதி.

நம்.—நம்பர்.

ப.—பக்கம்.

## அபத்தபரிஹாரம்.

| பக்கம். | வரி. | அபத்தம். | சுபத்தம். |
|---|---|---|---|
| ௩௪ | ௧௨ | நம் | நம்-௧ |
| ௭௪ | ௰ | பிரதிக்கிரஹணம் | பரிக்கிரஹணம் |
| ௮௦ | ௭ | அப்பீலில் | அப்பில் |
| ௧௦௬ | ௬ | கார்ணம் | காணம் |
| ௧௫௨ | ௨௫ | வேண்டும | வேண்டும் |
| ௧௫௭ | ௨௬ | உடை | உடையு |
| ௰ | ௰ | ஸபபத்திரி | ஸபத்திரி |
| ௨௦௭ | ௯௧ | அறுல் | ஆறல் |
| ௨௧௮ | ௯௨ | த்திர்மானிக்க | திர்மானிக்க |

சதர்க்கோர்ட்டாரவர்களுடைய

# சித்தாந்த சங்கிரகம்.

## அங்கீகாரம்.

௧. அநேகமிராசுதார்கள் பொதுவாய் அநுபவிக்கிற சமுதாய கிராமத்தில் ஒருவனுக்கு சர்வமானிய நிலந் சொந்தமாயிருப்பதாக அந்த மிராசுதார்களில் சிலர்மட்டும் ஒப்புக்கொண்டால் அது நிஷ்பிரயோஜனம். (௧௮௨௪ ௵-நம்பர்-௧.)

௨. ஒருவன் தகுந்தவயது இல்லாதகாலத்தில் ஒப்புக்கொண்ட சங்கதிகளைத் தகுந்த வயதானபிற்பாடும் ஒப்புக்கொண்டால் அந்த ஒப்புக்கொள்ளுதல் சிலாக்கியமுள்ளதுதான். ஆனால் அவன் தெரியாமையினாலே யாதொருவருடைய மோசத்துக்கு உட்பட்டு அப்படி ஒப்புக்கொண்டிருந்தால் அந்த ஒப்புக்கொள்ளுதலினால் உபயோகம் இல்லை. (௧௮௨௫ ௵-நம்பர்-௯. ௧௮௨௮ ௵-நம்பர்-௩.)

௩. ௧௮௫௯ ௵ ௮-வது ஆக்ட் ௧௧௪-வது பிரிவுப்படிவாதியின் தாவாவைப் பிரதிவாதி ஒப்புக்கொள்ளுகிறபட்சத்தில் வாதியும் பிரதிவாதியும் ஒன்றுசேர்ந்து உபேட்சையாயிருக்கிறார்கள் என்கிற அநுமானத்தின்மேல் பிரதிவாதிக்கு விரோதமாய்த் தீர்ப்புச்செய்யக் கோர்ட்டார் நிராகரிக்கக்கூடாது. அவர்கள் உபேட்சையாயிருப்பதாக வாஸ்தவமாய் நிரூபிக்கப்பட்டால் மட்டும் வாதிபட்சந் தீர்ப்புச்செய்யக் கோர்ட்டார் நிராகரிக்கலாம். (௧௮௫௨ ௵-ப-௮௯)

௪. பத்திரத்தின் உண்மையைப் பிரதிவாதி ஒப்புக்கொண்டால் வாதியின் தாவாவை நிரூபிக்கும்படி அவனுக்கு உத்தரவுகொடுக்க வேண்டியதில்லை. ஆனால் அந்தப் பத்திரவாசகப்படி தான் நடக்க வேண்டியதில்லையென்று பிரதிவாதி நிரூபிக்கலாம். (௧௮௫௫ ௵-நம்பர்-௩௭-ப-௧௨௦.)

௫. ஒரு வியாச்சியத்தில் தகப்பன் ஒப்புக்கொண்டவிஷயங்களுக்குப் பிள்ளையும் பாத்தியப்படவேண்டும். ஆனால் பிள்ளையை மோ

சஞ்செய்வதற்காகத் தகப்பன் அந்தப்படி ஒப்புக்கொண்டிருந்தால் அதற்குப் பிள்ளை பாத்தியப்படவேண்டியதில்லை. (௧௮௫௭ஹ-நம்பர்-௫௨-௬௬-௧௮௫௮ஹ-ப-௧௯-௮௬.)

௬. ஒருவன் தான் எழுதிக்கொடுத்ததாக ஒப்புக்கொள்ளுகிற சாகுபடி முச்சலிக்காவில் யாதொரு சங்கதியை ஒப்புக்கொண்டிருந்தால் அந்த சாகுபடி முச்சலிக்காவில் அதிகாரிகள் கையெழுத்து இல்லாமல் இருந்தாலுங்கூட அந்த ஒப்புதல் ஊர்ஜிதம் உள்ளதுதான். (௧௮௫௯ஹ-நம்பர்-௧௨௮-௬௦ஹ-ப-௧.)

எ. ரிவினியூபோர்டார் இறந்துபோன ஒரு ஜமீன்தாருடைய ஸ்திரிகளை அவனுடைய பத்தினிகளின் ஸ்வாதீனப்படுத்தி அவர்கள் ௧௮ஹ காலம் அந்த ஸ்திரிகளை அநுபவித்து ஜீவவியோகம் ஆனார்கள். பிற்பாடு அந்த ஜமீனைப்பற்றி ஜமீன்தாருடைய மகள் செய்த வியாச்சியத்தில் ஜமீனை அநுபவிக்க ஸ்திரிக்குப் பாத்தியம் இல்லையென்று சுவாரன்மென்றும் எதிர்வழக்காடினார்கள். ஜமீன்தாருடைய பத்தினிகள் ௧௮ஹ வரையில் ஜமீனை அநுபவித்துவந்ததைக்கொண்டே ஸ்திரீகளுடைய பாத்தியம் சுவாரன்மென்றால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதென்கிற ஆதாரத்தினால் வாதிபட்சந் தீர்ப்புசெய்யப்பட்டது. (௧௮௫௯ஹ-நம்பர்-௧௪௦. ௧௮௬௦ஹ-ப-எ௨.)

அ. வாதியின் புருஷனுக்குத் தாயாதியான ராமய்யன் என்பவன் இறந்துபோகுமுன்னுக்குப் பிரதிவாதிகள் இடத்தில் சில ஜங்கம சொத்துக்களைக்கொடுத்து அவைகளை வாதியிடத்தில் கொடுத்து விடும்படி உத்தரவுகொடுத்ததாகவும் அந்தச்சொத்துக்களைப் பிரதிவாதிகள் கொடாததினாலே அவைகள் கிடைக்கவேண்டுமென்றும் வாதியால் வியாச்சியக்கப்பட்டது. ஷை ராமய்யனுக்குத் தாங்கள் சமீபதாயாதிகளானதால் அந்தச்சொத்துக்கள் தங்களுக்குப் பாத்தியம் என்று பிரதிவாதிகள் கூறிசொன்னார்கள். ஷை சொத்துக்களை வாதிக்குக்கொடுக்கிறதென்கிற சங்கேதத்தின்மேல் பிரதிவாதிகள் அவைகளைப் பெற்றுக்கொண்டதினாலே அவர்களுடைய பாத்தியத்தை அவர்கள்விட்டுவிட்டதற்குச் சமானமென்று வாதிபட்சத்தில் தீர்மானஞ்செயயப்பட்டது. (௧௮௬௦ஹ-நம்பர்-௩-ப-௧௦௦.)

௯. தங்களுடைய தகப்பன் தங்கள்பாகத்துக்குக்கொடுத்த நிலத்தைப் பிரதிவாதிகள் அபகரித்துக்கொண்டதால் அது கிடைக்கவே

ண்டுமென்று வாதிகள் வழக்கிட்டார்கள். பாகம நடந்ததாகச் சொல்லப்பட்ட காலத்துக்குப்பின்பு பாகத்தைப்பற்றிப் பிரஸ்தாபிக்காமல் வாதிகளுடைய தகப்பன் ஷை நிலத்தைப்பற்றிவழக்கிட்டுப் பிரதிவாதிகள் அந்த நிலத்தை எடுத்துக்கொள்ளுகிறதென்று அவன் ராஜிநாமா செய்து கொடுத்திருப்பதாலும் அதற்கு வாதிகள் சம்மதித்திருப்பதாலும் அதற்குவிரோதமாய் இப்போது வாதிகள்சொல்லும் கக்ஷி உபயோகம் அற்றதென்று அவர்களுடைய வழக்கு தள்ளப்பட்டது. (௧௮௬௦ ஹு-நம்பர்-௫-ப-௧௦௬.)

௰. மருமக்கத்தாய சாஸ்திரத்தை அநுசரிக்கிற குடும்பத்தின் வியாப்பியர்களால் செய்யப்பட்ட விநியோகஞ் செல்லாதென்று ஜேஷ்டபாகஸ்தர்களால் வழக்கிடப்பட்டது. வேறொருவியாச்சியத்தில் ஷை வியாப்பியர்கள் தாங்களே விவாதநிலத்துக்குப் பூரணபாத்தியஸ்தர்களென்று பேசின கட்சியை ஜேஷ்டபாகஸ்தர்கள் ஆட்சேபிக்காமல் சும்மா இருந்துவிட்டதினால் இப்போது அவர்களுடைய வழக்கு செல்லாதென்று நிக்கரிக்கப்பட்டது. (௧௮௬௦ ஹு-நம்பர்-௮௫-பக்கம்-௧௩௩.)

௧௧. ஒரு போகநாயகனுக்குப்பிறந்த பிள்ளையை அதின் தாயானவள் அந்தப் போகநாயகன் இடத்தில் ௬ ஹு காலம் விட்டுவைத்திருந்ததுந்தவிர அந்தப் போகநாயகன் இறந்துபோய் மறுபடியும் ௬ ஹு காலம் அந்தப்பிள்ளையை வேறொருவர் போஷிக்கும்படி விட்டுவிட்டதால் அதற்குப்பிற்பாடு அந்தப்பிள்ளையைப்பற்றித் தாயானவள் தொடரக்கூடாதென்று விதிக்கப்பட்டது. (௧௮௬௦ ஹு-நம்பர்-௨௪-ப-௧௫௪.)

௧௨. ஒரு குடும்பவியாபகனிடத்தில் வேறொருவன் நிலத்தைக் கிரயம்வாங்கி ௬ ஹு வரையில் அநுபவித்ததைக்கொண்டே கிரயஞ் செய்தவனுடைய பாகஸ்தர்களும் அந்தக் கிரயத்துக்குச் சம்மதித்திருந்தார்களென்பது திருஷ்டாந்தபூர்வமாயிருக்கின்றது. அதற்குப் பிற்பாடு ஷை கிரயத்துக்குத் தாங்கள் சம்மதிக்கவில்லையென்று ஷை பாகஸ்தர்கள் சொல்லும் ஆட்சேபம் செல்லாது. (௧௮௬௦ ஹு-நம்பர்-௧௧௩-ப-௨௮.)

௧௩. ஒருவன் ரிவினியூ அதிகாரஸ்தர் முன்பாகப் பிரமாணம் இல்லாமல் எழுதிவைத்த வாக்குமூலத்தில் யாதொரு சங்கதியை ஒப்புக்கொண்டிருந்தால் அந்த ஒப்புதல் முக்கியமானதுதான். (௧௮௫௬ ஹு-நம்பர்-௧௫௬-௬௦ ஹு-ப-௨௭.)

**௧௪.** யாதொரு சட்டப்பிரகாரம் நியமிக்கப்படாத பஞ்சாயத்தார் முன்பாகக் கொடுக்கப்பட்ட ராஜீநாமா உறுதியுள்ளதல்ல. ஆனால் அதில் யாதொரு சங்கதிகள் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தால் அந்த ஒப்புதல் உபயோகமுள்ளதுதான். (௧௮௯0௵-நம்பர்-௧௩௪-ப-௧௯௮.)

௧௫. ஒருசொத்தின்விஷயத்தில் தகப்பனால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற சங்கதிகளுக்குத் தகப்பன்வழியாக அந்தசொத்தின் பாத்தியத்தைக்கொண்டாடுகிற பிள்ளையும் பாத்தியப்படவேண்டும். (௧௮௯0௵-நம்பர்-௧௧௮-ப-௨௩௭.)

௧௬. வெவ்வேறே போககேக்ஷமமாயிருக்கிற பாகஸ்தர்களில் ஒருவன் ஒருவிஷயத்தை ஒப்புக்கொண்டால் அந்த அங்கீகாரம் மற்ற பாகஸ்தர்களுக்குச் சம்பந்தமில்லை. (௧௮௯0௵-நம்பர்-௫௫0-௧௮௯௧௵-ப-௯0.)

௧௭. ஒருவனுடைய ஒப்புக்கொள்ளுதலானது அவனைத்தவிர வேறே யாதொருவருக்கும் பாதகமாயிராவிட்டால் அவன் சம்பந்தப்பட்டவரையில் அந்த ஒப்புக்கொள்ளுதல் சபலமுள்ளதுதான். (௧௮௯0௵-நம்பர்-௯௩௧-௧௮௯௧௵-ப-௪௨௮.)

௧௮. தருமான வயதில்லாதகாலத்தில் ஒருபாலன் ஒருகடனை ஒப்புக்கொண்டிருந்தால் அந்த அங்கீகாரம் நிஷ்பிரயோஜனம். (௧௮௫0௵-நம்பர்-௪௯.)

௧௯. ஹிந்துக்களுக்குள் ௧௭-வது பிராயம் பரிபக்குவமான காலமானபடியால் அந்தப்பிராயம் உள்ள யௌவநனுடைய அங்கீகாரமானது சாபல்யம் உள்ளதாகவும் அவனைப்பந்திக்கத்தக்கதாகவும் இருக்கின்றது. (௧௮௫௫௵-நம்பர்-௧௩௯.)

**௨0.** ௨-ம் பிரதிவாதியிடத்தில் தனக்கு யாதொன்றும் கிடைக்கவேண்டியதில்லையென்று வாதிபிரியாதில் ஒப்புக்கொண்டிருந்தபோதிலும் ௨-ம் பிரதிவாதியின் மோசத்துக்குட்பட்டு வாதி அந்தப்படி ஒப்புக்கொண்டதாகப் பிரகடமானபடியால், ௨-ம் பிரதிவாதிமேல் வியாச்சியம் செய்யும்படி வாதிக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. (௧௮௨௮௵-நம்பர்-௩.)

கடன்பத்திரம் ௧௯-௪௧-இவைகளைப்பார்க்க.

---

## அங்கீகார விபரீதம்.

௧. அ-என்பவன்-க-என்பவனுக்குக் கடன் கொடுக்கவேண்டியதை ஒப்புக்கொண்டதினால் அ-என்பவனுக்கு விரோதமாய்த் தீர்ப்பு செய்யப்பட்டது. ஷை கடனைத்தான் ஒப்புக்கொண்டகாலத்தில் தனக்குப்பணங்கொடுப்பதாகச்சொன்ன-க-என்பவன் அந்தப்படி பணங்கொடுக்கத்தப்பிப்போய் விட்டதாக-க-என்பவன்மேல்-அ-என்பவன் பிற்பாடு வியாச்சியஞ்செய்தான். அந்தவியாச்சியம் அங்கீகார விபரீததோஷசஹிதமானதென்று நிரஸ்கரிக்கப்பட்டது. (௧௮௫௮ ஹு-நம்பர்-௮௧-ப-௨௦௧.)

௨. நிலந்தன் வசத்தில் இருப்பதாகவும் மிராசுமாத்திரம் பதியவேண்டுமென்றும் வியாச்சியஞ்செய்த வாதி பிற்பாடு நிலமுந் தன் வசமாகவேண்டுமென்று கேட்டுக்கொள்ளக்கூடாது. (௧௮௫௯ ஹு-நம்பர்-௧௦௦-ப-௨௬௦.)

௩. விவாதநிலத்தை வாதியிடத்தில் தான் போக்கியம்வாங்கி அநுபவிக்கிறதாக ரியினியூ அதிகாரஸ்தர்முன்பாக ஒப்புக்கொண்ட பிரதிவாதி பிற்பாடு அந்தநிலத்தை மீட்டுக்கொள்வதற்காக வாதி செய்த வழக்கில் வாதிக்கு யாதொருபாத்தியமும் இல்லையென்று ஆக்ஷேபிக்கக் கூடாது. (௧௮௫௯ ஹு-நம்பர்-௧௩௪-௧௮௬௦ ஹு-ப-௨௩.)

௪. விவாதசொத்து வாதிக்குச்சொந்தம் அல்லவென்று உபயவாதிகளுக்கும் நடந்த வேறொருவழக்கில் வாதி வக்கீல் ஒப்புக்கொண்டிருந்தால் அதற்குப்பிற்பாடு அந்தக்கட்சிக்காரர்களே சம்பந்தப்பட்டவழக்கில் அந்தச் சொத்துவாதிக்குச்சொந்தமானதென்று கட்சிபேசக்கூடாது. (௧௮௫௯ ஹு-நம்பர்-௧௩௯-௧௮௬௦ ஹு-ப-௩௧.)

௫. தனக்கும் மற்றவர்களுக்கும் பாகம் நடந்து சிலவிஷயங்களில் அந்தப்பாகம் நிறைவேறியிருப்பதாக ஒருகாலத்தில் ஒப்புக்கொண்டவன் பிற்பாடு அந்தப்பாகத்தைப்பற்றி ஆட்சேபிக்கக்கூடாது. (௧௮௫௯ ஹு-நம்பர்-௫௯-௧௮௬௦ ஹு-ப-௫௪.)

௬. ஸ்வீகாரபாத்தியத்தினால் சிலருக்குக் குடும்பஸ்திதியில் பாகங்கிடைக்கவேண்டுமென்று ஒருகாலத்தில் ஒப்புக்கொண்டவன் பிற்பாடு அவர்கள் ஸ்வீகரிக்கப்படவில்லையென்று வாதிக்கக்கூடாது. (ஷை-நம்பர்.)

எ. கோவிலுக்குச் சொந்தமான நிலங்களையெல்லாங்கண்டெழுதப்பட்ட ஜாப்தாவில்கையெழுத்துவைத்த ஒருவன் அந்தஜாப்தாவிற்காணுமல் தன்வசத்திலிருக்கிற சிலநிலம் அந்தக்கோவிலுக்குச் சொந்தமானதென்று பிற்பாடு கட்சிபேசக்கூடாது. (கஅருகூ ஹுல-நம்பர்-உகரு-கஅசுO ஹுல-ப-அச.)

அ. குடும்பத்தில் விபாகமும் சிலஸ்வீகாரங்களும் நடப்பதற்குத்தான் சம்மதித்திருந்ததாகவும் தன்னுடையஸ்வீகாரபுத்திரனேடு கூட-சா-அல்லது எ-ஹுல காலந்தான் ஏகயோகக்ஷேமமாயிருந்ததாகவும் ஒப்புக்கொள்ளுகிறவாதி அந்தப்பாகத்தைப்பற்றியும்ஸ்வீகாரங்களைப்பற்றியும் பிற்பாடு ஆட்சேபிக்கக் கூடாது. (கஅருகூ ஹுல-நம்பர்-உஅ-உகூ-கூO-கஅசாO ஹுல-ப-கூக.)

கூ. தன்னுடைய இறந்துபோன சகோதரனல் தனக்குக்கொடுக்கப்பட்ட கவரன்மென்று பத்திரத்தின் தொகைகிடைக்கவேண்டுமென்று வாதிவழக்குத்தொடார்ந்தாள். வாதிவழக்கு அபத்தமென்றும் வாதி அவளுடையவியாசசியம்வேண்டியதில்லையென்று மனுக்கொடுத்திருப்பதாகவும் பிரதிவாதி எதிர்வழக்காடினன். வாதிவழக்கு ருஜுவானபடியாலும் பிரதிவாதியின் உத்தரவிற்கண்ட மனுவானது கிரமப்படி வாதியால கோர்ட்டில்கொடுக்கப்படாமலும் அதற்குவாதி சம்மதிக்காமலும் பிரதிவாதியின்கேட்டுக்கொள்ளுதலின்மேல் கோர்ட்டில்கொடுக்கப்பட்டதாகவும் இருப்பதினலே அதைக்கொண்டுவாதியின் கட்சிக்குப்பாதகம் உண்டாகமாட்டாதென்றும் வாதிபட்சந் தீர்மானஞ்செய்யப்பட்டது. (கஅருகூ ஹுல-நம்பர்-கூசா-கஅகூO ஹுல-ப-கககா.)

கO. பிரதிவாதி ரிவின்யூ அதிகாரஸ்தர்கள்முன்பாக எழுதிவைத்த அநேக வாக்குமூலங்களில் வாதிதன்பாகஸ்தனுடைய ஸ்வீகாரபுத்திரனென்று ஒப்புக்கொண்டிருந்தால் பிற்பாடு அந்தஸ்வீகாரம் நடக்கவில்லையென்றும் அது செல்லாதென்றும் பிரதிவாதி சாட்சிகளைக்கொண்டு ருஜுப்படுத்தும்படி இடங்கொடுக்கக்கூடாது. (கஅருகூ ஹுல-நம்பர்-உகூகூ-கஅசுO ஹுல-ப-கசஉ.)

கக. பிரதிவாதிபேரில் தனக்கு யாதொன்றும் வரவேண்டியதில்லையென்று அவனுக்குத்தொடராச் சீட்டு எழுதிக்கொடுத்துவிட்ட வாதி அவன் வேறொருபத்திரப்படி தனக்குக்கடன்கொடுக்கவேண்டுமென்று அவன்மேல் பிற்பாடு வியாச்சியஞ்செய்யக்கூடாது. (கஅசுO ஹுல-நம்பர்-கOச-ப-கஅஅ.)

கஉ. கஅருகூ௵த்தில் முதற்பிரதிவாதியால் கிரயஞ்செய்யப்பட்ட நிலங்கள் கிடைக்கவேண்டுமென்று வாதி வழக்குச்செய்தான். அவைகளிற் சில நிலம்-கஅசஎ௵த்தில் முதற் பிரதிவாதியால்-ச-வது-பிரதிவாதிக்கும் பிற்பாடு-ச-வது பிரதிவாதியால்-உ௰-வது பிரதிவாதிக்குங் கிரயமானதாக எதிர்கட்சிபேசப்பட்டது. வாதியினுடைய சாஸனத்தில் ச-வது பிரதிவாதிசாட்சிபோட்டிருக்கிற ஆஸ்பதத்தினல் சிவில்க்கோர்ட்டாரால் வாதிபட்சத்தில் பூர்ணமாய்த் தீர்ப்புச்செய்யப்பட்டது. வாதியின் சாஸனம்பிறக்கிறதற்கு முன்னமே-ச-ம் பிரதிவாதி ஷை நிலத்தை-உ௰-வது பிரதிவாதிக்குக்கிரயஞ்செய்துவிட்டதால் வாதியின் சாஸனத்தில்-ச-ம் பிரதிவாதி சாட்சிக்கையெழுத்து வைத்ததைக்கொண்டு-உ௰-வது பிரதிவாதியின் கட்சிக்கு யாதொருதோஷம் உண்டாகமாட்டாதென்று அந்த நிலத்தை நீக்கி சதர்க்கோர்ட்டார் அவர்களால் நிர்மானஞ்செய்யப்பட்டது. (கஅகூ0௵-நம்பர்-கச0-ப-உசக.)

க௩. வாதியும் அவனுடைய சகோதரர்களான-க-உ-பிரதிவாதிகளும் குடும்பஸ்திதிகளை பாகஞ்செய்துகொண்டகாலத்தில்-உ-ம்-பிரதிவாதியின் மருமகனை ௩-ம்-பிரதிவாதிக்கும் ஒருபாகங்கொடுக்கிறதென்று அவர்கள்பேசிக்கொண்டு அந்தப்படி பாகபத்திரங்களும் பிறந்து வாதியின் பாகஸ்திதியை அவன் கைவசப்படுத்திக்கொண்டான். பிற்பாடு ௩-ம் பிரதிவாதிக்கு பாகங்கொடுத்தது செல்லாதென்றும் அந்தச்சொத்தில் தன் வீதங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியஞ்செய்தான். ஷை ஏற்பாட்டுக்கு வாதி சம்மதித்து பாகபத்திரங்களும்பிறந்து அவனுடைய பாகஸ்திதியையும் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டபிறகு ஷை ஏற்பாட்டைப்பற்றி வாதி ஆட்சேபிப்பது செல்லாதென்று அவனுடைய வழக்கு நிக்கிரகிக்கப்பட்டது. (கஅகூ0௵-நம்பர்-௩ச-ப-உசஅ.)

கச. தங்களுடைய குடும்பத்தில மக்கத்தாயசாஸ்திரம் ஆசரிக்கப்படுவதாக முந்தினவியாச்சியங்களில் கட்சிபேசினவாதிகள் மருமக்கத்தாயசாஸ்திரம் அநுஷ்டானமென்று பிற்பாடுசொல்லக்கூடாது. (கஅருஅ௵-நம்பர்-ருகூ-ப-கஅ0.)

கரு. தான் உ-பத்திரங்களில் சம்பந்தப்பட்டிருப்பதாக அசல் கோர்ட்டில் ஒப்புக்கொண்ட பிரதிவாதி அப்பீல்கோர்ட்டில் தான் ஒருபத்திரத்தில்மட்டுஞ் சம்பந்தப்பட்டிருப்பதாகப் பேசக்கூடாது. (கஅருஅ௵-நம்பர்-௩சு.)

கசு. ஒரு ஜமீன்தாரியை அனுபவித்துவந்த சந்ததி இல்லாத ஸ்திரீயாகிய அ-என்பவள் க-என்பவனுக்குக் கொடுக்கவேண்டிய தீர்ப்பின்தொகைக்காக ஷை ஜமீன்தாரியை ஏலம்போடும்படி கலெக்ட்டருக்கு உத்தரவுசெய்யப்பட்டது. ஏலம்போடுகிறதற்கு முன் ஷை இருவரையும் கலெக்ட்டர் வரவழைத்துச் சமாதானமாய்ப்போகும்படி உத்தரவுசெய்தார். அ-என்பவள் இறந்தஉடனே ஜமீன்தாரிமுழுதும் க-என்பவனுக்கு சித்தித்துப்போகிறதென்று அவர்கள் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். அ-என்பவள் பாத்தியஸ்தர்கள் இல்லாமல் இறந்துபோனபடியால் ஷை ஜமீன்தாரி கவர்ன்மெண்டாரைச் சேரவேண்டியதென்று கலெக்ட்டரால் வியாச்சியங்கொண்டு வரப்பட்டது. கவர்ன்மெண்டாருடைய காரியஸ்தராகிய கலெக்ட்டருடைய உத்தரவுப்பிரகாரம் அ-க-என்பவர்கள் மேற்கண்டபடி சமாதான உடன்படிக்கை செய்துகொண்டிருப்பதால் அந்த உடன்படிக்கைப்படி அ-என்பவள் செய்த பராதீனத்தைக் கலெக்ட்டர் ஆக்ஷேபிக்கக்கூடாதென்று அவருடையவழக்கு தள்ளப்பட்டது. (கஅருஎ௵-நம்பர்-கoரு-கருசு-கஅசுo௵-ப-உகசு.)

கஎ. யாதொரு மனை ஒருவனுக்குச் சொந்தமானதென்று ஒரு தீர்ப்பில் ஸ்தாபிக்கப்பட்டு அந்தத்தீர்ப்பு முடிவாயிருந்தால் அந்தவியாச்சியத்தில் கட்சிக்காரனாயிருந்தவனுடைய புத்திரன் ஷை தீர்ப்பில் எவனுடையபாத்தியம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதோ அவனுடையபாத்தியத்தைப்பற்றியும் அவனிடத்தில் அந்தமனையைக் கிரயம்வாங்கினவனுடைய பாத்தியத்தைப்பற்றியும் வேறொரு வியாச்சியத்தில் ஆக்ஷேபிக்கக்கூடாது. (கஅசுo௵ நம்பர்-கசக-கஅசுக-௵ ப-உஎ-கஅசுo௵-நம்பர்-சருo-கஅசுக௵-ப-ககச.)

கஅ. நிலத்தைத்தான் போக்கியம் வாங்கி அனுபவிப்பதாக-கஅருஅ௵த்தில் வாக்குமூலம் எழுதிவைத்தவன் அதற்குப் பிற்பாடு நடந்த வியாச்சியத்தில் கஅருஎ௵த்தில் ஷை நிலத்தைத்தான் கிரயம் வாங்கினதாகச் சொன்னால் அந்தக்கட்சி அங்கீகாரத்துக்கு அபாத்திரம். (கஅசுo௵-நம்பர்-உருசு-கஅசுக௵-ப-ருo.)

கக. ரு-சுருஉ பெறுமான புளியமரங்களும் ஒருவருஷத்துப் புளி மாசூலின் கிரயம் ரு-ருஉo-ம் வரவேண்டுமென்று வாதிகள் வியவகரித்தார்கள். அந்த மாசூல் ரு-கoo பெறுமானதென்று பிரதிவாதிகள் ரூபித்தபடியால் அந்த வியாச்சியம் முன்சீபினுடைய அதி

காரத்துக்கு மேற்பட்டதென்று தள்ளப்பட்டது. பிரதிவாதிகள் ரூபித்த பிரகாரம் வருஷம்-௧-க்கு ரூ-௫00 பெறுமான புளிமாகூலும் மரமுங்கிடைக்கவேண்டுமென்று வாதிகள் மறுபடியும் வியாச்சியஞ் செய்தார்கள். புளிமாகூல் அவ்வளவு கிரயம் பெறமாட்டாதென்று பிரதிவாதிகள் எதிர்கட்சிபேசி அந்தப்பிரகாரம் ரூபிகாரஞ்செய்தார்கள். புளிமாகூலுக்காக வாதிகள் முந்தின வியாச்சியத்தில் கேட்டதொகைக்குமேல் அதிகமாக அவர்களுக்குக்கிடைக்கமாட்டாதென்றும் புளி அந்தத்தொகையைப்பார்க்கிலும் அதிகக்கிரயம் பெறுமென்று முந்தின வியாச்சியத்தில் கட்சிபேசின பிரதிவாதிகள் இப்போது அதைப்பற்றி ஆட்சேபிக்கக்கூடாதென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௪ அ௯௦ ஹை-நம்பர்-௬௭௩-௧அ௬௧ ஹை-ப-௧௦௫.)

௨௦. ஒருசொத்து தனக்குச்சொந்தமில்லையென்று அ-என்பவன் இ-என்பவனுக்குத் தொடராச்சீட்டு எழுதிக்கொடுத்தபின்பு அச்சொத்து அ-என்பவனுக்குச் சொந்தம் அல்லவென்று இ-என்பவன் ஆட்சேபிக்கப்படுமானால் அந்த ஆட்சேபம் துராட்சேபமென்று பகிரங்கப்படுத்தவேண்டியதற்காக அவனுக்குத் தான் அச்சொத்து தொடராமுறியை எழுதிக்கொடுத்ததாக-அ-என்பவன் தர்க்கித்தான். அந்த தர்க்கம் தகாதகமென்றும் ஒருவனைத் தன்னுடைய மோசவலையில் மாட்டிவைப்பதற்காக ஒரு செய்கையைச்செய்த வேறொருவன் அந்தச்செய்கைக்கு அகத்தியம் உட்படவேண்டுமென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧அ௫அ ஹை-நம்பர்-௱௨௦.)

௨௧. ஒரு வியாச்சியத்தில் கிரயப்படி ராஜிநாமா எழுதிக்கொடுத்தவன் தன்னுடைய எதிர்கட்சிக்காரனுடைய வாதம் பொய்யென்று பிரகாசப்படுத்தவேண்டியதற்காக அந்தராஜிநாமாவுக்குத் தான் சம்மதித்ததாகப் பிற்பாடு கட்சிசொன்னால் அந்தக்கட்சியைக் கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளக்கூடாது. (௧அ௫அ ஹை-நம்பர்-௧௭௧-௧அ௫௯ ஹை-நம்பர்-௰௯.)

௨௨. ஒரு ஜமீன்தாருடைய ஜேஷ்டபுத்திரன் கலெக்டர் முதலான அதிகாரிகளுக்கு எழுதிக்கொண்ட அர்ஜிகளில் ஜமீன்ஸ்திதிக்குத் தன்னுடைய அநுஜன் சமபாகஸ்தனென்று ஒப்புக்கொண்டிருந்தால் அதற்குப்பிற்பாடு ஜமீன்ஸ்திதி விபாகயோக்கியமானதல்லவென்றும் ஜேஷ்டனாகிய தனக்குமட்டும் பாத்தியமென்றும் வாதிக்கக்கூடாது. (௧அ௨௫ ஹை-நம்பர்-௧.)

௨௩. வாதிகளுக்குப் பட்டுநூல்கொடுப்பதாக ஒப்பந்தஞ்செய்து அதற்காக முன்பணம் வாங்கிக்கொண்ட-௩-ம் பிரதிவாதி அந்தப்படிசெய்யத்தப்பிப்போய்விட்டதால் அந்த ஒப்பந்தச்சீட்டுப்படி பட்டுநூல் கிடைக்கவேண்டுமென்று வாதிகள் தொடர்ந்தார்கள். அதற்குமுன் ௨-ம்-வாதிமுதலானவர்கள் பேரில் முதற்பிரதிவாதி செய்திருந்த வியாச்சியத்தில் ஷை பட்டுநூல் தனக்கு வேண்டியதில்லையென்றுந் தான் கொடுத்த முதற்பணமும் வட்டியுமட்டுந் தனக்குக்கிடைத்தால் போதுமென்றும் ௨-ம்-வாதி பிரதியுத்தரஞ் சொன்னதினால் விவாத பட்டுநூலை முதற்பிரதிவாதி எடுத்துக்கொள்ளுகிறதென்று அந்த வியாச்சியத்தில் ஏற்பாடு நடந்திருப்பதாகவும் அவ்விதமாக விவாத ஒப்பந்தச்சீட்டினிபந்தனையைத்தானே அசித்திசெய்துகொண்ட ௨-ம் வாதி பிற்பாடு பட்டுநூலுக்காகத் தொடர்ந்தது நியாயவிருத்தமென்றும் வாதிகள் கொடுத்த முன்பணமும் வட்டியுமட்டும் அவர்களுக்குக்கிடைக்கவேண்டியதென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௬௦௵-நம்பர்-௫௩௯-ப-௧௫௯)

| | |
|---|---|
| அதிகாரவரம்பு-௬............... | சித்தாந்தமுந் தீர்ப்பும்-௬௯..... |
| அப்பீல்-௪௫-௪௬-௪௭-௪௮-௪௯-௫௰.............................. | ஸ்வீகாரம்-௨௧.................. |
| ஒற்றி-௩௪-௪௫..................... | பாகம்-௨௨........................ |
| கட்சி-௩........................... | மிராசுதாரும்புறக்குடியும்௧௰-௧௧ |
| கிரயம்-௨௪ ...................... | விசேஷ அப்பீல்-௧-௨-௩-௪-௫-௬-இவைகளைப்பார்க்க......... |
| சாட்சியம்-௧௮-௨௨............... | |

அடகு.—ஒற்றியைப்பார்க்க.

அடைமானம்.—ஒற்றியைப்பார்க்க.

## அதிகார வரம்பு.

௧. சமுத்திரக் கரைகளின்வரையில்மாத்திரங் கோர்ட்டாருக்கு அதிகாரமிருப்பதால் நடுச்சமுத்திரத்தைச்சேர்ந்த கப்பல்முதலான சொத்துக்களைப்பற்றின வழக்குகளை அவர்கள் அங்கீகரிக்கக்கூடாது. (௪-பு-௧௮௬௪௵-ஜூலைமீ-௨௫வ.)

௨. கப்பல்வேலைக்காரர்களின் சம்பளவிஷயத்தில் ரூ-௫00-க்கு மேற்பட்ட வழக்குகள் சூப்பிரீம்கோர்ட்டாரைச் சேர்ந்ததானபடியால் அந்த வழக்குகளைப்பிடிக்க மற்றக்கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லை. (௧௮௫௯ஹு-௧-வது ஆக்ட்டு-௫௭-வது-பிரிவு.) ரூ-௫00க்கு உட்பட்ட வழக்குகள் சிறுவியாச்சிய விசாரணைக் கோர்ட்டாரைச்சேர்ந்ததானபடியால் அந்த வியாச்சியங்கள் மேஜஸ்திரேட்டரால் அனுப்பப்படாதவரையில் அவைகளை மற்றக்கோர்ட்டார் வாங்கக்கூடாது. (ஷை)

௩. பல தவணைகளின்மேல் வரவேண்டிய கடன்விஷயத்தில் பாக்கியிருக்கிற எல்லாத்தொகையும் கோர்ட்டாருடைய அதிகாரத்துக்கு உட்பட்டிருந்தால்மாட்டும் அப்படிப்பட்ட வழக்கைக்கோர்ட்டார் அங்கிகரிக்கலாம். (௪-பு-௧௮௬0ஹு-செப்டம்பர்மீ-௯௨.)

௪. வியாச்சியத் தொகை கோர்ட்டாருடைய அதிகாரத்துக்கு மேற்பட்டிருக்கிறவிஷயத்தில் வட்டியும் வருமானமுஞ்சேர்ந்து அப்படி மேற்பட்டிருந்தாலுங்கூட அப்படிப்பட்ட வழக்கைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (௪-மெ-௧௮௬௭ஹு-ஆகஸ்டுமீ-௬0௨.)

௫. பிரதிவாதியை வரவழைத்து விசாரணைசெய்தபிற்பாடு கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லையென்று தெரியவந்தால் அப்படிப்பட்ட பிரியாதை வாதியிடத்தில் திருப்பிக் கொடுக்கக்கூடாது. ஆனால் ௮-வது ஆக்ட்டு ௯௭-வது பிரிவுப்படி. ஷை வியாச்சியத்தை வாதி தள்ளிக்கொள்ளும்படி அவனுக்கு உத்தரவுகொடுக்கலாம். (௪-அ-வி-ப-௬௧.)

௬. கோர்ட்டாருடைய அதிகாரத்தை ஒருதரம் ஒப்புக்கொண்டவன் பிற்பாடு ஆட்சேபிக்கக்கூடாது. (௧௮௬0ஹு-நம்பர்-௬.)

௭. வியாச்சியவிஷயந் தகுந்த அதிகாரமுள்ள கோர்ட்டாரால் முன்னமே தீர்மானிக்கப்பட்டவிஷயமென்று விசாரணைக்காலத்தில் எப்போது தெரியவந்தாலும் உடனே பிரியாதைத் தள்ளிப்போடவேண்டும். (௪-பு-௧௮௫௨ஹு-ஜூன்மீ-௧௨.)

௮. கப்பல் எந்தத்துறைமுகத்தில் தங்குகிறதோ அந்த இடத்தில் பணங்கொடுக்கப்படுமென்று கடன்பத்திரத்தில் நிபந்தனைகண்டிருந்தால் அந்தத் துறைமுகம் யாருடைய அதிகாரத்துக்குட்பட்டதோ அந்தக்கோர்ட்டார் அந்தவியாச்சியத்தை அங்கீகரிகலாம். ஆனால் வியாச்சியஞ்செய்யப்படுங்காலத்தில் பிரதிவாதி அந்தக்கோ

ர்ட்டாருடைய அதிகாரத்துக்குட்பட்ட இடத்தில் வாசஞ்செய்யாமலிருந்தால் அந்த வழக்கை ஏற்றுக்கொள்ளக் கூடாது. (ச-பு-௧௮௯௦ஆு-ஆகஷ்டுமீ-௨௯௨.)

௯. இன்ன கோர்ட்டில் நியாயம் பெற்றுக்கொள்ளுகிறதென்று ஒரு கோர்ட்டின் பெயரைப் பத்திரத்தில் குறித்துக்காட்டியிருந்தாலுங்கூட இதரமான கோர்ட்டார் அந்தவழக்கை அங்கீகரிக்கலாம். (௧௮௦௭ஆு-நம்பர்-௧௨.)

௧௦. தெருவீதிகளுக்குநேரே மலகிரகத்துக்கு வாசற்படிவைப்பதுமுதலான துன்பங்களை நிவர்த்திக்கவேண்டியதற்காகச் செய்யப்படும் வியாச்சியங்களைக் கோர்ட்டார் அங்கீகரிக்கலாம். (௧௮௫௭ஆு-நம்பர்-௫௪-பு-௧௪௦.)

௧௧. தேவாலயம் தர்மசத்திரமுதலான விசாரணைகளில் நடக்கப்பட்ட அக்கிரமங்களைக்குறித்துக் கோர்ட்டார் வியாச்சியம் வாங்கலாம். அதைப்பற்றி விசாரிக்க ரிவினியூபோர்டாருக்கும் அதிகாரம் உண்டு. (௧௮௫௮ஆு-நம்பர்-௪௧-ப-௩௯.)

௧௨. கோவிலின் உத்சவத்தினால் ஒருவனுக்கு வருமானங்கிடைக்கத்தக்கதாயிருந்தால் அந்த உத்சவம் நடப்பிவிக்கும்படியான பாத்தியத்தைப்பற்றி அவனால்செய்யப்படும் வழக்கைக்கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளலாம். (௧௮௫௯ஆு-நம்பர்-௧௪௯-பக்கம்-௧௪௮.)

௧௩. ஜாதியாரால் ஜாதித்தலைவனுடைய முன்னோருக்கு எழுதிக்கொடுக்கப்பட்ட உடன்படிக்கைப்படி பழையபாகவரியும் அதற்குப்பின்பு நெடுகிலும் உள்ளவரியும் கிடைக்கவேண்டியதற்காகவும் விசேஷ தினங்களில் ஜாதியார் தனக்குச் சகலமரியாதைகளுஞ் செய்துவரவேண்டியதற்காகவும் அந்த ஜாதித்தலைவனால் செய்யப்பட்டவழக்கைக் கோர்ட்டார் அங்கீகரிக்கலாம். (௧௮௫௯ஆு-நம்பர் ௧௧௭-ப-௧௯௧.)

௧௪. பரம்பரையான உத்தியோகங்கள் கிடைக்கவேண்டியதற்காகச் செய்யப்பட்டவழக்குகளைக் கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளலாம். (௧௮௪௯ஆு-நம்பர்-௪௮-௧௮௫௦ஆு-ப-௧௨௨.)

௧௫. பாளையம் இருக்கிற இடத்தில் பிரதிவாதிக்கு யாதொரு வர்த்தகமாவது வேலையாவது இருந்தால்மட்டும் அவன்மேல் "கோர்ட்டாப் ரிக்குவஸ்ட்" என்கிற நியாயஸ்தலத்தாருடைய அதிகாரந்

செல்லும். பிரதிவாதி அந்த இடத்தில் வாசஞ்செய்வதுமட்டும் போதுமானதல்ல. (க௮௬௪ ஹு-நம்பர்-கஉ-ப-௬க.)

க௬. சுப்ரீம்கோர்ட்டாரின் அதிகாரவரம்புக்குள்ளிருக்கிற ஸ்திதியைப்பற்றின வழக்கை-க௮0உ ஹு-உ-வது சட்டம்-கஉ-வது பிரிவுப்படி கம்பெனியாரால் ஸ்தாபிக்கப்பட்ட கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (க௮0எ ஹு-நம்பர்-எ.)

கஎ. நிலவழக்கைப்பற்றித் தீர்மானிக்கக்கலெக்டருக்கு அதிகாரம் உண்டாயிருந்தகாலமாகிய-கஎகூ௩ ஹு த்தில் அவரால் யாதொரு சன்னது பிறப்பிவிக்கப்பட்டிருந்தால் க௮0உ ஹு உ-வது சட்டம் க0-வது பிரிவுப்படி அந்த விஷயத்தைப்பற்றின வழக்குகளை சிவில்க்கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (க௮0எ ஹு நம்பர் ௮.)

க௮. விட்டுவிக்ரயத்தைப்பற்றின வழக்கில் ஸ்தாவரம் சம்பந்தப்பட்டிருப்பதால் அந்த வழக்கை "கோர்ட்டாப் ரிக்குவஸ்ட்டு" என்கிற நியாயஸ்தலத்தார் விடுக்கக்கூடாது. (க௮௬0 ஹு-நம்பர்-எக-ப-உ௬௮.)

ககூ. கூடலூரில் குடிநர்வாக்கி ராஜினம்ரு கணக்குகளிற்கண்டிருக்கிற நிலத்தைப்பற்றிய வியாச்சியத்தை கவர்ன்மென்டுருடைய உத்தரவில்லாமல் கோர்ட்டார் அங்கீகரிக்கலாம். (க௮௬0 ஹு-நம்பர்-௩0-ப-௮௫.)

உ0. தண்டு ஊழியத்திற்காக யாதொரு நிஷ்கரிஷையான அநுவமெனிமித்தம் தண்டில் சேர்ந்திருக்கப் பாத்தியமுள்ளவர்களைமட்டும் தண்டோடு கூடப்போகிறவர்களென்று எண்ணவேண்டியதேயல்லாமல் தண்டின் அதிகாரிகளால் ஏற்றுக்கொள்ளப்படாமல் தற்செயலாய்ப்போகிறவர்களைத் தண்டோடுகூடப்போகிறவர்களென்று பாவிக்கக்கூடாது. (க௮௬௪ ஹு-நம்பர்-கஉ.)

உக. ஒருவன் கடன்வாங்குங்காலத்தில் யாதொரு கோர்ட்டாருடைய அதிகாரத்துக்கு உட்படாதவனுயிருந்தால் அந்தக்கடனைப்பற்றிக் கோர்ட்டார் வியாச்சியம்பிடிக்கக்கூடாது. (க௮0௫ ஹு-நம்பர்-௩.)

உஉ. ஒருவன் இதரர்களுடைய பாத்தியத்தை ஸ்தாபிக்கவேண்டியதற்காகப் பரார்த்தமான வியாச்சியங் கொண்டுவரக்கூடாது. (க௮0எ ஹு-நம்பர்-கூ.)

உ௩. ஒரு கிரகத்தை ஸ்வானிடத்தில் வாடகைக்கு வாங்கினவன் பிற்பாடு விடாமற்போனுல் அந்த வீட்டைப்பற்றி ஸ்வான் வியாச்

சியஞ் செய்யவேண்டுமே அல்லாமல் ஸ்தாவரவிஷயத்தில் அதிகாரம் இல்லாதகோர்ட்டில் வியாச்சியஞ் செய்யவேண்டியதற்காக ஷை கிரகத்தின் கிரயத்தைப்பற்றி அவன் வியாச்சியஞ்செய்யக்கூடாது. (கஅகூ0ஸ்ரீ-நம்பர்-எக-ப-உகூஅ.)

உச. சூப்பிரீம்கோர்ட்டின் அதிகார எல்லைக்குள் கடன்வாங்கப்பட்டு உபயவாதிகளும் சென்னபட்டண வாசிகளாயிருக்கிறபட்சத்தில் அந்த வழக்கைச் செங்கல்ப்பட்டு முதலான வெளிப்பிரதேசக்கோர்ட்டார் பிடிக்கக்கூடாது. (கஅகூ0ஸ்ரீ-நம்பர்-கஅ-ப-கஎஎ.)

உரு. அ-என்பவனுடைய உத்தரவின்மேல் அவனுடைய வீட்டின் வாசற்படியோரமாய்-இ-என்பவன் மெத்தைப்படி முதலியவைகள் வைத்துக்கட்டிக்கொண்டால் பிற்பாடு-அ-என்பவன் வேண்டும்போது ஷை மெத்தைப்படி முதலியவைகளை-இ-என்பவன் இடித்துக்கொள்ளவேண்டும். அதற்காக-அ-என்பவன் வியாச்சியஞ் செய்யலாம். (கஅகூ0ஸ்ரீ-நம்பர்-கூஎச-கஅகூகஸ்ரீ-ப-கசச.)

| | |
|---|---|
| அங்கீகாரவிபரீதம்-கக.......... | தீர்ப்பு நிறைவேற்றல்-கூ......... |
| ஆலயம்-உ-அ-உக-............... | புநர்விமர்சை-கரு................ |
| கிராம முன்சீப்-க............... | மாஜுஸ்திரேட்டார்-க............ |
| கோர்ட்டுகள்-க.................. | இவைகளைப்பார்க்க.............. |
| ஜமீன்தார்-கூ.................... | |

---

## அதிர்ஷ்டச்சீட்டு.

க. லாட்டிரிச்சீட்டின் கையொப்பக்காரர்கள் மாதாந்தஞ் சில தொகை கொடுக்கிறதென்றும் ஒவ்வொரு மாதத்திலும் எவன் பெயரால் சீட்டுவிழுகிறதோ அவன் அந்தமாதத்துத்தொகைமுழுதும் எடுத்துக்கொள்ளுகிறதென்றுஞ் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கையானது-கஅசச ஸ்ரீ ரு-வது ஆக்ட்டுக்கு விரோதமானதல்ல. (கஅருஎஸ்ரீ-நம்பர்-கசுகூ-கஅருஅஸ்ரீ-ப-ருகூ.)

---

## அநாதித்தரிசு.

மிராசுதாரும் புறக்குடியும்-உஉ-வது விதியைப்பார்க்க.

## அநுபவம்.

க. ஆண்டிசெட்டியிடத்தில் வாதி கிரயம்வாங்கி ௩௦-வருஷகாலமாய் அநுபவிக்கின்ற தோட்டநிலத்தை முதற்பிரதிவாதிக்கு உ-௩-பிரதிவாதிகள் கொடுக்கவேண்டிய தீர்ப்பின் தொகைக்காகக் கோர்ட்டார் ஜப்திசெய்ததால் அந்த ஜப்தி விடுதலைக்காக வாதி வியாச்சித்தான். வாதியின் நீண்ட அநுபோகத்தைப் பிரதிவாதிகள் ஆட்சேபிக்காதபடியால் ஆண்டிசெட்டியிடத்தில் வாதி பெற்றுக்கொண்ட சாஸநத்தை அவன் தாக்கல்செய்யத் தப்பிப்போனதைக்கொண்டு வாதியின் வழக்குக்குப்பங்கம் இல்லையென்றும் ஆண்டிசெட்டிக்கு ௩-ம் பிரதிவாதி பாத்தியஸ்தனென்று நிரூபணஞ்செய்யவேண்டிய பிரதிவாதிகள் அந்தப்படிசெய்யத் தப்பிப்போய்விட்டதால் அவர்களுடைய பிரதிவாதம் நிஷ்பலமென்றும் வாதியின் கட்சி ஸ்தாபிக்கப்பட்டது. (க அ௬௦ ஞு-நம்பர்-க௬க.)

உ. அநேகவருஷகாலமாய்ப் பிரதிவாதிகள் அநுபவிக்கிற நிலம் கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தால் அந்த நிலத்தைப் பிரதிவாதிகள் தன்னிடத்தில்வாங்கி அநுபவிப்பதாகவும் தன் பாத்தியத்தை மத்தியகாலத்தில் அவர்கள் ஒப்புக்கொண்டதாகவும் நிரூபிக்கவேண்டியது வாதியின் கடன். அவன் அந்தப்படி மெய்ப்பிக்கத் தப்பிப்போனால் அவன் வழக்கு நிராகரணஞ்செய்யப்படும். (க அ௬௦ ஞு-நம்பர்-உ௯க-க அ௬க ஞு-ப-க அ.)

௩. அளவில் ஒருவனுடைய நிலம் கம்மியாகவும் அதற்கு அடுத்த நிலக்காரன் வசத்தில் ஜாஸ்திநிலமும் இருப்பதாகத்தோற்றினால் அந்த நிமித்தத்தைக்கொண்டுமட்டும் ஷை அடுத்த நிலக்காரன் க அ-வருஷமாய் அநுபவிக்கிற ஜாஸ்திநிலத்தைக் கம்மி நிலக்காரனுக்கு விடும்படி நிர்மாணிக்கக்கூடாது. (க அ௬௦ ஞு-நம்பர்-௩உ௪-நம்பர்-௫ அ௪-க அ௬க ஞு-ப-௩க-அ௭.)

௪. உபயவாதிகளின் சாட்சியம் சமான நிறை உள்ளதாயிருந்தாலும் அல்லது உபயவாதிகள் பட்சத்திலும் சாட்சியம் அதிர்ப்தியாயிருந்தாலும் விவாதஸ்திதியை அவர்களில் எவன் அநுபவித்துவந்தானே அவன் கட்சியை ஸ்தாபகஞ் செய்யவேண்டுமென்பது நீதிப்பிரமாணவிதி. (க அ௬௦ ஞு-நம்பர்-க௦-க அ௬க ஞு-ப-௭௫.)

௫. மிராசுதார்களாகிய தங்களிடத்தில் விவாதமனையைப் பிரதிவாதிகள் பகுதிக்கு ஒப்புக்கொண்டு வீடுகட்டிக் குடியிருந்துகொ

ண்டு பகுதிசெலுத்திவந்ததாகவும் இப்போது அவர்களை அப்புறப்படுத்தவேண்டுமென்றும் வாதிகள் வியாச்சியஞ்செய்தார்கள். அந்த வழக்கு சுத்த அபாண்டமென்று பிரதிவாதிகள் மறுத்தார்கள். முதற்பிரதிவாதியும் அவனுடைய முன்னோர்களும் நீண்டகாலமாய் சர்வசுதந்தரத்துடன் அநுபவித்துவந்த விவாதமனையை முதற்பிரதிவாதி உ-௩-பிரதிவாதிகளுக்குக் கிரயஞ்செய்து அவர்களும் நெடுங்காலமாய் அநுபவித்துவருவதாக ருசுவானபடியாலும் எந்தக்காலத்திலும் வாதிகள் அவர்களுடைய ஸ்வான்பாத்தியத்தை உபயோகப்படுத்தாதபடியாலும் அவர்களுடைய வழக்கு நிராகரகமென்று தள்ளப்பட்டது. (க௮௩௦ ௵-நம்பர்-சஎ௮-க௮௩க ௵-ப-க௦எ.)

௬. அநுபோகத்தினால் ஒருவனுக்கு உண்டாயிருக்கிற பாத்தியமானது சர்வோத்கிருஷ்டமானதால் அதை மாற்றவேண்டுமென்று வியாச்சியந்தொடருகிறவன் பிரதிவாதியின் அநுபோகபாத்தியத்தைப்பார்க்கிலும் தன் பாத்தியம அதிசிலாக்கியமானதென்று மெய்ப்பிக்கவேண்டும். (க௮௦எ ௵-நம்பர்-௬-க௮கக ௵-நம்பர்-௬-க௮உச ௵-நம்பர்-கக.)

எ. ௬-அல்லது-க௦ ௵ காலமாய்ப் பிரதிவாதி நிர்வாதமாய் அநுபவிக்கிற ஸ்திதிகிடைக்கவேண்டுமென்று வியாச்சியஞ்செய்கிற வாதி லிகிதமயமான சாட்சியங்கொடுக்கவேண்டும். அப்படி அவன்செய்யாவிட்டால் அவனுடைய வழக்கு நிகிர்ஷ்டஞ் செய்யப்படும். (க௮௫௫ ௵-நம்பர்-௩௫.)

அ. ஒருவன் அநுபவிக்கிறசொத்தை வேறொருவன் வியாச்சியமூலமாய் கிரகிக்கவேண்டுமேதவிர அவன் ஸ்வேச்சையாய் கிரகிக்கக்கூடாது. அப்படிப்பட்ட ஆராகிருதமான கிரகணத்தை ஸ்தாபித்து மேஜஸ்திரேட்டார் பிற்பாடு உத்தரவுசெய்தாலுங் கூட அந்த உத்தரவுசுத்த அநுபோகம். மேற்கண்டபடி அநீதமாய்ச்சொத்தை இழந்துபோன அநுபோகக்காரன் வியாச்சியஞ்செய்தால் உபயவாதிகளின் பாத்தியத்தைப்பற்றி யோசிக்காமல் அவனுடைய அநுபோகத்தை ஸ்தாபித்து அவன்பட்சங் கோர்ட்டார் தீர்ப்புச்செய்யவேண்டும். (க௮௫கூ ௵-நம்பர்-கூக-ப-கச௬.)

கூ. ஒருவன் ஒருசொத்துக்கு ஸ்வாமியாயிருந்தாலுங்கூட க௰-௵காலம் அவன் அதில் பிரவேசிக்காமலும் அவ்வளவுகாலமும் அந்தச்சொத்து இதரர்களுடைய அநுபோகத்திலும் இருக்குமா

ளுல் அவனுடையபாத்தியம் க்ஷீணகதியை அடையும். அவன் அந்தச்சொத்தை வேறே யாருக்காவது கிரயஞ்செய்தால் செல்லாது. (கஅசுO௵-நம்பர்-கககு-ப-உசுரு.)

கO. ஆதியில் ஒருவனுக்கு யாதொருசொத்து அக்கிரமமாய்க் கிடைத்திருந்தாலுங்கூட அதைஅவன்நெடுங்காலம் நிர்விக்கினமாய் அநுபவித்திருந்தால் அந்த நிலத்துக்கு அவனே ஸ்வாமி ஆவான். (கஅருஎ௵-நம்பர்-கOசு-ப-உOஅ.)

கக. பிரதிவாதி நீண்டகாலமாய் அநுபவிக்கிற நிலத்தில் மத்திய காலத்தில் வாதி பலவந்தமாய்ப்பிரவேசித்து சிலநாள் அநுபவித்ததைக்கொண்டு பிரதிவாதியின் பாத்தியத்துக்கு ஹாநி உண்டாகமாட்டாது. (கஅருரு௵-நம்பர்-கஙக-கஅருசு௵-ப-ங.)

கஉ. மிராசுதாருடைய நிலத்தை ஒரு குடியானவன் ஆதியில் குத்தகையாயொப்புக்கொண்டிருந்தாலுங்கூட அவன் மிராசுதாருடைய பாத்தியத்தை நிராகரித்து கஉ௵-காலம் அந்த நிலத்தை நிராடங்கமாய் அநுபவித்துவந்திருப்பானுனல் அவனுடையபாத்தியம் உறுதிப்பட்டு மிராசுதாருடைய ஸ்வான்பாத்தியம் மலினமாய்ப்போகும். (கஅசஎ௵-நம்பர்-ஙரு-கஅசஅ௵-நம்பர்-சசு-கஅசகூ௵-நம்பர்-உ.)

கங. வாதிபெயரால் நிலத்துக்கு மிராசுபதிவாகி அவன் பெயரால் தீர்வைசெலுத்தப்பட்டு வந்தாலுங்கூட அந்த நிலத்தை-ஙO௵-காலம் பிரதிவாதி நிராக்ஷேபமாய் அநுபவித்திருப்பானுனல் அவனுடைய பாத்தியம் மீசரமாகவும் வாதியின்பாத்தியம் நிஷ்பலமாகவும் போய்விடும். (கஅருசு௵-நம்பர்-கOஎ-ப-கருசு.)

கச. ஒரு ஸ்திரீயும் அவளுடைய தத்தனும் பூஸ்திதியை சமபாகஞ்செய்துகொண்டு தனித்தனியே அனுபவித்துவந்தார்கள். ஷை ஸ்திரீயின் அம்சநிலத்தை அவள் ஸ்வேச்சையாய் தானவிக்கிரயாதிகள் செய்துவந்தாள். அந்த விநியோகத்தை ஆட்சேபித்து உO-௵த்துக்குப்பின்பு ஷை ஸ்வீகிருதன்செய்த வியாச்சியஞ் செல்லாதென்று நிக்கிரகிக்கப்பட்டது. (கஅருஅ௵-வி-அ-பி-நம்பர்-ககூஎ.)

கரு. கவர்ன்மென்டாருடைய ஊைத்துவாரி நிலங்களின் அநுபோகமானது அந்த நிலங்களின் பட்டாதார் மூலமாகவே வேறொருவனுக்குக்கிடைக்கவேண்டும். (கஅருச௵-நம்பர்-சுO.)

கசு. பிரதிவாதிவசத்திலிருக்கிற ஒரு கிராமங்கிடைக்கவேண்டுமென்று ஜமீன்தாரான வாதி வியாச்சித்தான். அந்தக்கிராமம் வாதியின்பாட்டனால் தன்பாட்டனுக்கு அக்கிரகார தானமாய்க்கிடைத்ததாகப் பிரதிவாதி மறுமொழிபேசினான். அந்தக்கிராமம் அக்கிரகாரதானமென்று சர்க்கார்க்கணக்குகளில் எழுதப்பட்டிருந்ததினாலும் வாதியினுடைய சாசுவதபாத்தியசன்னதில் ஷை கிராமத்தின் பிரஸ்தாபம் இல்லாதபடியாலும் கவர்ன்மென்றுரால் வாதியின் ஸ்திதிகள் ஜப்திசெய்யப்பட்ட பலபிரகிருதங்களிலும் ஷை கிராமஞ்சேராதபடியாலும் பிரதிவாதியின் முன்னோர்களுடைய நீண்டகால அநுபவம் கர்ன பரம்பரையாய் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாலும் வாதிவழக்கு நிஸ்ஸாரமென்று தள்ளப்பட்டது. (கஅருகூ ஹு-நம்பர் கஙாட-கஅ௲௦ ஹு-ப-அ௦.)

கஎ. நீண்டகாலமாய்ப் பிரதிவாதி அநுபவிக்கிற நிலத்தைப்பற்றி வாதி வியாச்சியங்கொண்டுவந்தால் இன்னகாலத்தில் இவ்விதமான ஏற்பாட்டின் பேரில் ஷை நிலம் பிரதிவாதிவசத்தில் விடப்பட்டதென்றாவது அல்லது தன்பாத்தியத்தை எந்தக்காலத்திலாவது பிரதிவாதி ஒப்புக்கொண்டிருப்பதாகவாவது விவரிக்கவேண்டியது வாதியின்கடன். அந்த விவரஞ்சொல்ல அவன் அசமர்த்தனாயிருந்தால் அவனுடைய வழக்கு பிரதிகூல பிராப்தியாகும். (கஅ௲௦ ஹு-நம்பர்-ரு-ப-உருஎ.)

| | |
|---|---|
| ஆசாரம்-ரு .................... | மிராசுதாரும் புறக்குடியும்-கங-உகூ .................... |
| இனும்-கஅ .................... | மிராசுபதிவு-ரு .................... |
| காலநிர்ணயம்-சரு .................... | இவைகளைப்பார்க்க. .................... |
| சாட்சியம்-எஅ .................... | |

# அந்நியமதப்பிரவேசம்.

க. அந்நியமதப்பிரவேசத்தினால் ஒருவனும் அவனுடைய சொந்துவபாத்தியத்தை இழந்துபோகமாட்டானென்று ஆக்கியாபிக்கிற-கஅருக ஹு உக-வது ஆக்ட்டின் விதியானது அந்த ஆக்ட்டு உண்டாகிறதற்கு முன் அந்நியமதத்திற் பிரவேசித்தவனுக்கு உபயோகமானதல்ல. (கஅருஅ ஹு-ப-உரு௦.)

உ. இந்துமதத்தில் இருந்து வேறொருமதத்திற் சேர்ந்தவர்களுடைய பாத்திய விஷயங்களுக்கு தர்மசாஸ்திரமே உபயோகம். ஆனால் அந்தக்குடும்பத்தில் வேறேவழக்கம் உண்டாயிருப்பதாக ருசுவானால் அந்த வழக்கத்தை அநுசரித்துத் தீர்மானிக்கலாம். (கஅ௲அ௵-நம்பர்-கஅள-கஅ௲௬௵-ப-கசஎ.)

பாத்தியம்-கரு-வது விதியைப்பார்க்க.

---

## அந்நியராஜாங்கத்தீர்ப்புகள்.

க. இந்தியாவில் பிரிட்டிஷ் கவர்ன்மென்டுரால் நியமிக்கப்பட்ட சிவில்க்கோர்ட்டாகவும் அல்லது அந்நிய ராஜாங்கத்தில் கவர்னர் ஜனரலுடைய உத்தரவின்மேல் நியமிக்கப்பட்ட கோர்ட்டாகவும் இராத வேறே யாதொரு கோர்ட்டினுடைய தீர்ப்பை இந்தத் தேசத்துக் கோர்ட்டார் நிறைவேற்றக்கூடாது.

உ. அந்நிய ராஜாங்கத்தீர்ப்பை வியாச்சியமூலமாக வைத்துக்கொண்டு அந்தத் தீர்ப்பின் தொகையைப்பற்றித் தகுந்த அதிகாரமுள்ள கோர்ட்டில் வியாச்சியஞ் செய்யப்படலாம். (ச-தீ-க௲உ௵-நம்-எந-ச-பு-க௲எ௵-ஜூன்மீ-கஉ.)

ந. அந்நிய ராஜாங்கத்தைச்சேர்ந்த கோர்ட்டின் சித்தாந்தத்தில் விவகார விஷயங்களை முடிவாய் எடுத்துப்பேசிச் சாராம்சத்தின்மேல் தீர்மானஞ் செய்யப்பட்டிருந்தால்மட்டும் அந்தச் சித்தாந்தத்தை அங்கீகரிக்கலாம். அந்த வியாச்சியத்திலாவது வியாச்சிய விஷயத்திலாவது கட்சிக்காரர்மேலாவது ஷை அந்நிய ராஜரீகக் கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லையென்றாவது அல்லது பிரதிவாதி ஆஜராகி உத்தரவுசொல்லும்படி அவனுக்குச் சம்மன் அனுப்பப்படவில்லையென்றாவது அல்லது அவனுடைய எதிர்கட்சியைப்பேசும்படியான சமயம் அவனுக்குக்கிடைக்கவில்லையென்றாவது ஷை தீர்ப்பு மோசமாய்ப்பெற்றுக்கொள்ளப்பட்டதென்றாவது அல்லது தீர்ந்துபோய்விட்டதென்றாவது ஷை தீர்ப்பைப்பற்றிப் பிரதிகட்சிக்காரன் ஆட்சேபனைசொல்லலாம். (ஷை.)

ச. மேற்கண்டபடி யாதொரு தகுந்த ஆட்சேபனை இல்லாவிட்டால் அந்நியராஜரீகக்கோர்ட்டிலேயே எதிர்கட்சி பேசப்பட்டிருக்க

வேண்டியதானபடியால் அந்தவியாச்சியத்தின் சாராம்சத்தைப்பற்றி மறுபடியும் இத்தேசத்துக்கோர்ட்டார் விசாரிக்கவேண்டியதில்லை.

௫. இலங்கைத்தீவின் கோர்ட்டுகளினுடைய தீர்ப்புகளை ௧௮௫௯ஸு ௮-வது ஆக்ட்டு உ௮௪ முதலான பிரிவுகளின்படி நிறைவேற்றக்கூடாது. அந்தத்தீர்ப்புகளை அந்நிய ராஜாங்கத்துத் தீர்ப்புகளைப்போலவே பாவிக்கவேண்டும். (௪-பு-௧௮௫௯ஸு-டிசம்பர் மீ ௬௨.)

௬. அ-என்பவனுக்கு-க-என்பவன் கொடுக்கவேண்டிய தொகையை-ச-என்பவன் இடத்திற்கொடுத்தது கிரமவிருத்தமானதால்-அ-என்பவனுக்கு-க-என்பவன் தொகைகொடுக்கும்படியாகவும்-ச-என்பவன் பெற்றுக்கொண்ட தொகையைப்பற்றி அவன்மேல்-க-என்பவன் வியாச்சியஞ் செய்துகொள்ளும்படியாகவும்-அச்சின்-கோர்ட்டாரால் தீர்ப்புசெய்யப்பட்டது. அந்தப்பிரகாரம்-ச-என்பவன்மேல் க-என்பவன் கும்பகோணங் கோர்ட்டில் வியாச்சியஞ்செய்தான். க-என்பவன் இடத்தில்-ச-என்பவன் தொகைபற்றிக்கொண்டதாக ஷை அச்சின்கோர்ட்டுத் தீர்ப்பில் சொல்லப்பட்டசங்கதி உபயோகமற்றதென்றும் அந்தத்தீர்ப்பு இந்தத்தேசத்துக் கோர்ட்டாருக்கு வழிகாட்டி அல்லவென்றும்-க-என்பவனுடைய வழக்கைக் கும்பகோணங்கோர்ட்டார் தள்ளினார்கள். அதைப்பற்றிச் செய்யப்பட்ட அப்பீலில் அந்நியராஜாங்கக் கோர்ட்டாருடைய சித்தாந்தங்களையும் அந்தச்சித்தாந்தங்களில் பேசப்பட்ட அபிப்பிராயங்களையும் இந்தத்தேசத்துக் கோர்ட்டார் அங்கீகரித்துக்கொள்ளவேண்டியது கிரமமேதவிர அதைப்பற்றி ஆட்சேபிக்கக்கூடாதென்று சதர்க்கோர்ட்டாரவர்களால் நிர்தாரணஞ்செய்யப்பட்டது. (௧௮௫௪ஸு-நம்பர்-௭௩.)

௭. தஞ்சாவூர் அரண்மனைத்தீர்ப்பு முடிவானது. (௧௮௪௮ஸு-நம்-௨௫-௧௮௫௦-ஸு-ப-௫௭.)

---

அபராதநிபந்தனை.
அபராதத்தைப்பார்க்க.

---

## அபராதம்.

**௧. ௧௮௫௯ஸு ௮-வது ஆக்ட்டுப்படி ௧௮௦௨ஸு ௪வது சட்டம் பலக்ஷீணமாய்ப் போய்விட்டதால் வீணான அப்பீல்செய்தவாதிக்கு**

அபராதம் விதிக்க சீவில் ஜட்ஜு அநதிகாரி. (௧௮௬௦ ௵-நம்பர் உ௩௮-௧௮௬௧ ௵-ப-௧௬-௧௮௬௦ ௵-நம்-௩௬௭-௩௫௯-௪௮௪-௧௮௬௧ ௵-ப-௫௨-௫௫-௧௦௯.)

உ. நடந்த சங்கதிகளின் விஷயத்தில் அப்பீல் இல்லாவிட்டால் சீவில் ஜட்ஜினால் விதிக்கப்பட்ட அபராதத்தைப்பற்றியும் அப்பீல் செய்யக்கூடாது. (௧௮௫௬ ௵-நம்பர்-௧௨௬-௧௮௫௭ ௵-ப-௯௦.)

௩. வியாச்சியத்தொகையின்மேல் அபராதத்தொகை ஏற்பாடு செய்யக்கூடாது. (௧௮௪௮ ௵-நம்பர்-௭.)

௪. நடந்த சங்கதிகளின் விஷயத்தில் சீவில் ஜட்ஜினால் அபராதம்விதிக்கப்பட்டிருக்கிற பட்சத்தில் சாஸ்திரவிஷயமாக விசேஷ அப்பீல் அங்கீகரிக்கப்பட்டுத் தள்ளுபடியானாலுங் கூட ஷை அபராதத்தை ரத்துசெய்ய சதர்க்கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லை. (௧௮௫௯ ௵-நம்-௭௭-௮௦.)

௫. வாதிக்குப் பிரதிவாதி நீலச்சரக்குக் கொடுக்கிறதென்றுந் தப்பினால் பிரதிவாதி அபராதங்கொடுக்கிறதென்றும் நிபந்தனைகண்டு பத்திரம் பிறந்தது. அந்தப்பிரகாரம் பிரதிவாதி சில நீலச்சரக்குக்கொடுத்ததை வாதி வாங்கிக்கொள்ளாமல் அந்தச்சரக்கு கெட்டுப்போனதால் ஷை பத்திரநிபந்தனை நிஷ்பலமாய்ப்போனதாகவும் வாதிக்குப்பிரதிவாதி நீலமாவது அபராதமாவது கொடுக்கவேண்டியதில்லையென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௭ ௵-நம்-௨௬-௧௮௫௮ ௵-ப-௫௯.)

௬. வாதியிடத்தில் பிரதிவாதி வாங்கிக்கொண்ட நிலத்துக்குப் பதிலாய் கெடுவில் அவன் வாதிக்கு வேறே நிலம் விடுகிறதென்றும் அப்படிச்செய்யத்தப்பினால் அபராதம் ரூ-௫௦௦-ம் வட்டியும் வாதிக்குக்கொடுக்கிறதென்றும் பிரதிவாதி பத்திரம் எழுதிக்கொடுத்துத் தவறிப்போனதாகவும் ஷை அபராதமும் வட்டியுங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியஞ்செய்தான். வாதிக்குப் பிரதிவாதி நிலம் விடவேண்டியது. ஷை பத்திரத்தின் பிரதான நிபந்தனையாகவும் அபராதமானது உப நிபந்தனையாகவும் இருப்பதால் தீர்ப்பின் தேதிமுதல் உ-மீத்துக்குள் வாதிக்குப்பிரதிவாதி நிலம்விடாதபட்சத்தில் அவன் ஷை அபராதமும் வட்டியுங்கொடுக்கும்படி சித்தாந்தஞ்செய்யப்பட்டது. (௧௮௫௬ ௵-நம்-௧௩௧-ப-௨௦௮.)

எ. அபராத நிபந்தனைகண்டு ஆதரவு பெற்றுக்கொண்டவன் அந்த அபராதத்தைத்தக்க வைத்துக்கொள்ளுங்கருத்துடன் துஷ்பிரயத்தனஞ் செய்தபடியால் அந்த அபராதம் அவனுக்குக் கிடைக்கமாட்டாதென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅருஅ௵-நம்பர்-கஙரு-ப-கூ.)

அ. அதிகாரம் இல்லாமல் ஒருமாஜஸ்திரேட்டார் விதித்த அபராதங்கிடைக்கவேண்டியதைப்பற்றி வியாச்சியஞ்செய்யலாம். (கஅருஎ௵-நம்-சங-ப-கருச.)

| | |
|---|---|
| உடன்படிக்கை-ச................ | கவர்ன்மென்று வக்கீல்-உ...... |
| ஒற்றி-உ.......................... | |
| கலெக்டர்-கO.................. | இவைகளைப்பார்க்க.............. |

---

## அப்பீல்.

க. கஅருகூ௵ அ-வது ஆக்ட்டு ஙஙரு-வது பிரிவுப்படி அப்பீல் மிமோராண்டத்துடனேகூடக் கையெழுத்தும் முத்திரையும் வைத்த அசல்த்தீர்ப்பு நகலும் கொடுக்கப்படாவிட்டால் அந்த அப்பீல் மிமோராண்டத்தைக் கோர்ட்டார் அங்கிகரிக்கக்கூடாது.—(ச-பு-கஅகூO௵-ஜூலைமீ கஅ௨.)

உ. அந்த அப்பீல் மிமோராண்டத்துடனே அசல்க்கோர்ட்டு சித்தாந்தத்தின் நகல் கொடுக்கவேண்டியதில்லை. (ச-பு-கஅகூO௵-செப்டம்பர்மீ கூ௨.)

ங. ஷை ஆக்ட்டின் ஙஎரு-வது பிரிவுப்படி விசேஷஅப்பீல் மனுவோடுகூட அசல் அப்பீல்க்கோர்ட்டுகளின் சித்தாந்தங்களுடையவும் தீர்ப்புகளுடையவுங் கையெழுத்து முத்திரை வைக்கப்பட்ட நகல்களும் கொடுபடாதவரையில் ஷை விசேஷ அப்பீல் மனுவை அங்கிகரிக்கக்கூடாது. (ச-பு-கஅகூO௵-ஜூலைமீ கஅ௨.)

ச. சித்தாந்தம் பிரசித்தப்படுத்தப்பட்ட தேதிமுதல் அப்பீல் கெடுவுக்குக் கணக்கிடவேண்டும். தீர்ப்பு நகலுக்காக அப்பீல்கெடுவுக்குள் மனுக்கொடுக்கப்பட்டால் அந்த நகல் கொடுக்கத் தாமசப்படுகிற ஒவ்வொரு நாளையும் கட்சிக்காரனுக்கு ஒத்துக் கொடுக்கவேண்டும். (ச-பு-கஅகூO௵-செப்டம்பர்மீ கூ௨.)

ரு. கையெழுத்து முத்திரைவைக்கப்பட்ட தீர்ப்பு நகல்அல்லது உத்தரவு நகலுக்காக மனுக்கொடுக்கிறவன் அந்த மனுவோடு கூடப்

போதுமான முத்திரைக் காகிதங்கள் கொடுக்கத் தப்பிப்போய் பாக்கிக் காகிதங்களைக் கொடுக்கும்படி அவனுக்குக் கோர்ட்டார் உத்தரவுகொடுத்தபிற்பாடு முத்திரைக் காகிதங்கள் கொடுப்பதில் அவனால் அப்பியந்தரப்படுகிற நாள்களைக் கோர்ட்டார் ஒத்துக்கொடுக்கக்கூடாது. (ச-பு-கஅகூ௦ஸு-ஏப்பிரல்மீ᷊ உகஉ.)

ஈ. வெற்றுக் காகிதத்தின்மேல் கையெழுத்து முத்திரைவைத்து நகல்கள் கொடுக்கிறவிஷயத்திலும் ஷை விதியையே அநுஷ்டிக்க வேண்டும்.

எ. ஷை ஆக்ட்டு ௩௩௩-வது பிரிவுப்படி தீர்ப்பு அறிவிக்கப்பட்ட தேதிமுதல் நாள்களின் தொகையை எண்ணி அப்பீல் கெடு நிஷ்கர்ஷை செய்யவேண்டுமே அல்லாமல் தீர்ப்புசெய்யப்பட்ட தேதிக்குச் சரியான மறுமாதத்தின் தேதியைக்கொண்டு மாதாந்தக்கணக்கு நிச்சயிக்கக்கூடாது. (ச-பு-கஅகூ௦ஸு-செப்டம்பர்மீ᷊ ௯உ.)

அ. சிவில்க்கோர்ட்டு கூடாத தினத்தில் அப்பீல் கெடு கிரமித்தால் அதற்கடுத்த மறுகோர்ட்டில அப்பீலைத் தாக்கல்செய்யவேண்டும். (ச-பு-கஅ௩க ஸு-நவம்பர்மீ᷊ ௩௦உ.)

௯. அப்பீல் கெடு கிரமிக்கிறதற்கு முன் புநர்விமரிசைக்காக மனுக்கொடுக்கப்பட்டால் அந்த மனுவுக்கு உத்தரவாகிறவரையில் செல்லுகிற காலத்தை அப்பீல் கெடுவுடன் சேர்த்துக்கொள்ளவேண்டும். (ச-பு-கஅகூ௦ஸு-செப்டம்பர்மீ᷊ ௯உ.)

க௦. அப்பீல் தயார்செய்வதற்காக அப்பீல் கெடுவுக்குமேல் அதிகமாய் முந்திக் கெடுக்கொடுக்கக்கூடாது. அப்பீல் கெடுகிரமித்தபிற்பாடு அப்பில் மிமோராண்டம் கொடுக்கிறவன் தாமசத்துக்கு முகாந்தரங்கண்டு முத்திரைக்காகிதத்தில் மனுவுங் கொடுக்கவேண்டும். (ச-பு-கஅகூ௦ஸு-ஏப்பிரல்மீ᷊ உகஉ.)

கக. தாழ்ந்த கோர்ட்டுத் தீர்ப்பு அப்பீலாகத் தகுந்ததா அல்லவாவென்பதை நிச்சயிப்பதற்கு வியாச்சியச்செலவை நீக்கி வியாச்சியத்தொகையைமட்டுங் கணக்குப்பார்க்கவேண்டும். (ச-பு-கஅஉகூஸு நவம்பர்மீ᷊ ௫உ-கஅசடும் ஸு-சூலைமீ᷊ ககஉ.)

கஉ. சிவில்க்கோர்ட்டு மூடியிருக்கும்போது அப்பீல்கெடு கிரமித்துப்போனால் கோர்ட்டு எந்தத்தினத்தில் திறக்கப்படுகிறதோ அந்தத்தினத்தில் அப்பீல் மிமோராண்டத்தைத் தாக்கல் செய்ய வேண்டும். (ச-பு-கஅ௩கம் ஸு-நவம்பர்மீ᷊ ௩௦உ.)

கங. கஅ௱கூ௵ அ-வது ஆக்ட்டு ௲௲௯-வது பிரிவுப்படி பிழை திருத்தத்துக்காக வாப்சுசெய்யப்படுகிற அப்பீல் மிமோராண்டத்தைப் பிழைதிருத்தமானவுடனே மறுபடியுங் கோர்ட்டார் பெற்றுக் கொள்ளலாம். அதற்காக வேறே புதிதான முத்திரைக்காகிதம் வேண்டியதில்லை. (ச-பு-கஅ௯0௵-அக்டோபர் மீ௳ கஉ.)

கச. ஷை அ-வது ஆக்ட்டு ௲௲௯-வது பிரிவுப்படி யாதொரு அப்பீல் மிமோராண்டந் தள்ளுபடியானால் அது உபயோகமற்றதாய்ப் போய்விடும். ஆனால் அப்பீல் கெடுவுக்குள்ளாக வேறே முத்திரைக் காகிதத்தின்மேல் கட்சிக்காரன் புதிதாய் மிமோராண்டங் கொடுக்கலாம். (ச-பு-கஅ௯0௵-அக்டோபர் மீ௳ கஉ.)

கரு. ஸாமாநியமாய் எல்லா அப்பீல் வாதிகளிடத்திலும் அப்பீலில் நேரிடுஞ் செலவுக்காக ஜாமீன் கேட்கக்கூடாது. ஆனால் ஷை அ-வது ஆக்ட்டு ௲௪உ-வது பிரிவுப்படி யாதொரு அப்பீல் வாதியிடத்தில் ஜாமீன் வாங்கவேண்டியது அவசியமாகத்தோற்றினால் கோர்ட்டார் கெடுநிச்சயித்து அந்தக்கெடுவுக்குள் அப்பீல்வாதி ஜாமீன் கொடுக்கத் தப்பிப்போனால் அவனுடைய அப்பீலைத் தள்ளிவிடவேண்டும். (ச-பு-கஅ௯0௵-ஏப்பிரல்மீ௳ உகஉ.)

கசு. ஷை அ-வது ஆக்ட்டு ௲௪அ-வது பிரிவுப்படி ஆன்சரும் கஉஉ-வது பிரிவுப்படி விபரபத்திரிகையும் அப்பீல் பிரதிவாதியிடத்தில் வாங்கக்கூடாது. (ச-பு-கஅ௯0௵-மார்ச்சுமீ௳ ககூஉ.)]

கள. அப்பீல் பிரதிவாதிகள் அவர்களுடைய ஆட்சேபனைகளை விசாரணைக்காலத்தில் வாய்மொழியாய்த் தெரியப்படுத்திக்கொள்ள வேண்டும். அந்த ஆட்சேபனைகளை நியாயாதிபதி எழுதிக்கொண்டு அப்பீலில் தீர்மானிக்கவேண்டிய விஷயங்களுடனே அந்த ஆட்சேபனைகளுஞ் சித்தாந்தத்தில் குறிக்கப்படவேண்டும். (ஷை.)

கஅ. கஅ௱கூ௵ அ-வது ஆக்ட்டு உபயோகத்துக்கு வருகிறதற்கு முன் கொடுக்கப்பட்டபிரியாது அந்த ஆக்ட்டு உபயோகத்துக்கு வந்த தேதிக்குப் பிற்பாடு சாராம்சவிசாரணையில்லாமல் தள்ளப்பட்டால் அதைப்பற்றி ஷை ஆக்ட்டு ௲அஎ-வது பிரிவுப்படிக்கும் பழையசட்ட விதிகளின்படிக்கும் வாதிசூக்ஷ்ம அப்பீல்செய்து கொள்ளலாம். (ச-பு-கஅ௯க௵-மார்ச்சுமீ௳ க௯உ.)

ககூ. ஜீவநாம்சங்கொடுக்கும்படி தாலூகாமுன்சீப்செய்த தீர்ப்புக்காக ரூ-உ0-க்குமேல் அதிகத்தொகை நாளாவர்த்தியில் வசூலாக

வேண்டியிருக்குமானதால் அந்தத் தீர்ப்பு அப்பீலாகத் தகுந்தது தான். (ச-பு-க௮௪௦ௐ ரூன்மீ௳ கஉ௳.)

உ௦. நிலத்தைத்தவிர மற்ற ஸ்தாவர ஸ்திதிகளைப்பற்றின ரூ-உ௦-க்கு மேற்படாத வியாச்சியங்களில் தாலூகா முன்சீப்களுடைய தீர்ப்புகள் அப்பீலுக்கு யோக்கியமானவைகள் அல்ல. புளியமரத்தில் பாகங்கிடைக்கவேண்டுமென்று செய்யப்படுகிறவியாச்சியம் ரூ-உ௦-க்கு மேற்படாமலிருந்தால் அந்த விஷயத்திலும் தாலூகா முன்சீபினுடைய தீர்ப்பின்மேல் அப்பீல் இல்லை. (ச-பு-க௮௬௦ௐ நவம்பர்மீ௳ க௯௳.)

உக. மறுவிசாரணையில் செய்யப்பட்ட தீர்ப்புக்குச் சம்மதிக்காதவன் அதன்மேல் அப்பீல்செய்து கொள்ளலாம். (ச-பு-க௮௪௪ௐ டிசம்பர்மீ௳ ௯௳.)

உஉ. அப்பீலில் தீர்ப்பு செய்யப்படுகிறதற்குமுன் கட்சிக்காரர்கள் சமாதானமாய்ப்போனால் எந்தக்கோர்ட்டில் அப்பீல் வியாச்சியமிருக்கிறதோ அந்தக் கோர்ட்டில் சமாதான ஏற்பாட்டின் பத்திரிகையை அவர்கள் தாக்கல்செய்யவேண்டும். (ச-பு-க௮௬கௐ மேமீ௳ க௳.)

உ௩. தீர்ப்பின் எந்தப்பாகத்தைப்பற்றியாவது அல்லது தீர்ப்பில் விட்டுவிட்ட சங்கதிகளைப்பற்றியாவது கீழான கோர்ட்டாரை முகாந்தரங்கேட்டு அவர்கள் சொல்லுகிற முகாந்தரங்களையும் அப்பீல்க் கோர்ட்டார்யோசித்து அப்பீல் தீர்ப்புசெய்யலாம். (ச-பு-க௮௬௦ௐ-அக்டோபர்மீ௳ க௳.)

உ௪. அசல் தீர்ப்பைப்பற்றி அப்பீல் பிரதிவாதி ஆட்சேபிக்காவிட்டால் அப்பீல் வாதிக்குப் பிரதிகூலமாய் அசல் தீர்ப்பை அப்பீல்க்கோர்ட்டார் திருத்தக்கூடாது. (க௮௫௮ௐ-ப-க௮.)

உ௫. அப்பீல்வாதி அசலில் எதிர்வழக்காடவும் எதிர்வழக்காடத் தப்பிப்போனதற்குத் தகுந்தகாரணஞ்சொல்லவுந் தப்பிப்போனான் என்கிற ஆதாரங்களைக்கொண்டு அவனுடைய அப்பீலைத் தள்ளக்கூடாது. (க௮௫௮ௐ-ப-௯உ.)

உ௬. பிரதிவாதிகளில் ஒருவன்மட்டும் அப்பீல்செய்து வாதியும் மற்றப்பிரதிவாதிகளும் அப்பீல்செய்யாமலிருக்கும்போது அப்பீலில் கட்சிக்காரனாயிராத பிரதிவாதிக்குப் பிரதிகூலமாய் அசல்தீர்ப்பை மாற்றக்கூடாது. (க௮௫௮ௐ-ப-௬க.)

உஎ. கலெக்ட்டருந் தகுந்தவயது இல்லாத பிள்ளையினுடைய காரியங்களை மேல்விசாரணைசெய்கிறவனும் மோசஞ்செய்திருப்பதாக அவர்கள்மேல் நேராய் குற்றஞ்சாட்டித் தகுந்தவயதில்லாத பிள்ளையால் கிரமமாய் நியமிக்கப்பட்ட காரியஸ்தன் பிரியாதுகொடுத்தால்மட்டும் குழந்தைகளின் ஸம்ரக்ஷணைக் கோர்ட்டாருடைய தீர்மானத்தின்மேல் சதர்க்கோர்ட்டார் அப்பீல் அங்கீகரிக்கலாம். அப்படி இல்லாதவனாயில் அப்பீல் அங்கீகரிக்கக்கூடாது. (கஅருகூ௵-நம்-அ-ப-கஅ௦.)

உஅ. அப்பீல்செய்யாத கட்சிக்காரனுக்கு அநுகூலமாக வியாச்சியச்செலவுகளின் விஷயத்தில் அசல் தீர்ப்பை மாற்றக்கூடாது. (கஅருகூ௵-நம்-கந-க-ப-உசாஅ.)

உகூ. வாதி அப்பீல்செய்யாமலும் அசல் தீர்ப்பின் தொகையை ஆட்சேபிக்காமலும் இருக்கப் பிரதிவாதிசெய்த அப்பீலில் வாதிக்குப்பிரதிவாதி அசல் தீர்ப்பிற்கண்ட தொகைக்குமேல் அதிகத்தொகை கொடுக்கும்படி அப்பீல் கோர்ட்டார் தீர்ப்புசெய்யக்கூடாது. (கஅருகூ௵-நம்-ககக-ப-உஉஎ.)

ந௦. ஒருவன் அப்பீல்செய்யாமல் இருக்கவேண்டியதற்காக அவனுக்குச் சிலதொகைகொடுப்பதாக அவனுடைய எதிரி ஒப்புக்கொண்டிருந்தால் அந்த ஏற்பாடு கிரமமானதுதான். (கஅசஎ௵-நம்பர்-உஅ.)

நக. அசல்க்கோர்ட்டில் பேசப்படாமல் அப்பீலில்மட்டுஞ் சொல்லப்படுகிற ஆட்சேபனைகளை அப்பீல்க்கோர்ட்டார் கவனிக்கக்கூடாது. (கஅசஎ௵-நம்-ரு.)

நஉ. எந்தவிஷயங்களைப்பற்றி அப்பீல் செய்யப்படவில்லையோ அந்தவிஷயங்கள் சம்பந்தப்பட்டவனாயில் அந்தத்தீர்ப்பை அப்பீல்க் கோர்ட்டார் வேறுபடுத்தக்கூடாது. (கஅருரு௵-நம்-சாஎ.)

நந. கிரமமாய் ஒன்றுக்கொன்று எதிரிடையாயிராத, உ-அப்பீல்களில் வெவ்வேறே தீர்ப்புகள் செய்யவேண்டுமேதவிர ஒரே தீர்ப்பாகச்செய்யக்கூடாது. (கஅருக௵ நம்-கக-நம்-சகூ.)

நச. ருஜுப்படுத்தவேண்டிய விஷயம் இன்னதென்று அசல்க் கோர்ட்டார் விவரமாய்த் தெரிவிக்காவிட்டபோதிலும் அந்தக் கோர்ட்டாரால் குறிக்கப்பட்ட விவாதநிச்சயங்களைக்கொண்டே ஒரு கட்சிக்காரன் ஒரு விஷயத்துக்கு ருஜுக்கொடுக்கக்கூடுமானவனாயிரு

ந்து அந்தப்படி அவன் ருஜூக்கொடுக்கத்தப்பிப்போயிருந்தால் அந்தவிஷயத்தை ருஜூப்படுத்தும்படி தனக்குக் கீழ்க்கோர்ட்டார் விய்க்தமாய் உத்தரவுகொடுக்கவில்லையென்று அவன் அப்பீலில் கட்சிபேசக்கூடாது. (கஅருo௵-நம்-உஅ.)

௩௫. அப்பீல் வாதி கீழ்க்கோர்ட்டில் எதிர்வழக்காடாமல் சும்மா இருந்துவிட்டதற்குத்தகுந்த மூகாந்தரஞ்சொல்லத்தப்பிப்போனல் அவனுடைய வியவகாரசங்கதிகளைப்பற்றி அப்பீலில் ருஜூவை ஏற்றுக்கொள்ளக்கூடாது. (கஅருக௵-நம்-கச.)

௩௬. அசல் தீர்ப்பின்மேல் அப்பீல்செய்வதற்கு ஆதாரமாக அசலில் பேசப்படாத நூதன கட்சியை அப்பீல் வாதிபேசக்கூடாது. (கஅருக௵-நம்-அஉ.)

௩௭. கஅஉ௨௵ ரு-வது சட்டப்பிரகாரம் ரிவினியூ அதிகாரிகள் செய்த தீர்மானங்களின்மேல் அப்பீலாகச்செய்யப்பட்ட வியாச்சியங்களில் சபார்டினேட் கோர்ட்டார்செய்த தீர்ப்புகளின்மேல் சீவில்க்கோர்ட்டில் கிரம அப்பீல் செய்யப்படவேண்டும். (கஅரு௩௵ நம்-அஅ-௬௬.)

௩௮. ரூ-உ00-க்கு மேற்பட்ட வியாச்சியங்களில் "கோர்ட்டு ஆவ்ரிக்குவெஸ்ட்" என்கிற நியாயஸ்தலத்தாரால் செய்யப்பட்ட தீர்ப்புகளின்மேல் பிரிக்கேடியர் என்னும் அதிகாரி அப்பீல் ஏற்றுக்கொண்டு மறுவிசாரணைக்கனுப்புவது-கஅசக௵ கக-வது ஆக்ட்டு கஎ-வது பிரிவுக்கு விரோதமாயிருக்கின்றது. மேற்கண்ட விஷயங்களில் சதர்க்கோர்ட்டார்மாத்திரம் அப்பீல் ஏற்றுக்கொள்ளலாம். (கஅரு௩௵-நம்-அக.)

௩௯. சாராம்ச விசாரணையில்லாமல் அசல்க்கோர்ட்டாரால் தள்ளப்பட்ட வியாச்சியத்தில் சாராம்சத்தைப்பற்றி விசாரிக்கவேண்டியது கிரமமென்று அப்பீல்க்கோர்ட்டாருக்குத் தோற்றினல் அந்த வியாச்சியத்தை அசல்க்கோர்ட்டுக்கு மறுவிசாரணைக்காக அனுப்பவேண்டுமே அல்லாமல் அப்பீல்க்கோர்ட்டாரே விசாரணைசெய்யக்கூடாது. (கஅரு௩௵-நம்-௬அ.)

ச0. கிரமமான அசல் வியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்பின்மேல்மட்டும் கிரம அப்பீல்வாங்கலாமே அல்லாமல் ரிவினியூ அதிகாரத்தைக்கொண்டு கலெக்ட்டர்செய்த உத்தரவின்மேல் அப்பீல் வியாச்சியம் அங்கீகரிக்கக்கூடாது. (கஅருரு௵-நம்-௬௩.)

சக. அசல்க்கோர்ட்டில் எதிர்வழக்காடத் தப்பிப்போன பிரதிவாதி அப்பீல்செய்கிற பட்சத்தில் வியாச்சியத்தின் சாராம்சங்களையெல்லாம் அப்பீல்க்கோர்ட்டாரே யோசித்துக் கிரமப்படி தீர்மானஞ்செய்யவேண்டுமே அல்லாமல் அவன் எதிர்வழக்காடத் தப்பிப்போன நிமித்தியத்தைக்கொண்டு சாராம்சத்தில் பிரவேசிக்காமல் அவனுடைய அப்பீலைத் தள்ளக்கூடாது. (கஅ௫௫ஷூ-ஙம்-கஉசு-கஙஉ.)

சஉ. கீழ்க்கோர்ட்டில் பிரதிவாதி எதிர்வழக்காடத் தப்பிப்போயிருந்தாலும் அல்லது அவனுடைய ஆன்சரை அங்கீகரிக்கக்கூடாதென்று கீழ்க்கோர்ட்டார்செய்த உத்தரவின்மேல் அவன் உடனே அப்பீல்செய்யாமல் இருந்துவிட்டாலும் அந்தக்குறைவுகளுக்குப் பிரதிவாதி செய்த கிரம அப்பீலில் பரிஹாரங்கிடைக்கமாட்டாது. அப்பேர்ப்பட்ட விஷயத்தில் கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்பை உறுதிசெய்யவேண்டியது அப்பீல்க்கோர்ட்டாருடையகடமை. (கஅ௫௫ஷூ-ஙம்-அசு.)

சங. அசல் வியாச்சியத்தின் கட்சிக்காரர்களையெல்லாம் அப்பீலில்சேர்க்கப்படாமற்போனால் கிரமப்பிசகாய் அந்த அப்பீலைத்தள்ளிவிடவேண்டும். அல்லது அப்பீலில் சேர்க்கப்பட்ட கட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்டவரையில்மட்டும் அப்பீல்க்கோர்ட்டார் யோசித்துத் தீர்மானஞ்செய்யவேண்டும். (கஅ௫எஷூ-ஙம்-கசுங.)

சச. வியாச்சியசங்கதிகளைப்பற்றிக் கோர்ட்டார் யோசிக்கும்போது ஒருவனுடைய கட்சியைப்பற்றி அவர்களுக்குத் தோற்றப்பட்ட ஆட்சேபனைகளையெல்லாம் அந்தக்கட்சிக்காரனுக்குத் தெரியப்படுத்தாமலே சித்தாந்தத்தில் கோர்ட்டார் எடுத்துப்பேசலாம். அந்த ஆட்சேபனைகளை முன்னாடிக் கட்சிக்காரனுக்குத் தெரியப்படுத்தி அவன்சொல்லுஞ் சமாதானங்களைக் கோர்ட்டார் கேட்காமற்போனதைக்கொண்டு அசல்த்தீர்ப்பு தோஷகிரஹணத்துக்குப் பாத்தியப்படமாட்டாது. (கஅ௫சஷூ-ஙம்-சுக.)

ச௫. தான் ஜமீன்தாருடைய பட்டஸ்திரீ புத்திரனென்கிற ஆதாரத்தின்மேல் ஜமீனைப்பற்றி அசல்க்கோர்ட்டில் வழக்குத்தொடர்ந்த வாதி அந்தவிஷயம் ருஜுவாகாமற்போனபின்பு தான் ஜமீன்தாருடைய ஜேஷ்ட புத்திரனென்கிற கட்சியை அவன் அப்பீலில்பேசக்கூடாது. (கஅ௫கஷூ-ஙம்-உஙச-கஅசுய ஷூ-ப-கஙசு.)

சசு. அசல்க்கோர்ட்டாருடைய அதிகாரத்துக்குட்பட்ட இடத்தில் தான் வாசஞ்செய்யவில்லையென்றுமாத்திரம் அந்தக்கோர்ட்டில் கட்சிபேசின பிரதிவாதி ஷை கோர்ட்டாருடைய அதிகாரஸ்தானத்துக்குள்ளாகத் தனக்கு பூஸ்திதிகிடையாதென்கிற கட்சியையும் கூடச்சேர்த்து அவன் அப்பீலில் பேசக்கூடாது. (கஅசுO௵-நம்பர்-உ-ப-கஙக.)

சஎ. தப்பிப்போன கெடுவின் தொகையும் தப்பிப்போகாத பின்தினகெடுக்களின் தொகையும் கிடைக்கவேண்டுமென்று வாதிசெய்த வழக்கில் தப்பிப்போகாதகெடுக்களின் தொகையைப்பற்றி வாதி தொடர்ந்தது அக்கிரமமென்று அசல்க்கோர்ட்டில் பிரதிவாதி பேசத்தப்பிப்போய்விட்டால் அந்த ஆட்சேபனையை அவன் அப்பீலில் பேசக்கூடாது. (கஅ௫௬௵-நம்-உகஅ-கஅசுO௵-ப-க௫எ.)

சஅ. ஸ்வீகார பாத்நியக்நின்பேரில் இறந்துபோனவனுடைய சொத்தைப்பற்றி அசல்க்கோர்ட்டில் வழக்கிட்ட வாதி அவனுக்கும் இறந்துபோனவனுக்கும் உண்டாயிருக்கிற ஸ்வபாவ பாந்தவியத்தை ஆதாரமாய்க்காட்டி அப்பீலில் பேசக்கூடாது. (கஅசுO௵-நம்-அச-ப-கஎக.)

சகூ. கோமுட்டிகளுக்குத் தான் குருவென்றும் அந்த உத்தியோகத்தினுடைய வருமானங்களுக்குத் தான் பாத்தியஸ்தனென்றும் அசல்க்கோர்ட்டில் கட்சிபேசின பிரதிவாதி ஷை குருத்தொழில் வாதிக்குச் சொந்தமானதென்று ஸ்தாபிக்கப்பட்ட பிற்பாடு அந்தக் குருத்தொழிலுக்காகத் தான் பெற்றுக்கொண்ட வருமானங்கள் ஜனங்கள் இஷ்டப்படி தனக்குக் கொடுத்ததென்றும் அந்த வருமானங்களைத் தான் வாதிக்கு உத்தரிக்கவேண்டியதில்லையென்றும் அப்பீலில் வாதிக்கக்கூடாது. (கஅசுO௵-நம்-கூO-ப-உசங.)

௫O. வாதியின் வியாச்சிய விஷயம் வேறொருகோர்ட்டாரால் முன்னமே தீர்மானிக்கப்பட்ட விஷயமென்று பிரதிவாதிசொல்லி முந்தின தீர்ப்புச்செய்த கோர்ட்டாருடைய அதிகாரத்தைப்பற்றி வாதிக்கு ஆட்சேபம் உண்டானால் அவன் அசல்க்கோர்ட்டில் அந்த ஆட்சேபனையைச் சொல்லியிருக்கவேண்டும். அசல்க்கோர்ட்டில் சொல்லப்படாத ஆட்சேபனையை அப்பீலில் ஏற்றுக்கொள்ளக்கூடாது. (கஅஉங௵-நம்-கஉ.)

௫க. பிரதிவாதி அசல்க்கோர்ட்டில் கொடுத்த விபரப்பத்திரிகை

களிற் சொல்லப்படாத நூதனமான கட்சியை அவன் அப்பீலில் பேசக்கூடாது. (க௮௬௦௵-நம்-௬௦-ப-உ௪௩.)

௫உ. வாதிக்குப் பலபிரதிவாதிகள் தொகைகொடுக்கும்படி அசல்க்கோர்ட்டாரால் தீர்ப்புச்செய்யப்பட்டு அதின்மேல் சில பிரதிவாதிகள்மட்டும் அப்பீல்செய்தால் அப்பீல்செய்யாத பிரதிவாதிகளை ஷை தீர்ப்பின் உத்தரவாதத்திலிருந்து அப்பீல்க்கோர்ட்டார் நீக்கக்கூடாது. (க௮௬௦௵-நம்-௩௦உ-க௮௬க௵-ப-உ௩.)

௫௩. வாதிக்கு முதற் பிரதிவாதிமட்டும் தொகை கொடுக்கும்படி அசல்க்கோர்ட்டாரால் தீர்ப்பு செய்யப்பட்டு அதைப்பற்றி முதற்பிரதிவாதி அப்பீல்செய்யாமல் வாதிமட்டும் அப்பீல் செய்திருந்தால் வாதிவழக்கை அடியோடே அப்பீல்க்கோர்ட்டார் தள்ளக்கூடாது. (க௮௬௦௵-நம்-௩௬௫-க௮௬க௵-ப-௬க.)

௫௪. வியாச்சியத்தின் முக்கியசாராம்சத்தைப்பற்றி அசல்க்கோர்ட்டார் விசாரிக்கத் தப்பிப்போயிருந்தால் அந்த வியாச்சியத்தை அப்பீல்க்கோர்ட்டார் மறு விசாரணைக்கனுப்பவேண்டுமே அல்லாமல் அந்தவிஷயத்தைப்பற்றி அப்பீல்க்கோர்ட்டாரே சாட்சியம் விளங்கக்கூடாது. (க௮௫உ௵-நம்-உஉ.)

௫௫. வாய்க்காலைப்பற்றிச் செய்யப்படும் வழக்கில் நிலமுஞ் சம்பந்தப்பட்டிருப்பதால் அது ரூ-உ௦-க்குட்பட்டிருந்தபோதிலும் அந்தவிஷயத்தில் தாலூகா முன்சீப் செய்த தீர்ப்பின்மேல் அப்பீல் உண்டு. (க௮௫எ௵-நம்-க௩௫.)

௫௬. பிரன்சுப்பால் சதரமீனுடைய தீர்ப்பின்பேரில் அப்பீல் செய்யப்பட்டு அந்தவியாச்சியம் மறுவிசாரணைக்கனுப்பப்பட்டபிற்பாடு பிரன்சுப்பால் சதரமீன்கோர்ட்டு எடுபட்டு அந்தக்கோர்ட்டு சிவில் கோர்ட்டுடன் ஐக்கியப்பட்டுப்போனால் அந்த மறுவிசாரணையில் சிவில்க்கோர்ட்டாரால் செய்யப்பட்ட தீர்ப்பு அசல் தீர்ப்பாகவும் அதின் மேல் சதர்க்கோர்ட்டுக்குச் செய்யப்பட்ட அப்பீல் கிரம அப்பீலாகவும் யோசிக்கப்படுமேதவிர அதை விசேஷ அப்பீலாக எண்ணக்கூடாது. (க௮௬க௵-நம்-உக-ப-க௪௬.)

௫எ. விவாதஸ்தலத்தைப் பரிசோதிக்கவேண்டியிருந்தால் அதற்காக அப்பீல்க்கோர்ட்டார் ஒரு அமீனைவை "நியமகம் செய்யவேண்டியதேதவிர அதற்காக அந்தவியாச்சியத்தைக் கீழ்க்கோர்ட்டின் மறுவிசாரணைக்காக அனுப்பக்கூடாது. (ஷை)

௫௮. ஒரு வியாச்சியத்துக்கு மூலாதாரமான தஸ்தாவேஜுகள் அசலில் தாக்கலாகாமல் அப்பீலில் தாக்கலானால் அந்த வியாச்சியத்தை அப்பீல்க்கோர்ட்டார் அசல்க்கோர்ட்டாருக்கு மறுவிசாரணைக்கு அனுப்பவேண்டும். (௧௮௫௯ ௵-நம்-௬௨.)

அபராதம்-௧
உத்தரவின்மேல் அப்பீல் முழுமையும்
கலெக்டர்-௬-௭-௮-௧௨-௧௭
கவரன்மென்று வக்கீல்-௪
காலநிர்ணயம்-௨௧
சாட்சியம்-௭௯
சித்தாந்தமுந்தீர்ப்பும்-௬-௮-௨௫ ௨௬-௨௮-௨௯-௩௪-௩௬
செலவு-௨௫
பஞ்சாயத்து-௫-௭-௮
புநர்விமரிசை-௬-௮
இவைகளைப்பார்க்க

## அவதிக்கிரயம்.

௧. அவதிக்கிரய சாஸநம் எழுதிக்கொடுத்தவன் நிலத்தை மீட்டுக்கொள்வதற்காக வியாச்சியஞ்செய்கிற பட்சத்தில் காலாவதிக்குள் சாஸநத்தொகையைக்கொடுக்க அவன் சந்நத்தனாயிருந்ததை அவன் நிரூபிக்கவேண்டும். (௧௮௫௩ ௵-நம்-௫௪.)

௨. சொத்தின் யதார்த்தகிரயமானது அவதிக்கிரய சாஸநத்தொகைக்கு மிகவும் அதியாயிருந்ததால் ஷை அவதிக்கிரயத்தை ஒற்றியென்றே பாவிக்கப்பட்டது. (௧௮௫௫ ௵-நம்-௧௦௪.)

௩. அவதிக்கிரய சாஸநத்தொகைக்குமேல் நிலம் அதிகக்கிரயம் பெறுமானதென்று அந்த சாஸநத்தை எழுதிக்கொடுத்தவன் சொன்னவாதம் சாட்சிய ஹீநமாய்ப்போய்விட்டதால் அந்த அவதிக்கிரயமே ஸ்தாபிக்கப்பட்டது. (௧௮௫௫ ௵-நம்-௮௪-௮௫-௮௮-௯௪.)

௪. ஒருவன் தன்னுடைய சொத்தையும் பாலனான தன் பாகஸ்தனுடைய சொத்தையும் சேர்த்து அவதிக்கிரய சாஸநஞ்செய்து கொடுத்திருக்கிற பட்சத்தில் அந்தப்பாலனுக்குத் தகுந்தவயது வந்தது முதல் அந்த சாஸநத்தின் கெடுக்காலத்தைக்கணக்கிட்டு அந்தக் காலாவதிக்குள்ளாக அவன் பணங்கொடுத்து நிலத்தை மீட்டுக்கொள்ளவேண்டுமே அல்லாமல் பிற்பாடு தொடரக்கூடாது. (௧௮௫௭ ௵-நம்-௧௪௨.)

௫. கடனுக்காகப்பிறந்த அவதிக்கிரய சாஸநத்தில் அந்தக்கடன்

கெடுவில்கொடுக்கப்படாத பட்சத்தில் சாஸநக்காரனுக்கு சொத்து சித்தித்துப்போகிறதென்று நிபந்தனை கண்டிருந்தால் அப்படிப் பட்ட அவதிக்கிரய சாஸநஞ்செல்லாது. (௧அ௫௧ஹூ-நம்-எ௩.)

கிரயம்-௩-௨எ-௨அ-ச௨-இவ்வகளைப்பார்க்க.

---

## அவிபக்தகுடும்பம்.

௧. அவிபக்தகுடும்பத்தின் பாகஸ்தர்கள் ஒருவர்மேலொருவர் கோர்ட்டுக்கட்டளைகளைப் பிரயோகஞ் செய்யக்கூடாது. ஒரு அவி பக்தபாகஸ்தனுக்கு மற்றப் பாகஸ்தன்கொடுக்கவேண்டிய கடனுக் காக அந்த அவிபக்த குடும்பஸ்திதியையே ஏலம்போடக்கூடாது. (௧அ௫சஹூ-நம்-ச௬.)

௨. அவிபக்த குடும்பஸ்தர்கள் பாகத்துக்காகமட்டும் ஒருவர்மே ல் ஒருவர் வியாச்சியஞ் செய்யலாமே யல்லாமல் அவர்கள் சமுதா யஸ்தர்களாயிருக்கிறவனையில் பொதுவான யாதொரு பொருளைப் பற்றி ஒருவனை ஒருவர் தொடரக்கூடாது. எப்படியென்றால் அவிபக் தசோதரர்களில் ஒருவன் மாஜிஸ்திரேட்டார் உத்தரவுப்படி பொது வான வீட்டைத் தான் பழுதுபார்த்ததாகவும் அந்தச்செலவில் மற் றொரு சோதரனுடைய விகிதங்கிடைக்கவேண்டுமென்றும் வியாச்சி க்கக்கூடாது. (௧அ௬௦ஹூ-நம்-௩எ-ப-௧௬௧.)

௩. ஏகயோகட்சேமமாயிருக்கிற பலபிரதிவாதிகளின் மேல்வி யாச்சியஞ் செய்யப்படுகிற பட்சத்தில் அவர்களில் ஒருவன்மட்டும் எதிர்வழக்காடுவதே போதும். மற்றவர்கள் எதிர்வழக்காடாமல் இரு ந்துவிட்டதைக்கொண்டு அவர்கள் வாதியின்வழக்கை ஒப்புக்கொ ண்டதாக நிர்ணயிக்கக்கூடாது. (௧அ௬௦ஹூ-நம்-௧அ-ப-௧௧ச.)


| | |
|---|---|
| அங்கீகாரம்-௧௬ | கிரயம்-ம்அ |
| கடன்-௫-எ-௧௩-௨௩-௨ச-௨௫ | சாட்சியம்-ச௨ |
| காலநிர்ணயம்-௩௬ | பராதீநம்-௬-௧௩-௧ச-௧எ-௧௬ |
| | பாத்தியம்-௫ |

இவைகளைப்பார்க்க.


---

## ஆசாரம்.

௧. யாதொரு தேசாசாரமானது சட்டங்களினால் ஆக்கியாபிக்க ப்படாவிட்டபோதிலும் அது பராநுகூலமாயிருக்குமானால் அந்த ஆசாரத்தை சாஸ்திர சமானமாகவே பாவனை செய்யவேண்டும். (௧௮௧௯ஹு-நம்-௨.)

௨. சாஸ்திரோக்தமான விஷயங்களைப்போலவே தேசவழக்கங்களையுங் கோர்ட்டார் நிச்சயிக்கவேண்டும். (௧௮௩௭ஹு-நம்-௭.)

௩. ஒருகிராமத்தின் தரிசுநிலம் மலைகள் முதலியவைகளின்பலன்களை அந்தக்கிராமத்தார் அநுபவிக்கவேண்டியது கிரமமேதவிர அந்நியகிராமத்தார் அநுபவிக்கும்படி செய்வது சாமாநியபுத்திக்கு ஒவ்வாததாகவும் கேவலம் அசம்பிரதாயமாகவும் இருக்கின்றது. (௧௮௨௩ஹு-நம்-௧௨.)

கடன்பத்திரம்-௪௪.............. | சாட்சியம்-௩௮-௪௮..........

இவைகளைப்பார்க்க.

---

## ஆலயம்.

௧. தேவாலயத்தின் பூஜைமுதலான செலவுகளுக்காக ஞாபகத்துக்கு எட்டாத அநேகவருஷகாலமாய் நிலங்களின் வருமானத்தில் இருந்து யாதொரு தொகை கொடுக்கப்படுவது வழக்கமாயிருந்தால் அதை நிறுத்தாமல் எப்போதும் அந்தப்படிக்கே கொடுத்து வரவேண்டும். (௧௮௧௭ஹு-நம்-௧௧.)

௨. கோவிலில் தர்மகர்த்தர் முதலான உத்தியோகங்களைத் தலைமுறை தலைமுறையாய் நடப்பித்து வந்தவர்களே அந்த உத்தியோகங்களுக்குச் சர்வசுதந்தரம் உள்ளவர்கள். தேவஸ்தானங்கள் கலெக்டர் விசாரணையில் இருந்தகாலத்தில் ஷை உத்தியோகஸ்தர்களுக்குப் பிரதிகூலமாய்க் கலெக்டர் செய்த யாதொரு செய்கையானது அவர்களுடைய பிதுரார்ஜித பாத்தியங்களை மாற்ற மாட்டாது. கோவிலின் பிதுரார்ஜிதமான உத்தியோகங்களைப் பற்றின வியாச்சியங்களைக் கோர்ட்டார் அங்கீகரிக்கலாம். (௧௮௫௦ஹு-நம்-௩௯.)

௩. சில கோவில்கள் சகலஜனங்களுக்கும் பொதுவாகவும் சில கோவில்கள் அவைகளைக் கட்டினவர்கள் முதலான சிலருக்குமட்

டுஞ் சொந்தமாகவும் இருப்பதால் சிலருக்குமட்டுஞ் சொந்தமான கோவில்களைப்பற்றி அவர்கள்மட்டும் ஏகதேசத்தில் வியாச்சியங் கொண்டுவரலாம். (௧௮௫௩ ௵-௩ம்-௨௫.)

௪. தென்கலை வைஷ்ணவர்களுடைய கோவிலின் எல்லைக்குள் வடகலை வைஷ்ணவர்களுக்கு நிலஞ் சொந்தமாயிருந்தாலுங் கூட அந்த நிலத்தில் வடகலையார் அவர்களுடைய வேதாந்தாசாரி விக்கிரகத்தைவைத்துப் பூஜைசெய்யக்கூடாது. ஆனால் அவர்களுடைய கிரகங்களில் விக்கிரகங்களை வைத்துப் பூஜைசெய்வதில் ஆட்சேபம் இல்லை. வடகலை வைஷ்ணவர்களுடைய கோவிலின் எல்லைக்குள் தென்கலையாரும் விக்கிரகங்களை வைக்கக்கூடாது. (௧௮௫௩ ௵ ௩ம்-௫௫-௧௮௬௬ ௵-௩ம்.)

௫. பிதுரார்ஜிதமான மிராசு பாத்தியமுள்ள கோவிலின் குருக்கள் பிரபலமான துர்மார்க்கஞ் செய்தால்மட்டும் அவனைத் தர்மகர்த்தா அந்தவேலையிலிருந்து தள்ளலாமே அல்லாமல் அற்பக்குற்றங்களுக்காகத் தள்ளக்கூடாது. நிஷ்காரணமாய்த் தள்ளப்பட்ட மிராசு பாத்தியமுள்ள குருக்கள் கோர்ட்டில் வியாச்சியமூலமாய் ஞாயம் பெற்றுக்கொள்ளலாம். (௧௮௫௪ ௵-௩ம்-௮)

௬. கோவிலின் ஸ்தானிகர்கள் முதலான மிராசு பாத்தியமுள்ள வேலைக்காரர்களின் பிரபலமான துர்நடக்கையினிமித்தம் அவர்களை அலுவலில் இருந்து தர்மகர்த்தா நீக்கிவிடலாம். (௧௮௫௬ ௵ ௩ம்-௪௯.)

௭. கோவிலுக்குச் சொந்தமான பணங்கள் முதலான ஸ்திதிகளை தர்மகர்த்தா முதலானவர்கள் அபகரித்துக்கொண்டு துர்வினியோகஞ்செய்தால் அதைப்பற்றிக் கோவில் வேலைக்காரர்களும் மற்றப் பொது ஜனங்களைச்சேர்ந்தவர்களும் தகுந்த அதிகாரஸ்தர்கள் இடத்தில் தெரியப்படுத்திக்கொள்ளலாம். (ஷை.)

௮. ஹிந்துக்களின் கோவிலைச்சேர்ந்த நிலமுதலான ஸ்திதிகளின் விஷயத்தில் நடக்கப்பட்ட அக்கிரமங்களைப்பற்றி விசாரிக்கிறதற்கு ௧௮௧௭ ௵-௭-வது-சட்டப்படி ரிவினியூபோர்டாரே தகுந்த அதிகாரிகள். அந்தவிஷயங்களிற் பிரவேசிக்கக் கோர்ட்டாருக்கு அதிகாரமில்லை. (௧௮௫௬ ௵-௩ம்-௪௯-௧௩௩ - ௧௮௫௭ ௵-௩ம்-௩௭.)

௯. கோவிலின் அர்ச்சகன் முதலான வேலைக்காரர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டால் உடனே அவர்கள்வசத்தில் இருக்கிற

கோவிலின் சொத்துகளைக் கோவில் விசாரணைக்கர்த்தன் இடத்தில் கொடுத்துவிடவேண்டும். அந்தச் சொத்துக்களிற் சிலது அவர்களால் கோவிலுக்குக் கொடுக்கப்பட்டிருந்தாலுங் கூட அந்தச் சொத்துக்களையும் விசாரணைக் கர்த்தனிடத்தில் அவர்கள் கொடுத்துவிடவேண்டும். (௧௮௫௯ ௵-நம்-௨௨௬-௧௮௬௦ ௵-ப-௫௨.)

௧௦. கோவிலின் விசாரணைக்கர்த்தன் கோவிலின் ஜென்ம பாத்தியத்தை ஸ்தாபிக்கவேண்டியதற்காக வியாச்சியஞ் செய்யலாம். (௧௮௫௮ ௵-நம்-௧௦௩-௧௦௪.)

௧௧. சடகோபம் சாதிக்கும்போது திருச்சின்னம் ஊதாமல் இருக்கவேண்டியதற்காக வியாச்சியம் அங்கீகரித்து அந்தப்படி தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௮ ௵-நம்-௧௨௫-ப-௨௫௬.)

௧௨. கோவிலின் மிராசு பாத்தியமுள்ள வேலைக்காரனை நிர்ஹேதுவாய்த் தள்ளுகிற தர்மகர்த்தாமீது அந்தவேலைக்காரன் வியாச்சியஞ்செய்யலாம். (௧௮௫௫ ௵-நம்-௫௭.)

௧௩. கோவில் முதலான கட்டடங்களைக் கட்டினவனால் நியமிக்கப்பட்ட தர்மகர்த்தா இறந்துபோனால் அவனுடைய பாத்தியமும் இறந்துபோகும். ௸ கட்டடங்களைக் கட்டினவன் மரணபிராப்தியான தர்மகர்த்தாவுக்குப் பதிலாய் வேறே யாரையாவது நியமகஞ்செய்யலாம். (௧௮௫௭ ௵-நம்-௫௨.)

௧௪. தர்மகர்த்தாவை நியமிக்கிற அதிகாரமானது கோவில் இருக்கிற இடத்தில் வாசஞ்செய்யப்பட்ட ஜனங்களைச்சேர்ந்ததாயிருக்கின்றது. ௸ தர்மகர்த்தா சட்டங்களையும் தர்மசாஸ்திரங்களையும் அநுசரித்துக் கோவிலைச்சேர்ந்த சகலகாரியங்களையும் அவனுடைய இஷ்டப்படி நடத்தலாம். கோவில் வேலைக்காரர்களில் வேலைபார்க்க சக்தியில்லாதவர்களையும் நல்ல நடக்கையில்லாதவர்களையும் ௸ தர்மகர்த்தா சுதாவாய்த் தள்ளிப்போடலாம். அவர்களைத் தள்ள வேண்டியதற்காக அவன் வியாச்சியஞ் செய்யவேண்டியதில்லை. போதுமான காரணம் இல்லாமல் தள்ளப்பட்ட கோவில் வேலைக்காரர்கள் கோர்ட்டில் வியாச்சியஞ் செய்து ஞாயம் பெற்றுக்கொள்ளவேண்டும். (௧௮௪௮ ௵-நம்-௩௭.)

௧௫. போர்டாரால் நியமிக்கப்பட்ட தர்மகர்த்தாவும் அவனுடைய சந்ததிகளும் ௫௭ ௵-காலங் கோவிலில் வேலைபார்த்து வந்

ததினால் அவர்களே அந்தத்தர்மகர்த்தா வேலைக்குப் பாத்தியஸ்தர்க ளென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௪௯ஞ-நம்-உ௯.)

௧௬. கோவில் கட்டப்பட்டால் அதற்கு நிலமுதலான ஸ்திதிகள் கொடுப்பதாக ஒருவன் உடம்படிக்கை செய்து அந்தப்படி கோவி லுங் கட்டப்பட்டால் அவன் அந்த உடன்படிக்கைப்படி கோவிலு க்கு ஸ்திதிகள் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறான். (௧௮௫௭ஞ நம்-௧௭௪.)

௧௭. கோவிலுக்குச் சொந்தமான நிலத்தை அநுபவிக்கிறவனை அப்புறப்படுத்தவேண்டியதற்காக அந்தக்கோவிலின் விசாரணைக்கர் த்தன் வியாச்சியஞ்செய்யலாம். (௧௮௫௮ஞ-நம்-௧௫-௧௬-ப-௮௧.)

௧௮. போதுமான காரணம் இல்லாமல் தள்ளப்பட்ட ப்ரம்பரை பாத்தியமுள்ள கோவில் ஊழியக்காரன் விசாரணைக்கர்த்தர்கள் மேல் வியாச்சியங் கொண்டுவரலாம். (௧௮௫௫ஞ-நம்-௫௭.)

௧௯. கோவில் நிலங்களை நீண்டகாலமாய்ச் சாகுபடி செய்து அ நுபவிக்கிற பிறக்குடிகள் கோவிலுக்குக் கொடுக்கவேண்டிய ஸ்வா மிபோகத்தைச் செலுத்தத் தப்பிப்போனால் ௧௮௦௨ஞ-உ௭-வது சட்டம்-உ-வது பிரிவின் படிக்கும், ௧௮௨௨ஞ-௫-வது சட்டப்படி க்கும் கோவிலின் விசாரணைக்கர்த்தர்கள் ரிவினியூ அதிகாரஸ்தர்கள் இடத்தில் முறையிட்டுக்கொண்டு அவர்கள் மூலமாக ௸ ஸ்வாமி போகத்தைமட்டும் வசூல் செய்யவேண்டுமேதவிர நிலத்தை ௸ புறக்குடிகளுக்கு அஸ்வாதீனஞ் செய்யவேண்டுமென்று ௸ விசார ணைக்கர்த்தர்கள் வியாச்சியஞ் செய்யக்கூடாது. (௧௮௬௦ஞ-நம்-௬௪௯-௧௮௬௧ஞ-ப-௧௩௯.)

உ௦. சேலத்தில் கோவிலின் மேளவாத்திய மிராசு பரம்பரைபா த்தியமாயிருப்பதால் ஒருவன் இறந்துபோனால் அந்தமிராசு அவனு டைய பாத்தியஸ்தனைச்சேரும். அந்தப்பாத்தியஸ்தன் பாலனாயிருந் தால் அவன் குமாஸ்தா மூலமாக வேலைபார்க்கலாம். (௧௮௫௩ஞ நம்-௫௧.)

உ௧. யாதொருவருமானமாவது திரவிய நஷ்டமாவது சம்பந்தப் படாமல் கேவலம்-மந்திரம்-ஆராதனை-ரதோச்சவம்-விக்கிரக எழுந் தருளும்படி-ஸ்ரீசைலேச தயாபாத்திரம்-வாழித்திருநாமம்-ஆளவந்தா ர்ஸ்தோத்திரம்-சாதித்தருள-முதலிய மதாசாரத்தைப்பற்றின வியா

ச்சியங்களைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (க௮௬க ஹு-நம்-௯௪-ப-க௫௨.)

௨௨. விக்கிரகங்களைக் கோவிலைவிட்டு அப்புறப்படுத்தவேண்டிய தற்காகப் பொதுஜனங்களிற் சிலபெயர்மட்டும் வியாச்சியஞ்செய்யலாம். (க௮௫௮ ஹு-நம்-௯௪-ப-க௪க-க௮௫௯ ஹு-நம்-௫௩௪.)

| | |
|---|---|
| அங்கீகாரவிபரீதம்-எ............ | ஸ்தாநிகம்-க.................... |
| அதிகாரவரம்பு-கக-க௨.......... | தர்மவிஷயம்-௫.................... |
| ஒற்றி-௩௩.......................... | பாத்தியம்-௨க.................... |
| கிராமப்பிரதட்சணம்-௩.......... | மிராசுதாரும் புறக்குடியும்-௨௯. |
| சித்தாந்தமுந் தீர்ப்பும்-௪௯-௬க. | |

இவைகளைப்பார்க்க.

---

## ஆறு.

க. ஆற்றங்கரை ஓரத்தில் உண்டாகப்பட்ட படுகைநிலம் அதற்கடுத்த நிலக்காரனுக்கே சொந்தமாகும். (க௮௫௬ ஹு-நம்-௮௯. (க௮௫௮ ஹு-ப-க௮௮.)

காலநிர்ணயம்-௫எ.

இதைப்பார்க்க.

---

## இஜாராதார்.

க. தாங்கள் ஒரு கிராமத்து இஜாராதார்களானதால் தங்களுக்கு அந்தக் கிராமத்தின் குடிகள் கொடுக்கவேண்டிய மேல்வாரங் கிடைக்கவேண்டுமென்று வாதிகள் வியாச்சியஞ்செய்தால் அந்த விஷயத்தைப்பற்றிமட்டுங் கோர்ட்டார் விசாரணை செய்யவேண்டியதேதவிர வாதிகள் அந்தக்கிராமத்து மிராசுதார்களா என்பதையும் அவர்களுக்கு வேறேவருமானங் கிடைக்கவேண்டியதா என்பதையும் அந்தவியாச்சியத்தில் கோர்ட்டார் பரிசிலனஞ் செய்யக்கூடாது. (க௮௬௰ ஹு-நம்-௫௯௬-க௮௬க ஹு-ப-௮௯)

௨. மேல்வாரங் கிடைக்கவேண்டுமென்று குடிகள்மேல் கிராமத்தின் இஜாராதார்கள் வியாச்சியஞ்செய்தார்கள். அந்த மேல்வாரத்தைக்கொடுக்கப் பிரதிவாதிகள் ஆட்சேபிக்காதபடியால் அவர்களை வாதிகள் கோர்ட்டுக்கு இழுத்தது அநீதியென்றும் எந்த மாசூலின்

குந்து ஷை மேல்வாரம் கிடைக்கவேண்டியதோ அந்த மாகூலைக் களத்தில் அடிக்கவொட்டாமல் பிரதிவாதிகளை வாதிகள் தடுத்து அந்த மாகூல் நஷ்டமாய்ப்போய்விட்டதால் வாதிகளுக்கு மேல்வாரங்கிடைக்க நிமித்தம் இல்லையென்றும் வாதிகளுக்குப் பிரதிகூலமாய்த் தீர்மானிக்கப்பட்டது. (ஷை.)

௩. இஜாராதாருக்குள்ளாக நிலத்தை அநுபவிக்கிற குடியானவன் அதைச்சாகுபடி செய்யாமல் விட்டுவிட்டால் இஜாராதாருடைய இஷ்டாநுசாரம் அந்த நிலத்துக்கு வேறே யாருக்காவது அவன் பட்டாக்கொடுக்கலாம். (௧௮௬௦ ௵-நம்-௭௧௧-௧௮௬௧ ௵-ப-௧௦௪.)

---

## இனாம்.

௧. கவர்ன்மெண்டாருடைய உத்தரவு இல்லாமல் இனாம் நிலத்தைப்பற்றிச் செய்யப்பட்ட வழக்கைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக் கூடாது. (௧௮௫௮ ௵-நம்-௨௦௬-௧௮௫௬ ௵-ப-௪௬-௧௮௫௬ ௵-நம்-௫௮-ப-௨௫௭.)

௨. கவர்ன்மெண்டாருடைய உத்தரவு இல்லாமல் மானிய நிலத்தின் வருமானங்களில் பாகங்கிடைக்கவேண்டுமென்று செய்யப்படுகிறவழக்கைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (௧௮௫௮ ௵-நம்-௨௦௬-௧௮௫௬ ௵-ப-௪௬.)

௩. இனாம் நிலத்தின் பாத்தியத்தைப்பற்றி வியாச்சியந்தொடராமல் இனாம்தாருடைய உத்தரவுப்படி கண்டு முதல்செய்யப்பட்ட வருமானத்தைப்பற்றிமட்டுஞ் செய்யப்பட்டவழக்கைக் கோர்ட்டார் அங்கீகரிக்கலாம். (௧௮௫௮ ௵-நம்-௧௧௧-௧௨௭-ப-௨௨.௪-௨௯௮.)

௪. ஒருவனாற்செய்யப்பட்ட உத்தியோகத்தொழிலுக்காகவாவது தர்மவிஷயமாகவாவது இங்கிலீஷ் துரைத்தனத்தாராலாவது அல்லது பூர்வீக ராஜாக்களாலாவது கொடுக்கப்பட்ட இனாங்களைப்பற்றின வழக்குகளை ௧௮௩௧ ௵ ௪-வது சட்டப்படி கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (௪-பு-௧௮௫௫ ௵-ரூலிமீ ௧௨௰.)

௫. ௧௮௩௧ ௵ ௯-வது சட்டப்படி உத்தியோகத்துக்காகச் சம்பளமாக ஏற்படுத்தப்பட்ட இனாங்களைப்பற்றின வழக்குகளைக் கோர்ட்டார் ஒப்புக்கொள்ளக்கூடாது. (ஷை.)

௬. கோர்ட்டாரால் ஜப்திசெய்யப்பட்ட நிலம் தீர்வையில்லாத இனும் நிலமென்று ரிவினியூ அதிகாரிகளால் தெரியவந்தால் உடனே வேறே விசாரணையில்லாமலே அந்த நிலத்தைக்கோர்ட்டார் ஜப்தி விடுதலைசெய்யவேண்டும். (ச-பு-௧௮௫௩௵ ஏப்பிரல்-மீ௳ ௩௰வ.)

௭. இனும் நிலத்தைப்பற்றி வியாச்சியம் இல்லாமல் அதின் பகுதியைப்பற்றிமட்டும் வியாச்சியம்வந்தால் கவர்ன்மென்றார் உத்தரவு இல்லாமல் அந்த வியாசசியத்தை அங்கீகரிக்கலாம். (ச-பு-௧௮௫௬௵-ஜுன்மீ௳ ௨௬வ.-௧௮௫௬௵-நம்-௨௪.)

௮. மதவிஷயமாக அல்லது பொதுஜன உபகாரார்த்தமாகக் கொடுக்கப்பட்ட இனுங்களுக்குச் சம்பந்தமான வழக்குகளை-௧௮௬௩௵ ௭-வது சட்டம் ௧௪-வது பிரிவுப்படி கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளலாம். (ச-பு-௧௮௫௫௵-ஜுலைமீ௳ ௧௨வ.)

௯. சுலபமான பகுதி கொடுத்துக்கொண்டு ஒரு அக்கிரகாரத்தை அநுபவிக்கிறவன் அக்கிரமமாய்க் கலெக்டரால் வசூல் செய்யப்பட்ட தொகையைப்பற்றி அவர்பேரில் கவர்ன்மென்றுருடைய உத்தரவில்லாமல் வியாச்சியஞ்செய்யலாம். (ச-பு-௧௮௩௯௵ அக்டோபர்மீ௳ ௨௭வ.)

௧௦. ஒரு ஜாகிர்தாரால் விடப்பட்ட நிலத்தைப்பற்றிக் கோர்ட்டார் வியாச்சியம் பிடிக்கலாம். (௧௮௫௰௵-நம்-௨௯-ப-௬௫.)

௧௧. இனும் நிலத்தைப்போக்கியம் வைப்பது கிரமமானதால் அந்தப்போக்கிய நிலத்தை மீட்டுக்கொள்வதற்காக இனும்தார் வியாச்சியஞ்செய்யலாம். (ச-பு-௧௮௫௯௵ அக்டோபர்மீ௳ ௨௨வ.)

௧௨. ஆதியில் இனும் நிலமாயிருந்து பிற்பாடு இனும்ரூல்-௨௯-வது பிரிவுப்படி சர்வ ஸ்வதந்தரமாயிருப்பதாக ருசுவானால் அந்த நிலத்தைப்பற்றிக் கோர்ட்டார் வியாச்சியம் வாங்கலாம். (ச-பு-௧௮௬௧௵ ஆகஷ்டுமீ௳ ௧௪வ.)

௧௩. இனும் நிலங்களுடைய வருமானத்தைப்பற்றின வழக்குகளையும் கவர்ன்மென்றுருடைய உத்தரவு இல்லாமல் கோர்ட்டார் பிடிக்கக்கூடாது. ஆனால் இனும்தார் ஷை வருமானத்தின் பாத்தியத்தைத் தானுக நீக்கிக்கொண்டால் அப்போது அந்த வழக்கைப் பிடிக்கலாம். (ச-பு-௧௮௫௮௵ அக்டோபர்மீ௳ ௨௰வ.)

௧௪. இனும் நிலங்களில்கண்டு முதலான மாசூலிலிருந்து யாதொரு வருமானங்கிடைக்கவேண்டுமென்று செய்யப்பட்ட வழக்

கைக் கவர்ன்மென்ரூர் உத்தரவில்லாமல் வாங்கக்கூடாது. (க௲௺ரு ஹுv-நம்-உச-ப-கஉ-அ.)

கரு. சாசுவதபேரிஜ் ஏற்படுத்தப்படாமல் நீக்கப்பட்டுப்போன மானிய நிலத்தைப்பற்றி ஒரு ஜமீன்தார் செய்தவழக்குத் தள்ளப் பட்டது. (க௲கக ஹுv-நம்-கக)

கசா. சாசுவத பேரிஜ் ஏற்படுத்தப்பட்டபோது ஒருவனுல் மானி யமாய் அநுபவிக்கப்பட்ட நிலத்தின் பாத்தியத்தை ரிவினியூ போ ர்டாருடைய உத்தரவுப்படி ஆட்சேபிக்க க௲0உ ஹுv-ரு௧-வது சட் டப்படி கலெக்ட்டர்மாத்திரம் அதிகாரியாயிருக்கிருர். (க௲கரு ஹுvநம்-கச.)

கள. சாசுவதபேரிஜ் ஏற்படுத்தப்பட்ட காலத்துக்குப் பிற்பாடு இனம் நிலத்தைக் கவர்ன்மென்ரூர் கிரகித்துக்கொள்ளவேண்டிய தாயிருந்தால் சாசுவதபேரிஜின் கணக்குகளில் ஷை நிலத்தின் தீர் வை உட்பட்டிருப்பதாக அவர்கள் நிருபணஞ் செய்யவேண்டும். (க௲ககா ஹுv-நம்-அ.)

கஅ. க௲0உ ஹுv-ருக-வது சட்டம் எ-அ-வது பிரிவுகளின்படி கவர்ன்மென்ரூர் கோர்ட்டில் வியாச்சியஞ் செய்து தீர்ப்பு பெற்றுக் கொண்டால் மட்டும் மானியநிலத்தை அநுபவிக்கிறவனை அந்தநில த்தைவிட்டு அப்புறப்படுத்தலாம். (க௲ககூ ஹுv-நம்-உ.)

ககூ. க௲ருக ஹுv-ச-வது சட்டப்படி கவர்ன்மென்ரூருடைய உத்தரவு இல்லாமல் பென்சியன் சம்பளத்தில் பாகங் கிடைக் கவேண்டுமென்று செய்யப்படுகிற வழக்கைக் கோர்ட்டார் அங் கீகரிக்கக்கூடாது. (க௲ருகூ ஹுv-நம்-கசாகூ-க௲கா0 ஹுv-ப-உசா.)

உ0. அக்கிரமமாய் இனம்தார்கள் அநுபவிக்கிற நிலத்தைக் கவர்ன்மென்ரூர் வாங்கிக்கொள்வதற்கும்மட்டும் க௲0உ ஹுv-ருக- வது சட்டம் அ-வது பிரகரணம் உபயோகமேதவிர ஜமீன்தார் முதலான மிராசுதார்களுக்குள் நிலத்தை மானியமாய் அநுபவிக் கிற இனம்தார்களுக்கு ஷை பிரகரணம் அநுபயோகம். பிரதிவாதி கரு-வருஷகாலம் நிர்விவாதமாய் அநுபவித்த மானியநிலங் கிடை க்கவேண்டுமென்று ஜமீன்தாரான வாதி செய்தவியாச்சியம் காலா திக்கிரமணதோஷக்கிரஸ்தமென்று தள்ளப்பட்டது. (க௲கா0 ஹுv- நம்-க௲ரு-க௲காக ஹுv-ப-ச.)

௨௧. இனும் நிலங்களுக்கு வீட்டுவரி வாங்கக்கூடாது. (௧௮௫௭ ஞூ-நம்-௧௧௧.)

| | |
|---|---|
| அங்கீகாரம்-௧.................... | ரெஜிஸ்டர்-௩.................... |
| தீர்வை-௨...................... | விசேஷ அப்பீல்-௧.............. |

இவைகளைப்பார்க்க.

## ஈடு.

ஒற்றியைப்பார்க்க.

## உடன்படிக்கை.

௧. காமன் பண்டிகைச் செலவுக்காக ஒவ்வொரு வருஷமுஞ் சில தொகை கொடுப்பதாக உடன்படிக்கை யெழுதிக்கொடுத்த பிரதிவாதிகள் அந்தப்படி நடக்கத் தப்பிப்போனதினால் அந்தத் தொகை கிடைக்கவேண்டுமென்று வாதிகள் வழக்குச்செய்தார்கள். யாதொரு பிரதிப்பிரயோஜனமும் இல்லாமல் அந்த உடன்படிக்கையைப் பிரதிவாதிகள் எழுதிக்கொடுத்திருப்பதால் அது செல்லாதென்றும் பிரதிவாதிகளுக்கு இஷ்டம் இருந்தால்மட்டும் ஷை காமன்பண்டிகைக்கு உதவிசெய்யவேண்டியவர்களேதவிர அவர்களுக்கு இஷ்டம் இல்லாதவரையில் அவர்கள் யாதொரு உதவியுஞ் செய்யவேண்டியதில்லையென்றும் வாதிகளுக்கு விரோதமாய்த் தீர்ப்பு செய்யப்பட்டது. (௧௮௫௯ ஞூ-நம்-௮௭-ப-௧௫௪.)

௨. உபயவாதிகளுக்கும் பொதுவான சுவரில் அவர்களில் எவனாவது தாவாரம் வைத்துக் கட்டிக்கொள்ளலாமென்று உடன்படிக்கை பிறந்திருக்கிற விஷயத்தில் அவர்களில் ஒருவன் மற்றொருவனுக்கு அசௌக்கியம் இல்லாதவரையில் அந்தச் சுவரின்மேலே மெத்தை முதலானதும் வைத்துக் கட்டிக்கொள்ளலாம். (௧௮௫௯ ஞூ நம்-௧௧௦-ப-௧௭௯.)

௩. அ-ஆ-என்பவர்கள் கடையை அநுபவித்துக்கொண்டு அவர்கள் கூட்டாளியாகிய இ-என்பவனுக்குக் கொடுக்கவேண்டிய கடனைப் பிரதிமாதமுங் கொடுக்கிறதென்று உடன்படிக்கை செய்துகொண்டார்கள். பிற்பாடு இ-என்பவன் ஷை கடையை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு பக்கத்தில்வரவேண்டிய கடன்களையும் வசூல் செய்துகொண்டபடியால் அவனுக்கு அ-ஆ-என்பவர்கள் ஷை உடன்ப

டிக்கைப்படி பாத்தியப்படவேண்டியதில்லையென்று தீர்மானிக்கப் பட்டது. (௧௮௫௬ஹுப-நம்-௧௨௫-ப-௨௭௪.)

௪. வாதியிடத்தில் பிரதிவாதி சிலதொகை வாங்கிக்கொண்டு அதற்காக கெடுவில் வாதிக்குச் சரக்குக்கொடுப்பதாகவும் அப்படிச் செய்யத்தப்பினால் அவன் பெற்றுக்கொண்ட தொகைக்கு ரூ-௧௦௦-க்கு ௫௦-விகிதம் அபராதங் கொடுப்பதாகவும் பிரதிவாதி உடன்படிக்கை எழுதிக்கொடுத்து அதை அவன் உல்லங்கனஞ்செய்து போட்டால் பிரதிவாதி பெற்றுக்கொண்டதொகையும் வட்டியும் ஷ அபராதமுங் கிடைக்கவேண்டியதைப்பற்றி வாதி வியாச்சியஞ் செய்யலாம். (௧௮௬௧ஹுப-நம்-௬-ப-௧௩௪.)

௫. ஒரு மொககாசாதாரால் எழுதிக்கொடுக்கப்பட்ட உடன்படிக்கை அவனுடைய பாத்தியஸ்தனைப் பத்தப்படுத்தமாட்டாது. (௧௮௫௮ஹுப-நம்-௭௬-௧௮௫௬ஹுப-ப-௬.)

௬. ஒரு உடன்படிக்கையின் வாக்கியப்பிரயோகங்களைக்கொண்டு உபயத்திராளுடைய மனோபாவம் இன்னதென்பதைக் கண்டறிய வேண்டும். அவர்களுடைய எண்ணத்துக்கு மேற்பட்டவியாக்கியானங் கோர்ட்டார் செய்யக்கூடாது. (௧௮௨௬ஹுப-நம்-௭.)

| | |
|---|---|
| அங்கிகாரவிபரீதம்-௧௬ .......... | சாக்ஷியம்-௬௭ .................... |
| களவு-௧ .......................... | ஜீவநாம்சம்-௩௬ .................. |
| கிராமக்காவற்காரன்-௧ ........... | ஸ்வீகாரம்-௫-௬ .................. |

இவைகளைப்பார்க்க.

---

## உண்டி.

௧. உண்டி யார்பெயருக்கு அனுப்பப்படுகிறதோ அவன் அதை அங்கீகரித்துக்கொண்டால் அதின்தொகைக்கு மகமதுசாஸ்திரப்படி அவனே பாத்தியப்படவேண்டும். அவன் அந்தத்தொகையைக் கொடுக்க ஆட்சேபித்தாலும் அல்லது அவன் கடன்கொடுக்க நிர்வாகம் இல்லாமல் இறந்துபோனாலுந் தான் பாத்தியப்படுவதாக அந்த உண்டியை எழுதிக்கொடுத்தவன் பரிஷ்கார்ரமா யொப்புக்கொண்டிருந்தால் அப்போது அவனைப் பாத்தியப்படுத்தலாம். (௧௮௫௫ஹுப-நம்-௫.)

௨. கிராசு என்பவருக்குத் தொகைகொடுக்கும்படி மக்கிநீஸ் என்பவரால் பின்னி என்பவருக்கு ஒரு உண்டி அனுப்பப்பட்டது.

கிராசு என்பவர் அதைப் பிரதிவாதிக்கு இன்ஞூர்சுசெய்து அனுப்பி ஞர். பிரதிவாதி அதை வாதிக்கு இன்ஞூர்சுசெய்ததிஞல் வாதி கிராசு என்பவருக்கு அந்த உண்டியின் தொகையைக்கொடுத்து விட்டான். பிற்பாடு ஷை உண்டி வாதியால் ராமசாமிசெட்டிக்குச் சாட்டிவிடப்பட்டது. ராமசாமிசெட்டி பின்னி என்பவரிடத்தில் அதைக்கொடுத்து பணங்கேட்டதற்கு அவர் பணங்கொடுக்கிறதில் லையென்று மறுத்துவிட்டார். அதின்தொகையை ராமசாமிசெட் டிக்கு வாதி கொடுக்கும்படி நேரிட்டதால் அந்தத்தொகையைப்பற் றிப் பிரதிவாதிமேல் வாதி வழக்கிட்டான். ஷை உண்டி பிரதிவாதி யால் வாதிக்கு இன்ஞூர்சு செய்யப்பட்டதிஞல் வாதிக்குப் பிரதி வாதி தொகைகொடுக்கவேண்டியதென்று தீர்மானிக்கப்பட்டது. (௧அ௫௬ளு-ம்-௧௨௧.)

௩. ஒரு உண்டி யாருக்கு அனுப்பப்படுகிறதோ அவன் அதை அங்கிகரித்துக்கொண்டு ௩-வது மனுஷனுக்குச் சாட்டிவிட்டு அந்த ௩-வது மனுஷன் தொகை கொடுக்காமலும் அந்த உண்டி பரி கரிக்கப்படாமலும் இருந்தால் அந்த உண்டி ஆதியில் யாருக்கு அனுப்பப்பட்டதோ அவனும் அதை எழுதி அனுப்பினவனும் அதி ன்தொகைக்குப் பாத்தியப்படவேண்டும். (௧அ௫௬ளு-ம்-௧௧௪ ப-௨௪அ.)

௪. ஒருவனுல் அனுப்பப்பட்ட உண்டியைப் பெற்றுக்கொண்டு கையெழுத்துவைத்துக்கொடுத்தவன் அந்த உண்டியின் தொகைக் குப் பாத்தியப்படவேண்டும். (௧அ௫௬ளு-ம்-௧௨௧.)

காரியஸ்தன்-௫.

இதைப்பார்க்க.

---

## உத்தரவின்மேல் அப்பீல்.

௧. ஒரு உத்தரவின்மேல் அப்பீல்செய்கிறவன் அந்த உத்தரவு க்கும் அதற்குச்சம்பந்தமான சகல உத்தரவுகளுக்கும் கையெ ழுத்து முத்திரையுடன் நகல்களுங்கூடக் கொடாதவனாயில் அவ னுடைய அப்பீலை அங்கீகரிக்கக்கூடாது. (௪-பு-௧அ௫௪ளு-அக்ட் டோபர்மீ ௩௨-ம்-௧௩௩.)

௨. ௧அ௫௬ளு-அ-வது ஆக்ட்டு உபயோகத்துக்கு வந்தபிற் பாடு செய்யப்பட்ட உத்தரவின்மேல் அப்பீல்செய்யப்பட்டால்

(கஅசுக௵-உ௲-வது ஆக்ட் உ-வது பிரிவிற் கண்டவிஷயங்களைத்தவிர) கட்சிக்காரர்களில் ஒருவனுடைய முன்னிலையில் அந்த அப்பீலைக் கோர்ட்டார் விசாரிக்கக்கூடாது. ஆனால் ௲சச-௲சரு-௲சசு-வது பிரிவுகளிற் சொல்லப்பட்ட ஸாங்கங்களை எல்லாங் கோர்ட்டார் அநுஷ்டிக்கவேண்டும். (ச-பு-கஅசு௦௵-அக்டோபர்மீ கவ.)

௩. யாதொரு உத்தரவின்மேல் அப்பீல்செய்யலாமென்று அ-வது ஆக்ட்டில் பிரகாசமாய்ச் சொல்லப்படாமலிருந்தால் அப்படிப்பட்ட அப்பீலை அங்கிகரிக்கக்கூடாது. (ச-பு-கஅசுக௵-ஜூலைமீ க௩வ.)

ச. ஷை ஆக்ட் உசஎ-வது பிரிவுப்படி தீர்ப்புக்காக ஜப்தியாயிருக்கிற சொத்தின்மேல் பாத்தியமனுவந்து அந்த பாத்தியமனுவிசாரணையின்பேரில் செய்யப்பட்ட உத்தரவின்மேல் அப்பீல்செய்யக்கூடாது.

ரு. அப்பீல்வியாச்சியத்தை அப்பீல் வாதி நடப்பிவித்துக்கொள்ளாதநிமித்தம் அந்த அப்பீல் தள்ளுபடியாகி அந்த அப்பீலை மறுபடியும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று அப்பீல் வாதி கொடுத்தமனுவும் அப்பீல் கோர்ட்டாரால் தள்ளப்பட்டிருந்தால் அந்த உத்தரவு முடிவானதாயிருக்கிறது. (ச-பு-கஅசு௦௵-ஜனவரிமீ கஎவ.)

சு. தீர்ப்பு நிறைவேற்றுகிற விஷயத்தில் ஒரு கோர்ட்டாரால் செய்யப்பட்ட உத்தரவு தீர்ப்பினுடைய வாசகங்களுக்கும் அந்தக் காலத்தில் ஊர்ஜிதமாயிருக்கிற சட்ட சாஸ்திரங்களுக்கும் விரோதமாயிருந்தாலுங்கூட அந்த உத்தரவின்மேல் அப்பீல்வாங்கலாமென்று ஷை ஆக்ட்டில் கண்டோக்தமாய் சொல்லியிருந்தால்மட்டும் அப்பீல் அங்கிகரிக்கலாமே அல்லாமல் அப்படி இல்லாதவரையில் ௲சுச-வது பிரிவுப்படி அந்த உத்தரவின்மேல் அப்பீல் வாங்கக்கூடாது. ஆனால் அந்த உத்தரவிலுள்ள கிரமப்பிசகை அப்பீல்க்கோர்ட்டார் எடுத்துக்காட்டி இனிமேல் அப்படிப்பட்ட பிசகு நேரிடாதபடி அந்த உத்தரவுசெய்த கோர்ட்டாருக்கு எச்சரிக்கை செய்யலாம். (ச-பு-கஅசு௦௵-ஆகஸ்டுமீ எவ.)

எ. தீர்ப்பு நிறைவேறுகிற விஷயத்தில் தாழ்ந்த கோர்ட்டார் அதிகாரவரம்பை மீறி யாதொரு உத்தரவுசெய்து அந்த உத்தரவு அப்பீலுக்கு யோக்கியம் இல்லாததாயிருந்தால் அந்த உத்தரவு

நிஷ்பலமானதென்றுஞ் செல்லாதென்றும் அந்தக்கோர்ட்டாருக்கு அப்பீல்க்கோர்ட்டார் தெரிவிக்கலாம். ஆனால் அந்த உத்தரவின் ஸாராம்சத்தில் அப்பீல்க்கோர்ட்டார் பிரவேசிக்கக்கூடாது. (ச-பு-கஅசுகஷு-ஏப்பிரல்மீ-உசஎ.)

அ. தீர்ப்பு பெற்றுக்கொண்டவன் இறந்துபோய் அவனுடைய பாத்தியஸ்தன் சர்ட்டிபிக்கெட்டு பெற்றுக்கொள்ளாமல் தீர்ப்பு நிறைவேற்ற மனுக்கொடுத்து அந்தப்பிரகாரந் தீர்ப்பை நிறைவேற்றும்படி தாலூகாமுன்சிப் உத்தரவு செய்திருந்தால் அந்த உத்தரவின்மேல் அப்பீல் இல்லை. (ச-பு-கஅசுகஷு-மேமீ கஎஎ.)

கூ. அசல்க்கோர்ட்டாருடைய உத்தரவின்மேல் அப்பீல்செய்யப்பட்டு அந்த அப்பீலில் அப்பீல்க்கோர்ட்டார் செய்த உத்தரவின் மேல் விசேஷ அப்பீலிடையாது. (ச-பு-கஅசுOஷு-ஏப்பிரல்மீ கஉஎ.)

கO. புநர்விமரிசைக்காகக் கொடுக்கப்பட்ட மனுவைத் தள்ளி ஙஎஅ-வது பிரிவுப்படி தாலூகா முன்சிபுசெய்த உத்தரவு முடிவானதால் அதின்மேல் ரீவில் ஜட்ஜ் அப்பீல் வாங்கக்கூடாது. (ச-பு-கஅசுகஷு-ஜனவரிமீ உகஎ.)

கக. ஙஎஅ-வது பிரிவுப்படி கீழ்க்கோர்ட்டாரால் செய்யப்பட்ட உத்தரவு முடிவானதால் அந்த உத்தரவின் விஷயத்தில் யாதொரு கட்சிக்காரனுடைய மனுவின்மேல் அப்பீல்க்கோர்ட்டாரால் செய்யப்பட்ட உத்தரவு பலப்பிராப்தியுள்ளதல்ல. அந்த உத்தரவுப்பிரகாரம் நடக்கக் கீழ்க்கோர்ட்டாருக்குக் கடமை இல்லை. (ச-பு-கஅசுகஷு-ஏப்பிரல்மீ கOஎ.)

தீர்ப்பு நிறைவேற்றல்-ஙஎ....... | வக்கீல்-கக........................

இவைகளைப்பார்க்க.

---

## உபகாரச்சம்பளம்.

க. ஒரு தீவான்செய்த ஊழியத்துக்காக அவனுடைய யாவத் ஜீவபரியந்தம் அவனுக்கு ஜமீன்தாரால் ஏற்படுத்தப்பட்ட பென்சியன் அல்லது உபகாரச்சம்பளமானது சாஸ்திரீயமானதால் அதைப் பிற்பாடு நிறுத்தக்கூடாது. (கஅருOஷு-நம்-சரு.)

இனும்-கசு................................ | ஜீவநாம்சம்-கக.........................
கடன்-உசு................................ | தீர்ப்பு நிறைவேற்றல்-சக.......

இவைகளைப்பார்க்க.

---

## உயில்.

மரணசாஸநத்தைப்பார்க்க.

---

## உற்சவம்.

ஆலயத்தைப்பார்க்க.

---

## ஊர்வலம்.

கிராமப்பிரதட்சணத்தைப்பார்க்க.

---

## எஜமானன்.

க. காரியஸ்தனால் எழுதிக்கொடுக்கப்பட்ட கடன்பத்திரத்தை ஆட்சேபிக்காமல் அதின்தொகையைக் கொடுப்பதாய் யஜமானன் ஒப்புக்கொண்டதால் அந்தத்தொகையை யஜமானன் கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (க௲அருரு௵-நம்-உஅ-ப-கஙரு.)

உ. யஜமானனுக்காகப் பாத்தியப்பட்டுக் காரியஸ்தன் எழுதிக்கொடுத்த பத்திரத்தின் தொகையைப்பற்றி யஜமானன்மேல் வியாச்சியஞ்செய்யலாம். (ஷை.)

ங. காரியஸ்தன்பெயரால் பிறந்திருக்கிற பத்திரத்தின் தொகையைக்குறித்து யஜமானன் வியாச்சியஞ்செய்யலாம். (ஷை நம்பர்-க௲அருரு௵-நம்-சாக-ப-அகூ.)

காரியஸ்தனைப்பார்க்க.

---

## எல்லை.

க. பிரியாதிற்கண்ட நான்கெல்லைக்குட்பட்ட நிலம்மட்டும் வியாச்சியத்திற்சேர்ந்திருப்பதாக எண்ணவேண்டியதேதவிர அந்த நான்கெல்லைகளும் வியாச்சியத்திற்சேர்ந்திருப்பதாக எண்ணக்கூடாது. (க௲அகூ0௵-நம்-ருஅஅ-க௲அகூக௵-ப-சாசா.)

உ. விவாதநிலங்களின் பெயர்களையும் அவைகளின் பிரசித்தமான நான்கெல்லைகளையும் வாதி பிரியாதில் விவரிக்கவேண்டும். (க௲அககூ௵-நம்-கச.)

ங. எல்லைத் தகராரைப்பற்றின வியாச்சியங்களில் விவாதநிலம் வாதிகளின் கிராமத்தைச்சேர்ந்ததென்று பரிஷ்காரமாய் ருஜுவாகா

தவணையில் அளவுகணக்குகளைமட்டும் ஆதாரமாய்க்காட்டி வாதிகள்பட்சந் தீர்ப்புசெய்யக்கூடாது. (கஅருகூ ஹு-நம்-கருகூ-கஅகூ௦ ஹு-ப-உஎ.)

தீர்ப்பு நிறைவேற்றல்-கூ......... | பட்டா-ரு.......................

இவைகளைப்பார்க்க.

---

## எல்லை ஓடல்.

க. நிலத்தைப்பற்றின வழக்கில் கட்சிக்காரர்களில் ஒருவன் எல்லை ஓடுகிறதென்றும் அந்தப்பிரகாரம் வியாச்சியத்தைத் தீர்த்துக்கொள்ளுகிறதென்றும் உபயவாதிகளும் பேசிக்கொண்டு வழக்கமான கிரியைகளுடன் குறிக்கப்பட்ட கட்சிக்காரன் எல்லை ஓடினபிற்பாடு அதை அநுசரித்துக்கோர்ட்டார் தீர்ப்புசெய்யவேண்டும். கட்சிக்காரர்களும் அந்தச்சங்கேதத்துக்கு உட்படவேண்டும். (கஅகச ஹு-நம்-ச.)

---

## ஏலம்.

க. பேரிற் ஏற்படாத தாலூகாவில் ரிவின்யூபோர்டாருடைய உத்தரவில்லாமல் சர்க்கார் பாக்கிக்காக யாதொருநிலத்தைக் கலெக்டர் ஏலம்போட்டால் அந்த ஏலத்தை கவர்ன்மெண்டார் சூட்சம விசாரணையின்பேரில் ரத்துசெய்யக்கூடாது. (கஅரு௫ ஹு-நம்-க௦.)

உ. நிலத்தைக்கோர்ட்டார் ஏலம்போடுங்காலத்தில் அதின் ஸ்வான்காரனுக்கு எவ்வளவுபாத்தியமோ அவ்வளவுபாத்தியமட்டுந்தான் அதை ஏலத்தில் வாங்குகிறவனுக்கும் உண்டாகுமேதவிர அதற்குமேல் அதிகபாத்தியம் உண்டாகமாட்டாது. (கஅரு௩அ ஹு-நம்-கக.)

௩. குத்தகை ஒப்புக்கொண்ட புறக்குடியின்சொத்தை ஜமீன்தார் அவசரம் இல்லாமல் ஏலம்போட்டு உபத்திரவஞ்செய்ததால் ஏலத்தொகையில் ஜமீன்தாரைச்சேரவேண்டிய பகுதித்தொகை ஈடானதுபோக பாக்கித்தொகையை அந்த ஜமீன்தாருக்குக் கொடுக்கக்கூடாதென்றும் வேறேகுடிகள் இடத்தில் கிராமங்களைக்குத்தகைக்குவிட்டதினால் ஜமீன்தாருக்கு நேரிட்ட நஷ்டமும் அவனுக்குக் கிடைக்கமாட்டாதென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (கஅஉகூ ஹு நம்பர்-க.)

ச. உ-ம் பிரதிவாதி கொடுக்கவேண்டிய தீர்ப்பின்தொகைக்காக அவனால் தனக்குச்சொந்தமானதென்று காட்டப்பட்ட சொத்தை

ஏலம்போடப்பட்டது. பிற்பாடு அந்தச்சொத்து உ-ம் பிரதிவாதிக்குச்சொந்தம் அல்லவென்று ருஜூவானதினால் அவனிடத்தில் ஏலக்காரன் ஏலத்தொகையைப் பெற்றுக்கொள்ளப் பாத்தியஸ்தன் என்று தீர்மானிக்கப்பட்டது. (கஅருரு௵-நம்-ச.)

ஒற்றி-எ........................ | தீர்ப்பு நிறைவேற்றல்-உரு-௱க-
கிராம உத்தியோகங்கள்-சா...... | ௱உ-௱௱-௱ச-௱ரு-௱சா......
சாட்சியம்-சச..................

இவைகளைப்பார்க்க.

ஒப்புக்கொள்ளுதல்.

அங்கிகாரத்தைப்பார்க்க.

ஒற்றி.

க. சொந்தக்காரன் நிலத்தைக் கிரயஞ்செய்கிறபட்சத்தில் அதை ஒற்றிபெற்றவனுக்கே விற்கவேண்டுமென்று ஒற்றிப்பத்திரத்தில் நிபந்தனை கண்டிருந்தால் அந்த நிபந்தனையை அநியாயமானதென்று கோர்ட்டார் தள்ளக்கூடாது. (கஅருஅ௵-ப-உக.)

உ. கடன்வாங்கினவன் கெடுவில் தொகைகொடுக்கத்தப்பினால் ஈடுவைக்கப்பட்ட நிலமுதலான ஸ்திதிகள் கடன்கொடுத்தவனுக்குச் சொந்தமாய் சித்தித்துப்போகிறதென்று பத்திரத்தில் நிபந்தனை கண்டிருக்கிறபட்சத்தில் அந்த அபராதநிபந்தனையைக் கோர்ட்டார் நிறைவேற்றக்கூடாது. கடன்கொடுத்தவன் அசலையும் வட்டியையும் மட்டும் பெற்றுக்கொள்ளப்பாத்தியஸ்தன் (கஅருஅ௵-நம்-கஈo, கஅருகூ௵-ப-ருகூ-க௱o-கஎஅ. கஅருகூ௵-நம்-எரு-எஅ-கூo-கoச-கoரு-கருரு-ப-கூ௱-கருo-கஎஅ-உருக. கஅசாo௵-நம்-உரு-ப-உசா-சo. கஅசாo௵-நம்-உoஅ-உஎஉ-௱சாக. கஅசாக௵-ப-எ-உo-அச.)

௱. கரு-வருஷம் வரையில் நிலத்தை மீட்டுக்கொள்ளக்கூடாதென்று ஒற்றிப்பத்திரத்தில் வெளிப்படையாய் நிபந்தனைகண்டிருந்தால் உபயவாதிகளுடைய சம்மதமில்லாமல் அந்தக்காலத்துக்குள்ளாகவே அந்தநிலத்தை மீட்டுக்கொள்ளக்கூடாது. (கஅருஅ௵-நம்-கசாo-கஅருகூ௵-ப-உஅ.)

ச. வட்டியைப்பற்றின கஅ௫௫-ம் உஅ-வது ஆக்ட்டு உண்டாகிறதற்குமுன் நிலத்தை ஒற்றிவாங்கி அநுபவிக்கிறவன் அப்போதிருந்த கிரமமானவட்டிக்குச் சரியான வருமானத்தைமட்டும் அநுபவிக்கப் பாத்தியஸ்தனாயிருக்கிறான். (கஅ௫க-ஷூ-நம்-சநு-ப-௫உ.)

௫. ஒருவனுக்கு நிலம் ஒற்றிவைக்கப்பட்டிருக்கிற சங்கதியை அறியாமல் வேறொருவன் அதைக் கிரயத்துக்கு வாங்கினாலுங்கூட அந்தக்கிரயத்தினால் ஒற்றிக்காரனுடைய பாத்தியத்திற்கு யாதொரு குறைவும் உண்டாகமாட்டாது. (கஅ௫க-ஷூ-ப-கூச.)

சு. ஒருவன் தான் ஒற்றிவாங்கின நிலத்தை வேறொருவனுக்குக் குத்தகைக்குவிட்டு அந்தக் குத்தகைக்காரன் இடத்திலிருந்து ஷை நிலத்தைச் சொந்தக்காரன் மீட்டுக்கொண்டபோதிலும் ஷை குத்தகைக்காரன் யாரிடத்தில் குத்தகை ஒப்புக்கொண்டானோ அவனுக்குக் கொடுக்கவேண்டிய தொகையை உத்தரிக்கவேண்டியவனாகவிருக்கிறான். (கஅ௫க-ஷூ-நம்-கரு உ-ப-௩ச.)

எ. ஒற்றிவைத்தவன் ஒற்றித்தொகையைக் கெடுவில் கொடுக்காமற்போனாலுங்கூட அவன் ஒற்றிநிலத்தை இழந்துபோகமாட்டான். ஆனால் ஒற்றித்தொகையைக் கொடுக்கும்படி தீர்ப்பான பிற்பாடு அவன் கொடுக்கத் தப்பிப்போனால் ஷை ஒற்றிநிலத்தைக் கோர்ட்டார் ஏலம்போடலாம். (கஅ௫க-ஷூ-நம்-எஅ-ப-க௫௦.)

அ. மலையாளதேசத்தில் ஒருவன் ஒற்றிவாங்கி யனுபவிக்கிற நிலத்தைச் சொந்தக்காரன் கிரயஞ்செய்யவேண்டியிருந்தால் அந்த ஒற்றிக்காரனுக்கு முந்தித் தெரியப்படுத்தி அவன் வாங்கிக்கொள்ளாமற்போனால்மட்டும் வேறொருவனுக்குக் கிரயஞ்செய்யலாம். (கஅ௫க-ஷூ-நம்-கூ௩-ப-கஎக.)

கூ. ஒற்றிப்பத்திரத்தின் கெடுத் தப்பிப்போனாலுங்கூட அந்தக் கெடுவுக்குப்பின்பு ஒற்றித்தொகையையும் வட்டியையுங் கொடுத்து நிலத்தை மீட்டுக்கொள்ள ஒற்றிவைத்தவன் சுதந்தரமுள்ளவனாயிருக்கிறான். (கஅ௫க-ஷூ-நம்-எ௦-க௦௫-ப-கக்க-உ௫க.)

க௦. நிலத்தை ஒற்றிபெற்றவன் அதின் வருமானத்தினால் அசலும் வட்டியுந் தீர்ந்தபிற்பாடு நிலத்தைச் சொந்தக்காரன் இடத்தில் விட்டுவிட ஆட்சேபித்தால் அந்த ஆட்சேபனையின் காலமுதல் கஉ-வருஷத்துக்குள்ளாகச் சொந்தக்காரன் ஷை நிலத்திற்காக வியாச்

சியஞ் செய்யவேண்டும். அப்படி அவன்செய்யத்தப்பிப்போனால் ஒற்றிவாங்கினவனுக்கே நிலம் சித்தித்துப்போகும். (௧௮௫௯ ௵ நம்-௭௦-ப-௧௯௧.)

௧௧. ஒற்றிபெற்றவன் வசத்தில் இருக்கிறநிலத்தை ஒற்றித்தொகையைக் கொடாமற் சொந்தக்காரன் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டால் ஒற்றித்தொகை கொடுக்கப்படுகிற காலம்வரையில் அவன் ஒற்றிக்காரனுக்கு ஸ்வாமிபோகங் கொடுக்கவேண்டும் அல்லது நிலத்தையாவது ஒற்றிபெற்றவன் வசத்தில் விட்டுவிடவேண்டும். (௧௮௫௯ ௵-நம்-௧௦௯-ப-௧௭௧.)

௧௨. மலையாளதேசத்தில் ௯௯-வருஷத்துக்குமுன் நிலத்தை ஒற்றிவைத்தவன் அந்தத்தேசவழக்கப்படி ௧௨-வருஷத்துக்கு ஒருதரம் ஒற்றியைப் புதுப்பித்துக்கொள்ளாமல் இருந்தபோதிலும் அவ்வளவு காலத்துக்குப்பிற்பாடு அவன் ஷை நிலத்தை மீட்டுக்கொள்வதில் விக்கினமில்லை இந்தவிஷயத்தில் காலநிபந்தனை தோஷமுமில்லை. (௧௮௫௮ ௵-நம்-௧௬௮-௧௮௫௯ ௵-ப-௩௨௪.)

௧௩. எந்தத்தேதியில் பந்தகச்சொத்து ஒற்றிக்காரனுக்குச் சொந்தமாய்ச் சித்தித்துப்போகிறதென்று பந்தகப்பத்திரத்தில் நிபந்தனை கண்டிருக்கிறதோ அந்தத்தேதிமுதல் ௧௨-வருஷத்துக்குமேல் அதிககாலமாய்விட்டாலுங்கூடச் சொத்துக்குடையவன் பணத்தைக்கொடுத்து மீட்டுக்கொள்ளப் பாத்தியஸ்தனாகயிருக்கிறான். இந்த விஷயத்தில் காலநிபந்தனைதோஷம் கிடையாது. (௧௮௬௦ ௵-நம்-௨௫-ப-௩௯.)

௧௪. பிரதிவாதிக்கு ஒற்றிவைக்கப்பட்ட நிலங் கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தான். பிரதிவாதி அந்த ஒற்றிவிஷயத்தை ஒப்புக்கொண்டு பிற்பாடு தனக்கு ஷை நிலம் கிரயமாய்விட்டதாக எதிர்வழக்காடினான். பிரதிவாதியாற் சொல்லப்படும் கிரயம் ருசுவாகாததினாலும் ஆதியில் தனக்கு நிலம் ஒற்றியாயிருந்ததை அவன் ஒப்புக்கொள்வதாலும் அவன் தொகை பெற்றுக்கொண்டு நிலத்தை வாதிக்கு விட்டுவிடவேண்டியதென்றும் வாதி வழக்குக்கு ஆதாரமான ஒற்றி எதிர்நடைச்சீட்டு கற்பனையானதென்று ருசுவானபோதிலும் அதினால் ஷை நிலத்தை மீட்டுக்கொள்ளும்படியான பாத்தியத்தை வாதி யிழந்துபோகவில்லையென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௯ ௵-நம்-௨௦௫-௧௮௬௦ ௵-ப-௬௯.)

௧௫. ஒற்றித்தொகையைக்கொடுத்து நிலத்தையும் ஒற்றிப்பத்திரத்தையும் மீட்டுக்கொண்டதாகக் கட்சிபேசுகிறவன் உத்தமசாட்சியமாகிய அந்த ஒற்றிப்பத்திரத்தையே கோர்ட்டில் தாக்கல்செய்ய வேண்டும். அதைத் தாக்கல்செய்யாமற்போனதற்கு அவன் தகுந்த காரணஞ்சொல்லாவிட்டால் அந்தவிஷயத்தைப்பற்றி சாட்சிகளின்ருசுவை அங்கீகரிக்கக்கூடாது. (௧௮௬௦ ஹை-நம்-௧௧௨-ப-௧௪௭.)

௧௬. ஒற்றிவைத்தவன் ஒற்றித்தொகையைக் கெடுவிற் கொடுக்கிறதென்றும் கொடுக்கத்தப்பினால் ஒற்றிவாங்கினவனிடத்தில் இன்னம் சிலதொகையை அதிகமாய்ப் பெற்றுக்கொண்டு நிலத்தை அவனுக்கே கிரயஞ்செய்து கொடுத்துவிடுகிறதென்றும் பத்திரத்தில் நிபந்தனை கண்டிருக்கிற பட்சத்தில் அந்தக்கெடுவில் ஒற்றித்தொகையைக் கொடுக்கத்தப்பிப்போனால் அதற்குப் பிற்பாடு நிலத்தை மீட்டுக்கொள்ளும்படியான சுதந்திரம் ஒற்றிவைத்தவனுக்கில்லை. அவன் ஒற்றிவாங்கினவனிடத்தில் அதிகமாய்த் தொகை பற்றிக்கொண்டு நிலத்தை அவனுக்கே கிரயஞ்செய்யவேண்டும். (௧௮௫௩ ஹை-நம்-௩-௧௮௬௦ ஹை-நம்.௩௩-ப-௧௫௧.)

௧௭. ஒற்றித்தொகை செலுத்தவேண்டிய கெடுவில் அந்தத்தொகைக்குப்பதிலாய் ஸ்வான்காரனே மனப்பூர்வமாய் நிலத்தை ஒற்றிபெற்றவன்வசத்தில் விட்டு ஒற்றிப்பத்திரத்தின் வாசகத்தை அநுஷ்டானத்துக்குக் கொண்டுவந்திருப்பானாகில் பிற்பாடு அந்தநிலத்தை மீட்டுக்கொள்ள ஸ்வான்காரனுக்குப் பாத்தியமில்லை. (௧௮௬௦ ஹை-நம்-௫௫-ப-௨௬௨.)

௧௮. மலையாளதேசத்தில் அதிகத் தொகைகொடுத்துப் பந்தகம் வாங்கினவன் சொற்பத்தொகைக்குப் பந்தகம் வாங்கினவனுடைய முன்பாத்தியத்தைத் தீர்த்து நிலத்தைப் பெற்றுக்கொள்ளப்பாத்தியஸ்தனா யிருக்கிறான். (௧௮௬௦ ஹை-நம-௧௦௮-ப-௧௯௮.)

௧௯. மலையாளதேசத்தில் நிலத்தை ஒற்றிவைத்தவனுக்கு மறுபடியும் பணம்வேண்டியிருக்கிறபட்சத்தில் ஒற்றிபெற்றவனிடத்திலே அவன் முந்திப் பணங் கேட்கவேண்டும். அவன் கொடாமற்போனால்மட்டும் அதிகத்தொகைக்கு வேறொருவனிடத்தில் ஷை நிலத்தை ஒற்றிவைக்கலாம். முந்தின ஒற்றிக்காரனுடைய மனோரதத்தை அறியாமல் வேறொருவன்பேரால் செய்யப்பட்ட ௨-வது ஒற்றிசெல்லாது. (௧௮௬௦ ஹை-நம்-௭-ப-௨௪௯.)

உ0. நிலத்தை ஒற்றிவைத்தவர்கள் எல்லாருஞ் சேர்ந்து வியாச்சியஞ் செய்யாமல் அவர்களிற் சிலர்மட்டுந் தங்களுடைய வீதநிலத்தை மீட்டுக்கொள்ளவேண்டியதற்காக வியாச்சியஞ் செய்தார்கள். ஒற்றியாயிருந்த ஷை நிலத்தைப் பிற்பாடு பலசாஸநங்கள் மூலமாய்த் தாங்கள் கிரயம்பெற்றுக்கொண்டதாகப் பிரதிவாதிகள் எதிர்கட்சி சொன்னார்கள். ஷை சாஸநங்கள் ருசுவாகவில்லையென்றும் ஒற்றிவைத்த எல்லாரிடத்திலும் ஒரேசாஸநமாய் வாங்காமல் தனித்தனியே வெவ்வேறே சாஸநங்கள் பெற்றுக்கொண்டதாகப் பிரதிவாதிகள் சொல்வதைக்கொண்டே ஒற்றிவைத்தவர்களிற் சிலர்மட்டும் அவர்களுடைய வீதநிலத்தைப்பற்றி வியாச்சியஞ்செய்தது கிரமமானதென்றும் நிர்ணயிக்கப்பட்டது. (௧அ௫௩ ஹு-நம்-உஅ-உ௯.)

உ௧. ஒருவனுக்குப் பந்தகம் வைக்கப்பட்டிருக்கிற பூஸ்திதியை ஸ்வான்காரன் வேறொருவனுக்குக் கிரயஞ்செய்யலாம். அப்படிக்கிரயம் வாங்குகிறவன் ஸ்வான்காரனுடைய ஸ்தானத்தில் இருப்பதால் அவன் கெடுக்காலத்தில் பந்தகத்தொகையைக்கொடுத்து ஷை பூஸ்திதியை மீட்டுக்கொள்ளப் பாத்தியஸ்தனாயிருக்கிறான். (௧அ௫௪ ஹு-நம்-உ0-)

உஉ. பத்திரநிபந்தனைக்கு விரோதமில்லாதபட்சத்தில் பந்தகக்காரன் பந்தகத்தொகையைப்பற்றி அவனுக்கு இஷ்டமானபோது தொடரப்பாத்தியஸ்தனாயிருக்கிறான். (௧அ௫௫ ஹு-நம்-உ௩.)

உ௩. மலையாளதேசவழக்கப்படி நிலத்தை ஒற்றிவைத்து, ௧உ-ஹு ஆனபிற்பாடு தான் அதை மீட்டுக்கொள்ளவேண்டும். (௧அ௫௫ ஹு-நம்-௪௪.)

உ௪. நிலத்தை மீட்டுக்கொள்ளும்படியான நிபந்தனைகண்டு ஒற்றி எதிர்நடைமுதலான ஆதரவுகள் பிறக்கவேண்டியதில்லை. எவ்வளவு காலமானாலும் ஒற்றி நிலத்தை மீட்டுக்கொள்ள ஸ்வான்காரன் பாத்தியஸ்தனாயிருக்கிறான். (௧அ௫௫ ஹு-நம்-௧௫உ.)

உ௫. ஒற்றிவைத்தவன் ஒற்றித்தொகையைக் கொடுக்கக்கொண்டுபோய் அதை ஒற்றிக்காரன் வாங்கிக்கொள்ளாமற்போனால் அதுமுதல் நிலத்தின் வருமானத்துக்கு ஒற்றிபெற்றவன் பாத்தியப்படவேண்டும். ஒற்றிக்காரன் ஒற்றித்தொகையை வாங்கிக்கொள்ளாவிட்டபோதிலும் அந்தத்தொகையை ஸ்வான்காரன் ௩-வது மநுஷியனிடத்தில் பொதுக்கட்டவேண்டியதில்லை. (௧அ௫எ ஹு-நம்-௧௩௪.)

உசுா. முந்தின ஒற்றிக்காரனுடைய ஆதரவுகள் கைதப்பிப்போனால் அவனுடைய பாத்தியத்தைப்பார்க்கிலும் பிந்தின ஒற்றிக்காரனுடைய பாத்தியம் பிரபலமாகும். (கஅஉரு ஹூ-நம்-உ.)

உஎ. தகப்பன் கொடுக்கவேண்டிய தீர்ப்பின் தொகைக்கு உத்தரவாதமாயிருக்கிற ஸ்திதியை அவன் இறந்துபோனபிற்பாடு மகன் வேறேயாருக்காவது ஒற்றிவைத்தாற் செல்லாது. (கஅஉரு ஹூ-நம்-அ)

உஅ. பத்திரத்தில் கெடுக்காலமும் காலநிபந்தனை தோஷமில்லாமலும் இருக்கிறபட்சத்தில் ஒற்றிக்காரன் ஒற்றித்தொகையைப் பற்றி எந்தக்காலத்தில் வேண்டுமானாலும் தொடரலாம். அவன் நீண்டகாலமாய் ஒற்றிசொத்தை அநுபவித்துவந்தபோதிலும் அந்தச் சொத்திலிருந்து அவன் ஒற்றித்தொகையைப் பெற்றுக்கொள்வதற்கு யாதொருதடையுமில்லை. (கஅசசுா ஹூ-நம்-கா.)

உகூ. ஒற்றிவைக்கப்பட்ட ஸ்திதி வெண்ணிலைக் கடன்பத்திரங்களுக்குப் பாத்தியப்படமாட்டாது. (கஅருஎ ஹூ-நம்-சுா.)

கூ0. ஒற்றிப்பத்திரத்தைப் பிரதிவாதி தாக்கல்செய்யாவிட்டால் அதின் உண்மையைப்பற்றி சாட்சிகளை விசாரிக்கலாம். (கஅருஅ ஹூ-நம்-கக0.)

கூக. ஜப்தியிலிருக்கிற சொத்தை ஒற்றிவைக்கக்கூடாது. (கஅருஅ ஹூ-நம்-அகூ-ப-க0எ.)

கூஉ. சர்க்கார்த்தீர்வை முதலான கடன்களுக்காகச் சொத்து முழுதுங் கையைவிட்டுப்போகாமல் இருக்கவேண்டியதற்காகக் குடும்பவியாபகன் அவசரமானமட்டும் அந்தச்சொத்தைப் பக்கத்தில் ஒற்றிவைக்கலாம். (கஅகூக ஹூ-நம்-எ.)

கூகூ. கோவில் நிலத்தை விசாரணைக்கர்த்தாக்களில் ஒருவன்மட்டும் ஒற்றிவைத்தால் செல்லாது. அவன் மற்றவர்களுடைய சம்மதத்துடன் கோவில் பிரயோஜனத்துக்காக ஒற்றிவைத்தால் செல்லும். (கஅசஎ ஹூ-நம்-க0.)

கூச. பூஸ்திதியை ஒற்றிக்காரனிடத்தில் உள் ஒற்றிவாங்கினவன் அந்த ஒற்றிக்காரனிடத்திலேயே கணக்குத் தீர்த்துக்கொள்ளவேண்டும். ஆதிஸ்வான்காரனிடத்தில் கணக்குத் தீர்த்துக்கொண்டதாக

உள் ஒற்றிக்காரன் சொல்லுங் கட்சிசெல்லாது. (க௮௫௯ளு-நம்-கரு௨.)

௩௫. நிலத்தை ஒற்றிவாங்கினவனுக்கு எப்போது இஷ்டமோ அப்போது அவன் ஒற்றித்தொகையைப் பெற்றுக்கொண்டு ஸ்வானுக்கு நிலத்தை விட்டுவிடுகிறதென்று ஒற்றி ஆதரவில் எழுதப்பட்ட வக்கணையானது சுத்த அதிக்கிரமம். ஸ்வானுக்கு இஷ்டமானபோது நிலத்தை மீட்டுக்கொள்ள ஆடங்கம் இல்லை. (க௮௬0ளு-நம்-௨௩௭-க௮௬கவு-ப-௩௬.)

௩௬. ஒருவனுக்குப் பந்தகம் வைக்கப்பட்ட நிலத்தை வேறொருவருக்கும் குத்தகைக்கு விடுகிறதில்லையென்று பந்தகப்பத்திரத்தில் வாசகங்கண்டிருக்கிற பட்சத்தில் அந்தநிலத்தை ஸ்வான்காரன் வேறேயாதொருவனுக்குங் குத்தகை கொடுக்கக்கூடாது. அந்தக் குத்தகைக்காரனிடத்தில் ஷை பந்தகக்காரன் பந்தகத்தொகையை வாங்கிக்கொள்ளமாட்டேனென்று நிராகரிக்கலாம். (க௮௬0ளு-நம்-௩௪0-க௮௬கவு-ப-௪௩.)

௩௭. போக்கியமாய் அநுபவிக்கப்படுகிற நிலத்தின் வருமானத்தினால் போக்கியத்தொகையும் வட்டியுந் தீர்ந்து போக்கியக்காரனுக்கு அதிகவருமானங்கிடைத்திருக்கிற பட்சத்தில் அந்த நிலத்தைப் பற்றியும், அதிகவருமானத்தைப்பற்றியும், போக்கியக்காரன்மேல் ஸ்வான்காரன் வியாச்சியஞ்செய்யலாம். ஷை நிலத்தில் வருமானங்கிடைக்கவில்லையென்று போக்கியக்காரன் கட்சிசொன்னால் வருமானக்கணக்குகளை தாக்கல்செய்து அவன் அந்தப்படி நிரூபிக்கவேண்டும். (க௮௬0ளு-நம்-௩0௫-க௮௬கவு-ப-௪௪.)

௩௮. பிரதிவாதிகளின் குடும்பவியாபகனான இறந்துபோன அ-என்பவனுக்கு விவாதநிலம் ஒற்றிவைக்கப்பட்டதாகவும் ஒற்றித்தொகையைப் பெற்றுக்கொண்டுபிரதிவாதிகள் நிலத்தை விடவேண்டுமென்றும் வாதி வியாச்சியந் தொடர்ந்தான். ஒற்றித்தொகையைப் பெற்றுக்கொள்ளத் தான் பாத்தியஸ்தனென்று முதற் பிரதிவாதியும் தான் பாத்தியஸ்தியென்று, ௩-ம் பிரதிவாதியும் எதிர்வழக்காடினார்கள். அந்த வியாச்சியத்தில் க-௩-பிரதிவாதிகளின் பாத்தியத்தைப் பற்றி விசாரிக்கவேண்டிய அகத்தியம் இல்லையென்றும் ஒற்றித்தொகையை வாதி கோர்ட்டில் செலுத்திவிட்டு நிலத்தைப் பெற்றுக்

கொள்ளவேண்டியதென்றும் ௧௮௪௧ ௵-௨௦-வது ஆக்ட்டின் பிரகாரமாவது, ௧௮௬௦ ௵-௨௭-வது ஆக்ட்டின் பிரகாரமாவது, ௧-௩-பிரதிவாதிகள் போக்கியதாபத்திரிகை பெற்றுக்கொள்ளவேண்டியது கிரமம் என்னும் வாதிபக்ஷம் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௬௦ ௵-௩ம்-௩௨௬-௩௫௦-௧௮௬௧ ௵-ப-௪௮-௫௦.)

௩௯. போக்கியநிலத்தின் வருஷாந்தவருமானத்தில் சர்க்கார்த் தீர்வையும் சாகுபடிச்செலவும்போக பாக்கியை போக்கியத்தொகையின் வட்டிக்காக ஈடுசெய்து அதற்குமேல் மிச்சம் இருந்தால் அதை அசலுக்காக வரவுவைக்கவேண்டும். அந்தப்படி செல்லானதொகைபோக அசலில் பாக்கியிருந்தால், அந்தபாக்கியை போக்கியக்காரனுக்கு ஸ்வான்காரன் கொடுத்து நிலத்தை மீட்டுக்கொள்ளவேண்டும். (௧௮௬௦ ௵-௩ம்-௨௮௧-௧௮௬௧ ௵-ப-௭௯.)

௪௦. நிலத்தைப் போக்கியக்காரன் அநுபவிக்கிறதென்று போக்கியபத்திரத்தில் கண்டதனை எழுதப்பட்டு அந்தப்பிரகாரம் போக்கியக்காரனுக்கு ஸ்வான்காரன் நிலத்தை விடாமல் இருந்தால் அந்தத்தொகை செல்லாகிறவரையில் போக்கியநிலம் கிடைக்கவேண்டியதைப்பற்றியாவது அல்லது போக்கியத்தொகையைப்பற்றியாவது போக்கியக்காரன் இஷ்டப்படி வியாச்சியஞ்செய்யலாம். (௧௮௬௦ ௵-௩ம்-௩௯௧-௧௮௬௧ ௵-ப-௮௪.)

௪௧. போக்கியநிலத்தின்வருமானத்தினால் போக்கியத்தொகை பூரணமாய்த் தீர்ந்துபோய்விட்டதாகவும் தனக்கு அதிகவருமானங் கிடைக்கவேண்டியிருப்பதாகவும் சொல்லி நிலத்தைப்பற்றியும் அதிகவருமானத்தைப்பற்றியும் ஸ்வான்காரன் செய்த வியாச்சியத்தில் போக்கியத்தொகையில் சிலதொகை பாக்கியிருப்பதாக வெளியானதினால் பிரியாதுக்குப் பிந்தினகாலத்தில் போக்கியக்காரனுக்குக் கிடைத்திருக்கக்கூடுமான வருமானத்தினால் ஷை போக்கியத்தின் பாக்கித்தொகை செல்லானதுபோக இன்னமும் பாக்கியிருந்தால் அதை ஸ்வான்காரன் கொடுத்து நிலத்தை மீட்டுக்கொள்ளும்படிக்கும் மேற்கண்டபடி பொய்க்கட்சி பேசினதற்காக வாதியே செலவுகளைக் கொடுக்கும்படிக்கும் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௬௦ ௵-௩ம்-௨௮௧ ௧௮௬௧ ௵-ப-௭௯.)

௪௨. போக்கியநிலத்தை வட்டிக்குப்பதிலாய் போக்கியக்காரன் அநுபவிக்கும்படி அவன் வசத்தில் விட்டுவிடுகிறதென்று போக்கியப்பத்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறபிரகாரம் ஸ்வான்காரன் நிலத்தைவிடத் தப்பிப்போனதினால் ஷை நிலந் தனக்குச்சொந்தமாய் சித்தித்துப்போனதாகவும் அது கிடைக்கவேண்டுமென்றும் போக்கியக்காரன் வியாச்சியஞ் செய்தான். அந்தவழக்கு செல்லாதென்றும் போக்கியப்பத்திரவாசகப்படி வட்டிக்குப்பதிலாய் நிலத்தை அநுபவிக்கவேண்டியதற்காகவாவது போக்கியத்தொகையைப்பற்றியாவது வாதி வேறே வியாச்சியஞ் செய்யவேண்டுமென்றுந் தீர்ப்பு செய்யப்பட்டது. (௧௮௬௦ ௵-நம்-௪௮௪-௧௮௬௧ ௵-ப ௧௦௯.)

௪௩. கரையீட்டுக்கிராமத்தில் ஒற்றிவைக்கப்பட்டநிலம் பலபேர் கையேறும்படியாயிருப்பதால் ஒற்றியின் காலத்துக்குப்பின்பு அந்தக் கிராமம் அசந்திரார்க்கமானாலுங்கூட எந்தநிலம் ஒற்றிவைக்கப்பட்டதோ அந்தநிலமே ஸ்வான்காரனுக்கு மறுபடியுங் கிடைப்பது அசாத்தியம்.—கரையீட்டின் காலத்தில் ஒற்றிவைக்கப்பட்ட நிலத்தை மீட்டுக்கொள்வதற்காக ஸ்வான் வியாச்சியஞ் செய்கிறபட்சத்தில் தீர்ப்பு நிறைவேற்றுங்காலத்தில் பிரதிவாதிகள் வசத்தில் இருக்கிறநிலத்தில் நலம் இளப்பம் சரிக்கட்டி ஷை. ஸ்வான் பெற்றுக்கொள்ளும்படி கோர்ட்டார் தீர்ப்புச்செய்யவேண்டும். (௧௮௬௦ ௵-நம்-௫௫௪-௧௮௬௧ ௵-ப-௧௧௮.)

௪௪. ௨-௩-பிரதிவாதிகளுடைய முன்னோர்களால் முதற் பிரதிவாதியின் பாட்டனுக்குப் போக்கியம்வைக்கப்பட்ட நிலத்தை ௨-௩-பிரதிவாதிகள் தனக்குக் கொடுத்துவிட்டதாகவும் அந்தநிலம் கிடைக்கவேண்டுமென்றும் வாதி சம்வாதஞ்செய்தான். அந்தவழக்கு சாம்பர்ட்டி தோஷக்கிரஸ்தமென்று தள்ளப்பட்டது உடனே ஷை ௨-௩-பிரதிவாதிகள் ஷை நிலத்தைப்பற்றி வேறே வியாச்சியம் செய்தார்கள். மேற்கண்ட வியாச்சியத்தின் வாதிக்கு விவாதநிலத்தைக் கொடுத்துவிட்டதாக அந்த வியாச்சியத்தில் ஷை ௨-௩-பிரதிவாதிகள் ஒப்புக்கொண்டிருப்பதால் அந்தநிலத்தின் ஸ்வான் பாத்தியத்தைப்பற்றித் தொடர அவர்களுக்குப் பாத்தியம் இல்லையென்று அவர்களின் வியாச்சியம் தள்ளப்பட்டது. (௧௮௬௦ ௵-நம்-௯௨௭-௧௮௬௧ ௵-ப-௧௨௭.)

சரு. போக்கியத்தொகையைப் பிரதிவாதி கெடுவிற்கொடுக்கத் தப்பிப்போனதினால் போக்கியப்பத்திரத்தின் வாசகப்படி நிலம் தன க்குச் சொந்தமாய்விட்டதாகவும் அதின்மிராசு தன்பெயரால் தா க்கலாகவேண்டுமென்றும் வாதி வியாச்சியஞ்செய்தான். அந்தவி யாச்சியம் பிரதிவாதியால் ஆட்சேபிக்கப்பட்டது அதற்குமுன் ஷ்ெ போக்கியத்தை ரத்துசெய்வதற்காக உபயவாதிகளின்மேலே பிரதி வாதியின் சகோதரிசெய்த வியாச்சியத்தில் போக்கியப்பத்திரத்தின் வாசகப்படி வாதிக்கு நிலஞ் சித்தித்துப் போய்விட்டதாக அசல் கோர்ட்டில் தீர்ப்புச்செய்யப்பட்டு அதின்மேல் பிரதிவாதி அப்பீல் செய்யாமல் இருந்துவிட்டதால், அந்தத் தீர்ப்பினிபந்தனைக்குப் பிரதிவாதி உட்படவேண்டுமென்று வாதிபட்சம் தீர்ப்புச்செய்யப் பட்டது. (௧அ௬௧ஊ-நம்-௧௧-ப-௧உ௬.)

சசு. போக்கியநிலத்தை மீட்டுக்கொள்வதற்காகச் செய்யப்பட்ட வழக்கில் அந்த நிலத்துக்குத் தானே ஸ்வாமியென்று பிரதிவாதி வாதாடினான் அந்தப்படி அவன் ரூபிக்கத்தப்பிப்போனதால் அவ னுக்குப் போக்கியத்தொகைகூடக் கிடைக்கமாட்டாதென்று வாதி பட்சந் தீர்மானிக்கப்பட்டது. (௧அருச ஊ-நம்-ருஉ.)

சஎ. ஒருவனுடைய முந்தின வியாச்சியம் ஒற்றிவிஷயத்தைப்ப ற்றினதாயிருந்தால் ஸ்வான் பாத்தியத்தைப்பற்றிப் பிற்பாடு அவன் வியாச்சியஞ்செய்ய ஆடங்கம் இல்லை. (௧அருஉ ஊ-நம்-௧அ.)

சஅ. மலையாளதேசத்தில் பூரூபமான யாதொரு ஸ்திதியின் ஸ்வானும் அவனிடத்தில் அதை அதிகத்தொகைக்கு ஒற்றிபெற்ற வனும் ஒரேவியாச்சியத்தில் வாதிகளாய்ச்சேர்ந்து குறைந்த தொ கைக்கு ஒற்றிபெற்றவன்மேல் வழக்கிடக்கூடாது. ஆனால் அந்தப் படி அவர்கள் ஏகோபித்து வியாச்சியஞ்செய்ததைப்பற்றிப் பிரதி வாதி ஆட்சேபிக்காமற்போனால் கோர்ட்டாரும் ஆட்சேபிக்கவேண் டியதில்லை. (௧அ௬0ஊ-நம்-௧0அ-ப-௧௯அ.)

ச௯. ஒருசொத்து இருவருக்குப்பந்தகப்பட்டிருக்கிறபட்சத்தில் மூலாதாரவு சஹிதமாய்ப் பந்தகம் வாங்கியிருக்கிறவனுடைய பாத்தி யமே சிரேஷ்டமாம். ஷ்ெ இரண்டுபந்தகக்காரர்கள் பட்சமாகவுந் தீர் ப்புகள் பிறந்திருக்கிறபட்சத்தில் ஷ்ெ பந்தகச்சொத்தை எந்தத்தீர் ப்பில் பாத்தியங் கண்டெழுதப்படவில்லையோ அந்தத் தீர்ப்புக்கு

அந்தச்சொத்து பாத்தியப்படமாட்டாது. (ச-உ, க௮௬0ஹ மார்ச்சு மீ ௫வ-சிவி. க௮௫௬ஹ-நம்-௩௬க.)



இவைகளைப்பார்க்க.

---

கக௲.

க. ஆதியில் ஒரு செய்கையானது எந்த நிமித்தியத்தினுல் செய்யப்பட்டதோ அந்த நிமித்தியத்துக்குப் பிரத்தியட்ச விரோதமான வேறொரு நிமித்தியத்தை அந்தச்செய்கைக்கு ஆதாரமாகப்பேசக் கூடாது. (க௮௩௫ஹ-நம்-க0.)

உ. இறந்துபோன ஒருவனுக்கு வாதி பாத்தியஸ்தன் என்கிற ஆதாரத்தின்மேல் வாதியால் செய்யப்பட்ட வழக்கில் இறந்துபோனவனுக்கு வாதி பாத்தியஸ்தன் என்பதைப்பற்றிப் பிரதிவாதி ஆட்சேபிக்காவிட்டால் அந்த விஷயத்தைப்பற்றிக் கோர்ட்டாரும் ஆட்சேபிக்கக்கூடாது. (க௮௫௬ஹ-நம்-௧எ0-க௮௬0ஹ-ப-க௩.)

௩. ஒருவன் தான் ஒற்றிவாங்கின நிலத்தைப் பிற்பாடு கிரயத்துக்கு வாங்கினதாகக் கட்சிபேசி அந்தக்கிரயத்தை அவன் ருசுப்படுத்தத் தப்பிப்போனுல் பிற்பாடு ஒற்றிப்பத்திரத்தின் வாசகப்படி ஷை நிலந் தனக்குச் சோந்தமாய்ச் சித்தித்துப்போய்விட்டதாக அவன் கட்சிசொல்லக்கூடாது. (க௮௬0ஹ-நம்-உ௫-ப-௩௬.)

௪. வியாச்சியமத்தியகாலத்தில் வாதிக்குப் பிரதிவாதி தொகை கொடுத்துத் தீர்த்துப்போட்டதாகப் பிரதிவாதி தெரியப்படுத்திக் கொண்டால் அதைப்பற்றிக் கோர்ட்டார் ருசு விளங்கக்கூடாது. ஆனுல் அந்தவிஷயத்தில் வாதி எவ்வளவு ஒப்புக்கொள்ளுகிரு

ஞே அவ்வளவுமட்டும் பிரதிவாதி பட்சங் தீர்மானஞ்செய்யலாம். (க அகூO ஹூ- நம்- அஎ-ப-கஙச.)

ரு. ஒரு வியாச்சியத்தில் பிரதிவாதிக்குத் தான் வக்கீலாயிருந்த விஷயத்தில் பூரணமான வக்கீல்பீசு கிடைக்கவேண்டுமென்று வாதி வழக்கிட்டான் பூர்ணமான வக்கீல்பீசு கொடுப்பதாய் தான் கரார் செய்யவில்லையென்றும் ஆகிலும் பூரணமான வக்கீல்பீசு வாதிக்குத் தான் கொடுத்துவிட்டதாகவும் பிரதிவாதி எதிர்கட்சி பேசினான். அவன் பூரணமான வக்கீல்பீசு கொடுத்ததாய்ச் சொல்வதைக்கொண்டே அந்தப்படி கரார் நடந்ததென்பது பிரத்தியட்சப் பிரமாணமென்றும் பிரதிவாதி பீசுகொடுத்ததை ருசுபடுத்தத் தப்பிப்போய்விட்டதினால் அவன் வாதி வழக்குக்குப் பாத்தியப்படவேண்டியதென்றும் தீர்மானிக்கப்பட்டது. (க அகூO ஹூ-நம்-கOஎ-ப-க அகூ.)

சு. பிரதிவாதிக்கு முக்கியமான ஆதாரவைப்பற்றி அவனுடைய விவரப்பத்திரிகையில் பிரஸ்தாபிக்காமல் விட்டுவிட்டு அதற்குச் சிலகாலத்துக்குப்பின்பு ஞாபகப் பிசகினால் ஷை ஆதாரவைப்பற்றிப் பேசாமலிருந்துவிட்டதாக அவன் சொல்லும் பிரதிகட்சி அநுபயோகம். (க அகரு ஹூ-நம்-அ.)

எ. உறுதியான காலநிஷ்கரிஷை யில்லாமல் உத்தேசம் கரு-வருஷத்துக்குமுன் ஒரு காரியம் நடந்ததாக ஒருவன் ஸ்தூலமாய்ச் சொன்னால் அந்தக்காலத்துக்குச் சிலவருஷங்களுக்கு முன்னாவது பின்னாவது அந்தக்காரியம் நடந்ததாக நிச்சயஞ் செய்யலாம் அப்படியே உத்தேசம் க அஙகூ-ம் வருஷத்தில் ஒருசெய்கை நடந்ததாக ஒருவன் சொன்னால் க அஙக-க அஙஉ-க அஙங இந்த வருஷங்களில் ஷை செய்கை நடந்திருக்கலாமென்று நிச்சயிக்கலாம். (க அரு அ ஹூ-நம்-ரு அ-ப-கசரு.)

அ. ஒருவியாச்சியத்தில் விவாதப்படுகிற சொத்துக்கு அந்த வியாச்சியத்தில் சேராத ஒருவன் பாத்தியஸ்தனென்று தீர்ப்பில் ஸ்தாபிப்பது அயுக்தமானதால் அந்தத் தீர்ப்பினால் தன்பாத்தியம் பூரணஸ்தாபகமாய்விட்டதாக அவன் வேறொரு வியாச்சியத்தில் கக்ஷி சொல்லக்கூடாது. (க அருகூ ஹூ-நம்-ககூங-க அகூO ஹூ-ப-அO.)

அப்பீல்-ஙச ...................... |
கடன் பத்திரம்-உ-கஎ ............ |
இவைகளைப்பார்க்க.

## கடன்.

௧. அ-என்பவன் இடத்தில் இ-என்பவன் சிலதொகை கடன் வாங்கினான். அந்தக் கடனை உ-என்பவன் தான் கொடுப்பதாக ஒப்புக்கொண்டான் உ-என்பவனுக்கு இ-என்பவன் தகுந்த ஈடுகொடுக்காமல் மோசம்பண்ணினபோதிலும் உ-என்பவன் ஒப்புக்கொண்டபடி அவன் அ-என்பவனுக்குத் தொகை கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறான். (௧௮௫௯௵-ப-௨௬.)

௨. கடன்வாங்கினவன் ஜீவந்தனா யிருக்கும்போது அவனுடைய பெண்சாதியையும் பிள்ளையையும் அந்தக் கடனுக்குப் பாத்தியப்படுத்தக்கூடாதென்பது தர்மசாஸ்திரப் பிரமாணம். (௧௮௫௦௵ ௩ம்-௪௩.)

௩. கடன்பத்திரம் யாருக்கு எழுதிக்கொடுக்கப்பட்டிருக்கின்றதோ அந்த உத்தமர்ணனுக்கே அதமர்ணன் தொகை செலுத்தவேண்டும். பத்திரத்தில் பிரஸ்தாபிக்கப்படாதவனும் பத்திரஸ்வாதீனம் இல்லாதவனுமான ௩-வது மநுஷனிடத்தில் தொகை செலுத்தினதாக அதமர்ணன் சொல்லி அந்தச்செல்லை ஷை ௩-வது மநுஷன் ஒப்புக்கொண்டாலுங்கூட அது, அநுபயோகம் ஷை ௩-வது மநுஷன் ஷை உத்தமர்ணனுக்கு அவிபக்த தாயாதனாயிருந்தாலுங்கூட அந்த உத்தமர்ணனுடைய அநுமதி இல்லாமல் ஷை ௩-வது மநுஷனிடத்தில் தொகை செலுத்துவது அயுக்தம். (௧௮௫௬௵-௩ம்-௪௪.)

௪. குடும்ப உபயோகார்த்தமாக ஒரு சோதரன் வாங்கினகடனுக்குமட்டும் அவனுடைய அவிபக்த சகோதரனும் மற்ற சமாம்சகர்களும் பாத்தியப்படவேண்டும் அவனுடைய சொந்தச் செலவுக்காக அவன் பட்டகடனுக்கு அவன்மட்டும் பாத்தியப்படக் கடவான். (௧௮௫௦௵-௩ம்-௧௫-௨௭.)

௫. அவிபக்த குடும்பத்தில் கநிஷ்டன்பட்ட கடனுக்கு மற்ற பாகஸ்தர்களைப் பாத்தியப்படுத்தக்கூடாது (௧௮௫௪௵-௩ம்-௪௮.)

௬. புத்திரன் பட்டகடனுக்குப் பிதாவையாவது குடும்பஸ்திதியையாவது உத்தரவாதப் படுத்தக்கூடாது. (௧௮௫௫௵-௩ம்-௮௩.)

௭. அவிபக்த குடும்பத்தில் ஒருவன் பட்டகடனுக்கு அவனுடைய பாகஸ்திதியைமட்டும் பாத்தியப்படுத்தலாம். (௧௮௫௫௵ ௩ம்-௧௧௩-௧௧௪-௧௮௬௦௵-௩ம்-௯௧-ப-௨௪௭.)

அ. பாத்தியஸ்தர்களுக்குப் பூர்வார்ஜிதம் எவ்வளவு கிடைத்திருக்கிறதோ அவ்வளவுமட்டுக்குந்தான் அவர்கள் பூர்வீககடனுக்குப் பாத்தியப்படவேண்டும் பூர்வார்ஜிதத்துக்கு மேற்பட்ட கடனுக்கு அவர்கள் ஜவாபுதாரிகள் அல்ல. (௧அ௫௭ ஹை-நம்-௨௨-௨௩.)

௯. ஒரு விதந்துவினுடைய வீட்டில் அவளுடைய சகோதரன் கூட இருந்துகொண்டு அவளுடைய குடும்பக்காரியங்களை விசாரணை செய்வதைக்கொண்டு அவளுடைய புருஷன் பட்டகடனுக்கு ஷை சகோதரனைப் பாத்தியப்படுத்தக்கூடாது. (௧அ௫௭ ஹை-நம்-அ.)

௧௦. வாதிக்குப் பிரதிவாதி கொடுக்கவேண்டிய கடனை வாதியிடத்திலே பிரதிவாதி செலுத்தவேண்டும் அந்தக்கடனை வாதியின் அநுமதிப்பத்திரம் இன்றி வாதியின் கடன்காரனிடத்திற் கொடுத்துவிட்டதாகப் பிரதிவாதி சொல்லுந் துர்வாதம் வியர்த்தமே. (௧அ௫௪ ஹை-நம்-௬அ.)

௧௧. விவாத கடனுக்காக வாதிக்குத் தான் சிலதொகை செலுத்தியிருப்பதாகப் பிரதிவாதி சொன்னால், அந்த விஷயத்தைப்பற்றி அந்த வியாச்சியத்தில் தானே விசாரித்துத் தீர்மானஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யாமல் பிரதிவாதி செலுத்தினதாகச் சொல்லுந் தொகையைப்பற்றி வேறேவியாச்சியஞ் செய்யும்படி பிரதிவாதிக்குக் கோர்ட்டார் உத்தரவு கொடுத்திருந்தாலுங் கூட அந்தத் தொகையைப்பற்றிப் பிரதிவாதி செய்யும்வியாச்சியஞ் செல்லாது. (௧அ௫௯ ஹை-நம்-௧௧அ-ப-௧௭௪.)

௧௨. மகமது சாஸ்திரப்படி அவிபக்த குடும்பத்தில் ஒரு மகமது மதஸ்தன் பட்டகடனுக்கு அவனுடைய அவிபக்த சகோதரர்கள் முதலான சமாம்சகர்கள் உத்தரவாதிகள் அல்ல ஆனால் அவர்கள் லிகிதரூபமாய்த் தங்களுடைய உத்தரவாதத்தை ஒப்புக்கொண்டிருந்தால் அப்போது அந்தக்கடனுக்கு அவர்களும் ஜவாபுதாரிகள்தான். (௧அ௫௪ ஹை-நம்-௨௩.)

௧௩. ௧-௨-பிரதிவாதிகள் அவிபக்த தாயாதிகள் ௨-ம் பிரதிவாதி பால அவஸ்தையில் இருக்கும்போது குடும்ப வியாபகனான முதற் பிரதிவாதி நிலம் வாங்கவேண்டியதற்காக வாதியிடத்திற் கடன் வாங்கினான். அந்தப்பணத்தைக்கொண்டு முதற் பிரதிவாதி நிலம் வாங்காமல் ௨.-ம் பிரதிவாதிக்குத் துரோகஞ் செய்தபோ

திலும் குடும்ப வியாபகனுன மூதற் பிரதிவாதியால் வாங்கப்பட்ட கடனுக்கு உ-ம் பிரதிவாதியும் பாத்தியப்படவேண்டும். (க௮௬௰ ஹூ-நம்-கஎக.)

கச. சரீர வியோகமாய்ப்போன பக்கார் ஆஜீஎன்பவனுல் வாங்கப்பட்ட கடனைப்பற்றி அவனுடைய புத்திரர்கள் மேலும் அவனுடைய சகோதரன் பிள்ளைகள் மேலும் வாதி வியாச்சியம் ஆடினுன். வியாச்சிய காலத்துக்கு முந்தின க௨-ஹூத்துக்குள் வாதியின் பாத்தியத்தை ஷை பக்கார் ஆஜீயின் புத்திரர்கள் ஒப்புக்கொள்ளாததால் அவர்கள் சம்மந்தப்பட்டவரையில் கால நிர்ணய தோஷத்தால் வாதியின் வழக்கு மலினமாய்ப்போனதாகவும் மத்தியகாலத்தில் ஷை பக்கார் ஆஜீயின் சகோதரன் புத்திரர்கள் ஷை கடனை ஒப்புக்கொண்டு அதற்காக அவர்கள் வாதிக்குச் சில தொகையுஞ் செலுத்தியிருப்பதால் அவர்கள்மட்டும் வாதிக்குத் தொகை கொடுக்கவேண்டுமென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (க௮௬௰ ஹூ-நம்-ககூ௮-க௮௬க ஹூ -ப-கக.)

கரு. ஒருவன் கடன்வாங்குங்காலத்தில் அவனுடைய சகோதரர்கள் வேறே யோகட்சேமமாகவும் பிரத்தியேகமாய் வியாபாரஞ் செய்துகொண்டும் வருவார்களானுல், அவர்களை அந்தக்கடனுக்குப் பாத்தியப்படுத்தக்கூடாது. அவர்கள் எல்லாரும் அவிபக்தாளென்று வாதி சாதித்தால் அந்தப்பிரகாரம் அவன் நிரூபிக்கவேண்டும். (க௮௬௰ ஹூ-நம்-கூ௦௨-க௮௬க ஹூ-ப-௨கூ.)

க௬. குடும்ப வியாபகர்களால் வாங்கப்பட்ட கடன் குடும்பப்பிரயோஜனத்திற்காக வாங்கப்பட்டதல்லவென்று ரூபிக்கப்படுகிறவரையில் குடும்பப்பிரயோஜன நிமித்தமே அந்தக்கடன் வாங்கபட்டதாக ஊகிக்கவேண்டும். (க௮௬௰ ஹூ-நம்-க௨௮-க௮௬க ஹூ-ப-௨௫.)

கஎ. குடும்பவியாபகன் அவனுடைய சொந்த உபயோகத்துக்காக வாங்கின கடனுக்குக் குடும்பஸ்திதி பாத்தியப்படமாட்டாது. (க௮சச ஹூ-நம்-கூஎ-க௮௫௬ஹூ-நம்-கூ௫.)

க௮. குடும்ப விசாரணைசெய்கிற காரணவன் குடும்பப்பிரயோஜன நிமித்தம் வாங்கினகடனுக்குத் தார்வாடு குடும்பஸ்திதி பாத்தியப்படவேண்டும் அந்தக்கடன் வாங்குவதற்கு இதர பாகஸ்தர்களின் சம்மதியாவது கையெழுத்தாவது அநாவசியம். (க௮௫௨ ஹூ-நம்-கூ௮-க௮௫௬ ஹூ-நம்-கூ௫-க௮௫௮ஹூ-நம்-௫௬-ப-க௮௦-)

௧௯. பிரதிவாதியின் பித்ரவ்வினுடைய புத்திரிகையான இறந்து போன ஜீவுபாயியால் வாங்கப்பட்ட கடனைப்பற்றிப் பிரதிவாதிமேல் வாதி வியாச்சியஞ்செய்தான். பிரதிவாதியின் ஸ்வீகாரப்பிதாவின் மேல் ஷை ஜீவுபாய் ஆஸ்திகளைப்பற்றிக் கோர்ட்டில் ஒரு துர்வியாச்சியம் ஆடிக்கொண்டுவந்தகாலத்தில் அவளால் ஷை கடன்வாங்கப் பட்டிருப்பதால் அந்தக்கடனுக்குப் பிரதிவாதியைப் பாத்தியப்படுத்தக்கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. (௧அ௬0 ௵-நம்-௬௬-௧அ௬௧ ௵-ப-௩அ.)

௨0. கடன்கொடுத்தவன் வட்டிக்குப்பதிலாய் நிலத்தை அநுபவிக்கிறதென்று கடன்பத்திரம் பிறந்து சிலகாலத்துக்குப் பிற்பாடு ஷை நிலத்தின் அதிகவருமானத்தை அசலுக்காகவும் வரவுவைக்கிறதென்று ஷை கடன்காரன் கடன்பட்டவனுக்கு உடன்படிக்கை யெழுதிக்கொடுத்து அந்த அதிகவருமானத்தினால் அசல் தீர்ந்துபோய் விட்டால் பிற்பாடு அந்த அசலைப்பற்றி ஷை கடன்காரன் வியாச்சியஞ்செய்யக்கூடாது. (௧அ௬0 ௵-நம்-௬-௧அ௬௧ ௵-ப-௬௨.)

௨௧. கடன்வாங்கினவன் அபுத்திரவானாய் மாண்டுபோனால் அந்தக்கடனுக்கு அவனுடைய ஸ்திரீயைமட்டும் பாத்தியப்படுத்தவேண்டுமே அல்லாமல் அவன் பெண்ணைக்கொண்ட மருமகனையும் பாத்தியப்படுத்தக்கூடாது. ஏனென்றால் மருமகன் இறந்துபோனவனுடைய பாத்தியஸ்தர்களின் வரிசையைச் சேர்ந்தவன் அல்ல, இறந்துபோனவனுடைய சொத்து மருமகனுக்குக்கிடைத்திருக்கிற பட்சத்தில் தீர்ப்பு நிறைவேற்றுங்காலத்தில் அந்தச் சொத்தைமட்டும் ஷை கடனுக்குப் பாத்தியப்படுத்தலாமே அல்லாமல் அந்த ஆதாரத்தைக்கொண்டு மருமகனையும் பாத்தியப்படுத்தக்கூடாது. (௧அ௬0 ௵-நம்-௫௧௧-௧அ௬௧ ௵-ப-௭௩.)

௨௨. வாதியிடத்தில்-௩-வது மநுஷனால் வாங்கப்பட்ட கடனைப் பிரதிவாதி ஒப்புக்கொண்டதாக வாதி வியாச்சியஞ்செய்கிற பட்சத்தில் அந்த-௩-வது மநுஷனையும் பிரதிவாதியாகச் சேர்க்கவேண்டும். (௧அ௫௯ ௵-நம்-௧௧௨-௧அ௫௭ ௵-ப-௧௩.)

௨௩. ஒரு அவிபக்தனால் வாங்கப்பட்ட கடனுக்கு அவனுடைய பாகஸ்திதியைமட்டும் பாத்தியப்படுத்தலாம். (௧அ௬0 ௵-நம்-௬௧-ப-௨௪௭.)

௨௪. பாகஸ்தர்கள் அவிபக்தர்களாயிருக்கும்போது குடும்ப உபயோகத்துக்காக அவர்கள் கடன்வாங்கியிருக்கிற பட்சத்தில் பிற்பாடு அவர்களுக்குள் பாகமாய்விட்டாலுங்கூட அந்தக்கடனை அவர்கள் எல்லாரும் உத்தரிக்கவேண்டும். (௧௮௧௪ ௵-நம்-எ.)

௨௫. ஒரு குடும்பத்திற் சிலர்பட்டகடனுக்கு அந்தக் குடும்பத்திலிருந்து விபக்தர்களாய்ப்போனவர்கள் பாத்தியப்படவேண்டியதில்லை. (௧௮௫௬ ௵-நம்-௨௦௮-௧௮௬௦ ௵-ப-௫௧.)

௨௬. ஒருவன் தன்னுடைய தாயார்பட்டகடனுக்காக அவனுடைய பென்சியனை பெந்தகம்வைத்திருக்கிறபட்சத்தில் அவன் இறந்துபோய் அந்தப்பென்சியன் அவனுடைய புத்திரர்களுக்குக் கிடைத்தாலுங்கூட அவர்கள் அந்தக்கடனை உத்தரிக்கவேண்டியதில்லை. அந்தக்கடனுக்குப் பென்சியன்மட்டும் பந்தகமாயிருப்பதால் அதைத்தவிர வேறேயாதொரு ஆஸ்தியையும் பாத்தியப்படுத்தக்கூடாது. (௧௮௨௧ ௵-நம்-௪.)

௨௭. சமாம்சகர்களாகிய பிரதிவாதிகள் வாதிக்குக் கொடுக்கவேண்டிய குடும்பக்கடனை அவர்களில் ஒருவன் கொடுக்கிறதென்று ஆதரவுபிறந்து அந்த ஆதரவின் பிரகாரம் வாதி செய்த வியாச்சியத்தில் அந்த ஆதரவைத்தள்ளித் தீர்ப்பாகிற பட்சத்தில் எல்லாப்பாகஸ்தர்கள்பேரிலும் வாதி வேறேவியாச்சியஞ் செய்ய ௸ தீர்ப்பினால் பிரதிபந்தம் இல்லை. (௧௮௫௫ ௵-நம்-௮எ-ப-௨௦௫.)

௨௮. தையலம்மை கொடுக்கவேண்டிய கடனைப் பிரதிவாதி கொடுப்பதாகப் பரவசஞ் சொன்னபடியால் அந்தத் தொகையை வாங்கித்தரவேண்டுமென்று வாதி பிரார்த்தித்தான். ௸ கடனைத் தையலம்மை தனக்கு உத்தரிக்கிறதென்கிற சங்கற்பத்தின்மேல் அதைத்தான் ஒப்புக்கொண்டதாகவும் அந்தத் தொகைக்காக அவள்மேல் தான்செய்த வியாச்சியம் அபஜயமாய்ப் போய்விட்டதால் வாதி வியாச்சியத்துக்குத் தான் பாத்தியப்படவேண்டியதில்லையென்றும் பிரதிவாதி பிரதிநியாயம் பேசினான் பிரதிவாதிக்குத் தையலம்மை தொகை கொடுத்தால்மட்டும் வாதிக்குப் பிரதிவாதி பாத்தியப்படுகிறதென்று ஏற்பாடு நடந்திருப்பதாக ருஜுவாகாதபடியாலும் வாதியின் கடனைக் கொடுப்பதாகப் பிரதிவாதி நிசங்கேதமாய் ஒப்புக்கொண்டபடியாலும் வாதிக்குப் பிரதிவாதி பணங் கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (௧௮௬௦ ௵-நம்-௬௭-ப-௨௨௬.)

உ௯. பிதாவினுடைய சொத்து புத்திரனுக்குக் கிடைத்திருக்கிறபட்சத்தில் அந்தச் சொத்துக்குச் சரியான பிதாவின் கடனைப் புத்திரன் உத்தரிக்க வேண்டும். புத்திரனுக்குக் கிடைத்த பிதிர்ஸ்திதி பிற்பாடு கெட்டு நஷ்டமாய்ப் போனாலுங்கூடப் புத்திரனுடைய உத்தரவாதம் நீங்கமாட்டாது. (க௲௫௯ ௵-நம்-உஉஉ-க௲௬௰ ௵ ப-எ௮.)

௩௦. தார்வாடு குடும்பச்சொத்தைப் பந்தகம்வைத்துக் காரணவன் சிலரிடத்திற் கடன்வாங்கினான். அந்தக்கடனில் அதிகபாகம் குடும்பச்செலவுக்காக வாங்கப்பட்டபடியாலும் மற்றப்பாகம் மோசமாய் வாங்கப்பட்டதாக விசதமாகாதபடியாலும் ஷை பந்தகம் கிரமமானதென்று ஸ்தாபிக்கப்பட்டது. (க௲௫௯ ௵ - நம்-உ௩-ப-௯௪.)

௩க. கடனைப்பற்றி முதற்பிரதிவாதிமேல் வாதிசெய்த வியாச்சியத்தில் அவர்கள் ராஜீநாமா தாக்கல் செய்துகொண்டதாகவும் அந்த ராஜிநாமா நிபந்தனைப்படி வாதிக்கு முதற்பிரதிவாதி தொகை கொடுக்கத்தப்பிப்போனால் அந்தத் தொகையை உ-ம் பிரதிவாதி கொடுப்பதாக ஒப்புக்கொண்டு வாதியின் கணக்கில் கையெழுத்து வைத்ததாகவும் அந்தப்படி உ-ம் பிரதிவாதியால் தொகை கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியங் கொண்டுவந்தான். அந்த வியாச்சியத்தை உ-ம் பிரதிவாதி முற்றிலும் நிராகரித்தான். ஒருதரம் வியாச்சிக்கப்பட்டு ராஜீநாமாமூலமாய்த் தீர்ந்துபோன விஷயத்தைப்பற்றி மறுபடியும் வாதி வியாச்சியஞ் செய்தது சுத்த ஆபாசமென்று வாதி வழக்குப் பிரதிகூலிக்கப்பட்டது. (க௲௫உ ௵-நம்-௩உ.)

௩உ. பிரதிவாதியிடத்தில் அடைக்கலமாய் வைக்கப்பட்ட நகைகளின் கிரயத்தைப்பற்றி வாதி வியாச்சித்தான். வாதி தனக்குக்கொடுக்கவேண்டிய கடனுக்காக அந்த நகைகள் ஈடுவைக்கப்பட்டதாகவும் அந்தக் கடனைப்பற்றித் தான் வியாச்சியஞ் செய்திருப்பதாகவும் பிரதிவாதி எதிர்வாதம் கூறினான். இவ்வளவு தொகை தனக்குக் கிடைக்கவேண்டியதென்று பிரதிவாதி ஸ்தாபிக்கத் தப்பிப்போய் அந்தக் காரணத்தினால் அவனுடைய வியாச்சியந் தள்ளுபடியாயிருந்தாலுங்கூடக் கடனுக்காகவே ஷை நகைகள் ஈடுவைக்கப்பட்டதாக நிதரிசனப்பட்டபடியால் வாதியின் வழக்கு செல்

லாதென்று நிஷேதிக்கப்பட்டது. (க௮௬௦ஹு-நம்-௩-ப-உ௭க-நம்-ரு-ப-உ௭௩.)



இவைகளைப்பார்க்க.

---

## கடன்பத்திரம்.

க. பீ-என்பவனால் சீ-என்பவனுக்கு எழுதிக் கொடுக்கப்பட்ட பத்திரத்தின் தொகையைக் கொடுப்பதாக ஏ-என்பவன் ஒப்புக்கொண்டிருப்பதாகவும் அவனால் தொகை கிடைக்கவேண்டுமென்றுஞ் செய்யப்பட்ட வழக்கில் அந்தத் தொகைக்கு ஏ-என்பவன் உத்தரவாதி யல்லவென்றும், சீ-என்பவனுடைய அலட்டுதலினாலும் அவனிடத்தில் ஏ-என்பவன் நம்பிக்கையாய்க் கொடுத்திருந்த ஆதரவுகளை வாங்கவேண்டியதற்காகவும் மேற்கண்டபடி ஏ-என்பவன் தொகை கொடுப்பதாகக் காரணார்த்தமாய் ஒப்புக்கொண்டதாகத் தெரியவருவதினாலே அவன் அந்தத்தொகைக்கு பாத்தியப்படவேண்டியதில்லையென்றும் சதர்க்கோர்ட்டாரவர்கள் தீர்மானித்தார்கள். (க௮க௪ஹு-நம்-கக.)

உ. பத்திரங்கள் தீரவில்லையென்பதற்கு அவைகளைப் பெற்றுக்கொண்டவன் கையில் அவைகள் இருப்பதுவே பலமான திருஷ்டாந்தம். தீர்ந்த பத்திரங்களைவாங்கிப் பரிகரிக்கிற வழக்கம் இல்லையென்று பிரதிவாதி சொல்லுங்கட்சி சுத்த அநுசிதம். (க௮உக ஹு-நம்-க௦-க௮௫௫ஹு-நம்-௭உ.)

௩. வாதி வழக்குக்கு ஆதாரமான பத்திரம் கவர்ன்மென்றாரவர்களை மோசஞ்செய்வதற்காகப் பிறந்ததென்று ஒரு எதிர்கடைச் சீட்டைக்கொண்டு பிரதிவாதிகள் ஸ்தாபித்ததினால் தொ

கைகொடுத்து விவாதபத்திரத்தைப் பெற்றுக்கொண்டதாக நிரூபிக்கவேண்டியது வாதியின் கடமையென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௧௪ஹு-நம்-௨௦.)

௪. பத்திரங்கள் யாருக்கு எழுதிக்கொடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்களே எழுதிக்கொண்டு பூரணஞ்செய்யும்படி வெற்றுக்காகிதங்களில் கையெழுத்தும் முத்திரையுமட்டும் வைத்துக் கொடுத்ததாக ஒருவன் ஒப்புக்கொண்டால் அந்தப் பத்திரங்கள் செல்லத்தக்கவைகளே. (௧௮௧௨ஹு-நம்-௧௬.)

௫. ஒரு பத்திரத்தை மேடோவர் வாங்கினவன் அந்தப் பத்திரப்படி தனக்குத் தொகை கிடைக்கவேண்டியதென்று நிரூபிக்கக் கடமையுள்ளவனாயிருக்கிறான். அந்தப்பத்திரம் அவன் கையிலிருப்பதுமட்டும் போதாது. (௧௮௧௦ஹு-நம்-௯.)

௬. ஒருவன் தகுந்த வயதில்லாதகாலத்தில் எழுதிக்கொடுத்த பத்திரத்துக்குத் தகுந்த வயதுவந்தபின்புகூட உத்தரவாதியாகமாட்டான். (௧௮௪௭ஹு-நம்-௬௭.)

௭. லிகிதமூலமான பத்திரத்துக்காகத் தொகை செல்லாயிருப்பதற்கு எழுத்துமூலமான ரசீதுகளாவது, அல்லது ஷை பத்திரத்தின்மேல் வரவாவது வைத்திருக்கவேண்டுமென்பது ஹிந்து தர்ம சாஸ்திரவிதியாயிருக்கின்றது. (௧௮௨௧ஹு-நம்-௭.)

௮. குடும்ப வியாபகனால் எழுதிக்கொடுக்கப்பட்ட பத்திரம் யதார்த்தமாகவும் இதர பாகஸ்தர்களுடைய சம்மதத்தின்மேல் அவர்களுக்கு அநுகூலமாகவும் பிறந்திருக்குமானால் அதில் மற்றப்பாகஸ்தர்களுடைய கையெழுத்து இல்லாமல் இருந்தாலுங்கூட அந்த ஆதரவுக்கு அவர்களும் பாத்தியப்படவேண்டும். (௧௮௫௨ஹு-நம்-௯௮.)

௯. ஒரு பத்திரமானது அதைப் பெற்றுக்கொண்டவன்கையில் இருக்குமானால் அவன் வரவுவந்ததாக ஒப்புக்கொள்ளுகிற தொகைபோக பாக்கித்தொகைக்கு ஷை ஆதரவை எழுதிக்கொடுத்தவன் பாத்தியப்படவேண்டும். அந்தப்பத்திரம் பூரணமாய்த் தீர்ந்துபோனதற்கு எழுத்துமூலமான ருஜு இருந்தால்மாத்திரம் கோர்ட்டார் ஒப்புக்கொள்ளலாமே அல்லாமல் வாய்மொழி ருஜுவை அங்கீகரிக்கக்கூடாது. (௧௮௫௭ஹு-நம்-௧௫௮-௧௮௫௮ஹு-ப-௨௨.)

கo. ஒரு பத்திரத்துக்காகச் செல்லான தொகைகள் விகிதமூலமான ருஜுவினாலேயே ஸ்தாபிக்கப்படவேண்டும். (கஅ௫கூ ஹ்ப நம்-ககக-ப-உ௫ரு.)

கக. கடன்விஷயத்தில் பத்திர நிபந்தனைப்படி நடக்கவேண்டியதே அல்லாமல் அதற்கு முன்பாக நடந்த செய்கைகளைக் கொண்டு பத்திர நிபந்தனையை அழிக்கக்கூடாது. (கஅஉஅ ஹ்ப-நம்-உ.)

கஉ. ஒரு பத்திரம் தகுந்தபடி ருஜுவாகவேண்டியதே அல்லாமல் அதில் போட்டிருக்கிற கையெழுத்தும் வேறொரு தஸ்தாவேஜில் போடப்பட்டிருக்கிற கையெழுத்தும் ஒரேமாதிரியாயிருப்பதைக்கொண்டுமாத்திரம் அந்தப் பத்திரத்தை ஸ்தாபிக்கக்கூடாது. (கஅ௫௫ ஹ்ப-நம்-கூக-கஅ௫அ ஹ்ப-நம்-கசo.)

கரு. பத்திரத்தைப் பெற்றுக்கொண்டவன் அதற்காக வேறொருவன் இடத்தில் பணம் பற்றிக்கொண்டு மேடோவர் செய்கிற பட்சத்தில் அந்தப் பத்திரத்தை ஆதியில் எழுதிக்கொடுத்தவன் சம்மதி வேண்டியதில்லை. (கஅ௫ ஹ்ப-நம்-கo.)

கச. ஒரு பத்திரம் பிறந்தபிற்பாடு அந்தப் பத்திரத்தை எழுதிக்கொடுத்தவனுக்கும், பெற்றுக்கொண்டவனுக்கும், வேறே பற்றுவரவுகள் நடந்தபோதிலும் அந்தப் பத்திரப்படி தொகை கிடைக்கவேண்டியதைப்பற்றி அதைப் பெற்றுக்கொண்டவன் வியாச்சியங் கொண்டுவரலாம். (கஅ௫அ ஹ்ப-ப-எஉ.)

க௫. ஒருபத்திரம் ருஜுவாகாவிட்டால் அதைப் பிரதிவாதி ஆஜராகி ஆட்சேபிக்கவில்லையென்கிற நிமித்தத்தைக்கொண்டுமாத்திரம் அவனுக்கு விரோதமாய்த் தீர்ப்பு செய்யக்கூடாது. (கஅ௫அ ஹ்ப நம்-எஅ.)

கசு. முதற் பிரதிவாதி தான்மாத்திரம் பத்திரத்தின் தொகையை வாதிக்கு உத்தரிக்கவேண்டியதென்று ஒப்புக்கொள்ளுகிற பட்சத்தில் அவன் மாத்திரம் அந்தப் பத்திரத்திற்குப் பாத்தியப்படவேண்டும். முதற் பிரதிவாதியின் ஆன்சர் தனக்குஞ் சம்மதமென்று உ-ம் பிரதிவாதி அதின்மேல் எழுதியிருப்பதைக் கொண்டு அந்த உ-ம் பிரதிவாதியையும் ஷை பத்திரத்திற்கு உத்தரவாதியாக்கக்கூடாது. (கஅ௫அ ஹ்ப-ப-கஉக.)

கஎ. ஒருவன் தான் கடன்வாங்கினதாகக்கண்டு பத்திரம் எழுதிக்கொடுத்திருந்தால் சிலவேலைசெய்கிறதென்கிற வாக்குக் கரா

ரின்மேல் அந்தப் பத்திரம் பிறந்ததாக அவன் சொல்லுங் கட்சி யை ஒப்புக்கொள்ளக்கூடாது. (கஅ௫அ௵-நம்-கசகூ-ப-உகஙு.)

கஅ. ஒருவனை வீட்டுக்குள் அடைத்து பலவந்தமாய் அவனி டத்தில் வாங்கப்பட்ட பத்திரம் செல்லாது. (கஅ௫கூ௵-நம்-ஙுஅ-ப-கசக.)

கக. வாதியிடத்தில் பிரதிவாதி ரூபா-க00 கடன் வாங்கிக்கொ ண்டு வாதிக்கு ஒரு கடன் சீட்டு எழுதிக்கொடுத்தான். வாதியின் கிராமத்தில் ஜலம் பாய்வதற்காக வாய்க்கால் வெட்டும்படி பிரதி வாதி எப்படியாவது சர்க்காரிடத்தில் உத்தரவு வாங்கிக்கொடுத் தால் ஷை கடன்பத்திரம் ரத்தாய்ப்போகிறதென்று அந்தத்தேதி யிலே பிரதிவாதிக்கு வாதி ஒரு உடன்படிக்கை எழுதிக்கொடுத்தான். அதிற்கண்டபடி பிரதிவாதி சர்க்காரிடத்தில் உத்தரவுவாங்கத் தப்பி ப்போய்விட்டதால் பத்திரத்தின்தொகை கிடைக்கவேண்டுமென்று வாதி வழக்கிட்டான். பிரதிவாதி பட்டாமணியகாரனானதால் லஞ்ச விஷயமாக விவாதபத்திரம் பிறந்ததென்றும் அப்பேர்ப்பட்ட பத்தி ரத்தை உறுதிப்படுத்துவது நீதி அல்லவென்றும் அபிப்பிராயப்ப ட்டு சதர்க்கோர்ட்டார் வாதிக்குப் பிரதிகூலமாய்த் தீர்ப்பு செய்தார் கள். (கஅ௫கூ௵-நம்-அங-ப-க௫கூ.)

உ0. பத்திரம் பிறந்த இடத்திலாவது, வியாச்சிய ஆரம்பகாலத் தில் பிரதிவாதி இருக்கும் இடத்திலாவது வாதி வியாச்சியஞ்செய்ய லாம். பத்திரம் வியாச்சியமூலமே அல்லாமல் பத்திர நிபந்தனைப் படி பிரதிவாதி நடக்கத்தப்பிப்போன செய்கையானது, வியாச்சிய மூலம் அல்ல, பத்திரத்தின் கெடுக்காலத்தில் பிரதிவாதி எந்த இடத் தில் இருந்தானோ அந்த இடத்தில் வியாச்சியஞ்செய்யக்கூடாது. (கஅ௫கூ௵-நம்-கூ௫-ப-கஅச.)

உக. பழைய பற்று வரவுக் கணக்கின்மேல் பாக்கியானதொகைக் குப் பிரதிவாதி கடன்பத்திரம் எழுதிக்கொடுத்ததாகவும் அதின் தொகை கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியஞ்செய்தான். பழைய பற்று வரவுக் கணக்கினால் தன்மேல் பாக்கியாகவில்லையெ ன்றும் வாதி கடன் கொடுப்பதாகச்சொல்லி விவாத பத்திரத்தைப் பெற்றுக்கொண்டதாகவும், பிற்பாடு வாதி தொகை கொடுக்கவில்லை யென்றும் பிரதிவாதி வாதாடினான். அந்தப்படி பிரதிவாதி ரூபிக்கத் தப்பிப்போய்விட்டதால் அவன் ஒப்புக்கொள்ளுகிற விவாத பத்தி

ரத்தின்தொகையை அவன் கொடுக்கவேண்டியதென்றும் அந்தத் தொகை பழைய பற்று வரவின் பாக்கியாயிருந்தபோதிலும் ரொக்கக்கடன் வாங்கிக்கொண்டதுபோல விவாத பத்திரத்தில் கண்டிருப்பது தேசவழக்கத்துக்கு ஒத்ததாயிருப்பதால் அது நிஷ்களங்கமானதென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (கஅருகூ ௵-நம்-கஎ0-கஅசா0 ௵-ப-கங.)

உஉ. மகமது சாஸ்திரப்படி எழுத்துமூலமான பத்திரந் தீர்ந்து போனதை ரூபிக்கிறதற்கு வாக்குமயமான சாட்சியத்தை அங்கீகரிக்கக்கூடாது. (கஅருகூ ௵-நம்-உ0உ-கஅசா0 ௵-ப-ரு0.)

உங. ஹிந்து தர்மசாஸ்திரப்படிக்குங் கோர்ட்டுகளின் ஒழுங்குப்படிக்கும் லிகித ரூபமான பத்திரந் தீர்ந்துபோனதற்கு வார்த்தா ரூபகசாட்சியத்தை ஏற்றுக்கொள்ளக்கூடாது. (கஅருகூ ௵-நம்-கஅஎ-உ0க, கஅசா0 ௵-நம்-உ0-கசக-ப-அங-கஉ0-உஙச-உசஉ. கஅசா0 ௵-நம்-ககூ0-உஙஅ, கஅசாக ௵-ப-சா-கசா.)

உச. வாதிக்குத் தகுந்தவயது இல்லாதகாலத்தில் அவனுக்காக அவனுடைய போஷகனை ங-ம் பிரதிவாதி பெயரால், க-உ-பிரதிவாதிகளின் தகப்பனால் எழுதிக்கொடுக்கப்பட்ட பத்திரத்தின் தொகை கிடைக்கவேண்டியதற்காக வாதி வியாச்சியந் தொடர்ந்தான். ஷை பத்திரம் ங-ம் பிரதிவாதிக்கு எழுதிக்கொடுக்கப்பட்டிருந்தபோதிலும் அது வாதிக்காகவே பிறந்ததாளென்பதை அறியும்பொருட்டு பத்திரவாசகத்துக்கு விரோதமான வாசாசாட்சியத்தை அங்கீகரிக்கலாமென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅசா0 ௵-நம்-ஙஉ-ப-கஉச.)

உரு. அ-என்பவன் இ-என்பவனுக்குக் கடன்கொடுத்து உ-என்பவன்பேருக்குப் பத்திரம் வாங்கிக்கொண்டதாகவும் அந்தத் தொகையை இ-என்பவனிடத்தில் உ-என்பவன் பெற்றுக்கொண்டதினாலே உ-என்பவனிடத்தில் அந்தத்தொகை கிடைக்கவேண்டுமென்றும் அ-என்பவன் வழக்குத்தொடர்ந்தான். ஷை பத்திரம் உ-என்பவன்பேருக்குப் பிறந்திருப்பதால் அதின் தொகையைப் பெற்றுக்கொள்ள தர்மசாஸ்திரப்படி உ-என்பவனே பாத்தியஸ்தனென்றும், அ-என்பவன் பட்சத்தில் ஷை பத்திரவாசகத்துக்கு விரோதமான வாய்மொழி ருஜுவை அங்கீகரிக்கக்கூடாதென்றும் தீர்மானிக்கப்பட்டது. (கஅசா0 ௵-நம்-எகூ-ப-உகக.)

உ௬. எந்தப்பத்திரத்தில் ரொக்கமாய்த் தொகை கொடுக்கப்பட்டதாகக் கண்டிருக்கின்றதோ அந்தப்பத்திரத்தின் யதார்த்தத்தை ஒருவன் ஒப்புக்கொண்டால் அந்தப்பத்திரத்துக்காகத் தான் தொகை பற்றிக்கொள்ளவில்லையென்று அவன் சொல்லுங் கட்சியைப்பற்றி வசநரூபமான சாட்சியத்தை அங்கீகரிக்கக்கூடாது. (க௮௬௦ ஷூ-நம்-௬௬-ப-உ௩௫.)

உஎ. பத்திரம்பிறந்து ௪-வருஷத்துக்குப் பின்பு பிரதிவாதியை வாதி எப்போது பணங்கேட்கிருரோ அதுமுதல் ஒரு வருஷத்துக்குள் வாதிக்குப் பிரதிவாதி பணங் கொடுக்கவேண்டுமென்று கரார் நடந்திருக்கிற பட்சத்தில் அந்தக் காலாவதிக்குப் பிற்பாடு தான் வாதி வியாச்சியஞ் செய்யவேண்டும். (க௮௫௬ ஷூ-நம்-௫௦.)

உ௮. பணங் கொடுத்துப் பத்திரத்தை வாங்கிக்கொள்ளுகிறதென்று அந்தப்பத்திரத்தில் நிபந்தனை கண்டிருக்கிற பட்சத்தில் அதற்காகச் செலுத்தப்பட்ட தொகைகளை அந்தப் பத்திரத்தின் மேல் வரவு வைத்திருக்கவேண்டுமே அல்லாமல் அதற்காக வார்த்தாபூர்வமான சாட்சியத்தை ஒப்புக்கொள்ளக்கூடாது. (க௮௫௫ ஷூ-நம்-க௫௦.)

உ௯. இருவர்கையால் எழுதப்பட்டும் சாட்சிகள் கையெழுத்து இல்லாமலும் எழுதினவன்பெயர் காணுமலும் இருக்கிற பத்திரமானது தர்மசாஸ்திரப்படி செல்லாது. (க௮௪௩ ஷூ-நம்-கக.)

௩௦. ஒரு பத்திரத்தில் சாட்சி கையெழுத்து இல்லாமலும் அதை எழுதிக்கொடுத்தவன் கையெழுத்து வைத்ததற்கும் பணம் பற்றிக்கொண்டதற்கும் ருசு இல்லாமலும் எழுதிக்கொடுத்தவனுடைய பாத்தியஸ்தர்களால் ஆட்சேபிக்கப்பட்டும் இருக்குமானுல் அந்தப்பத்திரம் செலாவணி உள்ளதல்ல. (ஷை-நம்.)

௩௧. தன்னுடைய விபக்த சகோதரனை பிரதிவாதி எழுதிக்கொடுத்த பத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்து அதைப்பற்றிப் பிரதிவாதி ஆட்சேபிக்கிற பட்சத்தில் கடன்பத்திரத்தின் யதார்த்தத்தைப்பற்றிமட்டும் கோர்ட்டார் விசாரிக்கவேண்டியதேதவிர உபயவாதிகளும் அவிபக்தர்களோ விபக்தர்களோ என்பதைப்பற்றி விசாரிக்கவேண்டியதில்லை. (க௮௬௦ ஷூ-நம்-க௪எ-க௮௬க ஷூ-ப-௮.)

கூஉ. வாதிக்குப் பிரதிவாதி ரூ-கூ00-க்கு கூ0000-மரக்கால் கொள்ளு கெடுவில் அளக்கிறதென்றும் அப்படி அளக்கத்தப்பினால் வாதி கேட்கிறதொகையை அவனுக்குப் பிரதிவாதி கொடுக்கிறதென்றும் வாதிக்குப் பிரதிவாதி பத்திரம் எழுதிக்கொடுத்து அதற்காக வாதியிடத்திற் பிரதிவாதி அச்சாரம் ரூ-உடுக-வாங்கிக்கொண்டான். ஷை பத்திர நிபந்தனைப்படி நடக்கப் பிரதிவாதி தப்பிப்போய்விட்டதால் பிரியாதின்காலத்தின் விலைப்படி கொள்ளின் கிரயம் ரூ-கூடுச-கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தான். வாதியின் யுக்தப்பிரகாரம் பணங் கேட்கும்படி ஷை பத்திரத்திற்கண்ட அபராத நிபந்தனையானது சுத்த அநியாயமானதால் அதைக் கோர்ட்டார் ஸ்தாபிக்கக்கூடாதென்றும் வாதியிடத்திற் பிரதிவாதி பெற்றுக்கொண்ட அச்சாரம் ரூ-உடுக-ம் அதற்குள்ள வட்டியும் மட்டும் வாதிக்குக் கிடைக்கவேண்டியதென்றும் சதர்க்கோர்ட்டார் தீர்மானித்தார்கள். (கஅகூ0ளு-நம்-கூ0எ-கஅகூக ளுப-ப-உஅ.)

கூகூ. வாதிக்குப் பிரதிவாதி எழுதிக்கொடுத்த கடன்பத்திரத்தில் பிரதிவாதி கொடுக்கவேண்டிய தொகையை அவன் கெடுவில்கொடுத்துவிட்டால் பிரதிவாதிக்கு வாதி சிலதொகையைத்தள்ளிக்கொடுக்கிறதென்று சங்கற்பிக்கப்பட்டிருந்தது. அந்தக்கெடுவில் வாதிக்குப் பிரதிவாதி தொகைசெலுத்தத்தப்பிப்போனதால் பத்திரத்தின் முழுத்தொகையைப்பற்றியும் வாதி வியாச்சியஞ்செய்தான். வாதியின் வழக்கு அபராத நிபந்தனையென்னுந் தோஷத்துக்குட்பட்டதல்லவென்று வாதிபட்சம் பூர்ணமாய்த் தீர்ப்பு செய்யப்பட்டது. (கஅகூ0ளு-நம்-கூஎக-கஅகூகளுப-ப-கூஉ.)

கூச. பழைய கணக்குப்படி பாக்கியான தொகைக்குக் கடன்பத்திரம் பிறந்து அந்தக்கணக்கையுங் கடன்பத்திரத்தையும் வாதி தாக்கல்செய்திருக்கிற பட்சத்தில் அந்த வியாச்சியத்துக்குக் கடன்பத்திரம் முக்கியமேதவிரக் கணக்கு முக்கியமானதல்ல. கடன்பத்திரமட்டும் ருஜூவானால் கணக்கு ருஜூவாகாமற்போனாலுங்கூட வாதிபட்சங் கோர்ட்டார் தீர்ப்புச்செய்யவேண்டும். (கஅகூ0ளு-நம்-உசகூ-கஅகூகளுப-ப-எஅ.)

கூடு. பிரதிவாதி அ-என்பவனுக்கு எழுதிக்கொடுத்த கடன்பத்திரத்தை அவன்இடத்தில் வாதிமேடோவர்பெற்றுக்கொண்டு அந்த அ-என்பவனைப் பிரதிவாதியாய்ச் சேர்க்காமல் பிரதிவாதிமேல்மட்

டும் வாதிசெய்த வியாச்சியம் நிராட்சேபமாய் அங்கீகரிக்கப்பட்டது. (கஅகூ0வுு-நம்-ஙஎ0-கஅகூகவுு-ப-அக.)

ஙகூ. வாதியினுடைய சிற்றப்பனுன லிங்கப்பாவுக்குப் பிரதிவாதி எழுதிக்கொடுத்த பத்திரத்தின் தொகையைப்பற்றி வாதி வியாச்சியஞ்செய்தான். பிரதிவாதி தான் பத்திரம் எழுதிக்கொடுக்கவில்லை யென்றும் ஷை லிங்கப்பாவுக்கு வாதியைத்தவிரப் பின்னுஞ் சில பாத்தியஸ்தர்கள் இருப்பதாகவும் தர்க்கித்தான். வாதி லிங்கப்பாவினுடைய பாத்தியஸ்தன் என்பதைப் பிரதிவாதி ஒப்புக்கொள்வதாலும் பத்திரம் வாதிகையில் இருப்பதாலும் அந்த வியாச்சியத்தில் பத்திரத்தின் உண்மையைப்பற்றிமாத்திரம் சாட்சி விளங்கவேண்டுமென்றும் லிங்கப்பாவினுடைய இதர பாத்தியஸ்தர்களின் பாத்தியத்தைப்பற்றி அந்த வியாச்சியத்தில் யோசிக்கவேண்டிய அகத்தியம் இல்லையென்றும் வாதிபக்ஷந் தீர்மானிக்கப்பட்டது. (கஅகூ0வுு-நம்-உஅடு-கஅகூகவுு-ப-கூக.)

ஙஎ. பத்திரங்களைப் பிரதிவாதி திருடிக்கொண்டதாக வாதியும் தொகைசெலுத்தி அந்தப்பத்திரங்களை வாங்கிக்கொண்டதாகப் பிரதிவாதியுங் கட்சி பேசினுர்கள். அந்தப்பத்திரங்களைப் பிரதிவாதி தாக்கல்செய்யாதபடியால் அவனுடைய பிரதிவாதம் துர்வாதமென்று ஊகிக்கப்பட்டது. (கஅடுகூவுு-நம்-கசஅ.)

ஙஅ. விவாதபத்திரத்தை வாதி தாக்கல்செய்யத்தப்பிப்போனுல் அதினிபந்தனைகள் பிரதிவாதிக்கு ஸர்வசாதகமென்று ஊகிக்கவேண்டும். (கஅடுஅவுு-நம்-கூடு-கஅடுகூவுு-ப-ககூ.)

ஙகூ. பத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சித்தான் ஷை கடனுக்காகவும் பின்னுஞ் சில கடன்களுக்காகவும் தன்னுடைய நிலத்தை வாதிக்குத் தான் ஒற்றிவைத்து ஆதரவெழுதிக் கொடுத்திருந்ததாகவும் பிற்பாடு அந்த ஒற்றியைத் தீர்த்து ஒற்றி ஆதரவை வாங்கிக்கொண்டதாகவும் அது காணுமற்போனதாகவும் பிரதிவாதிசொல்லி அந்தப்பிரகாரஞ் சாட்சிகளால் நிருபணஞ்செய்தான். தீர்ந்துபோன ஒற்றிவிஷயத்துக்கு லிகித சாட்சியம் இல்லாதபடியால் பிரதிவாதியின் கட்சி அங்கீகாரஞ்செய்யப்பட்டது. (கஅடுகூவுு-நம்-உ0க-கஅகூ0வுு-ப-அங.)

ச0. பத்திரத்தின் தொகையைக்கொடுத்துப் பத்திரத்தைப் பிரதிக்கிரஹணஞ் செய்துகொண்டதாகவும் பிற்பாடு அதைப் பரிஹரித்து விட்டதாகவும் ஒருவன் கட்சிசொன்னுல் அதைக் கோர்ட்டார் நம்பக்கூடாது. (கஅகூ0வுு-நம்-ககஉ-ப-கசஎ.)

சக. பந்தகப்பத்திரத்தின் தொகைக்காக வாதிசெய்த வியாச்சியத்தின் உண்மையை முதற்பிரதிவாதி மௌநமாகவும் அவனுடைய புத்திரர்களான-உ-ங-பிரதிவாதிகள் கண்டோக்தமாகவும் ஒப்புக்கொண்டார்கள். ச-ம் பிரதிவாதி ஷை பந்தகச்சொத்து தனக்குப் பாத்யமென்றும் வாதியும் மற்றப்பிரதிவாதிகளும் உபேட்சையென்றும் எதிர்கட்சிபேசினான். ஷை பந்தகச்சொத்தின் உத்தரவாதத்தை வாதி ருஜூப்படுத்தாவிட்டபோதிலும் அவனுடைய கடனை ஒப்புக்கொள்ளுகிற-க-உ-ங-பிரதிவாதிகள் அந்தக்கடனுக்குப் பாத்தியப்படவேண்டுமென்று வாதிவழக்கு அநுகூலிக்கப்பட்டது. (கஅருரு வரு-நம்-ஙக-ஙங-சக.)

சஉ. ஒருபத்திரத்தை மேடோவர் அல்லது பிரதிக்கிரஹணஞ் செய்துகொண்டு அதின்மேல் வியாச்சியஞ்செய்கிறவன் அதற்காகப் பணமுதலானதுகொடுத்து அதை மேடோவர்வாங்கினதாக ருஜூப்படுத்தவேண்டும். மேடோவர்செய்துவிட்டதாக அந்தப்பத்திரத்தின்மேல் எழுதி வாங்கிக்கொள்வது போதுமானதல்ல. (கஅஉஅ வரு-நம்-கக.)

சங. வாதிக்குப் பிரதிவாதி கொடுக்கவேண்டிய தொகையில் சில தொகையைத்தள்ளி பாக்கிக்காக வாதிக்குப் பிரதிவாதி எழுதிக்கொடுத்த பத்திரத்தில் அந்தத்தொகையைப் பிரதிவாதி கெடுவில்கொடுக்கிறதென்றும் அப்படிச்செய்யத்தப்பினால் தள்ளிக் கொடுக்கப்பட்டதொகையும் வாதிக்குப் பிரதிவாதி சேர்த்துக்கொடுக்கிறதென்றும் நிபந்தனை கண்டெழுதப்பட்டு அந்தப்படி கெடுவில் பிரதிவாதிதொகை கொடுக்கத்தப்பிப்போனால், ஷை பத்திரநிபந்தனைப்படி தள்ளப்பட்ட தொகைஉள்பட முழுத்தொகையைப்பற்றியும் வாதி வியாச்சியஞ்செய்யலாம். (கஅசசு வரு-நம்-ஙசு.)

சச. கடன்பத்திரத்துக்காகத் தொகை செலுத்துகிறவிஷயத்தில் மலையாளதேச சம்பிரதாயமும் இதரதேசங்களின் சம்பிரதாயமும் அபேதமேதவிர பேதம் அல்ல. (கஅஉஅ வரு-நம்-உ.)

சரு. கடனுக்காகச்செய்யப்பட்ட வியாச்சியத்தில் வாதி அவனுடைய சமாம்சகர்களை மோசஞ்செய்யவேண்டியதற்காக அந்தக்கடனை வேறொருவனுக்குக் கொடுக்கும்படி தனக்கு உத்தரவுகொடுத்து அந்தப்படி தான் கொடுத்துவிட்டதாகப் பிரதிவாதி கட்சிசொன்னான். அந்தக்கட்சி குச்சிதமென்று அநங்கீகரணஞ் செய்யப்பட்டது. (கஅருசு வரு-நம்-கஎரு-ப-அ0.)

௪௬. அநேக வருஷங்களுக்கு முன்பிறந்த கடன் பத்திரத்தைப் பற்றிப் பேசுகிற சாட்சிகள் ஸ்வல்ப்ப விஷயங்களில் ஒருவர்க்கொருவர் பரஸ்பர விரோதமாய்ப்பேசுவது ஸஹஜமானபடியால் மூங்கின கணக்குமுதலிய தகுந்த ஆதாரங்களால் ஷை கடன் ஸ்தாபிக்கப்படுகிற விஷயத்தில் ஷை சாட்சியபேதங்களைக்கொண்டு அந்தப் பத்திரத்துக்குத் தோஷஞ்சொல்லக்கூடாது. (௧௮௯௦ வரு-நம்-௯௧-ப-௨௫௦.)

௪௭. ௩-வது மனுஷன்மேல் வாதி வியாச்சியஞ்செய்து அந்த வியாச்சியத்தொகையைப் பிரதிவாதி ஒப்புக்கொண்டு வாதிக்குப் பத்திரம் எழுதிக்கொடுக்கிற பட்சத்தில் அந்த வியாச்சியத்தின் இலக்கத்தைமட்டும் அந்தப்பத்திரத்திற் கண்டெழுதுவதுபோதும். அந்த வியாச்சிய விஷயங்களின் விவரம் ஷை பத்திரத்தில் எழுதப் படாமற்போனதைக்கொண்டும் பிரதிப் பிரயோஜனமின்றி அந்தப் பத்திரம் பிறந்ததைக்கொண்டும் அந்த ஆதரவு தோஷகலுஷமாக மாட்டாது. (௧௮௫௯ வரு-நம்-௩௩-ப-௧௫௯.)

௪௮. முதலாவது பிரதிவாதியால் எழுதிக்கொடுக்கப்பட்ட பத்திரத்தின் தொகையைப்பற்றி வாதி வழக்கிட்டான். ௩-ம் பிரதிவாதி தான் வாதியின் பாகஸ்தனானதால் ஷை தொகையில் தனக்குப் பாதி கிடைக்கவேண்டுமென்று எதிர்வுத்தரஞ்செய்தான். வாதி குடும்ப வியாபகனென்று ருஜுவானபடியாலும் விவாதபத்திரம் அவன்கையிலிருந்ததாலும் அவனுக்கு முழுத்தொகையுங் கிடைக்கும்படிக்கும்-௩-ம் பிரதிவாதியின் பாகத்தைப்பற்றி அவன் வேறே வழக்குத்தொடுக்கும்படிக்கும் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௯௦ வரு-நம்-௧௨-௨௯-ப-௭௫-௭௮.)



இவைகளைப்பார்க்க.

## கணக்கன்.

சாட்சியம்-எ-கஉ.................. | ஜீவனும்சம்-கசு....................

இவைகளைப்பார்க்க.

---

## கணக்கு.

க. கணக்குத்தீர்மானப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று வியாச்சியஞ்செய்கிற வாதியானவன் கணக்குத் தீர்ந்ததாய் ரிரூபிக்கத்தப்பிப்போனால் கோர்ட்டார் அவனுடைய வியாச்சியத்தைத் தள்ளிப்போடவேண்டியதே அல்லாமல் அவனுக்காகக் கோர்ட்டார் கணக்குப்பார்த்துத் தீர்மானஞ் செய்யக்கூடாது. (க௮௫எ ளுப நம்-கஉ-க௮௫௮ளுப-ப-௩௦.)

உ. ஒருகணக்குக்கு முந்தினதேதியுள்ள பத்திரமானது அந்தக் கணக்கில் சேர்க்கப்படாமலிருந்தால் அந்தப்பத்திரம் உபயோகப்படமாட்டாது. கணக்குத்தீர்ந்து பாக்கியான தொகையைக்கொடுத்து அடகு நகையை மீட்டுக்கொள்ளுகிறதென்று கணக்கில் கண்டிருந்ததினாலும் உபயவாதிகளுக்கும் வேறே பற்றுவரவு தீராமலிருப்பதாகக் கணக்கினால் தெரியவராதபடியினாலும் உபயவாதிகளுடைய சகலகணக்குகளும் பூரணமாய்த் தீர்ந்து ஷை கணக்குப்பிறந்ததாகவும் ஆனதால் அதற்கு முன்பிறந்தபத்திரம் உபயோகமற்றதென்றும் நிச்சயிக்கப்பட்டது. (க௮௫௮ளுப-நம்-கசகூ-ப-உக௮.)

௩. ஒரேதினத்தில் இரண்டுதரங் கணக்குத் தீர்த்துக்கொண்டதில் ஒருதடவையில் ரூபா ௨௦௦-ம் மற்றொருதடவையில் ரூபா ௨௦௦-க்கு அதிகமாகவும் பாக்கியேற்பட்டது. ஒரேகடனைப்பற்றி அந்த இரண்டுதடவைகளிலும் கணக்குத் தீர்க்கப்பட்டதென்று நிச்சயிக்கப்பட்டது. (க௮௫௮ளுப-நம்-கஉஉ-ப-உ௩௮.)

ச. ஒருகட்சிக்காரனால் தாக்கல்செய்யப்பட்ட கணக்கு வழக்கமாயெழுதிவைக்கப்படுகிற வியாபாரத்தைச் சேர்ந்த கிரமமானகணக்கென்று நிரூபிக்கப்பட்டால்மட்டும் அந்தக்கணக்கை சாட்சியமாக அங்கீகரிக்கலாம். கடன் வரவேண்டுமென்று வியாச்சியஞ்செய்கிறவன் அந்தக்கடன் விஷயத்தைப் பரிஷ்காரமாய் ருஜுப்படுத்தத் தப்பிப்போனால் அவனுடைய கடைக்கணக்கைமட்டும் நம்பி அவன் பக்ஷந் தீர்ப்புச்செய்யக்கூடாது. (க௮௬௦ளுப-நம்-௩-ப-உஎக.)

ரு. விவாதவிஷயத்துக்கு வேறே தகுந்தசாட்சியம் இல்லாத வரையில் கணக்கினுடைய நகல்மட்டும் உபயோகப்படமாட்டாது. (கஅசுO௵-நம்-௩எ-ப-கசுக.)

சு. வாதிக்குப் பிரதிவாதி கொடுக்கவேண்டிய தொகைகளின் விபரங்கண்டு வாதி ஒருகணக்குத் தயார்செய்து அதைத் தபால்வழியாகப் பிரதிவாதி இடத்துக்கு அனுப்பினதாகவும் அந்தக்கணக்குப்படி தொகை கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியஞ்செய்தான். வாதிக்குத்தான் யாதொன்றுங் கொடுக்கவேண்டியதில்லையென்றும் வாதி யாதொருகணக்குந் தனக்கு அனுப்பவில்லையென்றும் பிரதிவாதி ஆக்ஷேபித்தான். பிரதிவாதியிடத்துக்கு வாதி கணக்கனுப்பினதாகவும் மற்றவிவாதவிஷயங்களும் ருஜுவானதினால் வாதிபக்ஷந் தீர்ப்புசெய்யப்பட்டது. (கஅசுO௵-நம்-ககக-ப-கசுO.)

எ. பிரதிவாதியிடத்துக்கு வாதி தபால்வழியாக அனுப்பின அசல்கணக்கை தாக்கல்செய்யும்படி பிரதிவாதிக்குக் கோர்ட்டார் உத்தரவுகொடுத்தும் அவன் அந்தப்படி தாக்கல்செய்யத் தப்பிப்போனதால் அந்தக்கணக்குக்குச் சரியான நகலை வாதியிடத்தில் அங்கீகரித்து அதை அவன்பக்ஷம் சாட்சியமாக ஏற்றுக்கொள்ளலாமென்று நிச்சயிக்கப்பட்டது. (ஷை.)

அ. சரக்குகளின் கிரயத்துக்காகச் செய்யப்படுகிற வியாச்சியங்களில் வர்த்தகர்களுடைய கணக்குகள் தகுந்தபடி ருஜுவானால் அந்தக்கணக்குகளே சர்வோத்தமமான சாட்சியம். (கஅசகூ௵-நம்-கூக.)

கூ. உபயவாதிகளுடைய பற்றுவரவுகளும் நிசேஷமாய்த் தீர்ந்து போய்விட்டதாகப் பிரதிவாதியால் தாக்கல்செய்யப்பட்ட கணக்கின் அந்தத்தில் எழுதப்பட்டிருந்ததால் அதற்குமுன்பாக நடந்த பற்று வரவுகளி னிலுவைக்காக வாதிசெய்தவியாச்சியம் நிஷ்பலஞ்செய்யப்பட்டது. (கஅருகூ௵-நம்-உOகூ-கஅசுO௵-ப-சச.)

| | |
|---|---|
| அப்பீல்-கக........................ | சித்தாந்தமுந் தீர்ப்பும்-சஎ...... |
| கடன்பத்திரம்-உக-௩ச......... | |

இவைகளைப்பார்க்க.

---

## கப்பல்.

க. ஒரு இடத்துக்குக்கப்பல் வழியாய் அனுப்பப்பட்ட சரக்குகளை அந்த இடத்தில் கப்பற்காரன் இறக்கி அந்தச்சரக்குகளை வாங்கிக்

கொள்ள அதிகாரம் பெற்ற படகுக்காரனிடத்தில் கொடுத்துவிட்டால் அதற்குப்பிறபாடு அந்தச்சரக்குகள் கெட்டுப்போய் அதினால் உண்டாகும் நஷ்டத்துக்கு ஷை கப்பற்காரன் உத்தரவாதி அல்ல. ஷை சரக்குகளின் விவரங்கண்டு கப்பற்காரனால் நின்டால் என்னும் உத்தியோகஸ்தனுக்குக் கொடுக்கப்பட்ட குறிப்புக்கடிதம் பொய்யானதென்று சந்தேகிக்கிறதற்கு இடம் இல்லாவிட்டால் அந்தச்சரக்குகளைக் கப்பற்காரன் கொடுத்துவிட்டதற்கும் அவனுடைய உத்தரவாதம் நீங்கிப்போனதற்கும் அந்தக் குறிப்பே போதுமான சாட்சியம். (கஅருகூ௵-நம்-கருஎ-கஅசு0௵-ப-எக.)

அதிகாரவரம்பு-க-உ-அ.

இவைகளைப்பார்க்க.

## கலகம்.

க. கலகக்காரர்களுடைய கொள்ளை முதலான செய்கைகளால் நேரிட்ட நஷ்டத்தைப்பற்றி அவர்கள்மேல் வியாச்சியஞ் செய்யலாம். (கஅகஎ௵-நம்-கஅ-ப-கூ௨.)

## கலால்குத்தகை.

க. கலால்குத்தகைக்காரன் சில கிராமங்களை வேறொருவனுக்கு உட்குத்தகையாய்விட்டு அதற்காக முன்பணமும் வாங்கியிருப்பானால் அந்தக்கிராமங்களை அவன் உட்குத்தகைக்காரன் வசத்திலாவது விட்டுவிடவேண்டும். அல்லது அவன் வாங்கின முன்பணத்தையாவது உட்குத்தகைக்காரனுக்குக் கொடுத்துவிடவேண்டும். (கஅருகூ௵-நம்-கருக-கஅசு0௵-ப-ச.)

## கலெக்ட்டர்.

க. கஅ௨௨௵ ரு-வது சட்டப்படி கலெக்ட்டர் முன்பாகக் கொடுக்கப்படுகிற வியாச்சியங்களை சிவில்க்கோர்ட்டு வியாச்சியங்களைப்போலே வருஷவாரிப்படி கலெக்ட்டர் இலக்கம்போட்டுப் பதிந்து கொள்ளவேண்டும். (ச-பு-கஅருந௵ பிப்பிரவரிமீ௳ உகൟ.)

உ. கஅ௨௨௵ ரு-வது சட்டப்படி தாற்காலம் நிலத்தைச் சாகுபடி செய்யவேண்டியதைப்பற்றியாவது நிலத்தை அநுபவிக்கவே

ண்டியதைப்பற்றியாவது சூக்ஷ்மவிசாரணை செய்யமட்டுங் கலெக்டருக்கு அதிகாரம் உண்டாயிருப்பதால் நிலத்தின் பாத்தியத்தைப்பற்றின வியாச்சியத்தை அவர் அங்கீகரிக்கக்கூடாது. (ச-பு-கஅசஅ வரு மார்ச்சுமீ கஙவ.)

ங. தர்மசாஸ்திரம்-பாத்தியம்-மரணசாஸனத்தின் வியாக்கியானமுதலான விஷயங்கள் சம்பந்தப்பட்ட வியாச்சியங்களை ஷை சட்டப்படி கலெக்டர் வாங்கக்கூடாது. (ச-பு-கஅசங வரு-டிசம்பர்மீ கஎவ.)

ச. கலெக்டருடைய தீர்மானத்தின்மேல் அப்பீல் செய்வதற்காக நிஷ்கர்ஷை செய்யப்பட்ட ஙo-நாள் கிரமிக்கிறவரையில் செலவுகளையாவது நஷ்டங்களையாவது வசூல்செய்யக்கூடாதென்று கஅஉஉ வரு-ரு-வது சட்டம் உ-வது பிரிவு உ-வது உட்பிரிவில் சொல்லப்பட்ட நிபந்தனையானது நிலத்தைப் பலவந்தமாய்க் கைவசப்படுத்திக்கொள்ளப்பட்ட விஷயங்களுக்குமாத்திரம் உபயோகமாயிருக்கின்றது. (ச-பு-கஅங அ வரு-டிசம்பர்மீ கoவ.)

ரு. தீர்வைப்பாக்கிக்காக ஜப்திசெய்யப்பட்ட சொத்தை ஏலம் போடுகிறதற்குக் கலெக்டருக்குப் பூரண அதிகாரம் இருப்பதால் ஷை சட்டம் ச-வது பிரிவு ச-வது உட்பிரிவுப்படி கலெக்டர் செய்த தீர்மானத்தின்மேல் அப்பீல் செய்யப்பட்டிருந்தபோதிலும் அந்த அப்பீல் முடிவாகிறவரையில் செலவு விஷயங்களைத்தவிர மற்றவிஷயத்தில் ஷை கலெக்டருடைய தீர்மானத்தை நிறைவேற்றாமல் நிறுத்திவைக்கக்கூடாது. ஷை சட்டம் கக-வது பிரிவுப்படி ஸ்வான் பாத்தியத்தைப்பற்றி விசாரிக்காமல் அநுபோகபாத்தியத்தைப்பற்றிமட்டும் விசாரித்துக் கலெக்டர் செய்த தீர்மானத்தின்மேல் அப்பீல்செய்யப்பட்டிருந்தாலுங் கூட அந்த அப்பீல் முடிவாகிறவரையில் செலவுவிஷயமும் நஷ்டவிஷயமுந்தவிர மற்றவிஷயத்தில் அந்தத்தீர்ப்பை நிறைவேற்றாமல் நிறுத்திவைக்கக்கூடாது. (ச-பு-கஅஙஅ வரு-டிசம்பர்மீ கoவ.)

சா. சபார்டினேட் கோர்ட்டு இருக்கிற ஜில்லாக்களில் ஷை ரு-வது சட்டம் கசா-வது பிரிவு முதலாவது உட்பிரிவுப்படி கலெக்டர்செய்த தீர்மானங்களின்மேல் சபார்டினேட் கோர்ட்டில் அப்பீல் செய்ய வேண்டுமே அல்லாமல் ஜில்லாக்கோர்ட்டில் அப்பீல்செய்யக்கூடாது. (ச-பு-கஅசச வரு-மார்ச்சுமீ சவ.)

எ. ஷை சட்டப்படி கலெக்ட்டரால் செய்யப்பட்ட தீர்மானத்தை அசல் வியாச்சியத்தின் தீர்ப்பாகவும் அதன்மேல் செய்யப்பட்ட அப்பீலைக் கிரம அப்பீலாகவுந் தாக்கல்செய்துகொள்ளவேண்டும். (ச-பு-௧அ௫௩ளு-மார்ச்சுமீ ௧௦உ.)

அ. ஷை ௫-வது சட்டப்படி கலெக்ட்டர்செய்த தீர்மானத்தின்மேல் செய்யப்பட்ட அப்பீலில் கலெக்ட்டரை அப்பீலில்ப்பிரதிவாதியாய்ச் சேர்க்கக்கூடாது. (ச-பு-௧அ௩௯ளு-நவம்பர்மீ ௫உ.)

௯. கலெக்ட்டர் அவருடைய அதிகாரத்தைக்கொண்டு செய்த செய்கைக்காக அவர்மேலே செய்யப்படும் வியாச்சியத்தில் அவர் கோர்ட்டாருக்கு யாதொருசங்கதியைத் தெரியப்படுத்தவேண்டியிருந்தால் கவரன்மெண்டு வக்கில்மூலமாகத் தெரியப்படுத்தவேண்டும். (ச-லெ-௧அ௩௫ளு-டிசம்பர்மீ ௫உ.)

௧௦. கோர்ட்டாருடைய தீர்ப்புக்காவது உத்தரவுக்காவது கீழ்ப்படியாமலிருக்கிற கலெக்ட்டருக்கு ௧அ௦உளு-௨எ-வது சட்டம் உ௫-வது பிரிவுப்படி கோர்ட்டார் அபராதம் விதிக்கக்கூடாது. ஆனல் கலெக்ட்டருடைய அதிகாரச்செய்கைக்காக வியாச்சியஞ்செய்யப்படாமல் சொந்தவிஷயமாக அவர்மேல் செய்யப்படும் வியாச்சியத்தில் அவர் மேற்கண்டபடி கீழ்ப்படியாமற்போனல் அவருக்குக் கோர்ட்டார் அபராதம்விதிக்கலாம். (ச-பு-௧அ௨சளு-பிப்பரவரிமீ உ௦உ.)

௧௧. பலவந்தமாய்ச் சொத்துக்கள் அபகரிக்கப்படுகிற விஷயத்தில்மாத்திரம் ௧அ௨உளு-௫-வது சட்டம் உபயோகம். (௧அ௫௧ளு-நம்-௧௩-௧அ௫௩ளு-நம்-௧உ-௯௧.)

௧உ. யாதொருவிசாரணையுஞ் செய்யாமல் ரிவின்யு, பேஷ்காருக்குக் கலெக்ட்டரால் அனுப்பப்பட்ட உத்தரவு ௧அ௨உளு-௫-வது சட்டத்தில் சொல்லப்பட்ட தீர்மானத்துக்குச் சமானமானதல்ல. ஆகையால் அந்த உத்தரவின்மேல் சிவில்க்கோர்ட்டாரிடத்தில் கிரம அப்பீல் செய்யக்கூடாது. (௧அ௫௧ளு-நம்-௧௩.)

௧௩. ஷை ௫-வது சட்டப்படி கொடுக்கப்பட்ட பிரியாதுகளைக் கலெக்ட்டர் ஸ்வயமே விசாரிக்கவேண்டுமே அல்லாமல் தாசில்தார் முதலானவர்கள்மூலமாய் விசாரணைசெய்து அவர்களுடைய ரிப்போர்ட்டின்மேல் கலெக்ட்டர் தீர்மானஞ் செய்யக்கூடாது. (௧அ௫௩ளு-நம்-அஅ-௧அ௫௫ளு-நம்-அ௧.)

௧௪. கவர்ன்மென்டுக்குச் சொந்தமான நிலத்தைச் சாகுபடிக்காகத் தன்னிடத்தில் விட்ட கலெக்டர் பிற்பாடு பிரதிவாதிகள் வசப்படுத்திப்போட்டதால் அந்த நிலங் கிடைக்கவேண்டுமென்று வாதி வழக்கிட்டான். அந்த வியாச்சியத்தில் கலெக்டர் பிரதிவாதியாய்ச் சேர்க்கப்படாததினால் அவருடைய செய்கை கிரமமா அல்லவாவென்பதைப்பற்றி நிச்சயஞ் செய்யக்கூடாதென்றும், ஈரோப்புக்குப் போயிருக்கிற ஷை கலெக்டர் திரும்பிவந்தவுடனே அவரையுஞ்சேர்த்து வாதி வழக்குச்செய்யவேண்டுமென்றும வாதிக்கு விரோதமாய்த் தீர்ப்புசெய்யப்பட்டது. (௧௮௫௯௵-நம்-௨௨௧-௧௮௬௦௵-ப-௭௭.)

௧௫. ஹெட் அஸிஸ்டாண்டு கலெக்டரால் கொடுக்கப்பட்ட பட்டாப்படி நிலங் கிடைக்கவேண்டுமென்று தொடருகிறவனுடைய பாத்தியத்தை செலாக்கியமானதாகக் கலெக்டர் எடுத்துக்கொள்ளலாம். (௧௮௫௮௵-நம்-௧௩௬-ப-௨௭௦.)

௧௬. ஒரு கலெக்டரின் அதிகாரச்செய்கைகளினாலே துன்பத்தை அடைந்தவன் அந்தக் கலெக்டர் இருக்கும்போதே அவர் மேல் வியாச்சியஞ் செய்யவேண்டுமே அல்லாமல் அவருக்குப் பதிலாய் நியமிக்கப்பட்ட கலெக்டர்மேல் வியாச்சியஞ் செய்யக்கூடாது. (௧௮௫௯௵-நம்-௨௦௪-௧௮௬௦௵-ப-௬௫.)

௧௭. ௧௮௨௨௵ ௯-வது சட்டம் ௫-௬-பிரிவுகளின்படி ஒரு கலெக்டருடைய தீர்மானத்தினாலாவது உத்தரவினாலாவது துன்பத்தை அடைந்தவன் அந்தக் கலெக்டர்மேல் நஷ்டத்தைப்பற்றிப்போதுமான முத்திரைக்காகிதத்தின்மேல் வியாச்சியஞ்செய்யலாம். அல்லது மனு எழுதவேண்டிய முத்திரைக்காகிதத்தின்மேல் சிவில்ஜட்ஜிடத்தில் அவன் அப்பீலாவது பண்ணிக்கொள்ளலாம். மேற்கண்ட இரண்டுமார்க்கங்களில் எந்தமார்க்கம் அநுஷ்டிக்கப்பட்டபோதிலும் கலெக்டருடைய தீர்மானம் அல்லது உத்தரவின் சொரூபமுழுதுங் கோர்ட்டாரால் ஆலோசிக்கப்படவேண்டும். (ச-பு-௧௮௫௩௵-அக்டோபர்௴ ௨௦௳.)

௧௮. அக்கிரமமாய்க் கலெக்டர் தீர்வை வசூல் செய்ததற்காகவும் அவருடைய அதிகாரச்செய்கைகளால் நேரிட்ட நஷ்டத்துக்காகவும் அவர்மேல் வியாச்சியஞ் செய்வதற்கு ௧௮௫௦௵ ௧௮-வது ஆக்டினால் யாதொரு தடையும் இல்லை. (ச-பு-௧௮௫௧௵ ஜனுவரி௴ ௨௫௳.)

கக. கஅஉஉ௵ ரு-வது சட்டப்படி வருமானத்தைப்பற்றிக் கலெக்டர் செய்த தீர்மானமானது நிலத்தின் பாத்தியத்தைப்பற்றிக் கோர்ட்டில் வியாச்சியஞ் செய்வதைத் தடுக்கமாட்டாது. (கஅருசா௵ நம்-ருஉ-ப-சாக.)

| | |
|---|---|
| அங்கீகாரவிபரீதம்-கசா........... | தீர்ப்பு நிறைவேற்றல்-உந...... |
| அப்பீல்-சo...................... | |

இவைகளைப்பார்க்க.

---

## கவர்ன்மென்று வக்கீல்.

க. கவர்ன்மென்று வக்கீல் உத்தியோகம் காலியானால் சிவில் ஜட்ஜ் கலெக்டருடன் ஆலோசித்து அந்த உத்தியோகத்துக்காக ஒருவனை நிச்சயஞ்செய்து அவனைப்பற்றி சிவில்ஜட்ஜ் கவர்ன்மென்டருக்கு நேராய் சிபாரிசுசெய்யவேண்டும். ஷை நியமகத்துக்குக் கலெக்டருடைய அபிப்பிராயம் விரோதமாயிருந்தால் கலெக்டருடைய அபிப்பிராயத்தையும் சிவில்ஜட்ஜ் வாங்கி அனுப்பவேண்டும். (ச-பு-கஅநஅ௵ ஜூன்மீ அஎ.)

உ. யாதொரு கட்சிக்காரனுக்கும் அவனுடைய வக்கீலுக்கும் எவ்வளவு சம்பந்தமோ அவ்வளவுமட்டுந்தான் கலெக்டருக்கும் கவர்ன்மென்று வக்கீலுக்குஞ் சம்பந்தமுண்டாயிருப்பதால், கவர்ன்மென்று வக்கீலுக்கு அபராதம்விதிக்கக் கலெக்டருக்கு அதிகாரம் இல்லை. வேலையில் அசட்டைசெய்ததற்காகவும் அல்லது வேறே துர்நடக்கைக்காகவும் சிவில்ஜட்ஜ்மட்டும் கவர்ன்மென்று வக்கீலுக்கு அபராதம் விதிக்கலாம். (ச-லெ-கஅஉஉ௵ டிசம்பர்மீ ருஎ.)

ந. கவர்ன்மென்டார்மேல் ஒரு வாதியினாற்செய்யப்பட்ட வியாச்சியத்தில் அந்த வாதிக்காக வக்கீலாயிருக்கிறவர் பிற்பாடு கவர்ன்மென்று வக்கீலாக நியமிக்கப்பட்டால் அந்த நியமகத்துக்குப்பிற்பாடும் அவர் அந்த வாதிக்காக வக்கீலாயிருக்கலாம். ஆனால் அந்த வக்கீல் வேண்டியதில்லையென்று வாதி தள்ளிக்கொண்டால் அவர் கவர்ன்மென்டார் பட்சத்தில் வக்கீலாயிருந்து பேசலாம். (ச-பு-கஅஉசாம்௵ ஜூன்மீ உe .)

ச. போஸ்ட்மோஸ்டர் ஜனரல் முதலான பகிரங்கமான உத்தியோகஸ்தரிடத்தில் அதிகாரம் பெற்றுக்கொள்ளாத கவர்ன்மென்று

வக்கீல் அந்த உத்தியோகஸ்தருக்காக அப்பீல் செய்யக்கூடாது. (கஅ௫அ௵-நம்-௬௬-ப-௨௦௩.)

கலெக்டர்-௬.

இதைப்பார்க்க.

## களவு.

௧. ஒருசொத்தைத் திருடினவன் அந்தச்சொத்தின் கிரயத்தைக் கொடுத்துவிடுகிறதென்றும் அந்தச் சொத்துக்குடையவன் திருட்டுச்சங்கதியைப்பற்றிப் பிரியாது கொடுக்கிறதில்லையென்றும் உடன்படிக்கை செய்துகொண்டு அந்த உடன்படிக்கையின் ஆதாரத்தின் மேல் திருட்டுச்சொத்தின் கிரயத்துக்காகச் செய்யப்படும் வழக்கைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (ச-வி-ப-கக.)

## காசாவர்க்கம்.

௧. மிராசுதாருடைய நிலத்தைக் காசாவர்க்கக் குடிகள் எவ்வளவுகாலம் அநுபவித்தாலும் அவர்களுக்குப் பாத்தியம் உண்டாகமாட்டாது. மிராசுதார் கேட்கும்போது அவர்கள் நிலத்தை விட்டுவிட வேண்டும். (கஅசச௵-நம்-க௦அ, கஅ௫அ௵-நம்-௬௦-கக்க-ப-சக-கச௫.)

௨. சாகுபடி விஷயத்தில் ஒருவன் மிராசுதாருக்குள் காசாவர்க்கப் புறக்குடியாயிருந்தாலும் அவனுடைய குடியிருப்பு மனை மிராசுதாருக்குச் சம்பந்தம் இல்லாமல் அந்தப் புறக்குடிக்கே பூரண பாத்தியமாயிருக்கலாம். (கஅ௫அ௵-நம்-க௫எ-ப-௨௨௬.)

மிராசுதாரும் புறக்குடியும்-க௫-வது விதியைப்பார்க்க.

## காஜி.

௧. மற்றவர்களை எல்லாம் நீக்கிப் பட்டணத்துக்காஜிமட்டும் அவருடைய வேலையை நடப்பிவிக்கும்படி அவருக்குச் சட்டத்தினால் அதிகாரங்கொடுக்கப்படவில்லை. ஆனால் அவருக்குமட்டும் உரித்தான சுதந்தரங்களில் யாராவது பிரவேசித்து அவருக்கு நஷ்டம் உண்டாயிருந்தால் அந்த நஷ்டத்தைப்பற்றி அவர் வியாச்சியஞ் செய்யலாம். (௬-பு-கஅசக௵ ஜனுவரிமீ ௫௨.)

௨. தன்னுடையமுன்பாக ஒரு சாட்சிக்காரன் ஆஜராகும்படி வலிமைசெய்யக் காஜிக்கு அதிகாரமில்லை. ஆனால் யாதொரு சாட்சிக்காரன் வராமற்போனதினால் ஆதரவின் உண்மையைப்பற்றிக் காஜிக்கு ஸந்தேகம் உண்டானால் அந்த ஆதரவிற் கையெழுத்துவைத்து உறுதிசெய்ய அவர் நிராகரிக்கலாம். (ஷை.)

௩. புருஷனோடு கூடியிருக்க இஷ்டமில்லாத ஸ்திரீயைப் புருஷனிடத்திற் சேர்ந்திருக்கும்படி காஜிபலவந்தம் பண்ணக்கூடாது. கிரமவியாச்சியஞ்செய்யும்படிமட்டும் புருஷனுக்கு அவர் சொல்ல வேண்டும். (ஷை.)

௪. முத்திரை ஆக்ட்டின்விதிகளை ஆசரிக்கவேண்டியது காஜியினுடைய கையெழுத்துக்காகக் கொண்டுவரப்பட்ட ஆதரவுகளைப் பிறப்பிவித்துக்கொள்ளுகிறவர்களுடைய கடமையேதவிர அந்த ஆக்ட்டை அநுஷ்டானத்துக்குக் கொண்டுவரவேண்டியது காஜியினுடைய வேலையல்ல. (ச-பு-௧அ௬0 ௵ டிசம்பர்மீ ௧௪௳.)

௫. சுல்த்தான் இடத்தில் சன்னது பெற்றுக்கொள்ளாமல் யாதொரு குத்பீபு குத்பாவாசிக்கலாம். (௧அ௧௪ ௵-௩ம்-௧.)

௬. குத்பாவாசிக்கிற குத்பீபைத் தடைசெய்ய சுலுத்தானுடைய குத்பீபுக்கு அதிகாரமில்லை. (ஷை.)

௭. வெள்ளிக்கிழமை நடக்கும் குத்பாமுதலான ஜெபங்களைக் கோரியிலாவது வீட்டிலாவது அல்லது ஜனங்களுடைய சம்மதத்தின்மேல் நியமிக்கப்பட்ட யாதொரு ஸ்தலத்திலாவது வாசிக்கலாம். (ஷை.)

௮. யாதொருவன் குத்பாவாசிக்கக்கூடாதென்று தடைசெய்யக் காஜிக்குப் பாத்தியமில்லை. (ஷை.)

ஜீவநாம்சம்-௧௪.

இதைப்பார்க்க.

---

## காரியஸ்தன்.

௧. யஜமானன் உத்தரவுப்படி காரியஸ்தன் பாங்கிநோட்டுகளைத் தபாலில் அனுப்பி அவைகள் காணமற்போனாலும் கெட்டுப்போனாலும் காரியஸ்தன் பாத்தியப்படவேண்டியதில்லை. (௧அ௧௨ ௵-௩ம்-௭.)

உ. ஒரு அதிகாரப்பத்திரம் எழுதிக்கொடுத்தவன் இறந்துபோன உடனே அது ரத்தாய்ப்போகிறபடியால் அவனுடைய பாத்தியஸ்தர்கள் வேறே அதிகாரப்பத்திரம் எழுதிக்கொடுக்கவேண்டியது முக்கியம். (கஅகஎஞு-நம்-உஉ.)

ங. யஜமானனுடைய உத்தரவுகள் தெளிவாகவுங் கண்டிப்பாகவும் இருக்குமாறல் அந்தப்படியே காரியஸ்தன் சரியாய்நடக்கவேண்டும். யஜமானனுடைய ஹிதத்துக்காகவே அந்த உத்தரவுக்கு விரோதமாய்க் காரியஸ்தன் நடந்தாலுங்கூட அதினுல் உண்டாகப்பட்ட நஷ்டத்துக்குக் காரியஸ்தன் பாத்தியப்படவேண்டும். (கஅஙஉஞு-நம்-கo.)

ச. காரியஸ்தன்பெயரால் ஒரு கரார் நடந்திருந்தாலுங்கூட அது யஜமானனுக்காக நடந்ததானபடியால் யஜமானனைச்சேர்க்காமல் காரியஸ்தன்பேரில் மட்டும் வியாச்சியங் கொண்டுவரக்கூடாது. (கஅருஉஞு-நம்-உங.)

ரு. உண்டிமூலமாய்ப் பணம் அனுப்பும்படி காரியஸ்தனுக்கு யஜமானன் உத்தரவுகொடுத்ிருக்க அவன் பாங்கிநோட்டுகள் அனுப்பி அவைகள் காணுமற்போனுல் காரியஸ்தன் பாத்தியப்படவேண்டும். (கஅசரு ஞு-நம்-ஙஅ.)

சா. கவுல்தாருடைய காரியஸ்தன் ஜமீன்தாருக்குப் பாத்தியப்படவேண்டியதில்லை. (கஅருஅஞு-நம்-சஎ-சஅ.)

எ. காவற்கூடத்தில் வைக்கப்பட்ட ஜமீன்தார் விடுதலைபெறுவதற்காக லஞ்சமூலமாகத்தான் வேண்டிய சஹாயங்களைச்செய்ததாகவும் அதற்காகத் தனக்கு ஷெ ஜமீன்தார் வாக்குத்தத்தஞ்செய்தபடி பிரதி உபகாரஞ்செய்யவில்லையென்றும் அந்த ஜமீன்தாருடைய காரியஸ்தன் செய்தவழக்கு அக்கிரமமென்று தள்ளப்பட்டது. (கஅoகூஞு-நம்-உ.)

| | |
|---|---|
| அப்பீல்-உஎ...................... | ஜீவநாம்சம்-ஙக................ |
| எஜமானன்-க-உ-ங................ | இவைகளைப்பார்க்க.............. |

---

## காலநிர்ணயம்.

க. வாதியின் வழக்கு காலநிர்ணய தோஷத்துக்கு உட்பட்டிருப்பதாகப் பிரதிவாதி கட்சிபேசினுல் ஸாராம்சத்தைப்பற்றி விசாரிக்

கிறதற்கு முன்காலநிர்ணய தோஷத்தைப்பற்றிக் கோர்ட்டார் விசாரணைசெய்யவேண்டும். (ச-பு-கஅ௫உ௵ சூன்மீ கவ.)

உ. வாதியின் பாத்தியத்தைப் பிரதிவாதி ஒப்புக்கொண்டிருந்தால் அப்படி ஒப்புக்கொண்ட தேதிக்குமுன் கஉ௵-காலம் கிரமித்துப் போயிருந்தாலுங்கூட ஷை ஒப்புக்கொள்ளுதலின் தேதி முதல்-கஉ-வருஷத்துக்குள்ளாகச் செய்யப்படும் வியாச்சியத்துக்குக் காலநிர்ணயதோஷமில்லை. (கஅசகூ௵-நம்-கூச, கஅ௫க௵-நம்-உச, கஅ௫௬௵-நம்-௬உ, கஅ௫எ௵நம்-கஎக, கஅ௫அ௵-ப-கூ௬.)

௩. வியாச்சியஞ் செய்யவேண்டிய அவசரமில்லாமல் சமாதானமாய்த் தீர்ந்துபோகுமென்று வாதிக்கு நம்பிக்கையுண்டாகும்படியான விதமாய் அவனுடைய பாத்தியத்தைப் பிரதிவாதி ஒப்புக்கொண்டிருந்தால்மட்டும் வாதி வழக்கு காலநிபந்தனை தோஷத்தால் பீடிக்கப்படமாட்டாது. (கஅசூ0௵-நம்-ச-ப-உஉ௫.)

ச. வாதி ஒருவியாச்சியஞ்செய்து பிற்பாடு அதைத் தள்ளிக்கொண்டிருப்பதைக்கொண்டு காலநிபந்தனை தோஷபரிகாரமாகமாட்டாது. (கஅ௫௬௵-ப-௫சூ-கஅ௫சூ௵ நம்-ச, கஅ௫எ௵-நம்-கூஅ-ப-கசூகூ, கஅ௫கூ௵-ப-ச௫.)

௫. வியாச்சியஞ் செய்யும்படியான பாத்தியமுள்ளவன் ஜீவவந்தனாயிருக்கும்போதே கால நிபந்தனை தோஷமுண்டாயிருக்குமானால், அந்தப் பாத்தியமானது அவன் இறந்தபிற்பாடு அவனுடைய பாத்தியஸ்தனுக்கு மறுபடியும் உண்டாகமாட்டாது. (ச-வி-ப-௬உ.)

சூ. கால நிர்ணய தோஷத்துக்குட்பட்ட வழக்கைத் தகுந்த அதிகாரமுள்ள கோர்ட்டார் தள்ளினபிற்பாடு அந்தப் பாத்தியம் மறுபடியும் உண்டாயிருக்கிறதென்பதற்கு வாசா சாட்சியத்தை அங்கீகரிக்கக்கூடாது. (கஅ௫எ௵-ப-உஉ.)

எ. மிராசுதாருக்கும் மற்றக் குடிகளுக்கும் உண்டாகிறவழக்கில் புறக்குடி பகுதிகொடுக்கத்தப்பின தேதிமுதல். கஉ௵த்துக்குள் மிராசுதார் வியாச்சியம் செய்யவேண்டும். (கஅஉச௵-நம்-ச-கஅ௫க௵-நம்-௫அ-அச, கஅ௫உ௵-ப-சச-எக.)

அ. விவாதஸ்திதியை கஉ௵-வரையில் பிரதிவாதி அனுபவித்திருந்தால்மட்டும் காலநிர்ணய தோஷமுண்டாகுமே அல்லாமல் பிரதிவாதியாயிராத வேறொருவன் விவாதஸ்திதியை அனுபவித்துப்

பின்புவிட்டிருப்பானுனல் வாதிவழக்குக் காலநிர்ணயதோஷத்துக்கு உள்ளாகமாட்டாது. (௧௮௫௧௵-நம்-௯௭-ப-௨௫௬.)

௯. விவாதநிலம் மோசமாய் அபகரிக்கப்பட்டிருந்தால் அந்த மோசம் வெளியானதுமுதல் காலநிர்ணயக்கணக்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஒருவன் ஒருசொத்தை மோசமாக எவ்வளவுகாலம் அனுபவித்தாலும் அந்தமோசம் வெளியாகி ௧௨௵-த்துக்குள்ளாக அவன்மேல் அந்தச்சொத்துக் குடையவன் வியாச்சியஞ் செய்யலாம். (௧௮௨௩௵-நம்-௫)

௧0. வாதி சிறுபிள்ளையாயிருக்கும்போது அவனுடைய மாதாவினுல் பராதீனஞ்செய்யப்பட்ட சொத்தைப்பற்றி அவனுக்குத் தகுந்தவயது வந்ததேதிமுதல் ௧௨௵த்துக்குள்ளாக அவன் வியாச்சியஞ்செய்யவேண்டும். (௧௮௬0௵-நம்-௪௧-௧௩௬-ப-௨௫௨.)

௧௧. நிலம் வாதிக்குச் சொந்தமானதல்லவென்று ஆக்ஷேபிக்கப்பட்டு அவன் அந்த நிலத்தைப்பற்றி வியாச்சியஞ்செய்ய யோசித்திருப்பதாக எழுத்துமூலமாய் சொல்லியிருப்பானுனல் அதுமுதல் ௧௨௵க்கணக்கிடவேண்டும். (௧௮௫௮௵-நம்-௧௪௪-௧௮௫௯௵ ப-௧0.)

௧௨. ஒருவனுக்குப் பாத்தியஸ்தன் என்கிற ஆதாரத்தின்மேற் செய்யப்படுகிற வழக்கில் அந்தப்பாத்தியம் உண்டான தேதிமுதற் கொண்டும் அவன் சொத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொள்வதில் விக்நம் நேரிட்ட தேதிமுதற்கொண்டும் காலநிர்ணயக்கணக்குப்பார்க்கவேண்டும். (௧௮௫௯௵-நம்-௨௩௪. ௧௮௬0௵-ப-௧௩௬.)

௧௩. தகுந்த வயதில்லாதவனுடைய பாகத்தைமட்டும் காலநிபந்தனை தோஷஞ்சேராது. அவனுடைய பாகஸ்தன் தகுந்தவயதுள்ளவனுயிருந்தால் அவனுடைய பாகத்துக்கு ஷை தோஷமுண்டு. (௧௮௫௪௵-நம்-௮௨-ப-௧௭௩.)

௧௪. ஒருபாகஸ்தன் அவனுடைய பாகத்தைப்பற்றி எந்தக்காலத்திலும் தொடரலாம். அவனுடைய பாத்தியம் எப்போது ஆக்ஷேபிக்கப்படுகின்றதோ அதுமுதற்கொண்டு காலநிபந்தனை ஆரம்பிக்கும். (௧௮௧௫௵-நம்-௧௧, ௧௮௪௯௵-நம்-௬௩, ௧௮௫௩௵-நம்-௮௨, ௧௮௫௫௵-நம்-௫௯-௮௨, ௧௮௫௮௵-நம்-௧௨௮-ப-௧௬௩.)

௧௫. பலகெடுக்கள் கண்டபத்திரவிஷயத்தில் ஒவ்வொருகெடுவின் தேதிமுதல் வியாச்சியமூலம் ஆரம்பிக்குமேதவிர முதற்கெடு

முதல் ஆரம்பிக்கமாட்டாது. (கஅருச ஹ்-நம்-கூக-ப-உ௨ ரு, கஅருரு ஹ்-நம்-உஎ, கசஎ-ப-சஈ-கஈஈ-உஈஎ.)

கசு. கடன் பத்திரத்திற்கண்டகெடுவின் தேதிமுதல் காலநிர்ணயக் கணக்குப் பார்க்கவேண்டியதேயல்லாமல் அந்தப்பத்திரம் பிறந்த தேதிமுதற்கொண்டு கணக்கிடக்கூடாது. (ச-வி-ப-ஈஈ.)

கஎ. நிலத்தின் வருமானத்தைக் கொண்டுபோக்கியத்தொகையும் வட்டியுந் தீர்ந்துபோய் நிலத்தைவிடும்படி ஸ்வான்காரன் கேட்டு போக்கியக்காரன் நிலத்தைவிடாமல் வீண்முகாந்தரஞ் சொல்லுவானுல் அதுமுதற்கொண்டு காலநிபந்தனை தோஷம் ஆரம்பிக்கும். (கஅருகூ ஹ்-நம்-எ0-ப-கசுக)

கஅ. காலநிபந்தனை தோஷத்தைப்பற்றிப் பிரதிவாதி பேசாமலிருந்தாலுங்கூடக் கோர்ட்டார் அதைப்பற்றி விசாரிக்கவேண்டும். (கஅருஎ ஹ்-நம்-சுஉ.)

ககூ. பிரதிவாதி வேறொருவனுக்கு எழுதிக்கொடுத்த ஆதரவில் வாதியின் கடனை ஒப்புக்கொண்டு அதைத் தீர்க்கவேண்டியதற்கு மார்க்கஞ்சொல்லியிருந்தபடியால் அந்த ஆதரவு பிறந்ததேதிமுதல் காலநிர்ணயத்துக்குக் கணக்குச செய்யவேண்டுமேயல்லாமல் வாதியின் கடன் பத்திரம் பிறந்ததேதிமுதல் கணக்குச்செய்யக்கூடாதென்று நிர்ணயிக்கப்பட்டது. (கஅருஎ ஹ்-நம்-கசுக, கஅருஅ ஹ்-ப-கூஈ.)

உ0. தகப்பன் இறந்துபோகும்போது காலநிர்ணயதோஷம் இல்லாமல் சிலகாலமாத்திரங் கடந்துபோயிருக்குமானல் மிச்சக்காலத்தை அவனுடையமகனுக்குத் தகுந்தவயது வந்தது முதற்கொண்டு கணக்கிடவேண்டும். (கஅகச ஹ்-நம்-கஉ, கஅருஅ ஹ்-நம்-கஈ.)

உக. காலநிபந்தனை தோஷத்துக்காக அசல் கோர்ட்டாரால் தள்ளப்பட்ட வியாச்சியம் அந்தத் தோஷத்துக்குட்பட்டதல்லவென்று அப்பீல் கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால் அதைச்சாராம்ச விசாரணைக்காக அப்பீல் கோர்ட்டார் அசல் கோர்ட்டுக்கு அனுப்பிவிடவேண்டும். (கஅருஎ ஹ்-நம்-கஉஅ-ப-கஅக.)

உஉ. வாதிதேசாந்தரம் போயிருந்ததைக்கொண்டு காலநிர்ணய தோஷ நிவாரணம் உண்டாகமாட்டாது. (கஅருஉ ஹ்-நம்-சஎ, கஅருஈ ஹ்-ப-கஈஎ.)

உ௩. வாதி தண்டனைப்பட்டுக் காவற்கிடங்கில் இருந்தால் கால நிர்ணயதோஷம் நிவர்த்தியாகும். (க௮௫க வ௫-நம்-உஎ-க௮௫௩ வ௫-ப-கஎ.)

உச. தகப்பன் சித்தப்பிரமை யுள்ளவனாகவும் மகன் அந்தக்கா லத்தில் தருந்த வயதில்லாதவனாகவும் இருந்தால் அது காலநிர் ணயதோஷத்தை நிவர்த்திசெய்யப் போதுமானதாயிருக்கின்றது. (க௮௫உ வ௫-நம்-அச-க௮௫௩ வ௫-ப-உசக.)

உ௫. பலகெடுக்கள்கண்ட பத்திரத்தில் ஒரு கெடுத்தப்பினாலும் எல்லாத்தொகையுங் கொடுத்துவிடுகிறதென்று கண்டிருந்தாலுங் கூட முதற் கெடுத்தப்பின தேதிமுதல் காலநிபந்தனைக் கணக்குப் பார்க்கக்கூடாது. காலாதிக்கிரமணதோஷத்துக்குட்படாத கெடுக் களின்தொகையைப் பெற்றுக்கொள்ள வாதி பாத்தியஸ்தனாயிருக் கிறான். (க௮௫ச வ௫-நம்-கக-ப-உஉ௫-க௮௫௫ வ௫-நம்-உஎ-ப- க௩௩.)

உசு. பூஸ்திதியைப்பற்றின வியாச்சியத்தில் கஉ வருஷத்துக்குள் ளாக ஸ்வாமிபோகங்கொடுக்கப்பட்டிருக்குமானால் அந்த வியாச்சி யம் காலநிபந்தனை தோஷத்துக்கு உட்படமாட்டாது. (க௮௫ச வ௫-நம்-௩அ-க௮௫௫ வ௫-ப-க௩.)

உஎ. கஉ வருஷத்துக்குள் வாதிக்கு ஸ்வாமிபோகங் கிடைத்ததாய் ருசுவாகாவிட்டால் நிலத்தின்மூல ஆதாரவு வாதியிடத்தில் இருந்தா லுங்கூட அவனுடைய வழக்கைக் காலநிர்ணயச் சனியன் பிடித்துக் கொள்ளும். (க௮௫கூ வ௫-நம்-உகக.)

உ௮. ஒருவனிடத்தில் அடைக்கலமாய் வைக்கப்பட்டிருக்கிற சொத்தை அவன் கொடுக்கமாட்டேனென்று சொல்லுகிற தேதி முதல் காலநிர்ணயம் ஆரம்பிக்கும். (க௮௫அ வ௫-நம்-சஎ.)

உகூ. ஒருவனிடத்தில் நம்பிக்கையாய் வைக்கப்பட்டிருக்கிற சொத்துக்களிற் சிலது தன்னிடத்திற் கொடுக்கப்படவில்லையெ ன்று அவன் ஆக்ஷேபித்தால் அந்த ஆக்ஷேபணையின் தேதிமுதல் காலாவதி ஆரம்பிக்கும். (க௮௫அ வ௫-ப-உகக.)

௩0. குடும்பத்திற் சேர்ந்திராத தாயாதிகள் பாகத்துக்காக வியா ச்சியஞ் செய்கிறபக்ஷத்தில் காலநிர்ணயதோஷம் உண்டு. (க௮௫உ வ௫-நம்-உஎ.)

௯௧. அனுபோக ஒற்றிவிஷயத்தில் ஒற்றித்தொகையைக் கொடுப்பதற்குப் பத்திரத்தில் கெடுக்காணுமல் இருந்தால் அந்தத்தொகையைப்பற்றி ஒற்றிக்காரன் எப்போது வேண்டுமானாலுந் தொடரலாம். அந்த விஷயத்தில் காலநிபந்தனை தோஷங் கிடையாது. (௧௮௪௬௵-நம்-௧௯.)

௯௨. அனுபோக ஒற்றிக்காரன் நிலத்தை விட்டுவிடுவதாகச்சொல்லி ஸ்வான்காரன் அந்த நிலத்தைப் பெற்றுக்கொள்ளவும் பணங்கொடுக்கவும் ஆக்ஷேபித்தால் அதுமுதல் கால நிர்ணயதோஷம் ஆரம்பமாகும். (௧௮௫௫௵-நம்-௧௧.)

௯௩. விபக்த்த தாயாதிகளில் ஒருவன் இறந்துபோய் அவனுடைய பத்தினி ஜீவவதியாயிருந்தால் அவள் இறந்துபோனதுமுதல் வியாச்சியமூலம் ஆரம்பிக்குமேதவிர அவள் புருஷன் இறந்துபோனதுமுதல் ஆரம்பிக்கவில்லே. (௧௮௫௫௵-நம்-௧௯.)

௯௪. ஒற்றிபெற்றவன் ஒற்றியை ஆக்ஷேபித்து நிலத்தை விடமாட்டேனென்று எப்போது சொல்லுகிருனே அதுமுதல் காலாவதியின் தோஷம் உண்டாகும். (௧௮௫௧௵-நம்-௨௨-ப-௧௯௬-௧௮௫௮௵-நம்-௯௮-ப-௧௮௭.)

௯௫. ௧௮0௨௵ ௨-வதுசட்டம் உண்டாகிறதற்குமுன் ௧௨௵ காலம் ஒருவன் அனுபவித்த நிலத்தைப்பற்றி வேறொருவன் வியாச்சியஞ் செய்யக்கூடாது. (௧௮௨௯௵-நம்-௮.)

௯௬. பந்தகம் வைக்கப்பட்ட சொத்தை அநுபவிக்காத பந்தகக்காரன் அவனுக்கு வரவேண்டிய தொகையைப்பற்றிச் சட்டத்திற்குறிக்கப்பட்ட காலத்திற்குள்ளாகவே வியாச்சியஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அவனுடைய வழக்கு காலாதிக்கிரமணதோஷத்தால் பாதிக்கப்படும். (௧௮௫௮௵-நம்-௫௨0.)

௯௭. விவாதநிலத்துக்கு மிராசு பதியும்படி ரிவினியூ அதிகாரிகளிடத்தில் வாதி மனுக்கொடுத்திருந்தால் அதினால் ௧௨௵த்திய தோஷம் நீங்கமாட்டாது. (௧௮௫௧௵-நம்-௫௮.)

௯௮. பிரதிவாதி நிலத்தை அபகரித்துக்கொண்டதாக ரிவினியூ அதிகாரஸ்தர்கள் இடத்தில் வாதியாற் செய்யப்பட்ட பிரியாது கால நிர்ணயதோஷத்தை விலக்கமாட்டாது (௧௮௫௧௵-நம்-௮௪.)

௯௯. தன்னுடைய அவிபக்த தாயாதிகளான பிரதிவாதிகளிடத்தில் இருக்கிற குடும்பச்சொத்தில் பாகங் கிடைக்கவேண்டுமென்று

வாதி வழக்குச்செய்தான். ௨௫ ௵த்துக்குமுன் இறந்துபோனவாதி தகப்பனாவது, வாதியாவது, பிரதிவாதிகளுடைய குடும்பத்தில் ஒரு நாளுஞ் சேர்ந்திராதபடியாலும் வாதி பாகஸ்தன் என்பதைக்காட்டும்படியான யாதொரு செய்கையும் நடவாதபடியாலும் அவனுக்குப் பாகங் கிடைக்கமாட்டாதென்று தீர்ப்பு செய்யப்பட்டது. (௧௮௫௨ ௵-நம்-௨௭.)

௪௦. வாதிக்குத் தகுந்த வயதில்லாதகாலத்தை அவனுக்கு அநுகூலமாகவே கோர்ட்டார் கழித்துவிடவேண்டும். (௪-பு-௧௮௨௩ ௵ ஏப்பிரல்மீ ௨௪உ.)

௪௧. தகுந்த வயதில்லாதவன் தர்மசாஸ்திரப்படி ௧௯-வது வயதுமுதல் தகுந்த பிராயமுள்ளவனாகிறான். தகுந்த வயதுவந்தபிற்பாடு ௧௨ ௵த்துக்கு மேற்பட்டகாலம்வரையில் தகுந்த காரணம் இல்லாமல் அவனுடைய பாத்தியதையைப்பற்றி அவன் வியாச்சியஞ்செய்யத் தப்பிப்போனால் அவனுடைய வியாச்சியம் காலநிர்ணய தோஷத்தை அடையும். (௧௮௨௩ ௵-நம்-௧௦- ௧௮௯௦ ௵-நம்-௪௦௪-௧௮௯௧ ௵-ப-௯௨.)

௪௨. ஒருவன் மோசமாய் வியாச்சியஞ்செய்து பெற்றுக்கொண்ட தீர்ப்பினால் துன்பத்தை அடைந்தவன் அந்தத்தீர்ப்பை ரத்துசெய்ய அதற்கு ௧௨ ௵த்துக்குப்பிற்பாடு வியாச்சியங் கொண்டுவரக் கூடாது. (௧௮௨௩ ௵-நம்-௧௨.)

௪௩. வியாச்சிய மூலம் உண்டானகாலம் நிச்சயமாய்த் தெரியாமல் இருந்ததினாலே சதர்க்கோர்ட்டாரவர்கள் சாராம்சத்தில் பிரவேசித்துத் தீர்ப்புச்செய்தார்கள். (௧௮௨௩ ௵-நம்-௧.)

௪௪. வாதி பிரியாதில் தானும் தன் சகோதரனான பிரதிவாதியும் ௧௮௧௮-ம் ௵த்தில் பாகஞ்செய்துகொண்டதில் விவாதநிலந் தனக்குக் கிடைத்ததாகவும் அதை ௧௮௨௨ ௵த்தில் தான் தன்னுடைய சகோதரனிடத்தில் விட்டு, ௧௮௩௯-ம் ௵வரையில் வருமானம் பெற்றுவந்ததாகவும் அந்த நிலங் கிடைக்கவேண்டியதென்றும் விவாதித்தான். ௪௦ ௵காலம்வரையில் வாதியின் பாத்தியத்தை ஒப்புக்கொள்ளாமல் பிரதிவாதி நிர்விவாதமாய் விவாதநிலத்தை அநுபவித்துவந்ததால் வாதி வழக்குக் காலாதிக்கிரமணதோஷத்துக்கு உட்பட்டதென்று தள்ளுபடி செய்யப்பட்டது. (௧௮௫௦ ௵-நம்-௪௩-௧௮௫௨ ௵-நம்-௨௭.)

௪௫. ௧௮௧௭ ஹூ த்தில் தங்களுடைய முன்னோர்கள் கலெக்டர் இடத்தில் கவுல்வாங்கி அனுபவித்தநிலத்தை ௧௮௩௦ ஹூ த்தில் முதலாவது பிரதிவாதியின் பாட்டன் அபகரித்துக்கொண்டதினால் அந்தநிலங் கிடைக்கவேண்டுமென்று வாதிகள் வியாச்சித்தார்கள். ஷை நிலத்தைப் பிரதிவாதிகள் ௨௫ ஹூகாலமாய் அனுபவிப்பதை வாதிகளே ஒப்புக்கொள்வதால் கலெக்டருடைய கவுல் அவர்களுடைய கையில் இருந்தபோதிலும் அவர்களுடைய வழக்குக் காலநிபந்தனை தோஷத்துக்கு உட்பட்டதென்று தள்ளப்பட்டது. (௧௮௫௯ ஹூ நம்-௨௨௯-௧௮௬௦ ஹூ-ப-௧௧௯.)

௪௬. போக்கிய நிலத்தை மீட்டுக்கொள்வதற்காக ஸ்வான்காரன் எந்தக்காலத்தில் வேண்டுமானாலும் வியாச்சியஞ் செய்யலாம். அவனுடைய வழக்கைக் காலநிபந்தனை வியாதி பிடிக்கமாட்டாது. (௧௮௫௧ ஹூ-நம்-௯௯-௧௮௫௩ ஹூ - நம்-௬௬ - ௧௮௫௪ ஹூ-நம்-௧௪-நம்-௫௨ - ௧௮௫௯ ஹூ-நம்-௧௩௪-௧௪௫ - ௧௮௦ - ௧௮௬௦ ஹூ-ப-௨௩-௨௪-௬௮.)

௪௭. நிலத்தைப் போக்கியம் வைத்தவன் போக்கியத்தொகையைக் கொடுப்பதாகச் சொல்லி அதை வாங்கிக்கொள்ளவும் நிலத்தைவிடவும் போக்கியக்காரன் ஆக்ஷேபித்தால் அதுமுதல் ௧௨ ஹூ த்துக்குள்ளாக நிலத்தைப்பற்றிப் போக்கியம்வைத்தவன் வியாச்சியஞ்செய்யவேண்டும். (௧௮௫௩ ஹூ-நம்-௫௪௦ - ௧௮௫௯ ஹூ-நம்-௧௮௦-௧௮௬௦ ஹூ-நம்-௨௫-ப-௩௯-௬௮.)

௪௮. பிரதிவாதிகள் தங்களுக்குப் பகுதிகொடுத்துக்கொண்டு அனுபவித்துவந்த நிலத்துக்கு அவர்கள் பகுதிகொடுக்கத் தப்பிப் போனதினால் அந்த நிலமும் பகுதிப்பாக்கியும் வாங்கித்தரவேண்டுமென்று வாதிகள் வியாச்சியஞ்செய்தார்கள். ஷை நிலத்தை ௪-வது வாதி தகப்பனிடத்தில் இருந்து தாங்கள் ஒற்றிபெற்றதாகவும் ஒற்றிப்பத்திரத்தின் வாசகப்படி அந்த நிலம் தங்களுக்குச் சித்தித்துப் போய்விட்டதாகவும் பிரதிவாதிகள் வியவகரித்தார்கள். அந்த நிலம் ஆதியில் வாதிகளுக்குச் சொந்தமென்பதைப் பிரதிவாதிகள் ஒப்புக்கொண்டதினாலும் அது அவர்களுக்கு ஒற்றியாய்க்கிடைத்துச் சித்தித்துப்போனதாக அவர்கள் ருசுப்படுத்தத் தப்பிப்போனதினாலும் வாதிகள் வழக்குக் காலநிபந்தனை தோஷத்துக்கு உட்பட்டதல்லவென்று நிர்மாணிக்கப்பட்டது. (௧௮௬௦ ஹூ நம்-௩௫-ப-௧௨௭.)

௪௯. ஒருவனுக்கு ஒருசொத்தின் பாத்தியம் உண்டாகிச் சிலவருஷங்களுக்குப்பிற்பாடு வியாச்சியஞ் செய்தபோதிலும் காலநிபந்தனைச் சட்டத்திற் குறிக்கப்பட்ட கெடுவுக்குள்ளாக அவன் அந்த வியாச்சியத்தைச் செய்தால் அதை ஏற்றுக்கொள்ளத்தடையில்லை. (௧௮௯0௵-நம்-௧௧௫-ப-௧௫௩.)

௫0. ஒருவன் ஒரு நிலத்தைப்பற்றி வியாச்சியஞ்செய்து அந்த வியாச்சியத்தை அவனே தள்ளிக்கொண்டிருந்தால் அது முதற்கொண்டு பிரதிவாதியினுடைய அநுபவம் வாதிக்கு விரோதமான அநுபவமாயிருப்பதால் அந்த வியாச்சியத்தின் தேதிமுதல் ௧௨ வருஷத்துக்குள்ளாக ஷை நிலத்தைப்பற்றி வாதி வேறே வியாச்சியஞ் செய்யவேண்டும். (௧௮௯0௵-நம்-௪-ப-௧௯௬.)

௫௧. வாதியின் பாத்தியத்தை நிராகரித்துப் பிரதிவாதி ஒருசொத்தை அநுபவிக்கத்தொடங்கினால் அதுமுதற்கொண்டு பிரதிவாதியினுடைய அநுபோகம் வாதிக்கு எதிரிடையான அநுபோகமானதால் அதுமுதல் வியாச்சியமூலம் உண்டாகும். (௧௮௫௫௵-நம்-௩௧௯-௧௮௫௯௵-நம்-௨௭.)

௫௨. பிரதிவாதிக்குத் தகுந்தவயதில்லாததினால் அவன் மேலே செய்யப்பட்ட வியாச்சியத்தை நடப்பிக்கக்கூடாதென்று வாதி அபிப்பிராயப்பட்டு அவனுடைய வியாச்சியத்தை தள்ளிக்கொண்டு பிற்பாடு பிரதிவாதிக்குத் தகுந்தவயது வந்தவுடன் வேறே வியாச்சியங் கொண்டுவந்தான். வியாச்சியமூலம் உற்பத்தியாகி ௧௨ வருஷத்துக்குப்பிற்பாடு ஷை ௨-வது வியாச்சியஞ் செய்யப்பட்டபோதிலும் பிரதிவாதிக்குத் தகுந்த பருவம் இல்லாதகாலத்தில் அவன் பேரில் வியாச்சியம் நடத்தக்கூடாதென்று வாதிகொண்ட எண்ணந் தப்பானதென்று அவனுக்குத் தெரியப்படுத்தவேண்டியது கோர்ட்டாருடைய கடமையாயிருக்க, அந்தப்படி தெரியப்படுத்தாமல் அவனுடைய முந்தினவழக்கைத் தள்ளிக்கொள்ளும்படி கோர்ட்டார் உத்தரவுகொடுத்தது கிரமவிரோதமானதால் அவனுடைய ௨-வது வியாச்சியத்தைக் காலநிபந்தனை தோஷஞ் சேரமாட்டாதென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௫௵-நம்-௩௯.)

௫௩. எந்தக்கெடுவில் ஒற்றித்தொகையைக் கொடாவிட்டால் ஒற்றிக்காரனுக்கு நிலஞ் சொந்தமாய் சித்தித்துப்போகிறதென்று ஒற்றிப்பத்திரத்தில் நிபந்தனை கண்டிருக்கிறதோ அந்தக்கெடுத்தப்பி

களஞுத்துக்குப் பின்புகூட ஒற்றிவைத்தவன் நிலத்தை மீட்டுக்கொள்வதற்காக வியாச்சியஞ்செய்யலாம். (கஅருகூஞு-ப-கூரு.)

ருச. ஒற்றித்தொகையை வாதி கெடுவில் கொடுக்கத்தப்பிப்போனல் அவனுக்குப் பிரதிவாதி அதிகமாய்ச் சிலதொகை கொடுத்து நிலத்தைச் சொந்தமாய் அனுபவித்துக்கொள்ளுகிறதென்று பத்திரம் பிறந்திருக்கிற விஷயத்தில் வாதி கெடுவில் தொகைகொடுக்கத் தப்பிப்போய்ப் பிரதிவாதியும் வாதிக்கு மேற்கண்ட கிரயசேஷத்தைக் கொடுக்கத்தப்பிப்போனல் அந்தக்கெடுத்தப்பி-கசுஞுத்துக்குப் பின்புகூட ஷை நிலத்தை மீட்டுக்கொள்ள வாதி வியாச்சியஞ்செய்யலாம். (சஅருகூஞு-நம்-ரு.)

ருரு. ஒரு சொத்தைப்பற்றி, அ-என்பவனுக்கும், இ-என்பவனுக்கும் நடந்த வியாச்சியத்தில் தன்னைப் பிரதிவாதியா சேர்த்துக்கொள்ளும்படி-உ-என்பவன் மனுக்கொடுத்தான். அவன் தனியே வியாச்சியஞ்செய்துகொள்ளும்படி சதர்க்கோர்ட்டாரால் உத்தரவுசெய்யப்பட்டது. அந்த உத்தரவின் தேதிமுதல் வியாச்சியமூலமானதால், உ-என்பவனுடைய வழக்குக் காலநிபந்தனை தோஷத்துக்குட்பட்டதல்லவென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅருஅஞு-நம்-எ.)

ருசு. வருஷாவருஷம் ஒருவனுக்குத் தொகை கொடுக்கப்படுகிற பட்சத்தில் அந்தத்தொகை எப்போது கொடுக்கப்படாமல் நிறுத்தப்படுகிறதோ அதுமுதல் வியாச்சியமூலம் ஆரம்பமாகும். (கஅருஅஞு-நம்-எரு.)

ருஎ. கஉஞு-வரையில் பூஸ்திதியிலிருந்து ஒருவன் யாதொரு பிரயோஜனத்தையும் அடையாமலும் அவனுடைய ஸ்வாதந்திரியத்தை உபயோகப்படுத்தாமலும் இருந்தால் அவனுடைய பாத்தியம் சஉஞுத்திய தோஷரோகத்தையடைந்து பிராணவியோகமாகும். (கஅருஅஞு-நம்-எரு.)

ருஅ. நதியின் பிரவாகத்தினுல் ஜீரணமாய்ப்போன மானிய நிலங்களுக்குப்பதிலாய் ஜமீன்தார் மானியக்காரர்களுக்கு வேறே சில நிலங்கொடுத்துவிட்டு இறந்துபோகிறபட்சத்தில் அந்த ஜமீன்தாருடைய பாத்தியஸ்தன் அவனுக்கு ஜமீன்ஸ்திதி கிடைத்தகாலமுதல் கஉஞுத்துக்குள்ளாக ஷை நிலத்தைப்பற்றி வியாச்சியங்கொண்டுவந்தால்மட்டும்-கஅ0உஞு-உரு-வது சட்டம்-கஉ-வது பிரிவுப்படி அந்தநிலம் அவனுக்குக்கிடைக்கலாம். அந்தக்காலாவதி கடந்தபிற்

பாடு செய்யப்படும் வியாச்சியத்தின்மேல் காலநிர்ணயதோஷம் ஏறி க்கொள்ளும். (௧௮௯௦ ௵-நம்-௪௪௪-௧௮௯௧௵-ப-௫௮.)

௫௯. யாதொரு நிலத்தைப்பற்றி உபயவாதிகளுக்குஞ் சண்டை உண்டாகி அந்தக்கலகத்தை நிவர்த்திசெய்யவேண்டியதற்காக அவ ர்களுடைய பாத்தியம் ஸ்தாபிக்கப்படுகிறவரையில் ஷை நிலத்தைக் கலெக்ட்டர் ஜப்தியில்வைத்திருந்தால் அந்த ஜப்திசெய்யப்பட்ட காலமுதல்-௧௨௵த்துக்குப்பின்பு அவர்களில் ஒருவன் ஷை நிலத் தைப்பற்றி வியாச்சியஞ்செய்தாலுங்கூட அந்த வியாச்சியத்தைக் காலநிர்ணயதோஷப்பிரசக்திசேரமாட்டாது. ஏனென்றால் கலெக்ட் டருடைய ஜப்தியானது பிரதிகூலமான அநுபவம் அல்ல. (௧௮௯௦ ௵-நம்-௧௦-௧௮௯௧௵-ப-௭௫.)

௯௦. இறந்துபோன சீத்தாராமய்யனுக்குப் பிரதிவாதிகள் எழு திக்கொடுத்தபத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று அந்த சீத்தாராமய்யனுடைய தகுந்த வயதில்லாத ஸ்வீகாரபுத்திரனு டைய போஷகனால் வியாச்சியஞ்செய்யப்பட்டது. வாதி வழக்கு காலநிர்ணயதோஷத்துக்கு உட்பட்டதென்று பிரதிவாதிகள் ஆட் சேபித்தார்கள். தன்னுடைய போஷணையில் இருக்கிற பிள்ளையின் ஸ்வீகாரபாத்தியத்தை ஸ்தாபிக்கிறதற்காகத் தான் வேறே சிலவி யாச்சியங்கள் ஆடிக்கொண்டுவந்ததினால் காலஹரணம்நேரிட்டதாக வாதி தர்க்கித்தான். அந்தக்காரணத்தினால் காலநிர்ணயதோஷம் விமோசனம் ஆகமாட்டாதென்று வாதி வழக்கு தள்ளப்பட்டது. (௧௮௯௦௵-நம்-௪௯௯-௧௮௯௦௵-ப-௧௦௯.)

௯௧. வாதிசெய்த வியாச்சியத்தை அவனே தள்ளிக்கொண்டு பிற்பாடு நூதனவியாச்சியம் செய்கிறபட்சத்தில் முந்தின வியாச்சி யங் கோர்ட்டு நடவடிக்கையில் எவ்வளவுகாலம் இருந்ததோ அந் தக்காலத்தையுஞ்சேர்த்து, ௧௨௵ கணக்கிடவேண்டுமேயல்லாமல் அந்தக்காலத்தைக் கழிக்கக்கூடாது. (௧௮௫௮௵ - நம் - ௨௦௧- ௧௮௫௯௵-ப-௪௫-௧௮௯௦ ௵-நம்-௯-ப-௧௧௯.)

| | |
|---|---|
| அநுபவம்-௧௪ ........................ | கிரயம்-௩௫ ........................ |
| இறும்-௨௦ ........................ | ஸ்வீகாரம்-௩௭-௪௧ ............ |
| ஒற்றி-௧௦-௧௨-௧௩ ................ | மிராசுதாரும் புறக்குடியும்-௨௫. |
| கடன்-௧௪ ........................ | விசாரணைக்கர்த்தன்-௧ ......... |

இவைகளைப்பார்க்க.

## கால்நடை.

யாதொரு நிலத்தில் கால்நடைமேய்வதற்கும் அதற்குத் தண்ணீர் கட்டுவதற்கும் ஒருவனுக்கு உண்டாயிருக்கிற பாத்தியத்தை ஸ்தாபித்துக்கொள்ளவேண்டியதற்காக அவன் வியாச்சியஞ்செய்யலாம். (௧௮௬௧ஷு- நம்-௨௧-ப-௧௪௯.)

---

## கிரயம்.

௧. பூஸ்திதி வேறொருவனுக்குக் கிரயமாயிருப்பதைத் தெரிந்து கொண்டே பிற்பாடு அதைக் கிரயத்துக்கு வாங்குகிறவன் முந்தின கிரயக்காரனுக்கு அந்தப் பூஸ்திதியை விட்டுவிடப் பாத்தியப்பட்டிருக்கிறான். (௧௮௫௯ஷு-நம்-௧௦௨-ப-௧௭௭.)

௨. ஒருவனிடத்தில் சரக்குகளைவாங்கி அவைகளைத் திருப்பிக் கொடாமல் அனேகவருஷகாலம் வைத்துக்கொண்டிருக்கிறவன் அந்தச் சரக்குகள் உபயோகமற்றவைகளாயிருந்தாலுங்கூட அவைகளின் கிரயத்தை உத்தரிக்கவேண்டியவனாயிருக்கிறான். (௧௮௫௯ஷு-நம்-௧௦௬-ப-௨௪௫.)

௩. ஒருவனுக்கு நிலத்தைக் கிரயஞ்செய்து கொடுத்தவன் அந்தக்கிரயத்தொகையைக் கெடுவில்கொடுத்து அந்தநிலத்தை மீட்டுக்கொள்ளுகிறதென்று ஒரு உடன்படிக்கை பெற்றுக்கொண்டிருந்து அந்தக்கெடுவில் கிரயக்காரனுக்குத் தொகை கொடுக்கத்தப்பிப்போகிற பக்ஷத்தில் ஷை உடன்படிக்கை ரத்தாய்ப்போய் ஷை கிரயசாசனம் உறுதிப்பட்டுப்போகும். (௧௮௫௯ஷு-நம்-௧௬௨.-நம்-௧௭௨-௧௮௬௦ஷு-ப-௬௬-௯௩.)

௪. ஒருவன் வேறொருவனுக்குக் கடன்கொடுக்கவேண்டியிருந்த போதிலும் அந்தக்கடனுக்குப் பாத்தியமாயிராத சொத்தை அவன் யாருக்காவது கிரயஞ்செய்யலாம். (௧௮௫௫ஷு-நம்-௧௧௬.)

௫. ஆதாரவில்லாமல் நிலத்தை வாய்மொழியாய்க் கிரயஞ்செய்வது செல்லாது. (௧௮௫௬ஷு-நம்-௬௯.)

௬. பூஸ்திதிமுதலானவைகளைக் கிரயஞ்செய்வதாகக் கிரயத்தொகை பற்றிக்கொள்ளாமல் ஒருவன் செய்யும் வாக்குத்தத்தமானது உபயோகமற்றது. நிலத்தை ஒற்றிவாங்கினவனுக்கு அந்த நிலத்தைக் கிரயஞ்செய்துகொடுக்கும்படி ஒருவன் மரணசாஸநத்தின் அடியில் எழுதிவைத்திருந்தாலும் அந்தப்படி செய்யவேண்டியதில்லை. (௧௮௫௩ஷு-நம்-௪௨.)

௭. ஜேஷ்டசகோதரனுடைய அநுமதி இல்லாமல் கநிஷ்ட சகோதரனுற் செய்யப்பட்ட கிரயம் ஜேஷ்ட சகோதரன்மேல் பொறுக்க மாட்டாது. (௧௮௫௯ஹ-நம்-௪௧.)

௮. புத்திரனுடைய சம்மதமில்லாமலும் அவசரம் இல்லாமலும் பூர்வீகஸ்திதியைத் தகப்பன் கிரயஞ்செய்தால் செல்லாது. (௧௮௫௫ ஹு-நம்-௧௨)

௯. தருமானவயது வராதபிள்ளையைப் போஷிக்கிற தாயானவள் முக்கியமான அவசரம் நேரிடும்போது சொத்துக்களைக் கிரயஞ் செய்யலாம். (௧௮௫௮ஹு-நம்-௨௨-ப-௪0௪.)

௧0. தீர்ப்பின் தொகைக்காக ஜப்தியிலிருக்கிற நிலத்தைக் கிரயஞ் செய்தால் செல்லாது. (௧௮௫௯ஹ-நம்-௧௨௮.)

௧௧. கிரயசாஸநஞ் செய்துகொடுத்தவன் கிரயம் பெற்றவனுக்குக் கிரயத்தொகையைத் திருப்பிக்கொடுத்து அதற்காக ஆதரவும் பெற்றுக்கொண்டால் ஷை கிரயம் ரத்தாய்ப்போரும். (௧௮௫௮ஹு-நம்-௧௯௭.)

௧௨. கிரயம் மோசமாய் நடந்ததா அல்லவா என்பது ருசுவைப் பற்றின விஷயமானதால் அந்த விஷயத்தில் சதர்க்கோர்ட்டார் பிரவேசிக்கக்கூடாது. (௧௮௫௯ஹ-நம்-௧௧.)

௧௩. ௯-ம்-பிரதிவாதியிடத்தில் ௧௮௫௨ஹு-ஜூலைமீ தத்தில் தான் கிரயம் வாங்கினநிலம் கிடைக்கவேண்டுமென்று வாதி தொடர்ந்தான். ஷை நிலத்தை ௧௮௪௮ஹு த்தில் ௯-ம் பிரதிவாதி-௮-ம்-பிரதிவாதிக்குக் கிரயஞ்செய்ததாகவும் அதை ௮-ம் பிரதிவாதி ௧௮௫௨ஹு ஆகஸ்டுமீ தத்தில் தனக்குக் கிரயஞ்செய்ததாகவும் ௭-ம் பிரதிவாதி எதிர்கட்சிபேசி அந்தப்பிரகாரம் ருசுப்படுத்தினைத்தான். ௮-ம் பிரதிவாதி வசத்திலிருந்த நிலத்தை ௯-ம் பிரதிவாதியிடத்தில் வாதிகிரயம் வாங்கினது [illegible] லாதென்றும் நிலத்தைக் கிரயம்வாங்குகிறவன் அது இன்னுர்வசத்திலிருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ளாமல் கிரயம்வாங்கினல் அது அவனுடைய ஸ்வயங்கிருத அபராதம் என்றும் அதினுல் உண்டாகத்தக்க நஷ்டத்தை அவன் அநுபவிக்கவேண்டியவனென்றும் வாதிவழக்கு திக்கரிக்கப்பட்டது. (௧௮௫௯ஹ-நம்-௧௭௧-௧௮௯0ஹு-ப-௭௯.)

௧௪. வாதியின் பணத்தைக்கொண்டு முதற் பிரதிவாதியின் பெயரால் கிரயம்வாங்கப்பட்ட நிலங் கிடைக்கவேண்டுமென்று வாதி

தொடர்ந்தான். ஷை நிலத்தின் கிரயசாஸநம் முதலானவைகள் முதற் பிரதிவாதியின் பெயராற்பிறந்து அந்தச்சாஸநங்களும் நிலமும் அநேகவருஷகாலம் அவன்வசத்தில் இருப்பதால் வாதிவழக்கு செல்லாதென்றும் எவன்பெயராற் சாஸநம் பிறந்திருக்கிறதோ அவன் கிரயம் வாங்கினவனல்லவென்றும் வேறொருவன் கிரயக்காரனென்றுஞ்சொல்வதைப்பற்றி தர்மசாஸ்திரப்படி வாசா சாட்சியத்தை அங்கீகரிக்கக்கூடாதென்றும் நிரூபிக்கப்பட்டது. (௧௮௫௬ வரு-நம்-௧௨௨-௧௮௫௮ வரு-நம்-௨௯-௧௮௫௯ வரு-நம்-௨௩0-௧௮௬0 வரு-ப-௯௮.)

௧௫. தனக்குச் சொந்தமான நிலத்தை முதலில் வாதிக்குங் கிரயஞ்செய்த முதற்பிரதிவாதி பிற்பாடு ௨-ம் பிரதிவாதிக்குக் கிரயஞ்செய்து நிலத்தையும் அவன்வசத்தில் விட்டுவிட்டான். வாதிக்கு முன் சாஸநமாயிருப்பதை அறியாமலே ௨-ம் பிரதிவாதி ஷை நிலத்தைக் கிரயம்வாங்கி ஸ்வாதீநப்படுத்திக்கொண்டபோதிலும் முந்தின சாஸநக்காரனான வாதியின் பாத்தியமே சிரேஷ்டமானதென்று அவன்பக்ஷந் தீர்ப்புசெய்யப்பட்டது. (௧௮௬0 வரு-நம்-௩௩-ப-௨௭௭.)

௧௬. சாஸநங்கள் வாதியின்பெயராற் பிறந்திருந்தபோதிலும் அந்தச் சாஸநங்களும் நிலமும் ௧0-வருஷகாலம் பிரதிவாதிகள் வசத்தில் இருந்ததினால் அந்தநிலம் பிரதிவாதிகளுக்குச் சொந்தமானதென்றும் விருதா காரணார்த்தமாக ஷை சாஸநங்கள் வாதியின் பெயரால் எழுதப்பட்டிருப்பதாகவும் நிர்மாணிக்கப்பட்டது. (௧௮௫௮ வரு-நம்-௨௮-ப-௧௭௩.)

௧௭. தகப்பன் கிரயசாஸநம் எழுதிக்கொடுக்கும்போது மகன் கூட இருந்து ஆக்ஷேபிக்காமல் இருந்ததினால் அந்தக்கிரயம் மகனுடைய சம்மதத்தின்மேல் நடந்ததென்று நிச்சயிக்கப்பட்டது. (௧௮௪௮ வரு-நம்-௧௪-௧௮௪௯ வரு-நம்-௨0.)

௧௮. அவிபக்த சகோதரர்களில் ஒருவனும் அவனுடைய தகப்பனும் தகுந்தவயதில்லாத மற்றச் சகோதரர்களுடைய சம்மதி இல்லாமல் எழுதிக்கொடுத்த கிரய சாஸநமானது குடும்ப நிர்ப்பந்தத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு பிறந்திருந்தால் மாத்திரம் அதற்கு மற்றச்சகோதரர்களும் பாத்தியப்படவேண்டும். அப்படி இல்லாதவரையில் அதை எழுதிக்கொடுத்தவர்களுடைய பாகஸ்திதி சம்

பந்தப்பட்டவனாயில் மாத்திரம் அந்தச்சாஸநம் செல்லும். (௧அ௫௯ ஞூ-நம்-௯௯.)

௧௯. பிரதிவாதி எழுதிக்கொடுத்த கிரயசாஸநப்படி நிலங் கிடைக்கவேண்டுமென்று வாதியநல் வழக்கிடப்பட்டது. அசல்க்கோர்ட்டார் வாதிபக்ஷந் தீர்ப்புச்செய்தார்கள். ஷெ நிலத்தைப்பற்றி வேறொரு வியாச்சியத்தில் விவாதம் நடந்துகொண்டிருக்கும்போது அதைப் பிரதிவாதி கிரயஞ்செய்தது செல்லாதென்று வாதிக்கு விரோதமாய் அப்பீல்க்கோர்ட்டார் தீர்மானஞ்செய்தார்கள். எந்த நம்பரில் ஷெ நிலத்தைப்பற்றி முன்பாக வியாச்சியம்நடந்ததோ அந்த நம்பரில் தாக்கலான ராஜீநாமாவில் பிரதிவாதி ஷெ நிலத்துக்குப் பாத்தியஸ்தனென்று ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் அவன் இப்போது பிரஸ்தாபத்தில் இருக்கிற நம்பரின் வாதிக்குச்செய்துகொடுத்த கிரயசாஸநம் ஷெ வியாச்சியகாலத்திற் பிறந்திருந்தாலுங்கூட அது செலாவணி உள்ளதென்று சதர்க்கோர்ட்டாரவர்கள் தீர்மானித்தார்கள். (௧அ௫௯ ஞூ-நம்-௫.)

௨௦. நிலத்தைப்பற்றி அ-என்பவன் க என்பவனுக்கு எழுதிக்கொடுத்த கிரயசாஸநம் அ-என்பவன்கையில் இருப்பதைக்கொண்டு மாத்திரம் அந்தநிலம் மறுபடியும் அ-என்பவனுக்குக் கிரயமானதாக நிச்சயிக்கக்கூடாது. அ-என்பவன் மறுபடியும் கிரயம் வாங்கியிருந்தால் அவன் க-என்பவனிடத்தில் வேறொருசாஸநம் பெற்றுக்கொண்டிருக்கவேண்டும். (௧அ௫௬ ஞூ-ப-௭௧.)

௨௧. இவ்வளவு பங்குநிலம் கிரயமானதாகமட்டும் ஸ்தூலமாய் சாஸநத்தில் எழுதுவது தேசவழக்கமாகவும் விவாதப்படுகிற தோப்பு அந்தக் கிரயத்திற் சேர்ந்ததா அல்லவா என்பது சாஸநத்தினால் அறியக்கூடாமலும் இருக்கும்போது அந்தச்சாஸநத்தை வாதி தாக்கல்செய்யத்தப்பிப்போனாலுங்கூட அவன்பக்ஷந் கோர்ட்டார் தீர்ப்புச்செய்ய விக்கினம் இல்லை. (௧அ௬௦ ஞூ-நம்-௫௧-ப-௫அ.)

௨௨. கிரமமாய்ப்பிறந்த கிரயசாஸநத்தை ஷீநக்கிரயம் என்கிற ஆதாரத்தினால் ரத்துச்செய்யக்கூடாது. (௧அ௫௪ ஞூ-நம்-௪௪-௧அ௫௭ ஞூ-நம்-௬௯.)

௨௩. வாதிக்குப் பிரதிவாதி ௫-கெடுவில் பணங்கொடுக்கிறதென்றும் எந்தக்கெடுவாவது தப்பினால் விவாதநிலம் வாதிக்குச் சொந்தமாய் சித்தித்துப்போகிறதென்றும் நிபந்தனை கண்டிருக்கிற ஒரு

கிரயசாஸநப்படி நிலங்கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ் செய்தான். வாதிக்கு நிலஞ் சித்தித்துப்போகிறவிஷயத்தில் அவன் பிரதிவாதியிடத்தில் பெற்றுக்கொண்ட முந்தின கெடுக்களின் தொகையை அவன் மறுபடியும் பிரதிவாதிக்குக் கொடுக்கும்படியான நிபந்தனை காணுமல் வழக்கவிரோதமாகவும் அநியாயமாகவும் பிரதிவாதிக்குப் பிரத்தியக்ஷ பிரதிகூலமாகவும் பிறந்திருக்கிற ஷை சாஸநத்தை உறுதிப்படுத்துவது தர்மம் அல்லவென்று சதர்க்கோர்ட்டார் தீர்மானித்தார்கள். (௧௮௫௫ ஹு-நம்-௨௨.)

௨௪. முதற்பிரதிவாதி எழுதிக்கொடுத்த சாஸநப்படி நிலங்கிடைக்கவேண்டியதற்காக வாதி வழக்குச்செய்தான். அந்தச்சாஸநத்தின் உண்மையை முதற்பிரதிவாதி ஒப்புக்கொண்டு, ௨-ம் பிரதிவாதிக்குத்தகுந்தவயது இல்லாதகாலத்திற் பிறந்த ஷை சாஸநஞ் செல்லாதென்று தர்க்கித்தான். முதற்பிரதிவாதி செய்துகொடுத்த கிரயசாஸநத்தைப்பற்றி இதராள் ஆட்சேபிக்கலாமே அல்லாமல் அவனுடைய செய்கையைப்பற்றி அவனே தோஷஞ்சொல்வது தகுதி அல்லவென்று விதிக்கப்பட்டது. (௧௮௫௫ ஹு-நம்-௮௯.)

௨௫. ஒரு நிலத்தைப்பற்றியே, அ-என்பவன் முந்தினசாஸநமும், இ-என்பவன் பிந்தினசாஸநமும் பெற்றுக்கொண்டார்கள். அ-என்பவனுடைய சாஸநம் ரெஜிஸ்டர்செய்யப்படாமலும், இ-என்பவனுடையசாஸநம் ரெஜிஸ்டர்செய்யப்பட்டதாகவும் இருந்தது. இ-என்பவனுடைய சாஸநம் ரெஜிஸ்டர் செய்யப்பட்டதாயிருந்தாலும், அ-என்பவனுக்கு முன்சாஸநமாயிருப்பதை அறிந்துகொண்டே, இ-என்பவன் மோசமாய்ப் பின்சாஸநம்பெற்றிருப்பதால் அது செல்லாதென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௯ ஹு-நம்-௭௯-ப-௧௪௫.)

௨௬. முதற்பிரதிவாதி தனக்கு விக்கிரயஞ்செய்த நிலங்கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சித்தான். முதற்பிரதிவாதியிடத்தில் வாதியின் சாசஸநத்துக்கு முந்தித்தான் சாஸநம் பெற்றுக்கொண்டதாகவும் சந்ததியில்லாத விதவையான முதற்பிரதிவாதிக்குத்தானும், ௩-௪-பிரதிவாதிகளும் பாத்தியஸ்தர்களானதால் தங்கள் அநுமதியின்றி வாதிக்கு முதற்பிரதிவாதிசெய்த கிரயஞ் செல்லாதென்றும் ௨-ம் பிரதிவாதி எதிர்கட்சிசொன்னான். முதற் பிரதிவாதியிடத்தில்தான் கிரயம்வாங்கினதாய்ச் சொல்லுகிற ௨-ம் பிரதிவாதி அந்த முதற்பிரதிவாதியின் பாத்தியத்தை ஆட்சேபிக்கக்கூடாதென்றும் முதற்பிரதிவாதியின் அகத்தியமான செலவுக்காக ௩-௪-பிரதிவாதி

களுடைய சம்மதியின்மேல் அவள் விவாதநிலத்தை வாதிக்குக் கிர யஞ்செய்தது செல்லுமென்றும், உ-ம் பிரதிவாதி அவனுடைய சகோதரர்களான, ௩-௪-பிரதிவாதிகளை துவேஷித்துக்கொண்டிருப் பதால் ஷை கிரயத்துக்கு, உ-ம் பிரதிவாதியின் அநுமதி அநாவசிய கமென்றும் வாதி வழக்கு ஸ்தாபிக்கப்பட்டது. (கஅ௫கூ ஹ்ப-நம்-உகO-கஅகூக ஹ்ப-ப-கஎ.)

உஎ. உ-ம் பிரதிவாதியின் நிலத்தை அவன் முதற்பிரதிவாதிக்கு விக்கிரயஞ்செய்து அவனிடத்தில் கெடு உடன்படிக்கை பெற்றுக் கொண்டான். அந்தக்கெடுவில் சாஸநத்தொகையை உ-ம் பிரதிவாதி யிடத்தில் முதற்பிரதிவாதி பெற்றுக்கொள்ள நிராகரித்தபடியால் வாதிகளுக்கு உ-ம் பிரதிவாதி ஷை நிலத்தை உடன்படிக்கைமூல மாய்க்கொடுத்துவிட்டான். அந்த உடன்படிக்கையின் ஆதாரத்தின் மேல் ஷை நிலத்தைப்பற்றி வாதிகள் வியாச்சியஞ்செய்தார்கள். ஷை சாஸநத்தொகையை வாதிகளிடத்தில் முதற்பிரதிவாதி வாங்கிக்கொ ண்டு நிலத்தை வாதிகள்வசத்தில் விட்டுவிடும்படி தீர்மானிக்கப்பட் டது. (கஅகூO ஹ்ப-நம்-கூக-கஅகூக ஹ்ப-ப-உகூ.)

உஅ. சாஸநத்தொகையை ஸ்வான்காரன் கெடுவில்கொடுத்தால் வாங்கிக்கொண்டு நிலத்தை விட்டுவிடுகிறதென்கிற சங்கேதத்தின் மேல் அந்த நிலத்தைக்கிரயம்வாங்கி அநுபவிக்கிறவன் ஷை கெடு கிரமிக்கிறதற்குமுன் அந்த நிலத்தை வேறே யாருக்காவது கிரயஞ் செய்தால் செல்லாது. (கஅகூO ஹ்ப-நம்-௬கூ-கஅகூக ஹ்ப-ப-சஎ.)

உகூ. வாதிக்குப் பிரதிவாதி ஒருமனையைக் கிரயஞ்செய்து அதை வாதி வசப்படுத்தத்தப்பிப்போனால் அந்த மனையைப்பற்றி வாதி வியாச்சியஞ்செய்யவேண்டுமே அல்லாமல் கிரயத்தொகையைப் பற்றித் தொடரக்கூடாது. ஆனால் கிரயத்தொகையைக்கொடுப்ப தாகப் பிரதிவாதி உடன்படிக்கை செய்திருந்தால் அந்தத்தொகை யைப்பற்றியும் வாதி வியாச்சிக்கலாம். அந்த உடன்படிக்கையை வாதி நிரூபிக்கத்தப்பிப்போனால் அவனுடைய வழக்கைத் தள்ளு படிசெய்யவேண்டுமேதவிர ஷை மனையை வாதி ஸ்வாதீனப்படுத்திக் கொண்டதாகப் பிரதிவாதிசொன்ன கட்சி அமீனாவின் ரிப்போர்ட் டினால் பலஹீநமாய்ப்போய்விட்டதென்கிற காரணத்தினால் வாதி பட்சந் தீர்ப்புசெய்யக்கூடாது. (கஅகூO ஹ்ப-நம்-கூ௫ச-கஅகூக ஹ்ப-ப-௬௫.)

௯o. கிரயசாஸநம் ஒருபக்கத்தில் கொஞ்சம்பிந்நஞ்செய்யப்பட்டு அதை எழுதிக்கொடுத்தவன் வசத்தில் அதுவும் அதிற்கண்ட நிலமும் இருக்குமாகுல் அவன் கிரயசாஸநத்தொகையைக் கிரயக்காரனுக்குக்கொடுத்து நிலத்தை மீட்டுக்கொண்டதாக ஊகிக்கப்படவேண்டும். (க அ௲o ௵-நம்-௫ அ௯-க அ௲க ௵-ப-கூக.)

௯க. சாஸநம் எழுதிக்கொடுத்தவன் அதின் உண்மையை ஒப்புக்கொண்டால் அது பிறந்தகாலத்தில் அவன் கிரயத்தொகையைப் பெற்றுக்கொள்ளாமல் இருந்தாலுங்கூட அந்தச்சாஸநத்துக்கு ஊாமி உண்டாகமாட்டாது. ஷை சாஸநஞ்செய்துகொடுத்தவன் கிரயத்தொகையைப்பற்றிமட்டும் வியாச்சியஞ்செய்யலாமேதவிர சாஸநத்துக்குப் பங்கஞ்சொல்லக்கூடாது. (க அ௲o ௵-நம்-௱௫o-க அ௲க ௵ ப-க௯அ.)

௯உ. கிரயசாஸநத்தைப் பெற்றுக்கொண்டவன் கையில் உடனே அதுகொடுபடாமல் கிரயம் அபூரணமாய்ப்போய்விட்டதால் சாஸநத்தொகையை அவன் வட்டியுடன் பெற்றுக்கொள்ளும்படி தீர்மானிக்கப்பட்டது. (க அ௫௫ ௵-நம்-௫க.)

௯௯. அ-என்பவனுடைய நிலத்தை, இ-என்பவன் கிரயம்வாங்கினபோது அந்த நிலத்தை அ-என்பவனுக்கே ஒற்றிவைப்பதாக, இ-என்பவன் பிரதிக்கினைசெய்தான். அதிலும் ஷை நிலத்தை, இ-என்பவன் கிரயம்வாங்கி மூலாதாரங்களையும் பெற்றுக்கொண்டதினுலும் ஷை பிரதிக்கினைப்பிரகாரம் யாதொருசெய்கையும் நடவாதபடியாலும் ஷை நிலத்தின்மேல், அ-என்பவனுக்குப் பாத்தியம் இல்லையென்றும் அதை, இ-என்பவன் வேறே யாருக்காவது விக்கிரயஞ்செய்யலாமென்றும் நிர்த்தாரணஞ்செய்யப்பட்டது. (க அ௫அ ௵-நம்-௲எ-ப-கஉ௯.)

௯௪. ஒரு நிலத்தை ஆதியில் போக்கியம் வாங்கினவன் மூலாதாரவு ரஹிதனுயும் அதைப் பிற்பாடு கிரயம்வாங்கினவன் மூலாதாரவு சஹிதனுகவும் இருந்தால் அந்தக் கிரயகாலத்தில் ஷை நிலம் போக்கியக்காரன் ஸ்வாதீனத்தில் இருந்தாலுங்கூடப் பிந்தின கிரயமேஸ்தாபிக்கப்படும். (க அ௫அ-ம் ௵-நம்.௲க.)

௯௫. ஒரு பாத்தியத்தைக் கிரயம்வாங்கினவன் அதைப்பற்றி உடனே தொடராமல் காலாதிக்கிரமணதோஷம் உண்டாகும்படி சும்மா இருந்துவிடுவானுகுல் அவன் அந்தப்பாத்தியத்தைக் கிரயஞ்

செய்தவனைக்கூடப் பிற்பாடு தொடரக்கூடாது. (௧௮௫௫ ௵-நம்-௧௨௬.)

௩௬. சாஸநம் ஒருவன்பெயரால் பிறந்திருக்கும்போது வேறொருவன் தானுங்கூடச்சேர்ந்து கிரயம்வாங்கினதாக நிர்விகிதமாய்க் கட்சிபேசினால் அதை ஒப்புக்கொள்ளக்கூடாது. (௧௮௫௮ ௵-நம்-௫௮-ப-௧௪௫.)

௩௭. குடும்பஸ்திதியைக் காரணவன் பிரசித்தமாய் விக்கிரயஞ்செய்து அதைப்பற்றி அநந்தரவர்கள் ஆட்சேபிக்காமல் சில௵ வரையில் மௌநமாயிருந்துவிட்டால் அந்த விக்கிரயத்துக்கு அவர்களும் பாத்தியப்படவேண்டும். (௧௮௫௯ ௵-நம்-௨௮-ப-௧௧௯.)

௩௮. கிரயசாஸநப்படி நிலங்கிடைக்கவேண்டுமென்று வாதி செய்த வியாச்சியத்தில் அக்கிரய சாஸநம் அபத்தமென்று ஸ்தாபிக்கப்பட்டபடியால் ஷை நிலத்தின்பேரில் வாதி பெற்றுக்கொண்ட யதார்த்தமான பந்தகப் பத்திரத்தின்தொகையைப்பற்றி அவன் வேறே வியாச்சியஞ்செய்யலாமென்று அநுமதி கொடுக்கப்பட்டது. (௧௮௫௫ ௵-நம்-௨௪-ப-௧௧௧.)

௩௯. கன்னடதேசத்தில் ஸர்க்கார் நிலங்களைச் சாகுபடி செய்கிறவர்கள் அந்தப்பாத்தியத்தை வேறே யாருக்காவது விக்கிரயாதிகள் செய்யலாம். அதினால் ஸர்க்காருடைய பாத்தியத்துக்கு வியாகாதம் இல்லை. (௧௮௪௭ ௵-நம்-௧௨.)

௪௦. ஒரே நிலத்தை இருவர் கிரயம்வாங்கியிருக்கிற பட்சத்தில் முந்தின கிரயக்காரனுடைய பாத்தியத்தைக் கோர்ட்டார் ஸ்தாபிக்க வேண்டுமே அல்லாமல் ஷை கிரயத்துக்கு முன்னதாய் நடந்த ஒற்றி விஷயங்களைக்கலந்து யோசித்து அதற்குத்தக்கபடி தீர்மானஞ்செய்யக்கூடாது. (௧௮௫௯ ௵-நம்-௯௦-ப-௧௫௮.)

௪௧. ஒரேஸ்திதியை இருவர் கிரயம்வாங்கியிருக்கிறபட்சத்தில் முந்தின சாஸநக்காரனுடைய பாத்தியத்தைமட்டும் ஸ்தாபித்துத் தீர்ப்புச் செய்யவேண்டுமேயல்லாமல் பிந்தின சாஸநத்தைப்பற்றி அந்தத்தீர்ப்பில் கோர்ட்டார் யாதொரு அபிப்பிராயமுஞ்சொல்லக்கூடாது. பிந்தின சாஸநக்காரன் சாஸநத்தொகையைப்பற்றி வேறே வியாச்சியஞ்செய்யலாம். (௧௮௯௦ ௵-நம்-௯௯௩-௧௮௯௧ ௵-ப-௧௪௩.)

௪௨. அ-என்பவனுடைய நிலத்தை, க-என்பவன் கிரயம்வாங்கும்போது, அ-என்பவன் கெடுவில் கிரயத்தொகையைக்கொடுத்து

நிலத்தை மீட்டுக்கொள்ளுகிறதென்று அவர்களுக்குள் அந்தரங்க ஏற்பாடு நடந்து பிற்பாடு அந்த ஏற்பாட்டை அறியாமல், ௧-என்பவனிடத்தில், ௪-என்பவன் ஷை நிலத்தைக் கிரயம்வாங்கினால் அந்தக்கிரயம் ஸ்திரமேதவிர அதை தோஷாநுபந்தலேசமும் சேராது. (௧௮௫௬ஸ்ரீ-நம்-௧௫௧.)

௪௩. கிரயஞ்செய்துகொடுத்தவன் கிரயம் பெற்றுக்கொண்டவனிடத்தில் கிரயத்தொகையை ரொக்கமாய்ப்பற்றிக்கொண்டதாக சாஸநத்தில் எழுதப்பட்டிருந்தால் கிரயத்தொகை செல்லானதற்கு அந்தச்சாஸநமே பூர்ணசாட்சியம். அதற்கு விரோதமாய்க் கிரயத்தொகையைப் பெற்றுக்கொள்ளவில்லையென்று கிரயஞ்செய்துகொடுத்தவன் சொல்லுங்கட்சி அநுபயோகம். அதைப்பற்றி வாசாசாட்சியத்தை அங்கீகரிக்கக்கூடாது. (௧௮௬0ஸ்ரீ-நம்-௨௨௩-௨௫௩-௧௮௬௧ஸ்ரீ ப-௧௪-௪௨.)



இவைகளைப்பார்க்க.

---

## கிராம உத்தியோகங்கள்.

௧. கிராமக்கணக்கன் அவனுடைய வேலைக்காரன்மேல் கோர்ட்டுகளில் வியாச்சியஞ்செய்யலாம். (௪-பு-௧௮௪௯ஸ்ரீ-ஜனுவரிமீ ௬௨.)

௨. சாசுவதத்தீர்வை ஏற்பட்ட கிராமத்தின் கணக்கனைக் கோர்ட்டாருடைய தீர்ப்பின்மேல்மட்டும் தள்ளலாமே அல்லாமல் வேறே விதமாய்த் தள்ளக்கூடாது. (௪-பு-௧௮௩0ஸ்ரீ-செப்டம்பர்மீ ௨௨)

௩. ௧௮௩௧ஸ்ரீ-௬-வது சட்டம் ௨-வது பிரிவுப்படி பிதுரார்ஜிதமான கிராம உத்தியோகங்களின் வருமானங்கள் கோர்ட்டுக்கட்டளைக்கு உட்பட்டவையல்ல. (௪-பு-௧௮௫௧ஸ்ரீ-ஆகஸ்டுமீ ௩0௨)

ச. ஷை சட்டம் ச-வது பிரிவுப்படி தர்மசாஸ்திர விதிகளுக்கு விரோதமாகவும் ரிவினியூ போர்டாருடைய உத்தரவில்லாமலும் பிதுரார்ஜிதமான கிராம உத்தியோகங்களைப் பராதீனஞ்செய்தால் செல்லாது. (ஷை.)

ரு. கிராமக்கணக்கனுடைய வருமானம் அவனுடைய உத்தியோகத்துக்குச் சம்பந்தப்பட்டதானதால் அந்த வருமானங் குடும்பச் சொத்தைப்போலே பாகத்துக்கு யோக்கியமானதல்ல. (ஷை.)

சு. தீர்வை யேற்பட்ட தாலூகாவில் கிராமக்கணக்கன் கொடுக்க வேண்டிய தீர்ப்பின் தொகைக்காக அவனுடைய உத்தியோகத்தை ஏலம்போடக்கூடாது. அந்த உத்தியோகத்தை வேறேவிதமாய் விக்கிரயஞ்செய்யவுங்கூடாது. அந்த உத்தியோகம் கிடைக்கவேண்டியதைப்பற்றி வியாச்சியம் செய்யவுங்கூடாது. (ஷை.)

எ. சாசுவதத்தீர்வை ஏற்பட்ட தாலூகாவில் கிராமக்கணக்கன் இறந்துபோனால் அவனுடைய பாத்தியஸ்தர்களில் ஒருவனை அந்த உத்தியோகத்தில் நியமிக்கவேண்டும். அந்தப்பாத்தியஸ்தன்மேல் பிரியாதுகள் வந்திருக்கிற நிமித்தியத்தினால் ஷை உத்தியோகத்தை அநேகவருஷகாலம் கலெக்டர் காலியாய்வைத்திருக்கக்கூடாது. சாசுவதத்தீர்வை ஏற்பட்ட தாலூகாவின் கிராமக்கணக்கர்களை நியமிக்க அதிகாரமுள்ள கலெக்டர் அந்தப்படி நியமகஞ்செய்யாவிட்டால் ஷை உத்தியோகங் கிடைக்கவேண்டியதைப்பற்றித் தகுந்தபாத்தியஸ்தன் கலெக்டர்மேலே கோர்ட்டில் வியாச்சியஞ்செய்யலாம். (அசுo ஷு-நம்-உ௨-ப-கஉஉ.)

அ. நியமகத்தினாலாவது அல்லது பிதுரார்ஜித பாத்தியத்தினாலாவது கணக்குவேலை பார்க்கிறவன் அந்த உத்தியோகத்தை வேறொருவனுக்குக் கொடுக்கக்கூடாது. (கஅகசு ஷு-நம்-க.)

கூ. கஅOஉ ஷு-உ௯-வது சட்டம் எ-வது பிரிவுப்படி நிரியாண தசையை அடைந்த கணக்கனுடைய பௌத்திரன் தகுந்தவயதுள்ளவனாயிருந்தால் ஸ்வயமாகவும் தகுந்தவயதில்லாமலிருந்தால் குமாஸ்தாமூலமாகவும் அந்த உத்தியோகத்தை ஒப்புக்கொண்டு நடப்பிக்கப்பாத்தியஸ்தனாயிருக்கிறான். (ஷை.)

கo. கணக்கனுடைய உத்தியோகவருமானங்கள் பாகத்துக்கு அநர்ஹமானபடியால் அந்த வேலைபார்க்கிறவனைத்தவிர வேறே யா

தொருவனுக்கும் அந்த வருமானங்கள் கிடைக்கத்தகுந்தவைகள் அல்ல. (க௮௪௪ஹு-நம்-௮௫.)

கக. பாத்தியஸ்தன் தகுந்தவனாயிருந்தால்மட்டும் கர்ன்னம் உத்தியோகம் அவனுக்குக்கிடைக்கும். அவனுக்குத் தகுந்தவயதில்லாவிட்டால் ஜமீன்தார் தனக்கு இஷ்டமானவர்களை நியமித்துக்கொள்ளலாம். இறந்துபோன கணக்கனுடையபாத்தியஸ்தன் ஸ்வயமே வேலைபார்க்க அசமர்த்தனாயிருந்தால் குமாஸ்தாமூலமாக அவன் ஷை வேலையை நடப்பிக்கும்படி, க௮0௨ஹு-௨௬-வது சட்டம் இடங்கொடுக்கவில்லை. (க௮௫௨ஹு-நம்-௪௫.)

க௨. க௮0௨ஹு ௨௬-வது சட்டம் ௫-வது பிரிவுப்படி கணக்கர்களைத் தள்ளவேண்டியதற்காகத் தாலூகா முன்சீபுக்கோர்ட்டுகளிலும் வியாச்சியஞ்செய்யலாம். (க௮௫௪ஹு-நம் ௬௨.)

க௩. யாதொருவன் கணக்குவேலைகருத் தகுந்தவன் அல்லவென்று ஜமீன்தாருடைய சொந்த அபிப்பிராயத்தின்மேல் தள்ளக்கூடாது. (க௮௫௮ஹு-நம்-கஎக-க௮௫௬ஹு-ப-௩எ.)

கிராமக்காவற்காரன் க.

இதைப்பார்க்க.

---

## கிராமக்காவற்காரன்.

க. திருட்டுப்போன சொத்துக்குக் காவற்காரர்களைப் பாத்தியப்படுத்தக்கூடாதென்று க௮கசுஹு-கக-வது சட்டம் க௫-வது பிரிவிற் சொல்லப்பட்டிருந்தாலும் திருட்டுப்போன சொத்துக்கு உத்தரவாதஞ் செய்வதாகக் காவற்காரர்கள் உடன்படிக்கை செய்திருந்தால் அந்த ஆதாரத்தின்மேல் அவர்களை ஷை சொத்தின் கிரயத்துக்காகத் தொடரலாம். (க௮௫எஹு-நம்-௩௫-ப-௬௪.)

---

## கிராமப்பிரதட்சணம்.

க. தாங்கள் கிராமப்பிரதட்சணம் வரும்போது பிரதிவாதிகள் மறியல்செய்ததினால் தங்களுக்கு நேரிட்ட நஷ்டங் கிடைக்கவேண்டுமென்று வாதிகள் வழக்குச்செய்தார்கள். உபயவாதிகளும் இன்னின்ன இடங்களுக்குள்ளாகக் கிராமப்பிரதட்சணம் வரவேண்டியதென்று மேஜஸ்திரேட்டார் எல்லை நிஷ்கரிஷைசெய்து, அதற்கு

உபயவாதிகளுஞ் சம்மதித்து அந்தப்படி கசஞு காலம் நடந்துவந்த பிற்பாடு அவர்களில் ஒரு கட்சியைச்சேர்ந்தவர்களுக்கு மேஜஸ்திரேட்டாரால் குறிக்கப்பட்ட எல்லைக்குள், மற்றொரு கட்சிக்காரர்கள் கிராமப்பிரதட்சணம் வரவேண்டுமென்று வியாச்சியஞ்செய்வது செல்லாதென்று வாதி வழக்குத் தள்ளப்பட்டது. (கஅருகூஞு-நம்-கருஅ-கஅசூOஞு-ப-உஅ.)

உ. வாதிகள் ஸ்வாமியை எடுத்துக்கொண்டு பட்டணப் பிரதட்சணம் வரும்போது பிரதிவாதிகள் பலவந்தமாய்ப் பிரவேசித்து சொத்து நஷ்டஞ்செய்தபடியால் அந்த நஷ்டத்தைப்பற்றி வாதிகள் வழக்குத்தொடர்ந்தார்கள். வாதிகள் பட்டணப்பிரதக்ஷணம் வருகிற விஷயத்தில் பிரதிவாதிகளுக்கு ஆக்ஷேபம் இருந்தால் அவர்கள் மேஜஸ்திரேட்டில் தெரியப்படுத்திக்கொள்ளவேண்டியது கிரமமாயிருக்க, அவர்கள் ஸ்வயமே பிரவேசித்து பலாத்காரஞ்செய்த துராகிருதத்துக்காக வாதிகளுக்கு நஷ்டங்கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (கஅசூOஞு-நம்-கூஉ-ப-உOஅ.)

ந. ஸ்வாமி வீதி வலம்வரும்போது வாதியினுடைய வீட்டில் தங்கி அவனுடைய காணிக்கைகளை ஏற்றுக்கொள்ளவில்லை என்கிற ஆதாரத்தின்மேல் வாதிசெய்த வியாச்சியஞ் செல்லாதென்றும் வாதியின் அபேட்சையை அவன் கோவிலாருக்குத் தெரியப்படுத்தி அவர்களுடைய அநுமதியைப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (கஅசகூஞு-நம்-ருச-கஅருகஞு-ப-எஎ.)

ச. கொடிகள் மேளவாத்தியமுதலான ஆடம்பரங்களுடன் பல்லக்கின்மேல் ஊர்வலம் வரும்படியான பாத்தியம் ஒவ்வொருவனுக்கும் உண்டாயிருப்பதால் அதைப்பற்றி யாதொருவன் ஆட்சேபிக்கக்கூடாது. (கஅருஎஞு-நம்-கசக-ப-உககூ.)

ரு. அந்தப் பாத்தியத்தைப்பற்றி வியாச்சியமும் அங்கீகரிக்கலாம். (கஅருஅஞு-நம்-கநகூ-கஅருகூஞு-ப-சஅ.)

மாஜஸ்திரேட்டு-க................ | மானநஷ்டம்-சு..................

இவைகளைப்பார்க்க.

---

## கிராம முன்சீபு.

க. கிராம முன்சீபுகளும், கிராமப்பஞ்சாயத்தாரும், தாலூகா பஞ்சாயத்தாரும், நஷ்ட வியாச்சியம்வாங்க அதிகாரமில்லை. (ச-பு-கஅஉசஞு-மார்ச்சுமீ ககூ.)

உ. ஜங்கமஸ்திதிகளின் மேல்மட்டுங் கிராம முன்சீபுகளுடைய தீர்ப்புகளை நிறைவேற்றலாம். அந்தத்தீர்ப்புகளின் தொகையைக் கொடுக்கவேண்டிய கடன்காரனைப்பிடித்துக் காவற்கூடத்தில் வைக்கக்கூடாது. (ச-பு-க௲உகூ௵ டிசம்பர்மீ உசஉ.)

ங. கிராம முன்சீபுகளின் தீர்ப்புகளைத் தாலூகாமுன்சீபுகளைத் தவிர வேறே யாதொரு அதிகாரியும நிறைவேற்றக்கூடாது.

ச. வாதிக்கு நஷ்டம் உண்டாகும்படி, ங-மீத்துக்குப் பின்புகூட கிராம முன்சீபுகளுடைய தீர்ப்புகளை நிறைவேற்றாமல் நிறுத்திவைக்கக்கூடாதென்பது க௲அகசு௵ ச-வது சட்டம், உங-வது பிரிவின் தாற்பரியமேதவிர வாதிக்கு நஷ்டம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஷை ங-மீத்துக்குள்ளாகவே நிறைவேற்றவேண்டுமென்பது ஷை பிரிவின் கருத்தல்ல, காலநிர்ணய சட்டத்திற்கண்ட காலாவதிக்குள் எப்போதாவது ஷை தீர்ப்பை நிறைவேற்றலாம். (ச-பு-க௲அஙக ௵-மார்ச்சுமீ உஎஉ.)

ரு. கிராம முன்சீபினுடைய தீர்ப்பில் கிராமக்கணக்கன் கையெழுத்துவைக்க நிராகரிப்பதைக்கொண்டு அந்தத் தீர்ப்புக்குப் பாதகம் உண்டாகமாட்டாது. ஷை கணக்கனை வேலையிலிருந்து நீக்கவேண்டியதற்காக அவனுடைய கீழ்ப்படியாமையைக் கலெக்டருக்குத் தெரிவிக்கவேண்டும். (ச-லெ-க௲அசகூ௵-நவம்பர்மீ உருஉ.)

---

## குடிகள்.

மிராசுதாரும் புறக்குடியும் பார்க்க.

---

## குடும்பவிசாரணை.

க. வீண்செலவுசெய்கிறவன் குடும்பஸ்திதிகளை மேல்விசாரணை செய்யத்தகுந்தவன் அல்ல, ஜேஷ்ட சகோதரன் அதிவிரயக்காரனுதலால், கனிஷ்டசகோதரன் குடும்பவிசாரணை செய்யும்படி தீர்மானிக்கப்பட்டது. (க௲அஙகூ௵-நம்-எ.)

உ. ஜேஷ்டர்கள் குடும்பவிசாரணைசெய்ய அசமர்த்தர்களாயிருந்ததாலும் அவர்களுக்கு அடுத்த பாத்தியஸ்தர்கள் கனிஷ்டர்களைத் தகுந்தபடி சம்ரட்சணைசெய்யாதபடியாலும் கனிஷ்டர்களே பிரமுகர்களாய்க் குடும்பவிசாரணைசெய்யும்படி தீர்மானிக்கப்பட்டது. (க௲அகச௵-நம்-உஅ.)

ங. குடும்பவிசாரணைசெய்யத்தக்க சக்தி இல்லாத ஒருஸ்திரீயை ப்பார்க்கிலும் சாஸ்திரப்படி கிரமமான பாத்தியஸ்தன் அந்த விசாரணையை நடப்பிக்க விசேஷ ஸ்வாதந்திரியம் உள்ளவனாயிருக்கிறான். (க௲கச ஹ-நம்-ஙக.)

ச. ஜமீன்தாருக்குத்தகுந்த வயது வந்தால் எவ்வளவு அதிகாரமோ அவ்வளவு அதிகாரந்தான் க௲0ச ஹ ரு-வது சட்டம் ௮-வது பிரிவுப்படி நியமிக்கப்பட்ட விசாரணைக்கர்த்தனுக்கும் உண்டேதவிர அதைவிட அதிக அதிகாரங்கிடையாது. (க௲உஉ ஹ-நம்-ச.)

ரு. ஹிந்துக்களுக்குள்ளாகக் குடும்ப வியாபகனை ஜேஷ்டன் செய்தவழக்கு குடும்ப விசிஷ்டத்தையும் அநுபந்தப்படுத்தும். (க௲ருசா ஹ-நம்-கங௲-க௲ருஎ ஹ-ப-கசா.)

கடன்-ச-கூ-கசா-கஎ-க௲........ | கடன்பத்திரம்-௲................

இவைகளைப்பார்க்க.

---

## குறுவை.

ஒற்றியைப்பார்க்க.

---

## குத்தகை.

க. குத்தகைச்சீட்டில் கட்டுக்குத்தகையென்று பதப்பிரயோகஞ் செய்யப்பட்டிருந்தால் அது சாசுவத குத்தகையென்றே தாற்பரியமாகும். அப்படிப்பட்ட குத்தகைக்காரன் அநுபவிக்கிற நிலத்தைப் பற்றி ஸ்வான் வியாச்சியஞ் செய்யக்கூடாது. (க௲ருகூ ஹ-நம்-கஙசா-ப-உஎக.)

உ. நிலத்தைக் குத்தகையொப்புக்கொண்டவன் ஸ்வான்காரனுக்குப் பிரதிகூலமான ஸ்தானத்திலிருந்து அவனுடைய பாத்தியதையை ஆட்சேபிப்பானானால் அவனுடைய குத்தகையை நிறுத்திவிட்டதாய் அவனுக்கு ஸ்வான்காரன் தெரிவிக்கவேண்டியதில்லை. அப்படித் தெரியப்படுத்தாமல் ஸ்வான்காரன் ஷை நிலத்துக்காக வியாச்சியங்கொண்டுவரலாம். (க௲ருகூ ஹ-நம்-எஎ-௲0-ப-கசகூ-கருஉ.)

ங. ஆதியில் நிலத்தைக் குத்தகைவாங்கி அநுபவித்த குடிகள் அநேக வருஷகாலம் மிராசுதாருடைய மேல்வாரத்தைத் தாங்கியமாய்ச் செலுத்திவந்தால் பிற்பாடு அந்த நிலத்தைக் குத்தகைவாங்கின புறக்குடியுந் தாங்கியமாகவே மேல்வாரஞ் செலுத்தவேண்டிய

தேயல்லாமல் பணமாய்ச்செலுத்தக்கூடாது. (க௮௫௯ ஹ-நம்-கசக-க௮௬0 ஹ-ப-க0.)

ச. வாதிக்குப் பிரதிவாதி கொடுக்கவேண்டிய தீர்ப்புகளின் தொகைக்காகப் பிரதிவாதியின் கிராமத்தை வாதி-க0-வருஷம் வரையில் குத்தகையாய் அநுபவித்துக்கொள்ளுகிறதென்று சங்கேதம் நடந்து வாதி-௬-வருஷம் வரையில் ஷை கிராமத்தை அநுபவித்ததாகவும் பிற்பாடு பிரதிவாதி செலுத்தவேண்டிய தீர்வைக்காக அந்தக் கிராமத்தை சர்க்கார் ஏலம்போட்டு அவர்களே எடுத்துக்கொண்டதாகவும் தன்னுடைய பாக்கித்தொகை கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சித்தான். ஷை கிராமத்தை மறுபடியும் சர்க்கார் பிரதிவாதியிடத்தில் விட்டுவிட்டதால் குத்தகையின் பாக்கிக்காலம் வரையில் அந்தக்கிராமத்தை வாதி அநுபவித்துக்கொள்ளும்படி சித்தாந்திக்கப்பட்டது. (க௮௫௯ ஹ-நம்-க௨௭-க௨௯-க௮௬0 ஹ-ப-௨க௩.)

௫. வாதிக்குப் பிரதிவாதி பிரதி வருஷமும் தீர்வைசெலுத்துகிறதென்றுந் தப்பினால் அதற்குப்பதிலாய் நிலத்தை வாதி ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளுகிறதென்றும் குத்தகைச்சீட்டில் நிபந்தனைகண்டிருந்தபோதிலும் தீர்வையின் பாக்கி வாதிக்குக்கிடைக்கவேண்டியது நியாயமென்று நிர்த்தாரணஞ்செய்யப்பட்டது. (க௮௫௭ ஹ-நம்-க௨௫.)

| | |
|---|---|
| ஏலம்-௩........................ | கலால் குத்தகை-க.............. |
| ஒற்றி-௬-௩௯.................... | சாட்சிய நிர்வாஹம்-௨-௮........ |

இவைகளைப்பார்க்க.

## குத்பா.

காஜியைப்பார்க்க.

## குற்றம்.

க. தண்டனைசெய்யத்தக்க குற்றங்களால் ஒருவனுக்கு உண்டான நஷ்டத்தைப்பற்றி அந்தக் குற்றவாளிகள்மேல் அவன் சிவில் வழக்குத்தொடரலாம். (க௮௩௬ ஹ செப்டம்பர் மீ ௯௨.)

௨. ஒருவனுடைய ஸ்திரீயை அபகரித்துக்கொண்டவனுக்குக் கிரிமினல் கோர்ட்டில் தண்டனையானபோதிலும் அந்தச்செய்கை

யினால் புருஷனுக்கு உண்டான திரவிய நஷ்டத்தைப்பற்றி அவன் சிவில்வழக்குத்தொடரலாம். (ச-வி-ப-கஉ.)

பஞ்சாயத்து-ச.
இதைப்பார்க்க.

---

## கூட்டாளி.

க. ச-கூட்டாளிகளில், ௩-பெயர்மட்டும் மற்றொருவனைப் பிரதிவாதியாகசசேர்த்து வியாச்சியங்கொண்டுவரலாம். (க௮௫எ ஹை-ப-கசஉ.)

உ. பலகூட்டாளிகள்மேல் செய்யப்பட்ட வழக்கில் அவர்கள் கூட்டாளிகளென்று ஸ்தாபிக்கப்படாமல் சாட்சியலோபம் நேரிட்டால் அவர்களில் ஒருவனைமட்டும் உத்தரவாதப்படுத்தித் தீர்ப்பு செய்யலாம். (க௮௫எ ஹை-நம்-௬ச-க௮௫௮ ஹை-ப-எ௩)

௩. அசலும் லாபத்திற் சிலதொகையும் பெற்றுக்கொள்ளுகிறதென்கிற சங்கேதத்தின்மேல் ஒருவன் மற்றொருவனுக்குக் கடன் கொடுத்திருந்தால் அதைக்கொண்டு அவர்கள் கூட்டாளிகளென்று பாவஞ்செய்யக்கூடாது. (க௮௫எ ஹை - நம் - ௬௩-க௮௫௮ ஹை-ப-களசு.)

சாட்சியம்-௩௬.................. | வட்டி-கஉ......................
இவைகளைப்பார்க்க.

---

## கோர்ட்டுகள்.

க. பாலசம்ரக்ஷணைக் கோர்ட்டார் விசாரணையிலிருக்கிற ஸ்திதிகளின் பகுதிமுதலான வருமானங்களை வசூல்செய்கிறவிஷயத்தில் அந்தப்பாலர்கள் தகுந்தவயதுள்ளவர்களாயிருந்தால் அவர்களுக்கு எவ்வளவு அதிகாரம்உண்டோ அவ்வளவே அதிகாரந்தான் மை கோர்ட்டாருக்கும் உண்டாயிருக்கின்றது. அதைப்பார்க்கிலும் அதிகமான அதிகாரம் அவர்களுக்கு உண்டாயிருக்கவில்லை. (க௮உஉ ஹை-நம்-ச.)

உ. சதர்க்கோர்ட்டாருடைய உத்தரவில்லாமல் கோர்ட்டாப் ரிக்குவெஸ்ட்டென்னும் நியாயாதிபதிகள் தங்களுடைய தீர்ப்புகளை வேறுபடுத்தக்கூடாது. (க௮௫எ ஹை - நம் - க௬0-க௮௫௮ ஹை-ப-கச௮.)

௩. வாதி ஆஜராகத்தப்பிப்போனதற்காக அவனுடைய வழக்கைக் கோர்ட்டாப் ரிக்குவெஸ்ட்டென்னும் நியாயாதிபதிகள் தள்ளினால் அந்த விவாதவிஷயத்தைப்பற்றி ௧௮௪௧ௐ-௬-வது ஆக்ட்டு ௧௦-வது பிரிவுப்படி வாதி வேறேவியாச்சியஞ்செய்யக்கூடாது. (௧௮௬௦ௐ-நம்-௧-௧௮௬௧ௐ-ப-௨௧.)

௪. வெளிப்பிரதேசக்கோர்ட்டார்கள் சாஸ்திரத்தை எப்படி அநுஷ்டிக்கவேண்டியவர்களோ அப்படியே தர்மநீதியையுந் தழுவித் தீர்மானஞ்செய்யவேண்டியவர்களாயிருக்கிறார்கள். (௧௮௫௦ௐ-நம் ௧௦-ப-௨௦.)

௫. கோர்ட்டாப் ரிக்குவெஸ்ட்டென்கிற நியாயதுரந்தரர்களுடைய நடவடிக்கைகள் கிரம விருத்தமாயிருக்கிற காரணத்தினால் அவர்களிடத்திற்கு வியாச்சியங்களை மறுவிசாரணைக்காக அனுப்புவது உசிதம் அல்ல. (௧௮௫௧ௐ-நம்-௭௩.)

௬. ஷை கோர்ட்டாரிடத்துக்கு வியாச்சியங்களை ஒரு ஆவர்த்திக்குமேல் பல ஆவர்த்தி மறுவிசாரணைக்கனுப்புவது நியாயவிபரீதம். (௧௮௫௩ௐ-நம்-௮௧.)

௭. வீடுமுதலிய ஸ்தாவரத்தைப் பற்றினவியாச்சியங்களைப் பிடிக்கக் கோர்ட்டாப் ரிக்குவெஸ்ட்டென்கிற நியாயஸ்தலத்தாருக்கு அதிகாரம் இல்லை. (௧௮௬௦ௐ-நம்-௬-ப-௨௭௪.)

சாக்ஷியம் ௪௫.
இதைப்பார்க்க.

---

## கோவில்.

ஆலயத்தைப்பார்க்க.

---

## சடகோபம்.

ஆலயத்தைப்பார்க்க.

---

## சட்டம்.

௧. யாதொரு சட்டமாவது ஆக்ட்டாவது பாரகஷ்டஹேது என்கிற அபிப்பிராயத்தின்மேல் அந்தச்சட்டத்துக்கு விரோதமாய்க் கோர்ட்டார் தீர்ப்புசெய்யக்கூடாது. (௧௮௫௭ௐ-நம்-௫௮-௫௯-௬௦)

உ. சட்டநிர்மாண சபையாரால் உண்டாக்கப்பட்ட ஆக்ட்டின் விதிகள் அதற்குப் பிற்பட்டகாலத்துக்குமட்டும் உபயோகமேதவிர அந்த ஆக்ட்டு உண்டாவதற்கு முந்தினகாலத்துக்கு உபயோகம் அல்ல. முந்தினகாலத்துக்கு உபயோகமென்று அந்த ஆக்ட்டில் வியக்தமாய்க் கண்டிருந்தால்மட்டும் அந்தப்படி உபயோகசித்தியா கும். (க௮ரு௮௵-ப-உ௫௦.)

யுத்தப்பிரமாணசட்டம் க.

இதைப்பார்க்க.

---

## சத்தியம்.

பிரமாணத்தைப் பார்க்க.

---

## சமாதானப்பத்திரிகை.

ராஜிநாமாவைப்பார்க்க.

---

## சர்வமானியம்.

இறைமைப்பார்க்க.

---

## சன்னது முல்க்கியந்து இஸ்திமிரார்.

க. ஆலோசனைச்சங்கத்தின் கவர்னர் அவர்களால் கொடுக்கப்பட்ட சன்னது முல்க்கியந்து இஸ்திமிரார் என்னும் பத்திரிகையினால் உண்டாக்கப்பட்ட சாசுவத பாத்தியத்தை அதரிக்கவேண்டியது கோர்ட்டாருடைய கடமையாயிருக்கின்றது. (க௮௦௮௵-நம்-சு.)

உ. க௮௦உ௵-உ௫-வது சட்டப்படி ஒரு ஜமீன்தாரியைப் பிது ரார்ஜித ஸ்திதியாக்குவதற்கு சன்னது முல்க்கியந்து இஸ்திமிரார் அவசியகமாயிருக்கின்றது. (க௮கசு௵-நம்-கக.)

ஜமீன்தார்-க௦-கஅ-கச-க௫-கசு-கஎ.

இவைகளைப்பார்க்க.

---

## சாஸனம்.

கிரயத்தைப்பார்க்க.

---

## சாஸ்திரம்.

சித்தாந்தமுந் தீர்ப்பும்-கரு...... | யூரோசியன்-உ...................
தர்மசாஸ்திரமுழுமையும்........ |

இவைகளைப்பார்க்க.

---

### சாக்ஷி.

க. கட்சிக்காரர்கள் கோறிக்கொள்ளப்பட்ட எல்லாச்சாட்சிகளையுங் கோர்ட்டார் விசாரிக்கவேண்டும். எந்தச்சாட்சியையாவது விசாரிக்கவேண்டியதில்லையென்று கட்சிக்காரர்களின் யுக்தாநுசாரம் அவர்களே தள்ளிக்கொள்ளலாமேயல்லாமல் கோர்ட்டார் தள்ளக்கூடாது. (க௮௱க௫ஹ-நம்-௬எ-க௮௱௨௫ஹ-நம்-எக-க௮௱௬௫ஹ-நம்-க௮-௯௯-க௮௱௯௫ஹ-நம்-௮௨.)

---

### சாக்ஷியநிர்வாஹம்.

க. போக்கியநிலத்தை மீட்டுக்கொள்வதற்காக வாதி வியாச்சியஞ்செய்து பிரதிவாதி அந்தநிலத்தை வாதியிடத்திற் கிரயம்வாங்கினதாகக் கட்சிசொன்னால் அந்தக்கிரயத்தை நிரூபிக்கவேண்டியது பிரதிவாதியின் கடமையேதவிர போக்கியத்தை நிரூபிக்கவேண்டியது வாதியின்கடமை அல்ல. பிரதிவாதியின்கட்சி நிரூபணமாகாவிட்டால் வாதிபக்ஷந் தீர்ப்புச்செய்யவேண்டும். (க௮௱௮௫ஹ-நம்-க௪௨-க௮௱௯௫ஹ-ப-௨௨.)

௨. தான் குத்தகைவாங்கின கிராமங் கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தான். ஒரு சர்வமானியத்தோப்பு குத்தகையிற் சேரவில்லையென்று பிரதிவாதிகள் எதிர்வழக்காடினார்கள். இந்தவிஷயத்தில் ருஜூக்கொடுக்கவேண்டிய பொறுப்பு பிரதிவாதிகளைச் சேர்ந்ததேதவிர வாதியைச்சேர்ந்ததல்ல. (க௮௱௮௫ஹ-நம்-கஎஎ-க௮௱௯௫ஹ-ப-கஎ.)

௩. ௨-௩-பிரதிவாதிகள் இடத்தில் போக்கியம் வைக்கப்பட்ட நிலத்தை மீட்பதற்காக வாதி வியாச்சியஞ்செய்தான். ௨-௩-பிரதிவாதிகள் வாதி வழக்கை ஒப்புக்கொண்டார்கள். விவாதநிலத்தை வாதியிடத்தில், ௨-௩-பிரதிவாதிகள் கிரயம்வாங்கி அவர்கள் தனக்கு விக்கிரயித்ததாக முதற்பிரதிவாதி வாதித்தான். இந்த விஷயத்தில் ருஜூ

ப்படுத்தவேண்டிய பாரம் முதலாவது பிரதிவாதியைப் பொறுத்தி ருக்கின்றது. (க அ ரு கூ வருப-நம்-அச-ப-கூகூ.)

ச. ஒரு கட்சிக்காரன் ரூபிக்கவேண்டிய பாரத்தை மற்றொரு கட்சிக்காரன் தலையின்மேல் கீழ்க்கோர்ட்டார் சுமத்தினால் அந்த வியாச்சியம் மறுவிசாரணைக்கனுப்பப்படும். (க அ ரு கூ வருப-நம்-கூ-ப-ச.)

ரு. ஒரு பிரசித்தமான உத்தியோக ஸ்தலத்திலிருந்து வரப்பட்ட லிகிதங்கள் உண்மையானதென்று ஊஹிக்கப்படவேண்டியதானதால் அவைகள் பொய்யானதென்று சொல்லுகிறவன் அந்தப்படி ரூபிக்க வேண்டியவனாயிருக்கிறான். (க அ ரு கூ வருப-நம்-உஉக-க அ சா0 வருப-ப-கசஉ.)

சா. போக்கியம்வைக்கப்பட்ட நிலத்தை மீட்டுக்கொள்வதற்காக ஸ்வானால் செய்யப்பட்ட வியாச்சியத்தில் முந்திப் போக்கியமும் பிற்பாடு கிரயமும் வாங்கி அநுபவிப்பதாகப் பிரதிவாதிசொன்னால் சாட்சிய நிர்வாஹம் அவனைச்சேர்ந்ததாயிருக்கின்றது. (க அ சா0 வருப நம்-உகரு-க அ சாக வருப-ப-கரு.)

எ. விவாதஸ்திதி உபயவாதிகளில் யார் ஸ்வாதீனத்தில் இல்லையோ அவனே அவன் கட்சியை நிரூபிக்கக்கடமையுள்ளவன். அந்த ஸ்திதி எவன்வசத்தில் இருக்கின்றதோ அவன் நிரூபிக்கக் கடமை இல்லை. (க அ சா0 வருப-நம்-ருரு0-க அ சாக வருப-ப-சா0.)

அ. வாதியின் வழக்குக்கு ஆதாரமான குத்தகை எதிர்நடைச்சீட்டு உண்மையானதென்று ஸ்தாபிக்கப்பட்டால், அந்தச் சீட்டுப் படி பிரதிவாதி தொகை கொடுக்கவில்லையென்று நிரூபிக்கவேண்டியது வாதியின் கடமை அல்ல. அந்தத்தொகை வாதிக்குச்செல்லாகி விட்டதாகப் பிரதிவாதி நிரூபிக்கவேண்டும். (க அ சாக வருப-நம்-கஉ-ப-கக0)

கூ. விவாதபத்திரத்தை எழுதிக்கொடுத்த முதற்பிரதிவாதி அதின் உண்மையை ஒப்புக்கொள்ளுகிற பட்சத்தில் மற்றப்பிரதிவாதிகள் அந்த ஆதாரம் பொய்யானதென்று ஆட்சேபித்தால் மட்டும் அதின் உண்மையைப்பற்றிக் கோர்ட்டார் சாட்சி விளங்கவேண்டும். வாதியும் முதற்பிரதிவாதியும் ஒன்றுசேர்ந்து அந்த ஆதாரத்தை உற்பத்திசெய்திருப்பதாகமட்டும் மற்றப் பிரதிவாதிகள் வாதித்தால் அந்தப்படி நிரூபிக்கவேண்டியது அவர்களுடைய கடமை. அவர்கள்

அதற்குத்ததநுகுணமான நிதரிசனங்கொண்டு வரத்தப்பிட்போ ளுல் ஷை பத்திரத்தை ஸ்தாபித்து வாதி பட்சந் தீர்ப்புச்செய்ய யா தொரு பிரதிபந்தமும் இல்லை. (க௮கூ௦ஹு-நம்-க௦கூ-கக௦-ப-கசகூ-கரு௦.)

க௦. அ-என்பவனுடையஸ்வான் பாத்தியத்தை, க-என்பவன் ஒப் புக்கொண்டு பிற்பாடு தான் கிரயம்வாங்கினதாக வாதஞ்செய்தால் அந்தக்கிரயத்தை நிரூபிக்கவேண்டியது. க-என்பவனுக்குக் கடன் அவன் அந்தப்படி நிரூபிக்காவிட்டால், அ-என்பவனே பாத்தியஸ் தனென்று ஊகிக்கப்படும். (க௮ருஎ ஹு-நம்-கசா-க௮ரு௮ஹு-ப-உகூ.)

கக. ஸ்வான்காரனால் பிரதிவாதிக்கு ஒற்றிவைக்கப்பட்ட நிலத் தைத் தான் ஸ்வான்காரனிடத்தில் கிரயம்வாங்கியிருப்பதாக வாதி வியாச்சியங்கொண்டுவந்தால், அந்தக்கிரயத்தைப்பற்றிக் கோர்ட் டார் விவாத நிச்சயஞ்செய்து விசாரிக்கவேண்டும். ஒற்றியைப்ப ற்றி ஆட்சேபம் இல்லாவிட்டால் அதைப்பற்றிக் கோர்ட்டார் விசா ரிக்கவேண்டியதில்லை. (க௮ருகூஹு-நம்-அ௩-ப-கூ௮.)

க௨. விவாதநிலம் வாதி தகப்பனால் தன்னுடைய பெண்ஜாதிக்கு ஸ்திரீதநமாய்க் கொடுக்கப்பட்டதாகப் பிரதிவாதி எதிர்கட்சி பேசி னல் அந்தப்படி நிரூபணஞ்செய்யவேண்டியது அவனுடைய கடன். அந்த விஷயத்திற்கு நேரான சாட்சிய லொப்பியம் நேரிட்டால் ஜமாபந்திக் கணக்குகளில் ஷை ஸ்திரீதநவிஷயத்தைக் கண்டிருந்தா லுங்கூட அது பிரதிவாதிக்கு சாதகத்தைச் செய்யாது. (க௮ருகூ ஹு-நம்-கூச-ப-ககூ௨.)

க௩. வாதி பாகத்துக்காகச் செய்த வியாச்சியத்தில் குடும்ப ஆஸ் திக்கு மேற்பட்ட கடன் இருந்ததால் வாதி அவனுடையபாகம் வே ண்டியதில்லையென்று பரித்தியாகஞ்செய்துவிட்டதாகப் பிரதிவாதி எதிர்கட்சிசொன்னல் அந்தப்படி நிரூபிக்கவேண்டியது பிரதிவாதி யின் கடமை. பிரதிவாதி சாட்சிய தரித்திரனாய்ப்போய்விட்டால் நிருணமாய் வாதியின் பாகம் அவனுக்குக் கிடைக்கும்படி தீர்ப் புச்செய்யவேண்டும். (க௮ருகூஹு-நம்-கருச-க௮கூ௦ஹு-ப-ககூ.)

| | |
|---|---|
| அநுபவம்-உ...................... | பாகம்-ச௨........................ |
| அவதிக்கிரயம்-க.................. | மிராசுதாரும் புறக்குடியும்-உரு. |
| சாட்சியம்-உகூ-ருகூ............... | |

இவைகளைப்பார்க்க.

---

## சாக்ஷியம்.

க. ஆதாரம் சிருஷ்டிசெய்த தப்பிதத்துக்காக சர்க்கியூட் கோர்ட்டார் முன்பாக விசாரணை செய்யப்பட்டவர்கள் விடுதலையானதை க்கொண்டு அந்த ஆதாரம் உண்மையானதென்று நிச்சயிக்கக்கூடாது. (க௮கக ஷ்ரூ-நம்-௭.)

உ. ஒரு ஆதாரத்தின் வாசகங்களைப்பற்றி சாட்சியம் விளங்குமுன் அது கைதப்பிப்போனதாகவாவது, சேதப்பட்டுப்போனதாகவாவது ருஜுவாகவேண்டும். (க௮கரு ஷ்ரூ-நம்-கஉ-க௮௬௦ ஷ்ரூ-நம்-௬௪௭-க௮௬க ஷ்ரூ-ப-௪௬.)

ங. வியாச்சியகாலத்துக்குமுன் ஒரு கட்சிக்காரனால் எழுதியனுப்பப்பட்ட வர்த்தமானக்காகிதத்தின் நகலை அந்தக்கட்சிக்காரன் பட்சத்தில் சாட்சியமாக அங்கிகரிக்கக்கூடாது. அப்படியே எதிர் கட்சிக்காரன் தான் எழுதிக்கொடுக்கவில்லையென்று ஆட்சேபிக்கிற ஒரு ஆதாரத்தின் நகலுக்கு நகலையும் அங்கிகரிக்கக்கூடாது. (க௮க௬ ஷ்ரூ-நம்-௭.)

௪. நடவடிக்கைகள் ரத்தாய்ப்போன வியாச்சியத்தின் சாட்சி வாக்குமூலங்களின் நகல்களை வேறொரு வியாச்சியத்தில் தாக்கல் செய்யக்கூடாது. ஆனால் அந்தச்சாட்சிகள் இறந்துபோனதாக ருஜுவானால் ஷை வாக்குமூலங்களை ஏற்றுக்கொள்ளலாம். (க௮க௭ ஷ்ரூ-நம்-கக.)

ரு. வியாச்சியந் தாக்கலானபிற்பாடு பேசிக்கொள்ளப்பட்ட சமாதான வார்த்தையை சாட்சியமாக எண்ணக்கூடாது. (ஷை.)

௬. வாதியால் தாக்கல்செய்யப்பட்ட தஸ்தவேஜின் உண்மைக்கு சாட்சியம் இல்லாமற்போனால் அதினால் அவனுக்கு யாதொரு பிரயோஜனமும் இல்லை. ஆனால் அந்த ஆதாரம் பிரதிவாதிக்கு சாதகமாயிருந்தால் அதை வாதியின் ஒப்புதலாக எண்ணவேண்டியதான படியால் அதின் பிரயோஜனத்தை அடையப் பிரதிவாதிக்குப் பாத்தியம் உண்டு. (க௮க௭ ஷ்ரூ-நம்-க௭.)

௭. ஒருவன் ௪௦-வருஷம் வரையில் கர்ணம் வேலைபார்த்துவந்தால் அவன் யதார்த்தமான கர்ணன் என்பதற்கு அதுவே பிரத்தியட்ச நிதர்சனம். (க௮கஃ ஷ்ரூ-நம்-க.)

௮. ஒரு மிட்டாவின் வருமான வசூல்கணக்குகளில் கர்ணர்கள் கையெழுத்துவைத்துக்கொடுத்ததற்கு அந்தக் கர்ணர்களுடைய

சாட்சியமேமுக்கியம். அப்போதுகூட இருந்தவர்களுடைய ருஜூ ஷை கணக்குகளை ஸ்தாபிக்கிறதற்கு எவ்வளவும்போதாது. (௧அ௧௩ ஞு-நம்-எ.)

௯. கட்சிக்காரர்களால் எழுதிக்கொள்ளப்பட்ட வர்த்தமானக் காகிதங்களை ஒரு வியாச்சியத்தில் சாட்சியமாக ஏற்றுக்கொள்ளலாமே அல்லாமல் இதரர்களால் எழுதப்பட்ட காகிதங்களை ஏற்றுக் கொள்ளக்கூடாது. (ஷை.)

௧௦. ஒரு ஜமீன்தாரியின் கணக்குகளின் பிரகாரம் தொகைகிடைக்கவேண்டுமென்று ஜமீன்தாருடைய தீவான்மேல் செய்யப்படுகிறவழக்கில் அந்தத் தீவானுடைய உத்தரவுப்பிரகாரம் அந்தக் கணக்குகள் யதார்த்தமாய்ப் பிறந்தவைகளென்று அந்தக் கணக்குகளைத் தயார்செய்த உத்தியோகஸ்தர்களால் நிரூபணமாகவேண்டும். (௧அ௨௦ஞு-நம்-௯.)

௧௧. ருஜூவாகாத கணக்குகளை அசித்திசெய்ய வேறே கணக்குகள் வேண்டியதில்லை. (௧அ௨௧ஞு-நம்-௧௦.)

௧௨. கிராமங்களின் வார வருமானங்களைப்பற்றி வியாச்சியம் வரும்போது ௧அ௧௬ஞு ௧௫-வது சட்டம் ௧௦-வது பிரிவுப்படி அந்தக் கிராமக் கர்ணர்களுடைய கணக்குகளைக் கோர்ட்டார் பார்வையிடவேண்டியதற்காக அந்தக் கர்ணர்களைச் சாட்சிகோரும்படிக்கும் அப்படிச்செய்யாதவனாயில் அதற்குக் காரணந் தெரிவிக்கும்படிக்கும் கட்சிக்காரர்களுக்குக் கோர்ட்டார் உத்தரவு கொடுக்கவேண்டும். (௧அ௨௨ஞு-நம்-௬.)

௧௩. ஒரு அதிகாரஸ்தர் கையெழுத்து வைத்துக்கொடுத்திருக்கிற தஸ்தவேஜூகளின் பிரதிகள் சரியானபிரதிகள் என்பதற்கு ருஜூவை அபேட்சிக்காமல் அந்தப் பிரதிகளை ஏற்றுக்கொள்ள வேண்டியது சாட்சிய சாஸ்திரவிதியாயிருந்த போதிலும், ஷை அதிகாரஸ்தரின் ஸ்வபாஷையில் எழுதப்படாமல் அந்நியபாஷையில் எழுதப்பட்டிருந்தால் அந்தப் பிரதிகளைச் சரிபார்த்த சாட்சிகளைக் கோர்ட்டார் வரவழைத்து விசாரிக்கவேண்டும். முக்கியமாய் ஷை பிரதிகள் அபத்தபுஞ்சமென்று எதிர் கட்சிக்காரன் ஆக்ஷேபித்தால் மேற்கண்டபடி கோர்ட்டார் விசாரிக்கவேண்டும். (௧அ௨௩ஞு-நம்-௪.)

கச. ஒரு ஆதரவு அபூதகற்பனையென்று தகுந்த அதிகாரமுள்ள கோர்ட்டாரால் தீர்ப்புச் செய்யப்பட்டிருந்தால் அந்த ஆதரவை பலக்ஷயஞ்செய்வதற்கு ஷை தீர்ப்பைத் தாக்கல்செய்வதேபோதும். (க௮௨௩ ஷு-நம்-ரு.)

கரு. ஒரு ஆதரவை எழுதினவனுஞ் சாட்சி போட்டவர்களும் அதை யெழுதிக்கொடுத்தவனும் இறந்துபோனால் அவர்களுடைய கையெழுத்து ருஜுவாகவேண்டியது முக்கியம். அப்படிப்பட்ட ருஜு இல்லாதவரையில் அந்த ஆதரவு அநர்த்தமே. (க௮௨௪ஷு நம்-கக.)

கசா. வர்த்தமானக்காகிதம் யாருக்கு எழுதப்பட்டதாகக் கண்டிருக்கிறதோ அவர்கள் கையிலிருந்து அந்தக்காகிதம் வெளிப்பட்டதற்கு நீக்க நிதரிசனம் இல்லாதவரையில் அந்தக்காகிதத்தை சாட்சியமாக ஒப்புக்கொள்ளக்கூடாது. (ஷை.)

கஎ. உபயபக்ஷத்திலும் சாட்சியம் சமத்துவமாகவும் சாட்சிகளின் வாஸஸ்தலம் பொய்ச்சாட்சிகள் வசிக்கிற பிரசித்தமான ஸ்தானமாகவும் இருக்குமானால் அந்தவியாச்சியத்தின் இதரமான ருஜுக்களையும் விவகாரவிஷயங்களின் ஸ்வரூபத்தையும் கோர்ட்டார் யோசித்து அதற்குத் தகுந்தபடி எந்தப்பட்சத்தின் சாட்சியத்தை யாவது விசேஷமாக எடுத்துக்கொள்ளலாம். (க௮௨௪ ஷு-நம்-கசா.)

க௮. ஒரு ஆதரவை யெழுதிக்கொடுத்தவன் அதின் உண்மையைக் கோர்ட்டார்முன்பாக ஒருகாலத்தில் ஒப்புக்கொண்டிருந்தால் அதற்குப் பிற்பாடு அந்த ஆதரவைப்பற்றி அவன்சொல்லும் ஆக்ஷேபனையைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (க௮ருக ஷு-நம்-சாக.)

கக. ஒரு ஆதரவைக் கோர்ட்டார் ஏற்றுக்கொண்டு அது இறந்துபோனவன் கையெழுத்தென்பதற்கு சாட்சியம் விளங்குவது கோர்ட்டுகளின் சாம்பிரதாயகமேதவிர அயுக்தமானதல்ல. (க௮ருக ஷு-நம்-௮௩.)

௨௦. விவாதபத்திரம் பிறந்ததேதியில் அதில் எவ்வளவு தொகை கண்டிருக்கிறதோ அவ்வளவுதொகைக்கு வாதிக்குப் பிரதிவாதி ஒரு பத்திரம் எழுதிக்கொடுத்ததாகப் பிரதிவாதியின் சாட்சிகள் சொன்னதைக்கொண்டு வாதிபட்சத்தின் ருஜுவுக்கு விசேஷபலம் உண்டானதாக சதர்க்கோர்ட்டார் நிச்சயித்தார்கள். (க௮௨௪ ஷு-நம்-௨.)

**உக.** அப்பீல் இல்லாமல் முடிவாயிருக்கிற ஒரு தீர்ப்பில் ஒரு ஆதாரவு உண்மையானதென்று ஸ்தாபிக்கப்பட்டிருந்தால் அதற்குப் பிற்பாடு வேறொருவியாச்சியத்தில் அந்த ஆதாரவைப்பற்றி ஆட்சேபிக்கக்கூடாது. (கஅசகூ ஞ)-நம்-உகா.)

**உஉ.** ஒரு வியாச்சியத்தில் தாக்கலான ராஜீநாமாவில் ஒரு சங்கதியை ஒரு கட்சிக்காரன் ஒப்புக்கொண்டிருந்தால் பிற்பாடு வேறொருவியாச்சியத்தில் ஷை சங்கதியை ஆட்சேபித்து அவனால் சொல்லப்பட்டவாதத்தை அபலப்படுத்துவதற்கு ஷை ராஜீநாமாவின் ஒப்புக்கொள்ளுதலே போதுமான சாட்சியம். (கஅசரு ஞூ-நம்-கரு.)

**உங.** ஒரு ஆதரவு தாக்கலாகக்கூடுமா யிருக்கும்போது அதை தாக்கல்செய்துகொள்ளாமல் அதின் உண்மையைப்பற்றி ருஜூ விளங்குவது கிரமம் அல்ல. (கஅருக ஞூ-நம்-கஈ.)

**உச.** வாதிகள் கட்சிக்காதாரமான தஸ்தவேஜு கைதப்பிப்போய்விட்டதாக ஜில்லாக்கோர்ட்டில் சொன்ன வாதிகள் பிற்பாடு அந்த ஆதரவு அகப்பட்டுப்போனதாகவும், அதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றுஞ் சதர்க்கோர்ட்டாரவர்களிடத்தில் விண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள். நடவடிக்கைகளெல்லாம் முடிவாகி வாதிகள் கட்சியின் துர்ப்பலங்களெல்லாம் வெளிப்பட்டபிறகு ஷை ஆதாரவை வாதிகள் கொண்டுவந்தது சந்தேகாஸ்பதமென்று சதர்க்கோர்ட்டாரவர்கள் தீர்மானித்தார்கள். (கஅககஞூ-நம்-ஏ.)

**உரு.** ஒரு தஸ்தவேஜின் பிரதியில் கலெக்டர் கையெழுத்து வைத்துக்கொடுத்து அது ஒரு வியாச்சியக்காரனால் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டபின்பு எதிர் கட்சிக்காரன் அதைப்பற்றி ஆட்சேபித்தால் அதின் உண்மைக்குக் கோர்ட்டார் சாட்சி விளங்கிக்கொள்ளவேண்டும். (கஅருக ஞூ-நம்-சாக.)

**உசா.** ஒரு வியாச்சியக்காரனிடத்தில் இருந்தாவது அவனுடைய வேலைக்காரனிடத்தில் இருந்தாவது வெளியாகப்பட்ட தஸ்தவேஜிகளின் பிரதிகளையும் கையெழுத்தில்லாத தஸ்தவேஜுகளையும் சாட்சியமாக அங்கிகரிக்கக்கூடாது. (கஅருக ஞூ-நம்-சுக.)

**உஎ.** ஒரு பத்திரத்தின் ஆதாரத்தின்மேல் செய்யப்பட்ட வியாச்சியத்தின் உத்தரவாதத்தை நீக்கிக்கொள்ளுதற்கு அந்தப்பத்திரத்துக்குப் பூர்ணமாய்த் தொகை செல்லாகிவிட்டதாகப் பிரதிவாதி பூர்த்தியாய் ருஜூப்படுத்தவேண்டும். (கஅஉக ஞூ-நம்-க0.)

உஅ. பணம் அனுப்பும்படி எழுதப்பட்ட வர்த்தமான காகிதங் கள்மட்டும் பணங்கொடுபட்டதற்கு ருஜு ஆகமாட்டாது. அதற் கு வேறே ருஜுவும் அக்த்தியம். (கஅகச ஷூ-நம்-உ௦.)

உகூ. ஒரேமனுஷன் எழுதிக்கொடுத்ததாகச் சொல்லப்பட்ட உ- தஸ்தாவேஜுகளில் ஒன்றுக்கொன்று பேதமான உ-முத்திரைகள் வைக்கப்பட்டிருந்ததினால் அவன் அந்த உ-முத்திரைகளையும் உப யோகப்படுத்துகிறது வழக்கமென்று ருஜுப்படுத்தவேண்டியது அந்த தஸ்தாவேஜை தாக்கல் செய்தவனுடைய கடமையென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅகஎ ஷூ-நம்-கஉ.)

ரு௦. ஒரு ஆதரவில் ஒருவனுடைய கையெழுத்து பலவந்தமாய் வாங்கப்பட்டிருந்தால் அந்த ஆதரவு நிரர்த்தகமாகும். (கஅஉகூ ஷூ-நம்-எ.)

ருக. மைமாஷ்க் கணக்குகளில் வாதியின் பெயர் தாக்கலாயிருப் பதாகப் பிரதிவாதிகள் ஒப்புக்கொண்டால் அந்தக் கணக்குகளை வாதி தாக்கல்செய்யவேண்டிய அகத்தியம் இல்லை. (கஅருக ஷூ-நம்-அக.)

ருஉ. தபால் முத்திரைகள் வைக்கப்பட்ட லகோடாவுக்குள் அடக்கஞ்செய்யப்பட்ட வர்த்தமானக் காகிதங்களை ருஜுவாக அங் கீகரிக்கக்கூடாது. (கஅருஉ ஷூ-நம்-கரு.)

ருரு. நிலத்தை ஒற்றிவாங்கி அநுபவிக்கிறவன் அந்த நிலத்தின் வருமானக்குறைவை ரூபிக்கிறதற்கு வருமானக் கணக்குகளை ஆஜர் செய்யவேண்டும். அப்படிசெய்யத் தப்பிப்போனால் அவனிடத் தில் வேறே ருஜுவை ஒப்புக்கொள்ளக்கூடாது. (கஅருஎ ஷூ-நம்- கசுஅ-கஅருஅ ஷூ-ப-கசூ.)

ருச. அசல ஆதரவு தாக்கலாகாமல இருந்தால அதின உள் ளங்களைப்பற்றி ருஜு விளங்குமுன் அந்த ஆதரவையே தாக்கல் செய்யும்படி கட்டளை பிறப்பிக்கவேண்டும். (கஅருஅ ஷூ-நம்-அஅ- ப-கஉஅ.)

ருரு. ஒருவன் ஒரு உத்தியோகத்துக்காகப் பிரயத்தநஞ்செய் தபோது தான் ஆஸ்திவந்தனென்று காண்பிக்கவேண்டியதற்காக அவனால் தயார்செய்யப்பட்ட ஆஸ்தி விவர ஜாப்தாவை அவனு டைய எதிரிக்குப் பிரதிகூலமான ருஜுவாக எண்ணக்கூடாது. (கஅருஅ ஷூ-ப-ருஅ.)

௩௬. ஒருவன் வேறொருவனுடைய கையெழுத்தைப்போல் போட்ட தப்பிதத்துக்காக விசாரணைசெய்யப்பட்டு விடுதலையானால் ஷை கையெழுத்து உண்மையானதென்று எண்ணப்படவேண்டும். (க௮௫௬ ஷ-ப-உ௬.)

௩௭. கோர்ட்டுத் தீர்ப்புப்படி பகுதிகொடுக்கவேண்டியவன் பகுதியைச் செலுத்திவிட்டதாகச்சொன்னால் அதற்கு லிகிதரூபமான ஆதாரத்தை அவன் தாக்கல்செய்யவேண்டும். (க௮௫௬ஷ-ப-க௩௫.)

௩௮. புருஷனுடைய சொத்துக்குப் பத்தினி பாத்தியஸ்தி அல்லவென்றும் மெட்டிஜாதி வழக்கப்படி மருமகன் பாத்தியஸ்தனென்றும் விவகரிக்கப்படுகிறபட்சத்தில் அதிகபலமும் நிர்தோஷமுமான சாட்சியத்தினால் அந்த வழக்கம் ஸ்தாபிக்கப்படவேண்டும். அந்தப்படி ருஜுவாகாவிட்டால் சாஸ்திரவிரோதமான ஷை வழக்கத்தைக் கோர்ட்டார் உறுதிப்படுத்தக்கூடாது. (க௮௫௬ ஷ-நம்-௮௬-ப-உ௫௦.)

௩௯. உ-ம் பிரதிவாதி ஆன்சரில் முதற்பிரதிவாதியுந் தானும் கூட்டாளிகளென்பதை ஒப்புக்கொண்டபடியால் அந்த ௨-ம் பிரதிவாதியும் அவனுடைய பாத்தியஸ்தர்களும் ஷை கூட்டுவியாபாரத்தைச்சேர்ந்த சகல கடன்களுக்கும் உத்தரவாதிகளென்றும் உ-ம் பிரதிவாதியிடத்தில் சரக்குகள் ஒப்புவிக்கப்பட்டதாகவும் கணக்கில் உ-ம் பிரதிவாதி கையொப்பமிட்டுவைத்ததாகவும் வாதி நிரூபிக்கவேண்டிய அவசரம் இல்லையென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (க௮௪௪ ஷ-நம்-௪.)

௪௦. இறும் சன்னதைக் கலெக்ட்டர் ஆபீசில் ரெஜிஸ்டர் செய்யவேண்டியது அவசியமானதல்ல. ரெஜிஸ்டர் ஆகாத சன்னதைக் கோர்ட்டில் சாட்சியமாக ஏற்றுக்கொள்ளலாம். (க௮௪௬ ஷ-நம்-௮.)

௪௧. தன்னிடத்தில் அடைக்கலமாய் வைக்கப்பட்ட பொருளைப் பிரதிவாதி அபகரித்துக்கொண்டதாகவும் அதின்கிரயம் வரவேண்டியதென்றும் வாதி வழக்குச்செய்தால் அந்தப்பொருள் தனக்குச் சொந்தமென்றாவது அல்லது அதின்கிரயத்தைத் தான் வேறேயாதொருவனுக்கு உத்தரிக்கவேண்டியதென்றாவது அவன் ருஜுப்படுத்தவேண்டும். (க௮௪௭ ஷ-நம்-க.)

௪௨. குடும்பப்பொது நன்மைக்காக ஆபரணங்களை வேறொருவன் இடத்தில் பொதுக்கட்டப்பட்டிருக்கிற பட்சத்தில் அந்த ஆபரணங்களை அந்தக் குடும்பத்தலைவன் இடத்தில் கொடுத்துவிட்டால் அதுவே போதுமானசாட்சியம். (௧௮௨௪ ௵-நம்-௧௩.)

௪௩. க-என்பவன் உத்தரவுப்படியென்று கையெழுத்துவைத்து, அ-என்பவன், ச-என்பவனுக்கு ஒரு சாஸநம் எழுதிக்கொடுத்தான். அந்தப்படி, அ-என்பவனுக்கு, க-என்பவன் உத்தரவு கொடுக்கவில்லையென்றும், அ-என்பவனுக்கு, க-என்பவன் அனுப்பின அதிகாரபத்திரஞ் செல்லாதென்றுங் கலெக்டர் தீர்மானஞ்செய்ததாகத் தெரியவந்தபடியால் அந்தப்படி ஒரு தகுந்த அதிகாரியினால் செய்யப்பட்ட தீர்மானமே ஷை ஆதரவு செல்லாதென்பதற்குப் போதுமான சாட்சியம் என்று நிர்ணயிக்கப்பட்டது. (௧௮௧௪ ௵-நம்-௧௨.)

௪௪. பத்திரம் எழுதிக்கொடுத்தவனுடைய பாத்தியஸ்தர்களில் சிலர் அந்தப் பத்திரத்தைப்பற்றி ஆட்சேபித்ததினால் அவர்களில் ஒருவன்மட்டும் தொகை கொடுக்கும்படி சுப்பிரீம்கோர்ட்டில் தீர்மானிக்கப்பட்டு அந்தத் தீர்ப்புக்காக வெளிப்பிரதேசத்தில் எல்லாப் பாத்தியஸ்தர்களுடையவும் அநுபோகத்தில் இருந்த நிலம் தெரிப்பன்றும் அதிகாரியால் ஏலம் போடப்பட்டது. அந்த நிலத்தை ஏலம் எடுத்தவன் ஷை பத்திரத்துக்கு எல்லாப் பாத்தியஸ்தர்களும் உத்தரவாதிகளென்று ருஜூப்படுத்தவேண்டியதென்றும் அப்படி அவன் ருஜூப்படுத்தாதவரையில் நிலத்தை அவன் வசப்படுத்தக் கூடாதென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௪௪ ௵-நம்-௮.)

௪௫. சாட்சியத்தை அங்கீகரிப்பதிலும் அதின் தன்மையை யோசிப்பதிலும் வெளிப்பிரதேசக்கோர்ட்டார் இங்கிலீஷ் சாட்சிய சாஸ்திரவிதிகளை அநுஷ்டிக்கவேண்டும். (ச-டை-௧௮௨௮ ௵-பிப்பரவரிமீ ௨௧௨.)

௪௬. ஒரு நியாயாதிபதிக்கு ஸ்வயமே ஒரு விஷயந் தெரிந்திருந்தால் அந்தப்படி அவர் தீர்மானஞ் செய்யக்கூடாது. அவருக்கு அந்தரங்கத்தில் ஒரு காரியந் தெரிந்திருந்து அதற்கு நேர் விரோதமாக சாட்சியம் ஏற்படுமானால் அந்த சாட்சியப்படிக்கே அவர் தீர்மானஞ் செய்யவேண்டும். அவருக்குத் தெரிந்தவிஷயத்தை அவர் கோர்ட்டில் சாட்சியாக வந்து வெளிப்படுத்தினால்மட்டும் உபயோகப்படுமேதவிர வேறேவிதத்தில் உபயோகப்படமாட்டாது. (ச-பு-௧௮௨௭ ௵ அக்டோபர்மீ ௧௧௨.)

சஎ. வாதிபட்சத்தில் ருஜு விளங்கி முடிவாகிறவரையில் பிரதி வாதி பட்சத்து ருஜுவிற் பிரவேசிக்கக்கூடாது. (ச-பு-க௮௭௦ௐ-செப்டெம்பர்மீ உகூ௳.)

ச௮. ஒரு வழக்கம் சந்தேகத்துக்குரியதாகக் காணப்பட்டால் அதைப்பற்றி ருஜு விளங்கவேண்டும். (ச-பு-க௮உகூௐ-மார்ச்சு மீ ககூ௳.)

சகூ. ஒருவன் தன்னுடைய நிலத்தைச் சிலகாலம்வரையில் வேறொருவனுடைய விசாரணையில் விட்டுவைக்கும்படியான அவசியம்நேரிட்டால் அவன் ஆதரவைப் பெற்றுக்கொள்வது தேசாசாரமாயிருக்கின்றது. அப்படிப்பட்ட ஆதரவு இல்லாவிட்டால் அந்தவிஷயத்தை நம்பக்கூடாது. (க௮உ௮ௐ-நம்-கூ.)

ருo. விவாதஸ்தலத்தின் ஸ்திதியைக் கோர்ட்டார் அறியவேண்டியிருந்தால் கோர்ட்டு அமீனுமூலமாகத் தெரிந்துகொள்ளவேண்டியது கிரமமேதவிர சிவில் இஞ்சினீரால் எழுதப்பட்ட காகிதத்தை சாட்சியமாக ஏற்றுக்கொள்ளக்கூடாது. சிவில் இஞ்சினீருடைய அபிப்பிராயந் தெரியவேண்டியிருந்தால் அவரைச் சாட்சியாய் வரவழைத்து விசாரிக்கவேண்டும். (க௮ருoௐ-நம்-௬கூ.)

ருக. ஒரு நியாயாதிபதி சாட்சிய பரிசீலனஞ்செய்யாமல் வாதியின் கட்சி துர்வியாச்சியக்காரர்கள் வழக்கமாய்ச் சொல்லுகிற துர்க்கட்சி என்றுமாத்திரந் தீர்ப்பில் சொல்லி வாதி வழக்கைத் தள்ளினதினால் நியாயாதிபதிகள் வியாச்சியங்களில் ஏற்பட்டிருக்கிற சாட்சியப்பிரகாரந் தீர்மானஞ்செய்யவேண்டுமே அல்லாமல் சாதாரணமான வழக்கங்களைக்கொண்டு தீர்மானிக்கக்கூடாதென்று சதர்க்கோர்ட்டாரவர்களால் உத்தரவு செய்யப்பட்டது. (க௮ருஉௐ-நம்-உரு.)

ருஉ. உண்மையானதென்று ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு தஸ்தவேஜின் கையெழுத்துடனேகூட ஆக்ஷேபிக்கப்பட்ட தஸ்தவேஜின் கையெழுத்தை இணையிட்டுப்பார்ப்பது சாஸ்திரசம்மதமாகவும் அதிக பிரயோஜனகரமாகவும் இருக்கின்றது. (க௮ருகௐ-நம் ௮௬.)

ரு௩. கடன் பத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தான். பிரதிவாதி பத்திரத்தின் உண்மையை ஒப்புக்கொண்டு அதற்காகத் தான் தொகை பற்றவில்லையென்

றும் அது லஞ்சவிஷயமாகப் பிறந்ததென்றும் எதிர்கட்சிபேசினான். அசல்க்கோர்ட்டார் வாதிபட்சந் தீர்ப்புச்செய்தார்கள். பிரதிவாதிக்கு வாதி கடன்கொடுத்து ஷை ஆதரவைப் பெற்றுக்கொண்டதை ருஜுப்படுத்தும்படி வாதிக்கு அப்பீல்க்கோர்ட்டார் உத்தரவுகொடுத்து அந்தப்படி அவன் ருஜுப்படுத்தத் தப்பிப்போய்விட்டான் என்கிற ஆதாரத்தினால் அசல் தீர்ப்பை மாற்றிப்போட்டார்கள். பத்திரத்தில் வியக்தமாய்க் கண்டிருக்கிற ஒரு விஷயத்தை ருஜுப்படுத்தும்படி வாதிக்கு அப்பீல்க்கோர்ட்டார் உத்தரவுகொடுத்தது உசிதம் அல்லவென்றும் பிரதிவாதி பக்கத்து ருஜுவைமட்டும் கவனித்து அந்த ருஜு திருப்தியாயிராவிட்டால் வாதி வழக்கை ஸ்தாபிக்கவேண்டுமென்றும் சதர்க்கோர்ட்டார் தீர்மானித்தார்கள். (க௮௫௫ ஞு-நம்-௬எ.)

௫௪. க௮௦உ-ஞு த்தில் கவர்ன்மெண்டார் அவர்களால் ஒரு அதிகாரஸ்தருக்கு எழுதப்பட்டு அதிற்கண்டபடி ஒரு காலத்திலும் அநுஷ்டானஞ் செய்யப்படாத ஒரு பழையகாகிதத்தை கவர்ன்மெண்டாரின் உத்தரவாகநினைத்து அதை ஆதாரப்படுத்தித் தீர்ப்பு செய்வது கிரமமானதல்ல. (க௮௫௫ஞு-நம்-௬௫.)

௫௫. வர்த்தமான காகிதங்களை எழுதினவர்களுடைய கையெழுத்துகள் ருஜுவானால்மட்டும் அந்தக் காகிதங்களை சாட்சியமாக ஏற்றுக்கொள்ளலாம். (க௮௫௬ஞு-நம்-௫௬.)

௫௬. இறந்துபோனவர்களுடைய வாக்குமூலங்களை ருஜுவாக ஏற்றுக்கொள்ளுகிறதற்குமுன் அவர்கள் இறந்துபோனவிஷயம் ருஜுவாகவேண்டியது முக்கியம். (ஷை நம்.)

௫எ. வாக்குமூலம் எழுதிவைத்தவர்களையே வரவழைத்து விசாரிப்பது சாத்தியமாயிருக்க அவர்கள் பிரமாணம் இல்லாமல் எழுதிவைத்த வாக்குமூலங்களின் நகல்களை அங்கீகரிப்பது சாட்சிய சாஸ்திரவிதிக்கு விரோதம். (க௮௫எஞு-நம்-உ.)

௫அ. விவாதகடனைப் பிரதிவாதி ஆட்சேபிக்கிறபட்சத்தில் வாதி பிரமாண பூர்வமாயெழுதிவைத்த வாக்குமூலத்தைக்கொண்டும் அவனுடைய கணக்குகளைக்கொண்டும் பிரதிவாதிக்கு விரோதமாய்த் தீர்ப்பு செய்வது சரியல்ல. (க௮௫௫ஞு-நம்-க௬௬.)

௫௯. விவாத சாஸனத்தின் உண்மையை ஒப்புக்கொள்ளுகிற பிரதிவாதி அதற்காகத் தான் தொகை பற்றவில்லையென்று கட்சிசொ

ன்னல் அந்த விஷயத்தை ருஜுப்படுத்தவேண்டியது அவனுடைய கடமையேதவிரத் தொகைகொடுத்து சாஸநம்வாங்கினதாக ருஜுப்படுத்தவேண்டியது வாதியின்கடமை அல்ல-தொகை செல்லானதற்கும் கிரய பரிபூர்த்திக்கும் சாஸநமே சாட்சி. (கஅ௫சஞூ-நம்-அசு.)

சா0. பத்திரத்துக்காகச் செல்லாகிற தொகையைப் பத்திரத்தின்மேல் செல்லுவைக்கிறதென்றும் வேறேவிதமான செல்லுகளை ஒப்புக்கொள்ளுகிறதில்லை யென்றும் அந்தப்பத்திரத்தில் நிபந்தனை கண்டிருக்கிறவிஷயத்தில் அந்தப்படி நடக்கவேண்டியதே அல்லாமல் பத்திரந் தீர்ந்துபோனதற்கு ருஜுவாகப் பிரதிவாதி தாக்கல் செய்யும் பற்றுச்சீட்டை ஒப்புக்கொள்ளக்கூடாது. (கஅ௫௫ஞூ-நம்-உ.)

சாக. ஒரு தஸ்தவேஜைப் பெற்றுக்கொள்ளுகிறவன் அதைச் செய்துகொடுத்தவன் கையிலிருந்து அதை வாங்கிக்கொண்டால்மட்டும் அந்த தஸ்தாவேஜ் செல்லும். (கஅ௫௫ஞூ-நம்-அசு-கஅ௫சு ஞூ-நம்-களக-கஅசா0ஞூ-ப-எசு.)

சாஉ. ஒரு ஆதரவு உண்மையானதென்று பிரதிவாதிகளில் ஒருவன் ஒப்புக்கொண்டாலுங்கூட, அது பொய்யாயிருந்துபடிக்கப்பட்டதென்று ருஜுவானல் அந்த ஆதரவைக் கோர்ட்டார் ஒருவிதத்திலும் ஊர்ஜிதப்படுத்தக்கூடாது. (கஅ௫அஞூ-ப-உகூ௫.)

சாகூ. ஒரு ஆதரவு பலவந்தத்தின்மேல் வாங்கப்பட்டால் மட்டும் செல்லாது. அந்த ஆதரவை எழுதிக்கொடுத்தவன் தான் மனப்பூர்வமாக எழுதிக்கொடுக்கவில்லையென்றும் வேறொரு காரணத்துக்காக எழுதிக்கொடுத்ததாகவும் ஆட்சேபித்தால் அந்த ஆட்சேபம் நிருபயோகம். (கஅ௫சுஞூ-நம்-க00-ப-௨சா0.)

சாச. ஒரு ஆதரவைக் கிரமப்படி எழுதிக்கொடுத்தவன் அதின் நிபந்தனைகளின் பிரகாரம் நடக்கக் கடனாளியாயிருக்கிறன். (கஅசா0ஞூ-நம்-ச-ககூ௫-ப-உஉ௫-உ௫௫.)

சா௫. ஒரு ஆதரவில் தொகைபற்றிக்கொண்டு எழுதிக்கொடுக்கப்பட்டதாகக் கண்டிருந்தால் அந்தத் தொகை கொடுபட்டதற்கு அந்த ஆதரவே பிரத்தியட்சசாட்சியம். அந்த விஷயத்துக்கு வேறே சாட்சியம் வேண்டியதில்லை. (கஅ௫சஞூ-நம்-அசு.)

சாசு. ரிவினியூ நடவடிக்கை கேவலம் அநுபவத்துக்குமட்டும் சாட்சியமேதவிர நிலத்தின் பாத்தியத்துக்காவது ஸ்வதந்தர அநு

போகத்துக்காவது சாட்சியம் ஆகமாட்டாது. (க அ௬ ௦ ஹு-நம்-உ௩ரு-க அ௬ க ஹு-ப-௩ரு.)

௬எ. உடன்படிக்கைப்படி நிலங் கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தான். அந்த ஆதரவு பலாத்காரமாய் வாங்கப்பட்டதாகப் பிரதிவாதி கட்சிபேசினன். வாதியின் துர்ப்போதனையினல் பிரதிவாதிமேல் தண்டிக்கத்தக்க குற்றம் சாட்டப்பட்டு அவன் பாராவில் இருக்கும்போது ஷை உடன்படிக்கை பிறந்ததினலும் அது பிறந்து சிலநாளைக்குப்பிற்பாடு பிரதிவாதி நிரபராதி என்று விடுதலையாயிருப்பதாலும் பிரதிவாதிக்கு வாதி பீதியை உண்டுபண்ணி ஷை ஆதரவை வாங்கி இருப்பதாகவும் ஆகையால் அது நிஷ்பலமென்றும் வாதி வழக்கு சமாப்தஞ் செய்யப்பட்டது. (க அ௬ க ஹு-நம் ரு-ப-எக.)

௬அ. பிரதிவாதி குற்றஞ் சாட்டப்பட்டுப் பாராவில் இருக்கும்போது அவனல் எழுதிக்கொடுக்கப்பட்ட ராஜிநாமா செல்லாது. (க அ௬ க ஹு-நம்-அ-ப-எ௨.)

௬௯. ஒரு ஆதரவு ஒரு பக்கத்தில் கொஞ்சம் கிழிக்கப்பட்டு அதை எவன் எழுதிக்கொடுத்தானே அவன்கையில் இருக்குமானல் அது ரத்தாய்ப்போய்விட்டதென்பதற்கு அதுவே திருஷ்டாந்தம். அதை அவன் துராகிருதமாய்க் கைப்பற்றிக்கொண்டதாக எதிர்கட்சிக்காரன் வாதிந்தால் அந்த துராகிருதத்தை அவன் நிரூபிக்க வேண்டும். அவன் அந்தப்படி நிரூபிக்கத்தப்பிப்போனல் ஷை ஆதரவு கிரமமாய்ப் பரிஹரிக்கப்பட்டதாகவே ஊகிக்கப்படும். (க அ௬ ௦ ஹு-நம்-டு அ௯-க அ௬ க ஹு-ப-௯௰.)

எ௦. ஒரு ஆதரவை எவன் தாக்கல்செய்தானே அவன் அந்த ஆதரவிற் கண்ட ஏற்பாட்டுக்குச் சம்மதித்தவனென்று நிச்சயிக்க வேண்டும். (க அ௬ ௦ ஹு-நம்-க௨-க அ௬ க ஹு-ப-கக்க.)

எக. ஒரு ஆதரவை எழுதிக்கொடுக்கிறவர்கள் அந்த ஆதரவில் எந்த இடத்தில் கையெழுத்துவைக்கிறது வழக்கமோ அந்த இடத்தில் ஒருவன் கையெழுத்துவைத்து வேறே பிரத்தியேகமான ஸ்தானத்தில் சாட்சிகளின் கையெழுத்து வைக்கப்பட்டிருந்தால் அவன் அந்த ஆதரவினிபந்தனைக்கு உட்படவேண்டும். தான் சாட்சி கையெழுத்துவைத்ததாக அவன் சொல்லும் பிரதி நியாயம் அப்பிரயோஜகம். (க அ௬ க ஹு-நம்-௯-ப-க௩ச.)

எஉ. இருவர்பெயரால் கிரயசாஸநம் பிறந்திருக்கிறபட்சத்தில் அவர்களில் ஒருவனே நாமமாத்திரமாய் சாஸநத்தில் கண்டிருப்பதாகவும் அவனுக்கும் அந்தக் கிரயத்துக்கும் சம்பந்தம் இல்லையென்றும் மற்றொருவன் சொல்லுங் கட்சியைப்பற்றி வாசாசாட்சியத்தை அங்கீகரிக்கக்கூடாது. (கஅருசு ஹ-நம்-கஉஉ.)

எங. தஞ்சாவூர் அரண்மனையிலிருந்து வரப்பட்ட யாதாஸ்து றிப்போர்ட்டு முதலான தஸ்தாவேஜுகள் நம்பிக்கைக்குப் பாத்திரமற்றவைகள். (கஅசஎ ஹ-நம்-சுஅ.)

எச. கலெக்டர் முன்பாக வாங்கப்பட்ட வாக்குமூலங்களைக் கோர்ட்டார் சாட்சியமாக அங்கீகரித்து அந்த வாக்குமூலங்களையே முக்கியமாக ஆதாரப்படுத்திக் கோர்ட்டார் தீர்மானஞ்செய்யக்கூடாது. (கஅருஉ ஹ-நம்-எரு.)

எரு. ஒருவன் தனக்குள்ள முக்கியசாட்சியத்தை வெளிக்குக் கொண்டுவராமல் அவனே மறைத்தால் அவன் கட்சி அபத்தமயம் என்பதற்கு அதுவே பலமான ஊஹாஸ்பதமாகும். (கஅசுo ஹ-நம்-ககஉ-ப-கசஎ.)

எசு. பிரதிவாதியால் தாக்கல்செய்யப்பட்ட தஸ்தாவேஜு சாட்சியலோபமாகவும் பிரதிவாதிக்கு நிஷ்பிரயோஜநமாகவும் போய்விட்டபோதிலும் அந்த ஆதரவினால் வாதியின் கட்சிக்கு சாதகமாய் உண்டாகப்பட்ட அநுமாநத்தின் பிரயோஜநத்தை அவன் அடையப் பாத்தியஸ்தனாயிருக்கிறான். (கஅகரு ஹ-நம்-ச.)

எஎ. கட்சிக்காரர்கள் சர்க்கார் ஆதரவுகளை வாங்கி தாக்கல்செய்வதற்காக அவர்களுக்குக் கோர்ட்டார் போதுமான சாவகாசங் கொடுக்கவேண்டும். (கஅருஅ ஹ-நம்-உoரு-ப-உஎஉ.)

எஅ. பலநிலங்களுக்குள் சொற்பநிலத்தை ஒருவன் வாஸ்தவமாய் அநுபவித்ததாக ருஜுப்படுத்துவது கஷ்டமானபடியால் அந்தவிஷயத்தில் பைமாஷ்கணக்கை அநுபோக திர்ஷ்டாந்தமாக ஏற்றுக்கொள்ளலாம். (கஅருஅ ஹ-நம்-சுக-ப-கஎo.)

எகூ. வியக்தமாய்ப் பேசப்பட்ட ஒரு விவகார சங்கதியைப்பற்றி விசாரணை நடந்து சித்தாந்தஞ்செய்யப்பட்டு அந்த சித்தாந்தத்தின் மேல் அப்பீலும் செய்யப்படாமல் இருந்தால் பிற்பாடு அந்த சங்கதியைப்பற்றி ஆட்சேபம் செய்யக்கூடாது. (கஅஉச ஹ-நம்-ரு.)

௮0. ஒரு ஆதாரவானது அதை எழுதிக்கொடுத்தவனுடைய ஸ்வயபாஷையில் எழுதப்படாமலிருந்தாலுங்கூட அது தத்துவமென்று ருஜுவானால் அவன் அந்த ஆதாரவுக்கு உட்படவேண்டும். (௧௮௫௯ ௵-நம்-௧௨௪-ப-௨௭௩.)

௮௧. உபயவாதிகளுக்கும் பொதுவான சாட்சிகளின் ருஜுவை இதரசாட்சிகளின் ருஜுவைப்பார்க்கிலும் அதிசிலாக்கியமாகவும் நம்பிக்கைக்கு யோக்கியமாகவும் எண்ணவேண்டும். (௧௮௫௮ ௵ நம்-௧௫௯-௧௮௫௯ ௵-ப-௨௨௯.)

௮௨. நிர்தோஷமான ஏகசாட்சியின் ருஜு ஒரு கட்சியை ஸ்தாபிக்கப் போதுமானதுதான்-அதற்கு உபபலமான ருஜுவேண்டியதில்லை. (௧௮௬0 ௵-நம்-௮-ப-௧0௭.)



இவைகளைப்பார்க்க.

---

## சாம்பார்ட்டி.

௧. பிரதிவாதி போக்கியம்வாங்கி அநுபவிக்கிற நிலத்தை அதின் ஸ்வானிடத்தில் தான் கிரயம் வாங்கினதாகவும் பிரதிவாதி போக்கியத்தொகையைப் பெற்றுக்கொண்டு நிலத்தை விடவேண்டுமென்றும் வாதி தொடர்ந்தான். ஸ்வான்காரன்வசத்தில் இல்லாத நிலத்தை அவனிடத்தில் வாதி கிரயம்வாங்கினதால் அவன் வழக்கு சாம்பார்ட்டி தோஷத்துக்கு உட்பட்டதென்று சீவில் ஜட்ஜ் வாதியின் வழக்கைத்தள்ளினார். ஸ்வான்காரனுடைய அநுபவத்தில் நிலம் இல்லாமல் இருந்தபோதிலும் அவன் அந்த நிலத்தை விக்கிரயம் செய்

யலாமென்றும் வாதி வழக்கைச் சாம்பார்ட்டி தோஷகிரஹணம் பிடிக்கமாட்டாதென்றும் சதர்க்கோர்ட்டாரவர்களால் நிர்த்தாரணஞ் செய்யப்பட்டது. (கஅ௫௫ ௵-ாம்-கக-ப-கஈ.)

௨. நரசிம்மசெட்டியிடத்தில் பிரதிவாதி சில தொகை பெற்றுக்கொண்டு அதற்காக அவனுடைய ஜமீன்தாரியை ஷை நரசிம்மசெட்டிக்கு. க௦-வருஷம் வரையில் குத்தகை கொடுக்கிறதென்று பிரதிவாதி உடன்படிக்கைசெய்தான். ஷை தொகையை நரசிம்மசெட்டி கொடுக்கிறதற்கு முன் பிரதிவாதி வேறொருவனிடத்தில் பணம் பற்றிக்கொண்டு அவனுக்குத் தன்னுடைய ஜமீன்தாரியைக் குத்தகை கொடுத்துவிட்டான். ஷை நரசிம்மசெட்டிக்குப் பிரதிவாதி செய்த உடன்படிக்கைப்படி நிறைவேறவேண்டியதற்காக ஷை நரசிம்மசெட்டி செய்த வியாச்சியத்தைக் கீழ்க்கோர்ட்டார் தள்ளிப் பிரதிவாதியின் உடன்படிக்கைப்படி நடக்க அவன் தவறிப்போனதினால் நரசிம்மசெட்டிக்கு நேரிட்ட நஷ்டத்தைப்பற்றி அவன் வேறே வியாச்சியம் செய்துகொள்ளும்படி உத்தரவுகொடுத்தார்கள். பிற்பாடு ஷை நரசிம்மசெட்டி இறந்துபோய் அவனுடைய பாத்தியஸ்தன் ஷை நஷ்டத்துக்காகத் தொடரும்படியான பாத்தியத்தைத் தனக்குக் கிரயஞ்செய்துவிட்டதால் அந்த நஷ்டத்தொகை பிரதிவாதி இடத்தில் வாங்கித்தரவேண்டுமென்று வாதி வியாச்சியஞ்செய்தான். அந்த நஷ்டத்துக்காக வாதிக்குப் பிரதிவாதி ரூ-ச0000-கொடுக்கும்படி மதுரை சீவில் கோர்ட்டாரால் தீர்ப்புசெய்யப்பட்டது. அதைப்பற்றிப் பிரதிவாதி சதர்க்கோர்ட்டாரவர்களுக்கு அப்பீல் செய்துகொண்டான். சதர்க்கோர்ட்டார் அடியிற்கண்ட காரணங்களால் வாதி வழக்கைத்தள்ளினார்கள். அந்தக் காரணங்களாவன, வாதியின் வழக்கு சாம்பார்ட்டி என்கிற வியாச்சிய பாத்திய விக்கிரயதோஷத்துக்கு உட்பட்டதாயிருக்கிறது. அந்தப்பாத்தியத்தை விக்கிரயஞ்செய்தவனும் வாங்கினவனும் வியாச்சியத்தினால் உண்டாகத்தக்க பிரயோஜனங்களை பாகித்துக்கொள்ளுகிறதென்று உடன்படிக்கை செய்துகொள்ளாமல் இருந்தாலுங்கூட வாதியின் வழக்கு ஷை தோஷத்தினால் பாதிக்கப்பட்டதாகவே யிருக்கின்றது. அந்தத் தோஷம் இருப்பதாகப் பிரதிவாதி அசல் கோர்ட்டில் பேசாமல் இருந்தாலுங்கூட அந்தத் தோஷத்தைப்பற்றி யோசித்து நியாயப்பிரமாணத்தை நிலை நிறுத்தவேண்டியது சதர்க்கோர்ட்டாருக்குக் கடன். (கஅ௫எ ௵-ாம்-௫எ-கஅ௫அ ௵-ப-௪க.)

௩. ராஜா பீபி இடத்திலும் அவளுடைய பேரனை காதர்சாயபு இடத்திலும் முதற்பிரதிவாதியின் தகப்பன் குத்தகைவாங்கி அநுபவித்த நிலத்தை அவனுக்குச் சொந்தம்போல ரிவினியூ அதிகாரஸ்தர்கள் ஏலம் போட்டுவிட்டதாகவும் அந்த நிலத்தை ஷை ராஜாபீபியும் அவள் பௌத்திரனும் தனக்குக் கிரயஞ்செய்துகொடுத்துவிட்டதால் அந்தநிலம் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வழக்கிட்டான். க0-ஷு காலம் ஷை ராஜா பீபிவகையரா விவாதநிலத்தை அநுபவியாதபடியாலும் அந்த-க0-ஷுகாலமும் ஷை ஏலத்தை ரத்துசெய்யவேண்டியதற்காக ரிவினியூ அதிகாரஸ்தர்களிடத்தில் ஷை ராஜா பீபிவகையரா பலவித பிரயத்தனங்கள்செய்தும் பலிக்காமல் அவர்களைக் கிரமவியாச்சியஞ் செய்துகொள்ளும்படி உத்தரவுகொடுத்த பிற்பாடு அவர்கள் ஷை நிலத்தை வாதிக்குக் கிரயம் செய்திருப்பதாலும் வாதியின் வழக்கு சாம்பார்ட்டி என்னும் வியவகாரபாத்திய விக்கிரயதோஷகிரஸ்தமானதென்று திரஸ்கரிக்கப்பட்டது. (கஅ௫அஷு-நம்-சச-ப-க௫க.)

ச. ௩-ம் பிரதிவாதிக்கு ஸ்வந்தமான நிலத்தை அவன்வாயுடன்படிக்கை மூலமாக வாதிகளுக்குக் கொடுத்துவிட்டதாகவும் அந்த நிலத்தை போக்கியமாயனுபவிக்கிற முதற் பிரதிவாதியிடத்திலிருந்து அந்த நிலம் கிடைக்கவேண்டுமென்றும் வாதிகள் வியாச்சியம் செய்தார்கள். ஷை நிலத்தைப்பற்றி ௩-ம் பிரதிவாதி வியாச்சியம் செய்யவேண்டியவனாயிருக்க அந்த வியாச்சிய பாத்தியத்தை வாதிகள் பெற்றுக்கொண்டிருப்பதால் அவர்களுடைய வழக்கு சாம்பார்ட்டிதோஷ பரிதமானதென்று நிக்கிரகிக்கப்பட்டது. (கஅ௫அஷு-நம்-கக௫-கஅ௫கஷு-ப-அ.)

௫. முதற் பிரதிவாதி புருஷனுக்காகப் பலவியாச்சியங்களில் வக்கீலாயிருந்த பட்டாபிராமையனுக்குக் கிடைக்கவேண்டிய பீசுகளை அந்தப்பட்டாபிராமையன் இறந்த பிறகு அவனுடைய பாத்தியஸ்தன் வாதிக்கு மேடோவர் செய்துகொடுத்துவிட்டதால் அந்தப் பீசுத்தொகை வரவேண்டுமென்று வாதி வியாச்சியப் பிரயோகஞ் செய்தான். அந்த வியாச்சியம் பிரதிவாதிகளால் ஆட்சேபிக்கப்பட்டது. ஷை பட்டாபிராமையனுக்குக் கிடைக்கவேண்டிய பீசுத்தொகை இவ்வளவென்று நிஷ்கரிஷையில்லாமலும் நிராதரவாகவும் இருப்பதாலும் தனக்குக் கிடைக்கவேண்டிய பீசை வக்கீல் வேறொருவனுக்கு மேடோவர் செய்வது சாம்பார்ட்டி தோஷத்துக்குட்பட்ட

தென்றும் வாதி வழக்குதள்ளப்பட்டது. (க௮௬௦ௐ-நம்-கக௭-ப-௨௬௬.)

௬. சேஷய்யன் அவனுடைய நிலத்தை முப்பது வருஷத்துக்கு முன் முதற் பிரதிவாதியின் பிதா மகனுக்குப் போக்கியம் வைத்ததாகவும் அந்த நிலத்தைச் சேஷய்யன் பாரியை தனக்குக் கிரயஞ்செய்திருப்பதால் அந்தநிலந் கிடைக்கவேண்டுமென்றும் வாதி விவாதித்தான். அந்தநிலத்துக்குத் தாங்களே பூர்ணஸ்வாமிகளென்று பிரதிவாதிகள் பிரதிவாதஞ் செய்தார்கள். அசல்கோர்ட்டார் வாதி பட்சந் தீர்ப்புச் செய்தார்கள். சாம்பர்ட்டிதோஷ நிபஞ்சொல்லி அப்பீல்க்கோர்ட்டார் வாதி வழக்கைத் தள்ளுபடிசெய்தார்கள். வியாச்சியஞ் செய்யும்படியான பாத்தியத்தைமட்டும் வாதி கிரயம் வாங்கவில்லையென்றும் பூர்ணமான ஸ்வத்துவ பாத்தியத்தை அவன் கிரயம்வாங்கியிருப்பதால் அவனுடைய வழக்கு சாம்பர்ட்டிதோஷரஹிதமானதென்றும் சதர்க் கோர்ட்டார் சித்தாந்த நிர்ணயஞ் செய்தார்கள். (க௮௬௦ௐ-நம்-ககக-ப-க௪௬.)

௭. ஒரு ஸ்வத்தைக் கிரயம் வாங்கினவன் உடனே அதை ஸ்வாதீநஞ் செய்துகொள்ளாமல். க௦-ௐகாலம் அதின் வருமானத்தைமட்டும் பற்றிவந்து பிற்பாடு அவன் அந்தச் சொத்தை வேறே யாருக்காவது விக்கிரயஞ்செய்தாலுங்கூட அந்த விக்கிரயம் சாம்பார்ட்டிதோஷக் கிரஸ்தமாகமாட்டாது. (க௮௬௦ௐ-நம்-௬௬-ப-க௨௮.)

ஒற்றி-௪௪-வது விதியைப்பார்க்க.

---

## சித்தாந்தமுந் தீர்ப்பும்.

க. ஒரு நியாயாதிபதி ஒரு வியாச்சியத்தை விசாரணைசெய்து அதில் அவருடைய சித்தாந்தத்தைக் கோர்ட்டில் பிரசித்தப்படுத்தி சித்தாந்தத்தை எழுதிவைக்காமல் அவருடைய தீர்மானத்துக்குச் சுருக்கமான ஒரு குறிப்பைமட்டும் எழுதிவைத்துப் பிற்பாடு அவர் அந்தக்கோர்ட்டை விட்டுப்போய்விட்டால் அவருக்குப் பதிலாய் வந்த நியாயாதிபதி அந்தவியாச்சியத்தை மறுபடியும் பரிசீலனை செய்து வேறே தீர்மானஞ்செய்யவேண்டும். (௪-பு-க௮௬கௐ) ஜூன்மீ ககஉ.)

௨. ஒரு சீவில் ஜட்ஜ் சித்தாந்தங்களை யெழுதி அவைகளைக் கோர்ட்டில் அறிவிக்காமல் அந்தக்கோர்ட்டை விட்டு அப்பாற்போய்விட்

டால் அவருக்குப்பதிலாய் வந்தவர் அந்தச் சித்தாந்தங்களைப் பிர சித்தஞ் செய்யக்கூடாது. அவர் மறுபடியும் அந்த வியாச்சியங் களை விசாரித்துத் தீர்மானஞ் செய்யவேண்டும். (ச-பு-க௮சகூ௵ ஆகஸ்ட்டுமீ எ௨.)

௩. ஒரு நியாயாதிபதி இறந்துபோய் அவருடைய சித்தாந்தங் கள் நகலெழுதப்படாமலும் அபூர்ணமாகவும் வாசித்தறியக்கூடாத வைகளாகவும் இருந்தால் அவருக்குப்பதிலாய் வந்தவர் நூதன மாய்த் தீர்ப்புகள்செய்யவேண்டும். (ச-லெட்டர்-க௮௩௫௵ அக் டோபர்மீ ௫௨.)

௪. சித்தாந்தங்களை யெழுதிக் கோர்ட்டில் தெரியப்படுத்தின நி யாயாதிபதி அவைகளிற் கையெழுத்து வைக்காமல் இறந்துபோனா லும் அல்லது அந்த இடத்தை விட்டுப்போய்விட்டாலும் அந்தத் தீர்ப்புகளில் அவருக்காக அவருக்குப்பதிலாய் வந்தவர் கையெ ழுத்துவைக்கலாம். (ஷை.)

௫. சித்தாந்தத்தைப் பந்திபந்தியாக எழுதி ஒவ்வொரு பந்திக் கும் இலக்கம் போடவேண்டும். (ச-பு-க௮௫0௵ ஏப்பிரல்மீ உகூ௨.)

௬. அப்பீல் சித்தாந்தத்தில் வாதி பிரதிவாதியென்று பேச வேண்டுமேயல்லாமல் அப்பீல் வாதி அப்பீல் பிரதிவாதியென்று சொல்லக்கூடாது. (ச-பு-க௮கூ0௵ டிசம்பர்மீ ௫௨.)

எ. யாதொரு வியாச்சியத்தில் சதர்க்கோர்ட்டு நியாயசாஸ்திரி களுடைய அபிப்பிராயம் வாங்கப்பட்டிருந்தால் சாஸ்திரக்கேள்வி யையும் உத்தரவையும் கோர்ட்டாருடைய சித்தாந்தத்தில் எழு தியிருக்கவேண்டும். (ச-பு-க௮சகூ௵ ஆகஸ்ட்டுமீ க௩௨.)

௮. ஒரு தீர்ப்பின்மேல் எதிரடையான பல அப்பீல்கள் செய் யப்பட்டிருந்தால் அந்த அப்பீல்களுக்கு ஒரே சித்தாந்தம் போது மானதாயிருக்கின்றது. ஆனால், அந்த ஒவ்வொரு அப்பீலிலும் பே சப்பட்ட வியவகார விஷயங்களையெல்லாம் ஷை சித்தாந்தத்தில் எடு த்துப்பேசவேண்டும். (ச-பு-க௮௫௮௵ ஜனுவரிமீ க௮௨.)

௯. பல வியாச்சியங்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டதாக வும் ஒரே கட்சிக்காரர்களாகவும் ஒரு வியாச்சியத்தின் சித்தாந்தம் மற்ற வியாச்சியங்களுக்கும் உபயோகப்படத்தக்கதாகவும் இருக்கிற பட்சத்தில் ஒரு வியாச்சியத்தில் மட்டும் சித்தாந்தம் விவரமாயெ

ழுதி அதிற்கண்ட முகாந்தரங்கள் மற்ற நம்பர்களின் சித்தாந்தங்களில் சுருக்கமாயெழுதப்படவேண்டும். (ச-அ-வி.)

க0. புநர் விசாரணைக்காக அனுப்பப்படுகிற வியாச்சியங்களில் முதல் விசாரணைத் தீர்ப்பைப்பார்க்கவேண்டிய அவசியமில்லாதபடிக்கு மறுவிசாரணைத் தீர்ப்புகள் பூரணமாயிருக்கவேண்டும். (ச-பு-கஅருங-ஹு பெப்பரவரிமீ உஉ.)

கக. கஅருகூ-ஹு-அ-வது ஆக்ட்டு ருகூ-வது பிரிவுப்படி அர்த்தம் விளங்கும்படியான விதமாய் இங்கிலீஷ் எழுதத்தெரிந்த ஒவ்வொரு ரேட்டீவ் பிரின்சிபால் சதரமீனும் அப்பீல் சித்தாந்தங்களையெல்லாம் இங்கிலீஷ் பாஷையிலெழுதக் கடமைப்பட்டிருக்கிறார். (ச-பு-கஅசுக-ஹு ஜனுவரிமீ கசஉ.)

கஉ. இங்கிலீஷ் பாஷையைத் தெளிவாயெழுதத் திறமையுள்ள யாதொரு ரேட்டீவ் ஜட்ஜ் ஷை ஆக்ட்டு கஅச-வது பிரிவுப்படி அந்தப்பாஷையில் அவருடைய சித்தாந்தங்களை யெழுதலாம். (ஷை.)

கங. யூரோப்பியர்கள் கட்சிக்காரர்களாயிருக்கிற வியாச்சியங்களை நியாயப்படிக்கும் கிரமப்படிக்குந் தீர்மானிக்கவேண்டுமே அல்லாமல் இங்கிலீஷ் சாஸ்திரப்படி தீர்மானிக்கவேண்டியது அகத்தியம் அல்ல. (ச-பு-கஅருஎ-ஹு நவம்பர்மீ கஎஉ.)

கச. ஒருவியாச்சியத்தில் பிரதிவாதிவசத்தில் இருக்கிறசொத்து அந்த வியாச்சியத்தில் சம்பந்தப்படாதவர்களுக்குச் சொந்தமானதென்று காணப்பட்டாலுங்கூட அந்தச்சொத்தில் எவ்வளவாவது அவர்களுக்குக் கிடைக்கும்படி தீர்ப்புசெய்யக்கூடாது. (ச-அ-வி.)

கரு. இரண்டு மார்க்கங்களில் கட்சிக்காரர்களுக்கு இஷ்டமான எந்தமார்க்கத்தையாவது அவர்கள் அநுஷ்டிக்கலாமென்று சித்தாந்தங்களிற் கண்டெழுதுவது கோர்ட்டு சம்பிரதாயங்களுக்கு விரோதமாயிருக்கின்றது. வாதிக்குப் பிரதிவாதி ஜீவனம்சமாவது அல்லது குடும்பச்சொத்திற் பாகமாவது கொடுக்கவேண்டியதென்று தீர்ப்பிற் சொல்வதுதான் மேற்கண்ட நிஷேதத்துக்குட்பட்டது. (கஅரு0-ஹு-நம்-கஎ-கஅருக-ஹு-ப-கஙக.)

கசு. சாஸ்திர விஷயத்தைத்தவிர வியவகாரப் பத்திரிகைகளிற் சொல்லப்படாத வேறே யாதொரு விஷயத்தைச் சித்தாந்தத்திற் பேசக்கூடாது. (கஅருக-ஹு-நம்-சச-ப-கஉரு.)

கள. யாதொரு சொத்துக்கு வாதி ஸ்வான்காரன் என்பதைப் பற்றிப் பிரதிவாதியின் விவரப்பத்திரிகையில் ஆட்சேபிக்காமல் இருந்தால் அந்த விஷயத்தைப்பற்றிக் கோர்ட்டார் சித்தாந்தத்தில் ஆட்சேபிக்கக்கூடாது. (ஷை.)

கஅ. நியாயாதிபதிகள் அவர்களுடைய தீர்ப்புகளில் கட்சிக்காரர்களைத் தூஷிக்கக்கூடாது.

கசு. ஒருவன் பொய்யான ஆதரவையும் பொய்ச்சாட்சிகளையும் கற்பித்திருப்பதாக நிதரிசனமானால் அவனைக் கோர்ட்டார் கிரிமினல் கோர்ட்டுக்கு அனுப்பவேண்டுமேதவிர அவன் எப்போதும் பொய் ஆதரவுகளையும் பொய்ச்சாட்சிகளையும் உண்டுபண்ணுகிறவனென்று தீர்ப்பில் தூஷிக்கக்கூடாது. (கஅருக ஞூ-நம்-௩உ.)

உ0. தீர்ப்பின் ஆதாரங்களையெல்லாங் கட்சிக்காரர்களுக்குத் தெரிவித்திருப்பதால் அந்த ஆதாரங்களைச் சித்தாந்தத்திற் பேசவேண்டியதில்லை யென்று சித்தாந்தத்தில் அந்த ஆதாரங்களைப் பேசாமல் விட்டுவிடுவது அசந்தர்ப்பம். (கஅருக ஞூ-நம்-ரு0.)

உக. தன்னுடைய மகளைப் பிரதிவாதி கலியாணஞ் செய்தபோது அவளுக்குச் சில பூஸ்திதிகள் தான் கொடுத்ததாகவும் அவள் அபுத்திரவதியாயிறந்துபோனபடியால் அந்த ஸ்திதிகள் கிடைக்க வேண்டியதென்றும் வாதி வழக்கிட்டான். தன் பெண்சாதியின் சொத்துக்குத் தானே பாத்தியஸ்தனென்று பிரதிவாதி எதிர் கட்சி பேசினான். விவாதஸ்திதியில் வாதி பாதியும் பிரதிவாதி பாதியும் எடுத்துக்கொள்ளும்படி சீவில் ஜட்ஜ் தீர்மானித்தார். அந்தத் தீர்மானம் ராஜிநாமாவுக்குச் சமானமாயிருப்பதால் கட்சிக்காரர்களுடைய சம்மதம் இல்லாமல் சீவில் ஜட்ஜ் அப்படிப்பட்ட தீர்மானஞ் செய்தது சரியல்லவென்று சதர்க்கோர்ட்டாரால் அந்த வியாச்சியம் மறுவிசாரணைக்கனுப்பப்பட்டது. (கஅருஉ ஞூ-நம்-உ0.)

உஉ. உபயவாதிகளும் ருசுப்படுத்தவேண்டிய விஷயங்களை ஒரு தீர்ப்பில் எழுதப்படாமலிருந்தால் அந்தத் தீர்ப்பு குறைவுள்ளதாம். (கஅருஉ ஞூ-நம்-உஉ.)

உ௩. வியாச்சியந் தாக்கலானபிற்பாடு வாதிக்குப் பிரதிவாதி சில தொகை கொடுப்பதாக வாக்குத்தத்தஞ் செய்தானென்கிற ஒரே காரணத்தினால் வாதிக்குப் பிரதிவாதி தொகை கொடுக்கும்படி தீர்மானிக்கக்கூடாது. (கஅருஉ ஞூ-நம்-கஉ.)

உச. பஞ்சாயத்தாருடைய தீர்மானத்தை ஆதாரப்படுத்திக் கோர்ட்டார் தீர்ப்புசெய்கிறதாயிருந்தால் ஷை பஞ்சாயத்தாருடைய தீர்மானத்துக்குள்ள ஆதாரங்களைக் கோர்ட்டாருடைய தீர்ப்பிலும் பேசவேண்டும். (க௮௫௩ஹ-நம்-எ.)

உ௫. ஒருவன் தனித்தனியே செயயவேண்டிய வியாச்சிய விஷயங்களை ஒரே வியாச்சியமாகச்செய்து அதைக் கோர்ட்டாருங் கிரமப்பிசகாய் அங்கீகரித்துத் தீர்ப்புசெய்தால் அந்தக் கிரமப்பிசகான தீர்ப்பின்மேல் அப்பீல் செய்யாத கட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்டவரையில் அந்தத் தீர்ப்பு உறுதியுள்ளதுதான். (க௮௫௫ஹ-நம்-கச௩.)

உ௬. அசல்த்தீர்ப்பில் அப்பீல்செய்யப்பட்ட பாகத்தை மாற்றி அப்பீல்செய்யப்படாத பாகத்தை உறுதிசெய்யப்பட்டதென்று ஒரு பிரின்சிப்பால் சதரமீனுடைய தீர்ப்பில் எழுதப்பட்டிருந்ததினால் அந்தத்தீர்ப்பு அசந்தர்ப்பமானதென்றும் தீர்ப்புகள் மிகவும் தெளிவாகவும் பரிஷ்காரமாகவும் எழுதப்படவேண்டுமென்றும் சதர்க் கோர்ட்டாரவர்களால் ஆக்ஞாபிக்கப்பட்டது. (க௮௫கஹ-நம்-௬௩.)

உஎ. தீர்ப்புகளில் பல ஆதரவுகளைக்குறித்துப் பேசப்பட்டால் ஒவ்வொரு ஆதரவினுடைய இலக்கம் முதலான அடையாளம் இன்னதென்று விவரிக்கவேண்டும். (க௮௫கஹ-நம்-கக.)

உ௮. அசல்த்தீர்ப்பு உறுதிசெய்யப்பட்டது அல்லது மாற்றப்பட்டது என்று அப்பீல்த்தீர்ப்பில் விவரமாய்ச்சொல்லவேண்டியது கிரமமேதவிர அப்பீலை உறுதிப்படுத்தப்பட்டதென்று அப்பீல் தீர்ப்பில் எழுதக்கூடாது. (க௮௫கஹ-நம்-ச௬.)

உ௯. அசல்த்தீர்ப்பில் பேசப்பட்ட முக்கியமான சகல முகாந்தரங்களையும் அப்பீல்க் கோர்ட்டார் பூர்ணமாயெடுத்துக்காட்டி அந்த முகாந்தரங்களின்மேல் அப்பீல்க் கோர்ட்டாருக்குள்ள சகல அபிப்பிராயங்களையும் அப்பீல்த் தீர்ப்பில் தெரியப்படுத்தவேண்டும். (க௮௫கஹ-நம்-௩௯.)

௩0. வியாச்சியத்துக்கு சம்பந்தமில்லாத ஒரு ஆதரவின் உண்மையைப்பற்றித் தீர்ப்பில் சொல்லப்பட்ட ஆட்சேபனை அநியாகவும் அநுபயோகமாகவுமிருக்கிறது. (க௮௫௯ஹ-நம்-க௮ச-க௮௯0 ஹ-ப-௩ச.)

ங௧. ஒருதரந் தீர்ந்துபோன விஷயத்தைப்பற்றி மறுபடியுஞ் செய்யப்பட்ட புநர்வியாச்சியத்துக்கு முந்தின தீர்ப்பு தடையாயிருக்கின்றது. (க௮௫௬ஹ-ஙம்-௧௨ங.)

ங௨. இறந்துபோன தன்னுடைய பந்துவின் ஸ்திதி கிடைக்கவேண்டுமென்று வாதி வழக்கிட்டான். இறந்துபோனவன் வேறொரு பந்துவை ஸ்வீகாரஞ்செய்துகொண்டதாக ருஜுவானதினால் வாதி வழக்கு தள்ளப்பட்டது. அந்த ஸ்வீகார புத்திரன் இறந்தபிற்பாடு ஷை ஸ்திதிகளைப்பற்றி மறுபடியும் வாதி வழக்கு செய்வதற்கு முந்தினதீர்ப்பு தடையல்லவென்று உத்தரவுசெய்யப்பட்டது. (க௮௫௬ஹ-நம்-௬௪.)

ஙங. வாதி வழக்குக்குச் சாட்சியம் இல்லையென்கிற நிமித்தத்தினால் அந்தவழக்கு தள்ளப்பட்டிருந்தாலுங்கூட அந்தச் சொத்தைப்பற்றியே மறுபடியும் வாதி வழக்குச் செய்யக்கூடாது. (க௮௫எஹ-நம்-௪௮.)

ங௪. ஒருவனுடைய கட்சிக்கு விரோதமான வாக்கியங்கள் அடங்கியிருக்கிற தீர்ப்பின்மேல் அந்தக் கட்சிக்காரன் அப்பீல் செய்யாவிட்டால் அந்த வாக்கியங்கள் எப்போதும் அவனுக்குப் பிரதிகூலமாகவேயிருக்கும். (க௮௫௬ஹ-நம்-ங௧.)

ங௫. ஒருதரந் தீர்ந்துபோன விஷயத்தைப்பற்றி மறுபடியும் வாதிகள் வியாச்சியஞ் செய்தார்கள். அவர்களில் முந்தின வியாச்சியத்தில் வாதிகளாயிருந்தவர்களைத் தள்ளி அந்த நம்பரில் வாதிகளாயிராத மற்றவர்களுக்குத் தகுந்த ஆதாரமிருந்ததால் அவர்கள் பட்சத்தில், உ-வது வியாச்சியத்தை அங்கீகரிக்கப்பட்டது. (க௮௫எஹ-நம்-௨.)

ங௬. வியாச்சியத்தில் கேட்கப்பட்ட விஷயத்துக்குமேல் அதிகமாக ஒரு தீர்ப்பில் பேசப்பட்டிருந்தால் அவ்வளவுவரையில் அந்தத் தீர்ப்பை மேலான கோர்ட்டார் மாற்றிப்போடவேண்டும். (க௮௫௮ஹ-நம்-ஙஎ.)

ஙஎ. கலெக்ட்டர் முதலானவர்கள்பேரில் ஒருவனாற்செய்யப்பட்ட வழக்கில் கலெக்ட்டரைப் பிரதிவாதியாக ஏற்றுக்கொள்ளாமல் கோர்ட்டார் நீக்கியிருந்தால் பிற்பாடு அந்த வியாச்சியவிஷயத்தைப்பற்றியே கவர்ன்மென்டார் வியாச்சியஞ்செய்வதற்கு முந்தின தீர்ப்பு தடையாகமாட்டாது. (க௮௫௮ஹ-நம்-௨௦.)

ருஅ. முந்தின வியாச்சியத்தில் ஒருவன் கட்சிக்காரனுயிராவிட்டால் அவனுடைய குடும்பத்தாரிற் சிலர் முந்தின வியாச்சியத்தில் கட்சிக்காரர்களாயிருந்தாலுங்கூட அவன் அந்தச் சொத்தைப்பற்றி வேறே வியாச்சியஞ்செய்வதற்குத் தடையில்லை. (கஅஉக ஹு- நம்-கூ.)

ருகூ. வாதி பிரியாதிற்கண்ட சங்கதிகளின் பிரகாரம் அவனுடைய வழக்கைப்பற்றிக் கோர்ட்டார் சித்தாந்தஞ்செய்யவேண்டும். (கஅருஅ ஹு-நம்-கஉ.)

சo. எழுத்துமூலமான சாட்சியம் இல்லாமல் ஒருவன் தீர்ப்புக் காகத் தொகை செலுத்தியிருப்பதாகச்சொல்லுங் கட்சியைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (கஅருகூ ஹு-நம்-கருசு.)

சக. ஒரு வியாச்சியத்தில் ருஜுவாயிருக்கிற சங்கதிகளைக்கொண்டு ஒரு காரியம் நிஜமா பொய்யா என்பதைக் கோர்ட்டார் நிச்சயிக்கவேண்டுமே அல்லாது ருஜுவாகாத சங்கதிகளைக் கோர்ட்டார் அநுமானித்துக்கொண்டு அந்த அநுமானப்பிரகாரந் தீர்ப்புசெய்யக் கூடாது. (கஅசகூ ஹு-நம்-உச.)

சஉ. சித்தாந்தத்தில் பேசப்பட்ட முகாந்தரங்களைத் தீர்ப்பில் பேசக்கூடாது. கஅருகூ ஹு அ-வது ஆக்ட்டு, கஅசுகூ-வது பிரிவிலும் ருசுo-வது பிரிவிலுஞ் சொல்லப்பட்டிருக்கிற சங்கதிகளையும் செலவுகளின் விபரங்களையும் தீர்ப்பில் எழுதவேண்டும். (ச-பு-கஅசுo ஹு டிசம்பர்மீ ருஉ.)

சங. கையெழுத்து முத்திரை வைக்கப்படுகிற தேதியைத் தீர்ப்பில் எழுதவேண்டியதில்லை. என்றைத்தினஞ் சித்தாந்தம் அறிவிக்கப்படுகிறதோ அந்தத்தேதியைமட்டுந் தீர்ப்பில் எழுதவேண்டும். (ச-பு-கஅசுo ஹு டிசம்பர்மீ ருஉ.)

சச. சித்தாந்தம் அறிவிக்கப்பட்ட தேதிமுதல், ரு-தினங்களுக்குள் தீர்ப்பும் சித்தாந்தத்தின் அசற்பிரதியும் மொழிபெயர்ப்பும் பூர்ணமாகவேண்டும். (ச-அ-வி.)

சரு. வாதி தனக்குக் கொடுக்கவேண்டிய தொகையினுல் வாதியின் கடன் தீர்ந்துபோய்விட்டதாகப் பிரதிவாதி எதிர்கட்சி சொல்லி அதைக் கோர்ட்டாரும் ஒப்புக்கொண்டால் வாதியின் வழக்கைத் தள்ளிவிடவேண்டும். (கஅருஉ ஹு-நம்-ருசு.)

௪௬. ஒரு வியாச்சியத்தில் வாதி தனக்குக் கடன்கொடுக்கவேண்டுமென்று பிரதிவாதி எதிர்கட்சிசொல்லி அந்த எதிர்கட்சி ருசுவாகாமற்போனால் பிற்பாடு அந்தத் தொகையைப்பற்றிப் பிரதிவாதி செய்யும் வழக்கைக் கோர்ட்டார் தள்ளிவிடவேண்டும். (க௮ரு௪ ௵-நம்-கக.)

௪௭. எந்தக்காலத்தில் கணக்குத் தீர்ந்ததாக வாதி சொல்லுகிறானோ அந்தக்காலத்திற்குப்பின்பு மறுபடியுங் கணக்குத் தீர்த்துக்கொண்டதில் வாதி தனக்குத் தொகைகொடுக்கும்படி பாக்கியானதாகப் பிரதிவாதி கட்சிபேசினால் அது உண்மையா அல்லவாவென்பதைக் கோர்ட்டார் நிச்சயிக்கவேண்டும். (க௮ரு௩ ௵-நம்-௮.)

௪௮. ஒரு ராஜிநாமாவைக் கோர்ட்டார் அங்கிகரித்தால் அந்த ராஜிநாமாவின் வாசகப்படி தீர்ப்புசெய்யவேண்டுமே அல்லாது அதற்கு விரோதமாய்த் தீர்ப்புச்செய்யக்கூடாது. (௪-பு-க௮௩எ௵ மேமீ கஉ.)

௪௯. விவாதநிலந் தனக்குத் தானமாய்க் கிடைத்ததாக வாதி சொல்லி அந்தநிலம் வாதி தர்மகர்த்தா வேலைபார்க்கிற கோவிலுக்குத் தானஞ்செய்யப்பட்டதாக ருஜுவானால் வாதி வழக்கைத் தள்ளும்படி செய்யவேண்டும். (க௮௬௮ ௵-நம்-௪௩.)

௫௦. எந்தக்காலத்தின் வாடகை கிடைக்கவேண்டுமென்று வாதி தொடருகிறானோ அந்தக்காலமுழுவதும் வாதியின் வீட்டிற் பிரதிவாதி குடியிருந்தானா இல்லையா வென்பதைப்பற்றி ருஜு விளங்காமல் அதற்குமுன், உ-வியாச்சியங்களில் வாதிக்குப் பிரதிவாதி வாடகைகொடுக்கிறதென்று தீர்ப்புகள் செய்யப்பட்டிருக்கிற ஆதாரத்தைக்கொண்டுமட்டுந் தீர்ப்புசெய்யக்கூடாது. (க௮௫௦௵-நம்-கக.)

௫க. ஒருவியாச்சியத்தின் வியவகாரப்பத்திரிகைகள் முடிந்து ருஜுவாகவேண்டிய விஷயங்களைக் கோர்ட்டார் குறித்தபிற்பாடு வாதியுந் தானும் ராஜியாய்ப்போய் அவன் தனக்கு ஸர்வ வில்லங்கசுத்தியாய்ப் பற்றுச்சீட்டு கொடுத்துவிட்டதாய்ப் பிரதிவாதிசொல்லி அந்தப்பற்றுச்சீட்டையுங் கோர்ட்டில் தாக்கல்செய்தால் அந்தப் பற்றுச்சீட்டைப்பற்றிக் கோர்ட்டார் அந்த வியாச்சியத்தில் யோசித்து அதை ஆதாரமாய்க்காட்டித் தீர்ப்புசெய்யக்கூடாது. வியவகாரப்பத்திரிகையிற் கண்ட சங்கதிகளைமட்டும் விசாரித்துத் தீர்ப்

புச்செய்யவேண்டும். பிரதிவாதிக்கு இஷ்டமிருந்தால் அவன் ஷை பற்றுச்சீட்டைப்பற்றி வேறே வியாச்சியஞ் செய்துகொள்ளலாம். (க௲௫க௯ூ-நம்-ஙங.)

௫உ. சூட்சுமவிசாரணையில் செய்யப்பட்ட உத்தரவைக் கிரம வியாச்சியத்தில் ஆதாரமாய்க் காட்டித் தீர்ப்பு செய்யக்கூடாது. (க௲௫க௯ூ-நம்-எஉ.)

௫ங. வாதி பிரார்த்திக்காத விஷயங்கள் அவனுக்குக் கிடைக் கும்படி தீர்ப்புசெய்யக்கூடாது. வியாச்சியத்தில் கட்சிக்காரனு யிராதவனுடைய பாத்தியங்களைப்பற்றியும் கோர்ட்டார் தீர்மானஞ் செய்யக்கூடாது. (க௲கஉ௯ூ-நம்-கக-க௲கக௯ூ-நம்-சு-க௲௫க ௯ூ-நம்-௫ங-க௲௫உ௯ூ-நம்-௫௲.)

௫ச. வருமானத்துக்காகமட்டுஞ் செய்யப்பட்ட வியாச்சியத்தில் நிலத்தையும் விடும்படி தீர்ப்புசெய்யக்கூடாது. (க௲கக௯ூ-நம்-சு.)

௫௫. ஒருவன் கட்சிக்காரனுயிராத வியாச்சியத்தில் செய்யப் பட்ட தீர்ப்பினுல் அவனுக்கு யாதொருகஷ்டம் உண்டாகிறதாயி ருந்தால் அந்தத்தீர்ப்பை மாற்றவேண்டியதற்காக அவன் வியாச் சியங்கொண்டுவரலாம். (௲௫க௯ூ-ப-உசு.)

௫சு. வாதி தன்வசத்தில் இருக்கிறதாக ஒப்புக்கொண்ட ஆதர வை அவன் ஆஜர்செய்யத் தப்பிப்போனதைக்கொண்டு அவனுக்கு விரோதமாய் தீர்ப்புசெய்யக்கூடாது. ஆனுல் அந்த ஆதரவைத் தாக்கல்செய்யவேண்டியது வியாச்சியத்திற்கு முக்கியமாயிருந்தால் அப்போது வாதிக்கு விரோதமாய்த் தீர்ப்புசெய்யலாம். (க௲௫க௯ூ-ப-ங.)

௫எ. தீர்ப்பு நிறைவேற்றவேண்டிய விவரங்களையும் தீர்ப்பு நிறைவேறுங்காலத்தில் ஆட்சேபம்வந்தால் அந்த ஆட்சேபங்களை நிவர்த்திசெய்யும்படியான மார்க்கங்களையும் கோர்ட்டார் சித்தாந் தத்தில் பேசக்கூடாது. (க௲சுO௯ூ-நம்-சங.ங-க௲சுக௯ூ-ப- சு௫.)

௫௲. வாதி ஸ்வத்துக்காக வியாச்சியஞ்செய்தால் அந்தச் சொத் துக்குப்பதிலாய் அதின்கிரயம் அவனுக்குக் கிடைக்கும்படி தீர்ப்பு செய்யக்கூடாது. (ஷை.)

ருகூ. பூர்வீகநிலங் கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சியஞ் செய்து அதற்குத்தகுநசாரமாய் ருஜுக்கொடுக்க அவன் தப்பிப் போனால் கலெக்டருடைய கவுலின்மேல் அந்தநிலம் அவனுக் குக் கிடைத்ததாக ஸ்தாபித்துக் கோர்ட்டார் அவன்பட்சந் தீர்ப்பு செய்யக்கூடாது. (கஅருகூ ஹு-நம்-கஉகூ-ப-உகூஎ.)

கூ௦. வாதிபட்சத்தில் யாதொருசாட்சியமும் இல்லாவிட்டால் அவனுடைய வழக்கைத் தள்ளவேண்டும். பிரதிவாதி விவாதநிலத் தின் பட்டாவைத் தாக்கல்செய்யாமற்போனதைக்கொண்டு அந்த நிலம் வாதிக்குச் சொந்தமென்கிற உத்தேசப்பிரமாணத்தின்மேல் வாதிபட்சந் தீர்ப்புசெய்யக்கூடாது. (ஷை.)

கூக. தங்களுக்கு ஸ்வந்தமான பூர்வீகநிலங் கிடைக்கவேண்டு மென்று வாதிகள் வியாச்சியஞ்செய்தால் அந்தநிலம் எந்தக்கோவி லுக்குச் சொந்தமோ அந்தக்கோவிலுக்கு வாதிகள் தர்மகர்த்தர் கள் என்கிற ஆஸ்பதத்தின்மேல் அவர்கள்பட்சந் தீர்ப்புசெய்யக் கூடாது. (கஅசஅ ஹு-நம்-சங.)

கூஉ. நிலம் வீடுமுதலான பூஸ்திதிகளைப்பற்றியும் அவைகளின் வருமானத்தைப்பற்றியும் வாதி வியாச்சித்தால்மட்டும் பிரியாதுக் குப் பிந்தினவருமானமும் வாதி பெற்றுக்கொள்ளும்படி தீர்ப்புசெ ய்யலாமே அல்லாமல் வருமானத்துக்காகமட்டுஞ் செய்யப்படுகிற வழக்கில் பிரியாதுக்குப் பிந்தினவருமானங் கொடுக்கும்படி தீர்மா னிக்கக்கூடாது. வீட்டின் வாடகைக்காகமட்டுஞ் செய்யப்படுகிற வழக்கில் வாதியின் உத்தரவுப்படி தன்னுடைய சொந்தப்பணத் தைக்கொண்டு ஷை வீட்டைத் தான் பழுதுபார்த்துப் பரிஷ்காரப் படுத்தினதினால் வீட்டின் வாடகை தீர்ந்துபோனதாகப் பிரதிவாதி எதிர்கட்சிபேசி அந்தப்படி நிரூபணஞ்செய்தால் வாதியின் வழக் கைத் தள்ளவேண்டுமே அல்லாமல் பிரியாதுக்குப்பிந்தின வாட கை வாதிக்குப் பிரதிவாதி கொடுக்கும்படி தீர்மானிக்கக்கூடாது. (கஅருஉ ஹு-நம்-ஙகூ.)

கூங. உபயவாதிகளும் வியாச்சியம் ஆடித் தீர்ப்பானபிற்பாடு அந்தத் தீர்ப்பைப்பற்றி உபயவாதிகளும் அந்தரங்கத்தில் ஏற்பாடு செய்துகொண்டால்மட்டும் செல்லாதேதவிர அவர்களுக்குள் வே றே பிரத்தியேகமான பற்றுவரவுநடந்து அதில் பாக்கியானதொ கைக்கு அவர்கள் ஒருவர்பேரில் ஒருவர் வியாச்சியஞ்செய்வதற்கு

ஷை தீர்ப்பினால் யாதொரு ஆடங்கமும் இல்லை. (க௲அ௱௯௰௨ஆ-நம்-௱௨.)

௬௪. ௫-வது பிரதிவாதிக்கு, க-௨-பிரதிவாதிகள் கொடுக்கவேண்டியதீர்ப்பின் தொகையைத் தீர்க்கவேண்டியதற்காக, க-௨-பிரதிவாதிகள் அவர்களுடைய நிலத்தைத் தனக்குக் கிரயஞ்செய்ததாகவும் அந்தநிலங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வழக்கிட்டான். அந்த வழக்கு ௫-வது பிரதிவாதியால் ஆட்சேபிக்கப்பட்டது. ௫-வது பிரதிவாதிக்குப் பாத்தியமான நிலத்தை வாதி கிரயம்வாங்கினது அநுசிதமென்றும் கோர்ட்டாருக்குத் தெரியப்படுத்தாமல் ௫-வது பிரதிவாதியின் தீர்ப்பின் தொகையைப்பற்றி அந்தரங்கத்தில் நடந்ததாகச் சொல்லப்பட்ட ஏற்பாடு செல்லாதென்றும் வாதிவழக்கு அங்கீகாரஞ்செய்யப்பட்டது. (க௲அ௱௯௰௫ஆ-நம்-௧௪௫.)

௬௫. பிரியாதிற்கண்ட சொத்துகளின் விவரணத்தைப்பற்றிப் பிரதிவாதி கண்டோக்தமாய் ஆட்சேபிக்காவிட்டால் அந்தச்சொத்துக்கள் பிரதிவாதிவசத்திலிருப்பதாக நிதானிக்கவேண்டும். வாதிபட்சஞ் செய்யப்பட்டதீர்ப்பில் அந்தச்சொத்துக்களை நீக்கக்கூடாது. (க௲அ௱௯௰ஆ-நம்-௧௬-ப-௧௧௧.)

௬௬. பிரியாதிற்கண்ட மாடுகள் தன்வசத்திலிருந்து இறந்துபோனதாகப் பிரதிவாதிசொன்னால் அந்தமாடுகளின் கிரயம் வாதிக்குக் கிடைக்கும்படி தீர்மானிக்கவேண்டும். (ஷை.)

௬௭. ஒருவியாச்சியத்தில் சாராம்சவிமரிசையின்மேல் செய்யப்பட்ட தீர்ப்பில் வாதியின் வழக்கைத்தள்ளி அந்த விஷயத்தைப்பற்றியே புநர்வியாஜியம் செய்யும்படி வாதிக்கு உத்தரவுகொடுக்கப்பட்டிருந்தாலுங்கூட அந்தப் புநர்வியாச்சியம் எந்தக்கோர்ட்டில் தாக்கலாகிறதோ அந்தக்கோர்ட்டார் அந்த வியாச்சியம் முந்தின வியாச்சியத்தினால் தடைபட்டதா அல்லவாவென்பதை யோசிக்கவேண்டும். (க௲அ௱௯௰ஆ-நம்-௧௧௨-ப-௧௬௫.)

௬௮. நிலமும் வருமானமும் வாதி பெற்றுக்கொள்ளும்படி அசல்த்தீர்ப்பு செய்யப்பட்டு அப்பீல்தீர்ப்பில் வருமானவிஷயமட்டும் வேறுபடுத்தப்பட்டு நிலத்தைப்பற்றி யாதொரு பிரஸ்தாபமும் இல்லாவிட்டால் நிலம் சம்பந்தப்பட்டவரையில் அசல்த்தீர்ப்பு அப்பீல்தீர்ப்பினால் உறுதிப்படுத்தப்பட்டதாக நிச்சயிக்கவேண்டும். (க௲அ௱௯௰ஆ-நம்-௧௦௬-ப-௧௬௭.)

சுகூ. வாதிபட்சந் தீர்ப்பானபின்பு பிரதிவாதிகள் புநர்விமரிசைக்காக மனுக்கொடுத்துப் பிற்பாடு தாங்களும் வாதியும் ராஜியாய்ப் போய்விட்டதாகச்சொல்லி ஷ புநர்விமரிசை மனுவைப் பிரதிவாதிகளே நீக்கிக்கொண்டிருப்பார்களானால் அதற்குப் பிற்பாடு அவர்களுடைய செய்கையை அவர்களே ஆட்சேபித்து மறுபடியும் புநர்விமரிசைசெய்யும்படி அவர்கள் வேறே மனுக்கொடுத்தால் அதைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (கஅசுக ஹ-நம்-ருசக-ப-கருச.)

எo. ஸ்வீகாரபாத்தியத்தினால் யாதொரு ஸ்திதி தனக்குச்சொந்தமென்று ஒருவன் கட்சிபேசி அந்தப்படி மெய்ப்பிக்கத்தப்பிப்போனால் அந்த ஸ்திதி அவனுக்குத் தானமாய்க்கிடைத்ததாக ஸ்தாபித்து அவன்பட்சங் கோர்ட்டார் தீர்ப்புசெய்யக்கூடாது. (கஅசுo ஹ-நம்-உகூச-கஅசுக ஹ-ப-சகூ.)

| | |
|---|---|
| அங்கீகாரம்-ரு | சாட்சியம்-ருக-ருச-ருஅ-எச |
| அநுபவம்-ரு-அ | ஜீவநாம்சம்-கo |
| அந்நிய ராஜாங்கத்தீர்ப்பு-சு | ஸ்வாமிபோகம்-உ |
| அப்பீல்-கஎ-ருரு-சுரு-சச-ருச. | பாகம்-ருஉ |
| எல்லை ஒடல்-க | பிராபர்-எ |
| ஒற்றி-சரு | பிரமாணம்-ச |
| கட்சி-ச | புநர்விமரிசை-க |
| கடன்பத்திரம்-கரு | மிராசுபதிவு-ரு |
| கூட்டாளி-உ | மோசம்-ச |
| சட்டம்-க | ராஜிநாமா-ரு-உச |

இவைகளைப்பார்க்க.

## சிவில் ஜட்ஜு.

| | |
|---|---|
| சித்தாந்தமுந் தீர்ப்பும்-உ-உக | ஜீவநாம்சம்-ருரு |
| | வக்கீல்-ருக-ருஉ |

இவைகளைப்பார்க்க.

## சுரோத்திரியம்.

க. சுரோத்திரியநிலத்தைப் போக்கியம்வாங்கி அநுபவிக்கிறவனுக்கு ஸ்வான்காரன் போக்கியத்தொகையைக் கொடுத்து அந்த

நிலத்தை மீட்கவேண்டுமேதவிர அந்தத்தொகை செல்லாதவரை யில் ஷை போக்கியக்காரனை அப்புறப்படுத்தக்கூடாது. சுரோத்திரிய நிலத்தின் ஒற்றிவிஷயத்துக்கு ௧௮௩௧ௗ ௪-வது சட்டமும் ௧௮௩௮ ௵ ௨௩-வது ஆக்ட்டும் உபயோகம் அல்ல. (௧௮௫௧ ௵-நம்-௪௧.)

---

## சூத்திரன்.

| | |
|---|---|
| ஸ்வீகாரம்-௭-௧௨-௧௫ ........... | பாத்தியம்-௬-௧௨-௩௦ .......... |
| பராதீனம்-௮.................... | விவாஹம்-௧-௨...................... |

இவைகளைப்பார்க்க.

---

## சூப்பிரீம்கோர்ட்டு.

௧. சூப்பிரீம்கோர்ட்டில் புரோபேட்டென்னும் யோக்கியதாபத்திரிகை பெற்றுக்கொண்டவன் ௧௮௪௧ௐ ௨௦-வது ஆக்ட்டு ௧௪-வது பிரிவுப்படி வெளிப்பிராந்தங்களில் கடன்களை வசூல்செய்ய மட்டும் அதிகாரியேதவிர வெளிப்பிரதேசங்களில் பூஸ்திதியை விக்கிரயஞ்செய்ய அவனுக்கு அதிகாரம் இல்லை. (௧௮௫௩ ௵-நம்-௧ )

| | |
|---|---|
| அதிகாரவரம்பு-௧௬............... | சாட்சியம்-௪௪.................. |

இவைகளைப்பார்க்க.

---

## செலவு.

௧. வியாச்சியசங்கதிகளை யோசித்து செலவுகொடுக்கவேண்டிய கட்சிக்காரன் இன்னான் என்று கோர்ட்டார் தீர்மானிக்கவேண்டுமே அல்லாமல் கட்சிக்காரர்களுடைய அந்தஸ்துப்பிரகாரந் தீர்மானிக்கக்கூடாது. ஒருவன் மற்றொருவனைப்பார்க்கிலும் அதிக ஆஸ்தி வந்தனாகவும் செலவுகொடுக்க சக்தி உள்ளவனாகவும் இருக்கிறானென்கிற ஆதாரத்தினால் அவன் செலவுகொடுக்கும்படி தீர்மானிக்கக்கூடாது. (௧௮௪௪ ௵-நம்-௧௬௧.)

௨. கட்சிக்காரர்கள் அவர்களுடைய அந்தரங்கமான காரியஸ்தர்களுக்குக் கொடுத்தபணத்தையும் விவரப்பத்திரிகைகள் தயார்செய்வதில் நேரிட்ட செலவுகளையும் வியாச்சியச்செலவுகளாகத் தீர்ப்பில் எழுதக்கூடாது. (௪-பு-௧௮௩௬ ௵-ஏப்பிரல்மீ ௧௨௨, ௧௮௩௭ ௵ நவம்பர்மீ ௨௭௨.)

ங. சதர்க்கோர்ட்டில் தீர்மானிக்கப்பட்ட சகல வியாச்சியங்களிலும் மனுவிஷயங்களிலும் நேரிடுகிற செலவுகளுடன் அச்சுக்கூலியையுஞ் சேர்க்கவேண்டும்.

ச. துர்வியாச்சியத்துக்கு ஆதாரமான கட்சிக்காரர்களே செலவுகளைக்கொடுக்கும்படி தீர்மானிக்கலாம். (கஅஙசுரு-நம்-கக.)

ரு. வியாச்சியத்தில் அக்கிரமமாய் ஒருவன் பிரதிவாதியாய்ச் சேர்க்கப்பட்டால் அவன் செலவுகளைக்கொடுக்கும்படி தீர்மானிக்கக்கூடாது. (கஅருகரு-ப-உச0.)

சு. வாதிவழக்கு தள்ளப்பட்டால் செலவுகளைப் பிரதிவாதிகள் கொடுக்கும்படி தீர்மானிக்கக்கூடாது. (கஅருருரு-ப-எங.)

எ. தீர்ப்பின் தொகைக்குத்தகுந்த செலவுகளைப் பிரதிவாதியும் தீர்ப்பில் தள்ளுபடியான தொகைக்குச் சரியான செலவுகளை வாதியுங் கொடுக்கும்படி சாதாரணமாய்த் தீர்ப்புசெய்யவேண்டும். (கஅரு0ரு-ப-சுக-கஅருஎரு-ப-உகஎ.)

அ. வாதிக்குப்பிரதிவாதி பாகுதியின் பாக்கி கொடுக்கும்படி தீர்ப்பாகிறவிஷயத்தில் அந்த வியாச்சியத்தில் நேரிட்ட சகலசெலவுகளையும் வாதிக்குப் பிரதிவாதி கொடுக்கும்படி தீர்ப்புசெய்யப்படவேண்டும். (கஅருஎரு-நம்-சஅ-ப-அசு.)

கூ. சமாதானமாய் ஒழிந்துபோகிற வியாச்சியங்களின் வக்கீல் பீசுகளைப்பற்றிக் கட்சிக்காரர்கள் உடன்படிக்கை செய்துகொண்டிருந்தால் அந்த உடன்படிக்கைப்பிரகாரம் பீசு ஏற்படுத்தப்படவேண்டும். அவர்கள் உடன்படிக்கை செய்துகொள்ளாமல் இருந்தால் மறுவிசாரணைக்காக அனுப்பப்படுகிற வியாச்சியங்களில் பீசு ஏற்படுத்துகிறதுபோல் மேற்கண்ட விஷயத்திலும் பீசு ஏற்படுத்தவேண்டும். (ச-பு-கஅசு0ரு மார்ச்சுமீ ஙஉ.)

க0. ஒவ்வொரு கட்சிக்காரனும் அவன் அவனுடைய செலவுகளை அவனே கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டால் தீர்ப்பில் செலவு விவரத்தைக் கண்டெழுதவேண்டியதில்லை. (ச-அ-வி.)

கக. யாதொரு வியாச்சியம் மறுவிசாரணைக்கனுப்பப்படும்போது அப்பீல்க்கோர்ட்டில் நேரிட்டசெலவுகளை மறுவிசாரணை உத்தரவிற் கண்டெழுதவேண்டும். அந்தச் செலவுகளை அபஜெயமாய்ப்போகிற கட்சிக்காரன் கொடுக்கும்படி கீழ்க்கோர்ட்டாருடைய மறுவிசாரணைத் தீர்ப்பில் சேர்க்கப்படவேண்டும். (ஷை.)

கஉ. ஒவ்வொரு கட்சிக்காரனும் ஒரு வக்கீலையாவது அல்லது பலவக்கீல்களையாவது நியமித்துக்கொள்ளலாம். ஒரு வியாச்சியத்தில் பல வாதிகளாவது பல பிரதிவாதிகளாவது இருந்தால் அவர்கள் ஒரு வக்கீலையாவது அல்லது பல வக்கீல்களையாவது நியமித்துக்கொள்ளலாம். ஆனால் ஜெயிக்காத கட்சிக்காரன் அவனுடைய ஒவ்வொரு எதிர்கட்சிக்காரனுக்காகவும் ஒவ்வொரு வக்கீல் பீசைமாத்திரம் கொடுக்கும்படி பாத்தியப்பட்டிருக்கிறான். (ச-பு-க௲அகூ0ஹ ஏப்பிரல்மீ அஉ.)

கங. ஒரு வியாச்சியத்தில் ஒரு பட்சத்தில் பல கட்சிக்காரர்கள் இருந்து அவர்களில் ஒவ்வொருவனும் தனித்தனியே வக்கீல்களை வைத்துக்கொள்ளுகிறபட்சத்தில் அவர்களில் ஒவ்வொருவனுடைய கட்சியும் ஒன்றுக்கொன்று பேதமாயிருந்தால்மட்டும் அவர்களால் நியமித்துக்கொள்ளப்பட்ட ஒவ்வொரு வக்கீலினுடைய பீசையும் ஜயஹீனனாய்ப்போகிற எதிர்கட்சிக்காரன் கொடுக்கவேண்டும். அவர்களுடையகட்சி அபேதமாயிருந்தால் ஒரு வக்கீலினுடைய பீசை மட்டும் அவர்களுடைய எதிரி கொடுக்கப் பாத்தியப்பட்டிருக்கிறான். (ஷை.)

கச. அப்பீல் மிமோராண்டத்தின் அச்சுக்காகிதக்கிரயம் எந்தத் தொகையின்மேல் நிசசயிக்கப்படுகிறதோ அந்தத்தொகையின் மேல் வக்கீல்ப்பீசும் ஏற்பாடுசெய்யவேண்டும். (ச-பு-க௲அஉகூஹ நவம்பர்மீ நிஉ.)

கரு. வக்கீல்ப்பீசு ஏற்பாடுசெய்கிறதில் சங்கடம் உண்டாயிருக்கிறதென்கிற நிமித்தியத்தினல் வக்கீல்ப்பீசு முழுமையுந் தள்ளிப் போடக்கூடாது. (க௲அருகூஹ-நம்-ககூ-பு-கூக.)

கசா. வக்கீலுங் கட்சிக்காரனும் ரகசியத்தில் செய்துகொண்ட உடன்படிக்கைப்படி வக்கிலுக்குக் கிடைக்கவேண்டிய பீசுத்தொகையைப்பற்றி வக்கீல் கிரமவியாச்சியஞ் செய்யவேண்டும். அந்தத் தொகையை சூக்ஷமவிசாரணையின்மேல் வாங்கிக்கொடுக்கக் கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லை. (ச-பு-க௲அசகூஹ-நவம்பர்மீ கககூஉ.)

கஎ. ஒரு பாப்பர் வியாச்சியஞ் சமாதானமாய் முடிந்துபோனால் பாப்பர் வாதியின் வக்கீல்ப்பீசைபபற்றிக் கிரமவியாச்சியஞ் செய்ய வேண்டியதில்லை. அந்த வக்கீலின் பிரயாசைக்குத் தகுந்த தொகையைக் கோர்ட்டார் நிஷ்கரிஷைசெய்து அதை வழக்கமான கட்டளை

மூலமாய் வசூல் செய்துகொடுக்கலாம். (கஅருஉ ஹ-நம்-கஉ-ப-எகா.)

கஅ. சாராம்சத்தின்மேல் தீர்மானஞ்செய்யப்பட்ட கிரமமான வழக்குக்குள்ள பீசில் ச-ல்க-விகிதம் மறுவிசாரணைக்கனுப்பப்பட்டவியாச்சியத்தில் வக்கீல்பீசு ஏற்படுத்தப்படவேண்டும். (ச-பு-கஅசா0 ஹ மார்ச்சுயீ கூஉ.)

கக. பலவந்தமாய் நிலம் அபகரிக்கப்பட்டதைப்பற்றி, கஅஉஉ ஹ-ரு-வது சட்டப்பிரகாரம் கட்சிக்காரர்கள் கலெக்டர் இடத்திலாவது பிரியாது செய்யலாம். அல்லது கோர்ட்டுகளிலாவது கிரமவியாச்சியஞ்செய்யலாம். ஷ சட்டப்படி கலெக்டர் இடத்திற்பிரியாதுசெய்யாமல் கோர்ட்டில் வியாச்சியஞ்செய்தார்கள் என்கிற நிமித்தியத்தினால் வாதிகள் வியாச்சியச்செலவுகளை இழந்துபோகும்படி தீர்மானிக்கக்கூடாது. (கஅருஎ ஹ-நம்-கூஉ-சஅ.)

உ0. அவசரம் இன்றி ஒருவன் பிரதிவாதியாகச் சேர்க்கப்பட்டால் அவன் மற்றப் பிரதிவாதிகளோடு சேராமல் தனியே எதிர்வழக்காடினாலுங்கூட அவனுடைய செலவுகள் வாதியால் அவனுக்குக் கிடைக்கவேண்டும். (கஅருஅ ஹ-பு-கூச.)

உக. வாதி வழக்கு தள்ளப்பட்டால் அந்த வாதி பிரதிவாதியின் செலவுகளைக் கொடுக்கவேண்டும். (கஅருக ஹ-நம்-கசகா-கஅசா0 ஹ-ப-உரு.)

உஉ. பிரதிவாதிகளிடத்தில் போக்கியம் வைக்கப்பட்ட நிலங்கிடைக்கவேண்டியதற்காக வியாச்சியஞ்செய்த வாதி போக்கியத்தொகையைக் குறைத்துப்பேசிப் பிரதிவாதிகள் அதைப்பற்றி ஆட்சேபிக்கும்படி. சம்பவித்ததினால் வாதிபட்சம் தீர்ப்பானபோதிலும் அவனே செலவுகளை கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (கஅருரு ஹ-நம்-கஅ உரு-உகா.)

உ௩. வியாச்சியத்தில் ஜெயபராஜிதன் ஆகிற கட்சிக்காரன் செலவுகளைக் கொடுக்கவேண்டுமென்பது பொது விதியாயிருக்கின்றது. (கஅருரு ஹ-நம்-கககா.)

உச. ஒருவன் பெற்றுக்கொண்ட முந்தின தீர்ப்பை நிறைவேற்றும்படி கேட்டுக்கொள்வதினால் அவனுடைய மனோரதம் பூரணம் ஆகும்படியாயிருக்க அவன் விருதாவாய் வேறொரு வியாச்சியஞ் செய்ததினால் அவன் பட்சம் தீர்ப்பானபோதிலும் செலவுகளை அவன்

இழந்துபோகும்படி தீர்மானிக்கப்பட்டது. (கஅ௫அ௵-நம்-உக-எகூ.)

உ௫. அவசரம் இல்லாமல் அப்பீல்செய்கிறவன் செலவுகளை இழந்துபோகவேண்டும். (கஅ௫அ௵-நம்-சூஉ.)

உசா. குடும்பஸ்திதியில் வாதிக்கு-சா-ல்-ஒருபங்குமட்டும் பாகங் கிடைக்கவேண்டியது ஞாயமாயிருக்க அவன் சமபாகங் கிடைக்க வேண்டுமென்று தொடர்ந்து அதைப்பற்றிப் பிரதிவாதிகள் ஆட்சேபிக்கும்படி நேரிட்டதால்-சா-ல்-க-க்கு வாதிபட்சந் தீர்ப்பானபோதிலும் வியாச்சியத்தின் செலவுகளையெல்லாம் வாதியே கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (கஅ௫கூ௵-நம்-௫கூ-கஅசா௦௵-ப-௫ச.)

உஎ. அப்பீல்க்கோர்ட்டார் வாதிபட்சந் தீர்ப்புசெய்தபோதிலும் வாதிக்குச் செலவுகள் கிடைக்கும்படியாவது அல்லது செலவுகளை அவன் இழந்துபோகும்படியாவது தீர்ப்புசெய்வது அப்பீல்க்கோர்ட்டாருடைய யுக்தமானதால் அந்தச் செலவுகளின் விஷயத்தைப் பற்றி சதர்க்கோர்ட்டார் விசேஷ அப்பீல் அங்கீகரிக்கக்கூடாது. (கஅ௫கூ௵-நம்-களஎ-கஅசா௦௵-ப-ககஎ.)

உஅ. ஒரு பிரதிவாதி அவனுடைய செலவைக்கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டு அந்தத் தீர்ப்பின்மேல் அவன் அப்பீல்செய்யத் தப்பிப்போனால் வேறொரு பிரதிவாதியினால் செய்யப்பட்ட அப்பீலில் அப்பீல்செய்யாத ஷை பிரதிவாதியின் செலவை வாதி கொடுக்கும்படி அப்பீல்க்கோர்ட்டார் தீர்மானிக்கக்கூடாது. (கஅ௫கூ௵-நம்-கநக-ய-உசாகூ.)

ஒற்றி-சுக........................ | பார்பர்-அ-க௦...................
தீர்ப்பு நிறைவேற்றல்-க௦........ | புநர்விமர்சை-௫.................
இவைகளைப்பார்க்க.

## ஜப்தி.

க. பிரதிவாதி கொடுக்கவேண்டிய தீர்ப்பின் தொகைக்காகக் கலெக்டர்முதலான அதிகாரிகள் வசத்தில் இருந்த பிரதிவாதிக்குச் சொந்தமான பணத்தை ஜப்திமூலமாகக் கோர்ட்டார் தடை செய்தபிற்பாடு அந்தப்பணத்தைப் பிரதிவாதி வேறே யாருக்காவ

து கொடுத்தால் செல்லாது. அந்தப்பணம் ஷை தீர்ப்பின் தொகைக்கே பாத்தியப்படவேண்டும். (கஅகூO௵-நம்-ககச-ப-கருஅ.)

உ. யாதொருசொத்து கிரமப்பிசகாய் ஜப்திசெய்யப்பட்டதினால் உண்டான நஷ்டத்தைப்பற்றி யாதொருவன் வியாச்சியஞ்செய்யலாம். (கஅஉச௵-நம்-கஉ.)

ங. ஒரு தீர்ப்பின்தொகையைக் கொடுக்கவேண்டியவன் அந்தத்தீர்ப்புக்காக ஜப்திசெய்யப்படாத சொத்தை அவன் யாருக்காவது கிரயஞ்செய்யலாம். அதற்குப்பிற்பாடு ஷை சொத்து ஜப்தியானதைக்கொண்டு ஷை கிரயத்துக்குப் பங்கம் உண்டாகமாட்டாது. (கஅருகூ௵-நம்-ககஉ-ப-ககூO.)

ச. பந்தகபத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று பீ-என்பவன்மேல் ஏ-என்பவன் வியாச்சியஞ்செய்து அந்தப்பிரகாரம் தீர்ப்புபெற்றுக்கொண்டான். பிற்பாடு ஏ-என்பவன் சீ-என்பவனுக்குக் கொடுக்கவேண்டிய கடனுக்காக சீ-என்பவன் வியாச்சியஞ்செய்தான். அந்த வியாச்சியந் தீர்ப்பாகிறதற்குமுன் பீ-யிடத்தில் ஏ-பெற்றுக்கொண்ட ஷை பந்தகச்சொத்தை சீ-யினுடைய வியாச்சியத்தில் ஜப்திசெய்யப்பட்டது. அதற்குப்பிற்பாடு ஏ-என்பவனுக்குத்தான் ஷை தீர்ப்பின் தொகையைக் கொடுத்துவிட்டதாக பீ-என்பவன் வாதஞ்செய்தான். சீ-யினுடைய வியாச்சியத்திற்காக ஷை பந்தகச்சொத்து ஜப்திசெய்யப்பட்டதென்கிற பூரணமியானத்துடனே பீ-என்பவன் ஏ-என்பவனுக்குத் தொகை செலுத்தினது சுத்த அநுசிதமென்றும் பீ-என்பவனால் ஏ-என்பவனுக்கு எழுதிக்கொடுக்கப்பட்ட பந்தக ஆதாரவிற்கண்டசொத்து சீ-யினுடைய வியாச்சியத்துக்குப் பாத்தியப்படவேண்டுமென்றும் நிர்தாரணஞ் செய்யப்பட்டது. (ச-உ-கஅகூO௵ மார்ச்சுமீ௴ ருஉ.)

| | |
|---|---|
| அநுபவம்-க ...................... | கிரயம்-கO ...................... |
| இனும்-ஸ ...................... | தீர்ப்பு நிறைவேற்றல்-ககூ-உO-உக-உஉ-உங-உச-உரு-உஎ-உஅ-உகூ-ஙO-ஙக ............ |
| உத்தரவின்பேரில் அப்பீல்-ச ... | |
| ஒற்றி-ஙக ...................... | |
| காலநிர்ணயம்-ருகூ ............... | |

இவைகளைப்பார்க்க.

## ஜமீன்தார்.

க. ஞாயமான நிபந்தனைகளுடன் பட்டாக்கொடுக்கத் தப்பிப்போகிற ஜமீன்தார் க௮௦உ௵-உ௫-வது சட்டம் கச-வது பிரிவுப்படி நஷ்டத்துக்குப் பாத்தியப்படவேண்டும். (க௮கஉ௵-நம்-க௫.)

உ. சாசுவதபேரிஜ் ஏற்படுத்தப்படுகிறதற்கு முன்கவர்ன்மென்டுரால் வசூல்செய்யப்படாத தீர்வையை ஜமீன்தார் வசூல்செய்யக்கூடாது. (க௮கஉ௵-நம்-க௮-க௮கச௵-நம்-க௦.)

ங. தேசவழக்கத்தினுல் ஸ்தாபிக்கப்படாத யாதொரு தீர்வையை ஜமீன்தார் வசூல்செய்வது அக்கிரமம். (க௮கஙௌ-நம்-௮.)

ச. சாசுவத தீர்வை ஏற்பாடானபோது ஒருவன் ஜமீன் ஸ்திதிக்குப் பாத்தியஸ்தன் அல்லவென்று கவர்ன்மென்டுரால் செய்யப்பட்ட உத்தரவு உறுதியுள்ளதாகவும் நிராட்சேபமாகவும் இருக்கின்றது. (க௮கஙௌ-நம் கங.)

௫. கவர்ன்மென்டுருக்கு விரோதியான ஒரு ஜமீன்தாரைத் தள்ளி வேறொருவனைப் பாத்தியஸ்தனுக கவர்ன்மென்டுர் நியமகஞ் செய்திருந்தால் தள்ளப்பட்ட ஷை ஜமீன்தாருடைய பாத்தியஸ்தர்களுக்கு அந்த ஜமீன் ஸ்திதியில் யாதொருபாத்தியமும் இல்லை. (க௮கச௵-நம்-க௮.)

௬. ஒரு ஜமீன்தாருடைய பாத்தியமானது இந்தத்தேசத்தின் பூர்வீகராஜாக்களாலாவது இங்கிலீஷ் கவர்ன்மென்டுராலாவது ஆட்சேபிக்கப்பட்டிருப்பதாக எவ்வளவும் ருசுவாகாவிட்டால் அந்த ஜமீன்தாருக்கு ஆதரவு இல்லாமல் இருந்தாலுங்கூட அவருடைய ஸ்வாமியத்தைமாற்றக் கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லை. (க௮கஎ௵-நம்-கச.)

எ. சாசுவதபேரிஜின் ஒழுங்குப்படி அந்தக்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட ஜமீன்தாரியின் பிரிவினையைக் கோர்ட்டார் வேறுபடுத்தக்கூடாது. (க௮க௮௵-நம்-ச.)

௮. கவர்ன்மென்டுருடையவும் மற்றப்பாத்தியஸ்தர்களுடையவும் சுதந்தரங்களுக்கு விரோதமாக அக்கிரமமாய்ச் செய்யப்படும் பராதீனங்களை அழிக்கவேண்டியதற்காக க௮௦உ௵ உ௫-வது சட்டமும் அதற்கு அநுசரணையான மற்றச்சட்டங்களும் உண்டாயிருப்பதால் அந்தப் பராதீனங்களைச் செய்தவனுடைய ஜீவியகாலத்

திருப்பின்பு அந்தப் பராதீனங்கள் ரத்தாகிவிடும். (க௮௨க ஸ்ரூ-நம்-௬.)

௯. ஜமீன்தாருடைய நிலங்களைத் தலைமுறை தலைமுறையாய்ச் சாகுபடிசெய்த குடிகள் வேண்டாமென்று விட்டுவிட்டபிறகு ஒரு அந்நியன் இடத்தில் அந்த நிலங்கள் விடப்பட்டிருக்குமானால் குத்தகை முடிந்தவுடனே அந்த நிலங்களையும் ஜமீன்தாருடைய ஊழியக்காரர்களால் சாகுபடிசெய்யப்பட்ட கம்மட்டம் என்கிற நிலங்களையும் வாங்கிக்கொள்ள ஜமீன்தார் பாத்தியஸ்தராயிருக்கிறார். (க௮௨௨ ஸ்ரூ-நம்-௨.)

௧௦. க௮௦௨ ஸ்ரூ உரு-வது சட்டப்படிக்கு கவர்ன்மெண்டால் கொடுக்கப்பட்ட இஸ்திமிரார் சன்னதின் வாசகங்களைக்கொண்டு பூர்வீக ஜமீன் பாகார்ஹமா அல்லவா என்பதைக் கோர்ட்டார் நிச்சயிக்கவேண்டும். (க௮௨ரு ஸ்ரூ-நம்-க.)

௧௧. ஜமீன்தாருடைய பூர்வீகமான ஜங்கமசொத்து பாக யோக்கியமானதுதான். (ஷை.)

௧௨. ஒரு ஜமீன் முழுவதும் ஜேஷ்டபுத்திரனொருவன்மட்டும் எப்போதும் அநுபவிக்கப்படாமல் எல்லா பாகஸ்தர்களாலும் பொதுவாக அநுபவிக்கப்பட்டிருக்குமானால் அந்த ஜமீன் பாகத்துக்கு அர்ஹமானதுதான். (ஷை.)

௧௩. ஒருவனுக்கு கவர்ன்மெண்டால் கொடுக்கப்பட்டு சன்னது முல்கியந்து இஸ்திமிரார் இல்லாமல் அவனுடைய ஜேஷ்ட புத்ரனுக்குக்கிடைத்து அவனால் அநுபவிக்கப்பட்ட ஜமீன்பாகத்துக்கு யோக்கியமானதல்ல. ஜமீன்பாகத்துக்கு அநர்ஹமாயிருந்தால் அதினுடைய வருமானமும் பாகத்துக்கு அர்ஹமானதல்ல. (க௮௧௬ ஸ்ரூ-நம்-௧௧.)

௧௪. க௮௦௨ ஸ்ரூ உரு-வது சட்டம் உண்டாவதற்குமுன் ஜமீன் விஷயத்தில் பிதுரார்ஜித பாத்தியக்கிரமம் அநுஷ்டிக்கப்படாமல் துரைத்தனத்தார் இஷ்டப்படி அந்த ஜமீன்பாத்தியத்தை ஒருவனுக்குக் கொடுக்கிறதும் பிற்பாடு வாங்கிக்கொள்ளுகிறதும் இவ்விதமாக நடத்திவந்தார்கள். சாசுவத தீர்வை ஏற்படுத்துவதற்காகவும ஜமீன்தார்களுக்கும் அவர்களுடைய பாத்தியஸ்தர்களுக்கும் சாசுவதபாத்தியத்தை உண்டுபண்ணுகிறதற்காகவும் ஷை உரு-வது சட்டம் உண்டுபண்ணப்பட்டது. கவர்ன்மெண்டாரிடத்தில் இஸ்திமிரார்

சன்னது பெற்றுக்கொண்டவனே ஜமீனுக்கு ஸ்வாமியாகிறான். (௧௮௧௩ ௵-நம்-௧௩-௧௮௧௪ ௵-நம்-௧௮-௧௮௧௭ ௵-நம்-௧௪-௧௮௧௮ ௵-நம்-௪.)

௧௫. சாசுவதபேரிஜ் ஏற்படுத்துவதற்காக நியமிக்கப்பட்ட அதிகாரிகள் மாஜிஜமீன்தாருடைய மாதாவும் பத்தினியும் அவர்கள் ஜீவகாலமட்டும் அநுபவித்துக்கொள்ளும்படி ஜமீனைச்சேர்ந்த ஒரு கிராமத்தை அவர்களுக்கு விட்டு அவர்கள் பெயரால் இஸ்திமிரார் சன்னதுங் கொடுத்தார்கள். அவர்களுக்கு சர்வஸ்வாதந்தரியத்தையும் உண்டுபண்ணத்தக்க நிபந்தனைகளை ஷை இஸ்திமிரார் சன்னதில் கைப்பிசகாய்க் கண்டிருந்தபோதிலும் அவர்கள் இறந்துபோனபிற்பாடு ஷை கிராமம் ஜமீன்தாரியைச் சேரவேண்டியதென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௪௪ ௵-நம்-௬௬.)

௧௬. ஜமீன்தாருக்கு இஸ்திமிரார் சன்னதுமூலமாகக் கொடுக்கப்பட்ட ஜமீன் பூர்வீகஸ்திதியானதாலும் அது சாஸ்திரப்படி அவனுடைய பாத்தியஸ்தர்களைச் சேரவேண்டியதானதாலும் அந்த ஸ்திதியை ஜமீன்தார் பராதீனஞ்செய்யக்கூடாது. (௧௮௨௩ ௵-நம்-௭-௧௮௫௧ ௵-நம்-௨௩.)

௧௭. ஜேஷ்ட பாத்தியக்கிரம்மானது ராஜரீகங்களுக்கும் பூர்வீக ஜமீன்களுக்குமட்டும் உபயோகமேதவிர நூதனமாய்க் கிரயம் வாங்கப்பட்ட ஜமீன்களுக்கும் மிட்டாக்களுக்கும் உபயோகம் அல்ல. (௧௮௪௬ ௵-நம்-௨-௧௮௫௧ ௵-நம்-௯௦.)

௧௮. ஜமீன்தாருடைய மாதா ஜமீனை அநுபவித்தகாலத்தில் வாங்கின உண்மையான கடன்களுக்கு ஜமீன்தார் பாத்தியப்படவேண்டும். (௧௮௫௫ ௵-நம்-௯௫-௧௮௫௭ ௵-நம்-௧௦௭.)

௧௯. இஸ்திமிரார் சன்னதின்பிரகாரம் அநுபவிக்கப்பட்ட,௨௦௩௩ கிராமங்கள் உள்ள ஜமீன்தாரியில் ௨௯-கிராமங்களை ஜமீன்தார் அவனுடைய வைப்பாட்டி புத்திரனுக்குக் கொடுத்தது செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௪௭ ௵-நம்-௫௩.)

௨௦. ஜமீன்தாருக்குத தகுமான வயதில்லாதகாலத்தில அவனுக்கு ஹிதமாகவும் அகத்தியமாகவும் அவனுடைய போஷகனால் வாங்கப்பட்ட ஞாயமான கடன்களுக்கு ஜமீன்ஸ்திதி பாத்தியப்படவேண்டியதாயிருந்தபோதிலும் ஜமீன்தாருக்குத் தகுந்தவயது வருகிறவரையில் அவனுடைய போஷகன் ஷை கடன்களுக்கு வ

கைசெய்யவேண்டியவனேதவிரத் தகுமானவயதில்லாத ஜமீன்தாரைப் பாத்தியப்படுத்தித் தீர்ப்புசெய்யக்கூடாது. ஜமீனைச் சேர்ந்த வருமானம் செலவுகளுக்கெல்லாம் ஷை போஷகன் சரியாய்க் கணக்குக் கொடுக்கிறபட்சத்தில் அவனால் வாங்கப்பட்ட அவசியமான கடன்களுக்கு ஜமீன்ஸ்திதியைப் பாத்தியப்படுத்தலாம். (க௮௬உ வரு நம்-க-க௮௫0 வரு-நம்-சசு.)

உக. ஜமீன்தாரியைச்சேர்ந்த சில கிராமங்களை ஜமீன்தார் அவனுடைய சகோதரன் மகளுக்கு ஸ்திரீதநமாய்க் கொடுத்து அவளால் அந்தக் கிராமங்கள் பக்கத்தில் பந்தகம் வைக்கப்பட்டது. க௮0உ வரு-உரு-வது சட்டப்படி ஷை செய்கை நடவாதபடியால் அது செல்லாதென்று தீர்மானிக்கப்பட்டது. (க௮௫௫ வரு-நம்-எ0.)

உஉ. ஜமீன்தாரியை விநியோகஞ்செய்யக்கூடாதென்று கவர்ன்மென்றால் யாதொரு பிரத்தியேகமான நிபந்தனைகள் ஏற்பட்டிராதபடியால் தர்மசாஸ்திரப்படி ஜமீன்தார் செய்யத்தக்க யாதொரு செய்கையினால் ஜமீனுடைய பாத்தியக்கிரமத்துக்கு பாதகம் உண்டாகும்படியாயிருக்கிறது. (க௮௬௪ வரு-நம்-க௮.)

உ௩. குடிகள் அநுபவிக்கிற நிலத்துக்குத் தீர்வை வசூல் செய்யாமல் ஒரு ஜமீன்தாருடைய முன்னோர்கள் அநேகவருஷகாலம் சும்மா இருந்துவிட்டபோதிலும் அந்த நிலம்-க௮0உ வரு-உரு-வது சட்டம் ௮-வது பிரிவுப்படி ரெஜிஸ்டர் செய்யப்படாமல் இருந்தால் அந்த ஜமீன்தாருக்குப் பட்டம் ஆகி-கஉ வரு-த்துக்குள்ளாக ஷை நிலத்தின் தீர்வைக்காகக் குடிகளைத் தொடர்ந்து அவர்கள் கொடாதவரையில் மாகூலை ஏலம்போட்டுத் தீர்வை வசூல் செய்துகொள்ளலாம். (க௮௬0 வரு-நம்-ச௩௫-க௮௬க வரு-ப-௬௬.)

உச. சாகுபடிசெய்கிறவர்கள் சிலகாலம்வரையில் நிலத்தைப் பாழாய்ப்போட்டுவிட்டால் அந்த நிலத்தை ரிவினியூ அதிகாரஸ்தர்கள் வேறே யாரிடத்திலாவது சாகுபடிக்கு விட்டுவிடலாம். ரிவினியூ அதிகாரஸ்தர்களுடைய ஸ்தாநத்தில் ஜமீன்தார் இருப்பதால் சாகுபடிசெய்யாமல் குடிகள் விட்டுவிட்ட நிலத்தை ஜமீன்தார் வேறே யாருக்காவது பட்டாக்கொடுக்கலாம். அந்தப்படி ஜமீன்தாரிடத்தில் பட்டாப் பெற்றுக்கொண்டவர்களை வியாச்சியமூலமாய் அப்புறப்படுத்தப் பழையகுடிகளுக்குப் பாத்தியம் இல்லை. (க௮௬0 வரு-நம்-ச௮உ-க௮௬க வரு-ப-ககஉ.)

உரு. இறந்துபோன தன் பர்த்தாவினுடைய ஜமீனைச்சேர்ந்த மனை கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சித்தாள். அந்த ஜமீனுக்குத் தான் ஸ்வாமியென்று பிரதிவாதி எதிர்வாதம்பேசினன். விவாதமனையைத்தவிர மற்ற ஜமீன்ஸ்திதிகள் முழுமையும் வாதிவசத்திலிருப்பதால் அந்த ஜமீனுக்குத் தான் பாத்தியஸ்தனென்று பிரதிவாதி கிரமவியாச்சியமூலமாய் ஸ்தாபித்துக்கொள்ளுகிறவரையில் விவாதமனையை அநுபவிக்க வாதியே ஸ்வதந்தரையென்று அவள் பட்சந் தீர்ப்புச்செய்யப்பட்டது. (கஅகூ0 ஷே-நம்-கூரு-ப-உருச.)



இவைகளைப்பார்க்க.

---

## ஜாதி.

க. ஜோடுபோடவும் தங்களுடைய கிரஹங்களுக்கு வெள்ளை வைக்கவும் இடங்கையாருக்குப் பூரணபாத்தியம் உண்டு. அந்தப்பாத்தியத்தில் வலங்கையார் துராகிருதமாய்ப் பிரவேசித்து அக்கிரமஞ் செய்தால் அதினால் உண்டான நஷ்டத்தைப்பற்றியும் அந்தப்பாத்தியத்தை ஸ்தாபிக்கவேண்டியதற்காகவும் இடங்கையார் வியாச்சியஞ்செய்யலாம். (கஅருஎ ஷே-நம்-எ.)



இவைகளைப்பார்க்க.

---

## ஜாமீன்.

க. ஒருவனுக்காக ஜாமீன் ஒப்புக்கொண்டு ஜாமீன்பத்திரம் எழுதிக்கொடுத்தவர்கள் அந்தப் பத்திரத்தின் சங்கேதப்படி நடக்கவேண்டும். அது அந்நியபாஷையில் எழுதப்பட்டிருந்தால் ஜாமீன்

பத்திரமென்பதை அறியாமல் அதில் தாங்கள் கையெழுத்துவைத்ததாக அவர்கள் சொல்லும் பிரதிவாதம் அநுபயோகம். (கஅ௬௯ ௵-நம்-௯-ப-க௩௪.)

௨. பத்திரங்களை எழுதிக்கொடுத்தவர்கள் கெடுவில் தொகை செலுத்தாவிட்டால் அந்தத்தொகையைத் தான் கொடுப்பதாக வேறொருவன் ஜாமீன்பத்திரம் எழுதிக்கொடுத்தால் அந்த ஜாமீன்பத்திரம் மகமதுசாஸ்திரப்படி செல்லாது. (கஅகஅ ௵-நம்-க0.)

௩. நிஷ்கரிஷையான சம்பளமுள்ள ஒரு உத்தியோகஸ்தனுக்காக வேறொருவன் ஜாமீன்கொடுத்திருந்து பிற்பாடு அந்த ஜாமீன்தாரனுக்குத் தெரியாமலும் அவனுடைய நிஷ்பத்தி இல்லாமலும் ஷை உத்தியோகஸ்தனுக்கு நிச்சயம் இல்லாத கம்மிசியன் அல்லது தரகுவருமானம் ஏற்படுமானால் உடனே ஷை ஜாமீன்தாரன் உத்தரவாத நிவர்த்தியை அடைவான். (கஅ௨௯ ௵-நம்-எ.)

௪. ஒருவன் கொடுக்கவேண்டிய கடனுக்காக வேறொருவன் ஜாமீன் ஒப்புக்கொண்டால் அவர்கள் இருவரையும் பிரதிவாதிகளாய்ச் சேர்த்து உத்தமர்ணன் வியாச்சியஞ்செய்யவேண்டும். (கஅருஎ ௵ ப-க௩.)

௫. ௩-வது மநுஷன் கொடுக்கவேண்டிய தீர்ப்பின்தொகையைப் பிரதிவாதி கொடுப்பதாக ஒப்புக்கொண்டு வாதிக்குக் கடன் பத்திரம் எழுதிக்கொடுத்தான். அந்தப் பத்திரத்தின் தொகைக்காகப் பிரதிவாதிமேல் வாதி வியாச்சியஞ்செய்தான். ஷை தீர்ப்பை ஷை ௩-வது மநுஷன்மேல் முந்தி நிறைவேற்றவேண்டுமென்றும் அவனிடத்தில் வசூலாகாமல் பாக்கியிருக்கிற தொகையைமட்டும் பிரதிவாதி உத்தரிக்கவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. (கஅரு௯ ௵-நம்-அ௩-கஅருஎ ௵-ப-க௨ரு.)

௬. வாதிக்குச் செங்கல்கொடுப்பதாக ஒப்பந்தஞ்செய்த ௩-வது மநுஷன் தவணையில் செங்கல்கொடாதவனாயில் அதினால் வாதிக்கு நேரிடுகிற நஷ்டத்துக்குச் சரியான தொகையைப் பிரதிவாதி கொடுப்பதாக ஒப்புக்கொண்டு ஜாமீன் பத்திரம் எழுதிக்கொடுத்தபிற்பாடு ஷை ௩-வது மநுஷன் கெடுவில் வாதிக்குச் செங்கல்கொடுக்கத்தப்பிப்போனால் ஷை ஜாமீன்பத்திர நிபந்தனைப்படி வாதிக்குப் பிரதிவாதி தொகைசெலுத்தவேண்டும். அந்த ஜாமீன்பத்திரம் அபராத நிபந்தனையுள்ளதென்று தோஷம் பாரிக்கக்கூடாது. (கஅருக௯ ௵-நம்-க௨௪-ப-௨எ௩.)

எ. யாதொரு வியாச்சியத்தில் தீர்ப்பாகிறதற்குமுன் பிரதிவாதிக்காக வேறொருவன் ஜாமீன் ஒப்புக்கொண்டு அந்த ஜாமீன் தொகைக்குச் சமான மதிப்புள்ளசொத்தை ஜாமீன்தாரன் பிரதிவாதியிடத்தில் ஈடுவாங்கியுமிருந்தால் அந்த ஜாமீன்பத்திரத்திற்கண்டகடனுக்குமட்டும் ஜாமீன்தார் உத்தரவாதியேதவிர அந்தப்பத்திரத்திற் காணுத பிரதிவாதியின் கடனுக்கு ஷை ஜாமீன்தாராவது அவன் பிரதிவாதியிடத்தில் ஈடுவாங்கியிருக்கிற சொத்தாவது பாத்தியப்படவேண்டியதில்லை. எந்தவியாச்சியத்தில் ஜாமீன்வாங்கப்பட்டிருக்கிறதோ அந்தவியாச்சியம் ஸ்தாபிக்கப்படாமல் அதோகதியாய்ப் போய்விட்டால் ஷை ஜாமீன் விமோசநமாகி ஜாமீன்தார் நிருத்தரவாதியாவான். (க௲அகூ0 ஷு-நம்-௮கூ-கூ0-ப-க௲௪-க௲கூ.)

| | |
|---|---|
| அப்பீல்-கரு.......................... | மகாராஜாத்தி அப்பீல்-கூ........ |
| தீர்ப்பு நிறைவேற்றல் கரு-ககூ | ராஜிநாமா-கக........................ |
| உக.............................. | |

இவைகளைப்பார்க்க.

---

## ஜீவநாம்சம்.

க. ஒரு தாயானவள் தகுந்தகாரணம் இல்லாமல் தன் மகனுடைய சம்ரட்சணையைவிட்டு நீங்கினபோதிலும் அந்த மகனிடத்தில் ஜீவநாம்சம் பெற்றுக்கொள்ளுகிறதற்கு அவள் பாத்தியஸ்தியாயிருக்கிறுள். (க௲அகஎ ஷு-நம்-க௩.)

உ. புத்திரன் தனக்குப் படிந்து நடக்கவில்லையென்கிற நிமித்தியத்தினல் அவனுக்கு ஜீவநாமசம் கொடுக்கமாட்டேனென்று தகப்பன் ஆட்சேபிக்கக்கூடாது. (க௲உக ஷு-நம்-உ.)

௩. தகுந்த நிமித்தியம் இல்லாமல் குடும்பத்தைவிட்டு விலகி இருக்கிற கநிஷ்டபாகஸ்தர்கள் பிரத்தியேகமாய் மிகவுஞ் சொற்ப ஜீவநாம்சத்தைமட்டும் பெற்றுக்கொள்ளப் பாத்தியஸ்தர்களாயிருக்கிறுர்கள். (ஷை)

௪. அசல்தீர்ப்பின் தேதிமுதல் ஜீவநாம்சத்துக்கு வட்டியுங் கொடுக்கவேண்டும். (ஷை.)

ரு. புருஷன்-உ-வது விவாகஞ்செய்த உடனே நிர்நிமித்தியமாய் அவனைவிட்டு விலகிப்போன முதல் தாரத்துக்கு அவன் ஜீவ

நாம்சங் கொடுக்கவேண்டியதில்லையென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௨௩ ஷூப்-நம்.௨.)

௬. தர்மசாஸ்திரப்படி கற்புநிலை கெட்டு வியபசாரியாய்ப்போன ஸ்திரீக்குப் புருஷன் ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லை. (௧௮௨௬ ஷூப்-நம்-௯.)

௭. சாஸ்திரப்படி புருஷனுடைய சொத்துக்கு அபாத்தியஸ்தியாய்ப்போகிற ஒரு விதந்துவுக்கு அவள்புருஷன் பாத்தியஸ்தனுடைய நிர்வாகத்துக்குத் தகுந்தபடி ஜீவநாம்சங் கொடுக்கக் கோர்ட்டார் தீர்மானிக்கலாம். (௧௮௨௭ ஷூப்-நம்.௧௧.)

௮. ஒருவன் தன்னுடைய நிலத்தை ஒரு விதவையினுடைய ஜீவநாம்சத்துக்காக லிகித புரஸ்ஸரமாய்க் கொடுத்துவிட்டால் அந்தப்படியே நடக்கவேண்டும். (௧௮௫௫ ஷூப்-நம்-௭௫.)

௯. ஒருவிதவையினுடைய ஜீவநாம்சத்துக்காகக் குடும்பச்சொத்தில் அவளுக்குப் பாகங்கொடுக்கக்கூடாது. (௧௮௫௫ ஷூப்-நம்-௧௪௮.)

௧௦. புருஷன் ஜீவந்தனாயிருக்கிறவரையில் அவன்மாத்திரமே அவனுடைய பத்தினிக்கு ஜீவநாம்சங் கொடுக்கக்கடமை உள்ளவனாதலால் அவனுடைய பாகஸ்தர்களையும் பொறுத்துத் தீர்மானஞ்செய்யக்கூடாது. (௧௮௫௫ ஷூப்-நம்-௧௪௬-௧௮௬௦ ஷூப்-நம்-௪௫-ப-௮௬-௧௮௬௦ ஷூப்-நம்-௧௭௦-௧௮௬௧ ஷூப்-ப-௧௨.)

௧௧. கவர்ன்மென்டாரிடத்தில் போதுமான பென்சியன் அல்லது உபகாரச்சம்பளத்தைப் பெற்றுக்கொள்ளுகிற ஒரு விதவைக்கு அதைத்தவிர வேறே பிரத்தியேகமான ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லை. (௧௮௫௬ ஷூப்-நம்-௧௪௯.)

௧௨. ஒருவன் விதவையான தன்னுடைஸயபத்தினி மாதாவுக்கு ஜீவநாம்சங் கொடுக்கவேண்டுமென்று மகமதுசாஸ்திரத்தில் விதியேற்பட்டிருக்கவில்லை. (௧௮௫௩ ஷூப்-நம்-௪௧.)

௧௩. ஒரு மகமது மதஸ்திரீ அவளுடைய புருஷன் இறந்து-௪ மீ ௧௦-தினத்துக்குள் வேறொருவனைக் கல்லியாணஞ் செய்துகொண்டாள். பிரதம புருஷன் இறந்து அவ்வளவு சொற்பக்காலத்துக்குள் நடந்தவிவாகம் மகமதுசாஸ்திரப்படி செல்லாதென்றும் அந்த ஸ்திரீக்கு உ-வது பர்த்தா ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லையென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௫ ஷூப்-நம்-௬௪.)

கச. ஒருமகமது மதஸ்தன் தன்பெண்சாதியைச் சிலவருஷகாலம் சம்ரட்சணைசெய்யாமல்விட்டுவிட்டானென்கிற ஆதாரத்தினல் அந்தக்கல்யாணத்தை நிராகரணஞ்செய்து அந்தஸ்திரீயை வேறொருவனுக்கு விவாகஞ்செய்துவைக்கக் காஜிக்கு அதிகாரம் இல்லை. புருஷனல் கைவிடப்படுகிற ஸ்திரீ மகமது சாஸ்திரப்படி ஜீவநாம்சத்துக்காகவும் வாசகிரஹத்துக்காகவும் புருஷன்மேல் வியாச்சியஞ்செய்துகொள்ளலாம். (கஅருஎளூ-நம்-கஎஉ.)

கரு. ஒருத்தி ஜீவநாம்சத்துக்காகப் புருஷன்மேல் வியாச்சியஞ்செய்தாள். அவள் நிஷ்காரணமாய்த் தன்னைவிட்டு அப்புறப்பட்டுப் போய்விட்டதால் அவளுக்கு ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லையென்று பிரதிவாதி எதிர்கட்சிபேசினன். அசல் அப்பீல்க்கோர்ட்டுகளில் வாதிபட்சம் தீர்ப்புசெய்யப்பட்டது. ஜீவநாம்ச வியாச்சியங்களில் பிரதிவாதியினுடைய இவ்விதமான செய்கையினல் அவன் ஜீவநாம்சங் கொடுக்கப் பாத்தியப்பட்டிருக்கிறனென்று தீர்ப்புகளில் கண்டெழுதவேண்டியது முக்கியமாயிருக்க அந்த விஷயம் ஷை அசல் அப்பீல்த் தீர்ப்புகளில் பேசப்படாததினலே ஷை வியாச்சியம் சதர்க்கோர்ட்டார் அவர்களால் மறுவிசாரணைக்கு அனுப்பப்பட்டது. (கஅருகளூ-நம்-அக.)

கசா. ஜீவநாம்சங் கொடுக்கப் போதுமான ஸ்திதி பிரதிவாதியிடத்தில் இல்லாவிட்டால் அவன் வாதிக்குப் பிரத்தியேகமான ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லை. (கஅருகூளூ-நம்-கசா-ப-அ௨.)

கஎ. ஒரு ஹிந்து விதவையைச் சம்ரட்சணைசெய்ய அவளுடைய தாய் தகப்பன்மார்களுக்கு இஷ்டம் இருந்தால்மாத்திரந்தான் அவர்கள் சம்ரட்சணைசெய்யலாம். அவர்களுக்கு இஷ்டம் இல்லாவிட்டால் ஷை விதவை புருஷனுடைய பாத்தியஸ்தர்கள் அவளைச் சம்ரட்சணைசெய்யக் கடமைஉள்ளவர்கள். அவள் புருஷன் இறந்துபோகுங்காலத்தில் அவள் பக்குவம் ஆகாமல் இருந்தாலுங்கூட அவள் புருஷனுடைய பாத்தியஸ்தர்கள் அவளைப் போஷிக்கவேண்டும். (கஅருஅளூ-ப-கருச.)

கஅ. தர்மசாஸ்திரப்படி பிரியாதின் தேதிமுதல் ஜீவநாம்சங் கிடைக்குமேதவிர அதற்கு முந்தினகாலத்துக்குள்ள பாக்கி ஜீவநாம்சங் கொடுக்கும்படி தீர்ப்புசெய்யக்கூடாது. (கஅருஅளூ-நம்-உகூ-ப-உகூகூ-கஅகூ0ளூ-நம்-ச-கஅகூகளூ-ப-ககூ.)

கக. ஒரு கிராமக்கர்ணனுடைய சம்பளத்திலிருந்து ஜீவநாம்சங் கொடுக்கும்படி தீர்மானஞ் செய்யக்கூடாது. (க அ௲ அ௲ ரூ-நம்-கஉ௯-ப-உஉ௫-க அ௫கூ ஷீ-நம்-க௦-ப-௫.)

உ௦. தன்னுடைய இறந்துபோன புருஷனுடைய சகோதரனை வீரபத்திரசெட்டியினால் தனக்கு ஜீவநாம்சம் கிடைக்கவேண்டுமென்று குப்பம்மாள் வியாச்சியஞ்செய்தாள். ஒரு வீட்டையுஞ் சில நகைகளையுந்தவிர வேறே வருமானங் கிடைக்கத்தக்க பூர்வீகஸ்திதி பிரதிவாதியிடத்தில் இல்லாததினாலே அவன் வாதிக்குப் பிரத்தியேகமாய் ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லையென்று தீர்மானிக்கப்பட்டது. (க அ௫கூ ஷீ-நம்-கசகூ-ப-உகூ௫.)

உக. பூர்வீகஸ்திதி இருந்தால்மட்டும் ஒருவன் தன்னுடைய சகோதரன் பெண்சாதிக்குப் பிரத்தியேகமான ஜீவநாம்சங் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறான். அவனுக்கு நிச்சயம் இல்லாததும் மாறத்தக்கதுமான வருமானமட்டுங் கிடைத்துவந்தால் அதைக்கொண்டு பிரத்தியேகமான ஜீவநாம்சங் கொடுக்கும்படி தீர்மானஞ்செய்யக்கூடாது. (க அ௫கூ ஷீ-நம்-கசஉ-ப-உஎஉ.)

உஉ. ஒரு விதவை அவளுடைய ஸ்வீகாரபுத்திரன் இடத்திலும் அவன் எந்தக்குடும்பத்தைச சேர்ந்தவனோ அந்தக்குடும்பத்தாரிடத்திலும் ஜீவநாம்சம் பெற்றுக்கொள்ளவேண்டியதேதவிர விபக்தர்களாய்ப்போன வேறே குடும்பத்தாரிடத்தில் அவளுக்கு ஜீவநாம்சங் கிடைக்கமாட்டாது. (க அ௫கூ ஷீ-நம்-உஅ-உகூ-௩௦-க அகூ௦ ரூ-ப-கூக.)

உ௩. தன்னுடைய ஜீவநாம்சத்துக்காகக் கொடுக்கப்பட்ட ரூ-௩௦௦—ம் பிரதிவாதி வைத்துக்கொண்டு அதின் வட்டியைத் தன்னுடைய ஜீவநாம்சத்துக்காகக் கொடுத்துவருகிறதென்று பிரதிவாதி ஒப்புக்கொண்டிருப்பதால் அந்த வட்டித்தொகை கிடைக்கவேண்டுமென்று வாதி விவாதித்தாள். வாதியிடத்தில் நம்பிக்கையாய் வைக்கப்பட்ட சில நகைகள் வேண்டும்போது அவள் கொடுக்கத் தப்பிப்போனால் தன் ஜீவநாம்சத்தை இழந்துவிடுகிறதென்று அவள் உடன்படிக்கை எழுதிக் கொடுத்திருப்பதாலும் அந்தப்படி அவள் நகைகளைக் கொடுக்கத் தப்பிப்போனதினாலும் அவளுக்கு ஜீவநாம்சங் கொடுக்கவேண்டியதில்லையென்று பிரதிவாதி ஆட்சேபித்தான். புருஷனுடைய குடும்பத்தாரிடத்தில் ஜீவநாம்சம் பெற்றுக்கொள்ள ஒரு விதவைக்குப் பூரணபாத்தியம்

இருக்கிறபடியாலும் ஷை வாதியினுடைய அகத்தியமான செலவுக்காகப் பிரதிவாதியினுடைய சம்மதத்துடன் அவள் ஷை நகைகளைப் பராதீநஞ்செய்திருப்பதாலும் அவள் ஷை நகைகளைப் பிரதிவாதிக்குக் கொடுக்கத் தப்பிப்போனதைக்கொண்டு ஜீவநாம்சபாத்தியத்தை இழந்துபோகவில்லையென்றும் பிரதிவாதி நகைகளைப் பற்றி வேறே வியாச்சியஞ் செய்யவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. (கஅசுO ஹை·நம்-ருஎ-ப-ககூசு.)

உச. ஒருவிதவை அவள்புருஷனுடைய குடும்பத்தாருடன் சேர்ந்திருக்கமாட்டேனென்று சொல்வதினாலே அவளுடைய ஜீவநாம்சபாத்தியத்தை இழந்து போகமாட்டாள். (கஅருசு ஹை-நம்-கஎ-கஅருஎ ஹை-நம்-கருக.)

உரு. பூர்வீகஸ்திதி இல்லாவிட்டால் விதவையானவள் அவள் புருஷன் குடும்பத்தாருடன் ஒரே யோகட்சேமமாயிருக்கவேண்டும். (கஅசஎ ஹை-நம்-உஎ.)

உசு. பூர்வீகஸ்திதி இருந்தால் அவள் ஷையாருடன் ஏகயோகட்சேமமாயிருக்கவேண்டியதில்லை. (கஅருக ஹை-நம்-அரு.)

உஎ. புருஷனுடைய இடைவிடாத நிஷ்டூரத்தினாலாவது அல்லது வேறே தகுந்தகாரணங்களினாலாவது புருஷனைவிட்டு விலகிப்போகிற பத்தினிக்குமட்டும் அவன் ஜீவநாம்சம் கொடுக்கும்படி தீர்மானஞ்செய்யலாம். (கஅருஎ ஹை-நம்-கூச.)

உஅ. ஒருவன் தன்னுடைய பாத்தியஸ்தர்களுக்குத் துரோகமாய் அவனுடைய சகலஸ்திதிகளையும் பெண்சாதியினுடைய ஜீவநாம்சத்துக்காகக் கொடுக்கக்கூடாது. (கஅருகூ ஹை-நம்-உ.)

உகூ. ஒரு மகமதுமதஸ்திரீ பெற்றுக்கொண்ட தீர்ப்பின்பிரகாரம் அவளுக்குக் கிடைக்கவேண்டிய ஜீவநாம்சம் டிவோர்சு என்கிற விவாக நிராகரணம் ஆனஉடனே நின்றுபோகத்தக்கதாயிருக்கின்றது. (கஅருஅ ஹை-நம்-சுஉ.)

௩O. ஜீவநாம்ச வியாச்சியத்தில் வாசகிரகத்துக்கு வேண்டிய தொகையும் அடங்கியிருக்கவேண்டியதானபடியால் வாசகிரகத்துக்காக வேறே வியாச்சியஞ்செய்யக்கூடாது. (கஅருரு ஹை-நம்-ரு.)

௩க. தகுமானவயதுள்ள புத்திரனும் பால அவஸ்தை நீங்காத புத்திரர்களும் தகப்பன்மீது ஜீவநாம்சத்துக்காகத் தொடர்ந்தார்கள். தகுமானவயதுள்ள புத்திரனுக்குக் கிடைக்கவேண்டிய கிரம

மான ஜீவனாம்சத்தொகை இவ்வளவென்பதையுந் தகுமானவயது வராத புத்திரர்களுக்காகச் செய்யப்பட்ட வியாச்சியஞ் செல்லுமா செல்லாதா என்பதையும் நிதானிக்கும்பொருட்டு பிதாவினுடைய நடக்கைமுதலான இன்னகாரணங்களால் அவனைவிட்டு அவர்கள் விலகும்படி நேரிட்டதென்பதை அறியவேண்டியது முக்கியமென்று சதர்க்கோர்ட்டாரவர்களால் ஷை நம்பர்-மறுவிசாரணைக்கு அனுப்பப்பட்டது. (௧௮௫௬ ஹூ-நம்-௧௮௮.)

௩௨. ஜமீன்தாரியின் வருமானங்களைப் பற்றிக்கொண்ட காரியஸ்தன் ஜீவநாம்ச பாக்கியைக் கொடுக்கிறதென்றும் அவன் கொடாதவரையில் ஜமீன்தார் கொடுக்கிறதென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௫ ஹூ-நம்-௩௮.)

௩௩. ஒரு சிவில்ஜட்ஜ் அவருக்கு முன்னிருந்த சிவில்ஜட்ஜினால் ஏற்படுத்தப்பட்ட ஜீவநாம்சத்தொகையை நிர்ணயித்தியமாய் மாற்றி வேறேதொகை நிஷ்கரிஷை செய்யக்கூடாது. (௧௮௫௬ ஹூ-நம்-௧௮.)

௩௪. பிதாவினுடைய நிஷ்டூர நடக்கைமுதலான தகுந்தகாரணங்கள் இல்லாமல் அவனைவிட்டுப் புத்திரர்கள் விலகினால் அவர்களுடைய ஜீவனத்துக்கு வேண்டிய அதி அற்பத்தொகையைமட்டும் அவர்களுக்குப் பிதாகொடுக்கும்படி தீர்ப்புசெய்யவேண்டும். அவர்களை மறுபடியும் தன் கிரகத்தில் சேர்த்துக்கொள்ளப் பிதா அநிஷ்டனாயிருந்தால் அவர்களுக்கு அவன் போதுமான ஜீவிதங் கொடுக்கவேண்டும். ஷை புத்திரர்கள் தகப்பனைவிட்டு வெளிப்பட்டபிற்பாடு கலியாணஞ் செய்துகொண்டிருந்தால் அந்தக் கலியாணச்செலவைப் பற்றி அவர்கள் தகப்பனைத் தொடரலாம். (௧௮௬௦ ஹூ-நம்-௪-௧௮௬௩ ஹூ-ப-௩௩.)

௩௫. மாமனார் முதலானவர்களின் தௌஷ்டியநடக்கையினால் ஒரு அமங்கலி அவர்களைவிட்டு விலகும்படி நேரிட்டால்மட்டும் அவளுக்கு அவர்கள் பூர்ணமான ஜீவநாம்சங் கொடுக்கவேண்டும். அப்பேர்ப்பட்ட காரணங்கள் இல்லாமலும் மாமனார்முதலானவர்களுடைய இஷ்டப்பிரகாரம் அவர்களுடன் கூடியிராமலும் தன்னுடைய தகப்பன் வீட்டுடன் சேர்ந்திருக்கிற அமங்கலைக்கு ஸ்வல்ப ஜீவநாம்சமாத்திரங் கிடைக்கும். (௧௮௬௦ ஹூ-நம்-௫௩௧-௧௮௬௧ ஹூ-ப-௩௬.)

௩௬. வருஷம் க-க்கு ரூ-௬000 வீதம் ஜீவநாம்சங் கிடைக்கவேண்டுமென்று வாதி செய்த வியாச்சியம் பிரதிவாதியால் நிராகரிக்கப்பட்டது. வியாச்சியகாலத்திற்குமுன் வாதிக்குப் பிரதிவாதி எழுதிக்கொடுத்த உடன்படிக்கையில் அவளுடைய ஜீவநாம்சத்துக்காக ரூ-க௫00-ம் தர்மச்செலவுக்காக ரூ-க000-மும் அவளுக்கு வருஷாவருஷம் பிரதிவாதி கொடுக்கிறதென்றும் வாதி வியாச்சியத்துக்குப்போனால் தர்மபாகம் ரூ-க000-மும் அவள் இழந்துபோகிறதென்றும் சங்கற்பிக்கப்பட்டிருந்ததால் அந்தப்படி அவள் வருஷம் க-க்கு ரூ-உ௫00-மட்டும் பெற்றுக்கொள்ளவேண்டியதென்றும் பிரதிவாதியின் துராட்சேபணையினால் வாதி வியாச்சியத்துக்கு வரும்படி நேரிட்டதால் ஷை தர்மபாகத்தை வாதி இழந்துபோகக்கூடாதென்றும் தீர்மானஞ் செய்யப்பட்டது. (க௮௬0ஹு-நம்-கஉ-க௮௬கஹு-ப-ககக.)

௩௭. தாசிகளுக்கு அவர்களுடைய சகோதரன் பெண்சாதியைச் சம்ரட்சணைசெய்யக்கடமை இல்லை. (க௮௫௮ஹு-நம்-௮௮-ப-க௭௫.)

௩௮. தன்னுடைய புருஷனை பிரதிவாதி துதியவிவாஹம் செய்துகொண்டு தன்னை விரட்டிவிட்டதால் ஜீவநாம்சம் கிடைக்கவேண்டுமென்று வாதி தொடர்ந்தாள். வாதி ஸ்வேஷ்டமாய்ப்போய்விட்டதாகவும் அவளுக்கு ஸர்வவில்லங்கசுத்தியாய்த் தான் சிலதொகை கொடுத்துவிட்டதாகவும் பிரதிவாதி மாறுத்தரஞ்சொன்னான். வாதிக்குச் சிலதொகை கொடுத்துவிட்டதாகப் பிரதிவாதி சொல்வதைக்கொண்டே அவள் தன்னிஷ்டமாய் வெளிப்படவில்லையென்பது ஸ்புடமென்று வாதிபட்சம் தீர்மானிக்கப்பட்டது. (க௮௫௩ஹு-ப-உ௩௬.)

௩௯. ஒரு ஸ்திரீயினுடைய ஜீவிதத்துக்காக ஆஸ்தியில் ௪-ல்-ஒரு பாகம் அவளுக்குக் கொடுக்கக்கூடாது. (க௮௬0ஹு-நம்-க௬-ப-ககக.)



இவைகளைப்பார்க்க.

## ஸ்தானீகம்.

க. கும்பகோணம் சக்கரபாணி ஸ்வாமிகோவிலின் ஸ்தானீக மிராசு பரம்பரை பாத்தியமானதல்ல. (க௮௪௭ஹு-நம்-ரு௪.)

---

## ஸ்திரீதநம்.

க. பர்த்தாவினாலாவது அல்லது வேறே யாராலாவது பத்நிக்குக் கிடைத்த ஆபரணமுதலிய ஸ்திரீதநசொத்தை க்ஷாமமுதலிய துஷ்காலங்களைத்தவிர வேறே எந்தக்காலத்திலும் பர்த்தா விநியோகஞ் செய்யக்கூடாது. இதரர்கள் இடத்தில் போக்கியம் வைக்கப்பட்டிருந்த குடும்பநிலத்தை மீட்கவேண்டியதற்காகப் பத்நியின் சம்மதியின்மேல் ஷை ஸ்திரீதநசொத்தைப் பர்த்தா விநியோகஞ் செய்திருந்தாலுங்கூடப் பர்த்தாவின் மரணத்துக்கு முன்னாவது பின்னாவது வட்டியில்லாமல் ஷை ஸ்திரீதநசொத்தின் கிரயத்தைப் பெற்றுக் கொள்ளப் பத்நி ஸ்வதந்தரையாயிருக்கிறாள். (க௮௬௫ஹு-நம்-ருக.)

உ. ஒருவனுக்கு ஒரு ஸ்திரீயைக் கந்நிகாதாநமாய்க் கொடுக்கப் பட்டிருந்தால்மட்டும் அந்தக் கலியாணகாலத்தில் அவளுடைய தாயாரால் அவளுக்குக் கிடைத்த ஸ்திரீதநம் அவள் இறந்தபின்பு அவளுடைய நாயகனைச்சேரும். அந்த விவாஹம் ஆசுரமாயிருந்தால் பத்நி அஜீவியானபின்பு அவளுடைய ஸ்திரீதனம் அவளுடைய மாதாவைச்சேரும். (க௮௬உஹு-நம்-உ௦.)


| | |
|---|---|
| சாட்சிய நிர்வாஹம்-கஉ......... | பராதீநம்-உ-சு.................... |
| ஜமீன்தார்-உக.................... | பாத்தியம்-கரு-௪௪............... |
| தாநம்-சு............................ | |

இவைகளைப்பார்க்க.


---

## ஸ்வாமிபோகம்.

க. நிலத்தை ஸ்வாமிபோகம் வாங்கி அநுபவிக்கிறவனுக்குள்ளாக அந்த நிலத்தைச்சாகுபடிசெய்கிறவன் ஸ்வாமிபோகத்துக்காக ஸ்வான்காரனுக்குப் பாத்தியப்படவேண்டியதில்லை. (க௮௬௦ஹு-நம்-௮.)

உ. ஸ்வாமிபோகத்துக்காகச் செய்யப்பட்ட வியாச்சியத்தில் நிலத்தை விடும்படி தீர்ப்புசெய்யக்கூடாது. (கஅகஉ ஹை-நம்-கக.)

| | |
|---|---|
| ஆலயம்-கசு...................... | காலநிர்ணயம்-உசு-உஎ.......... |
| ஒற்றி-கக.......................... | |

இவைகளைப்பார்க்க.

---

## ஸ்வார்ஜிதம்.

க. கஉ-வருஷகாலம்வரையில் நிறுத்தப்பட்டுப்போன மானியநிலத்தை ஒருவன் சர்வப்பிரயத்தநஞ்செய்து திருப்பிக்கொண்டால் அது அவனுடைய ஸ்வார்ஜிதமாகும். அந்த நிலத்துக்கு அவனுடைய விபக்த சகோதரர்கள் அஸ்வதந்தரர்கள். (கஅசஎ ஹை-நம்-ருசு.)

உ. யாதொரு ஸ்திதிக்குக் கநிஷ்ட சகோதரன் பெயரால் ஆதரவுகள் பிறந்திருந்து அவன் ஆஸ்தி சம்பாதிக்கும்படியான அந்தஸ்தியும் இருந்தால் அந்தஸ்திதி அவனுடைய ஸ்வயசம்பாதனையென்றே ஊஹஞ்செய்யவேண்டும். (கஅருரு ஹை-நம்-ககஅ.)

ங. ஒருவனுடைய சரீரப்பிரயாசைக்காக ஆதரவுமூலமாக அவனுக்கு யாதொரு ஸ்திதி தாநஞ்செய்யப்பட்டிருந்து அந்த ஆதரவின் ஆரம்பத்தில்மட்டும் உள்ளிட்டாரொன்று கண்டு மத்தியபாகங்களில் உள்ளிட்டாரின் பிரஸ்தாபமே இல்லாவிட்டால் அந்த ஸ்திதி அவனுடைய ஸ்வார்ஜிதமென்றே நிச்சயிக்கப்படவேண்டும். (கஅருச ஹை-நம்-சரு.)

| | |
|---|---|
| பராதீநம்-கசு...................... | பாத்தியம்-உங.................. |
| பாகம்-ரு-உச-ஙஉ............... | பூர்வார்ஜிதம்-ச.................. |

இவைகளைப்பார்க்க.

---

## ஸ்வீகாரம்.

க. ஒரு விதவை அவளுடைய புருஷன் உத்தரவுப்படிக்காவது அல்லது பந்துக்களுடைய உத்தரவுப்படிக்காவது ஒரு பிள்ளையை ஸ்வீகாரம்பண்ணிக்கொள்ளலாம். (கஅகச ஹை-நம்-கஅ.)

உ. ஸ்வீகாரஞ்செய்துகொள்ளும்படி ஒரு விதவைக்கு அவளுடைய புருஷனாற் கொடுக்கப்பட்ட அநுக்ஞை வாய்மொழியாயி

ருந்தால் அது சாட்சிகளால் ருஜுவாகவேண்டும். அந்த அநுக்ஞை எழுத்துமூலமாயிருந்து புருஷனுடைய கையெழுத்தும் ருஜுவானால் அதற்குச் சாட்சிகளுடைய கையெழுத்து அவசியமானதல்ல. அப்படி இல்லாதவரையில் ஷை எழுத்துமூலமான அநுக்ஞைக்குச் சாட்சிகளுடைய கையெழுத்து அவசரந்தான். (ஷை நம்பர்.)

௩. புருஷனுடைய அநுமதிப்பத்திரத்தில் ஸ்வீகாரஞ்செய்து கொள்ளவேண்டிய பிள்ளையின் பெயரையும் அந்தப்பிள்ளையின் தாய் தகப்பன்பெயர்களையும் குறித்துக் காட்டியிருந்தாலுங் இருக்கலாம். அல்லது பெயர்குறிக்காமல் எந்தப்பிள்ளையையாவது ஸ்வீகரித்துக்கொள்ளும்படி பொதுவாக உத்தரவு கொடுத்திருந்தாலுங் தோஷமில்லை. (ஷை.)

௪. ஒரு பிள்ளையை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளுகிறதென்று ஒரு புருஷனும் ஸ்திரீயும் எழுத்துமூலமாக ஏற்பாடுசெய்துகொண்டபிற்பாடு அவர்களில் ஒருவர் இறந்துபோனால் ஜீவித்திருக்கிற புருஷனாவது ஸ்திரீயாவது ஷை ஏற்பாட்டின்படி நடப்பிக்கவேண்டும். அவர்களில் ஒருவர் இறந்துபோனதைக்கொண்டு அந்த ஏற்பாடு ரத்தாகமாட்டாது. (ஷை.)

௫. ஒரு பிள்ளையை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளுகிறதென்று தன் பத்தினியுந் தானும் உடன்படிக்கை செய்துகொண்டிருப்பதாக ஒரு புருஷன் அவனுடைய அந்தியகாலத்தில் பிரஸ்தாபித்தால் அந்த உடன்படிக்கையிற் கண்ட பிள்ளையை ஸ்வீகரிக்க அவன் பத்தினி அதிகாரமுள்ளவள். (ஷை.)

௬. ஸ்வீகார உடன்படிக்கையில் பிள்ளையினுடையவுந் தாய்தகப்பனுடையவும் பெயர்களைக் கண்டிருந்தாலும் அல்லது தாயினுடைய பெயரையாவது அந்தப்பிள்ளையின் கோத்திரப்பெயரையாவது கண்டிருந்தாலும் சாஸ்திரப்படி அந்த உடன்படிக்கை ஊர்ஜிதமுள்ளதுதான். (ஷை.)

௭. பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும், ஒரு குழந்தை பிறந்த ௧௨-ம் நாள்முதல் உபநயநகாலம்வரையில் அந்தப்பிள்ளையை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளலாம். பிராமணர்கள் ௮-வது வயதிலும், க்ஷத்திரியர்கள் ௧௧-வது வயதிலும், வைசியர்கள் ௧௨-வது வயதிலும், உபநயநஞ் செய்யவேண்டும். ௧௬-வது வயதுவரையில் சூத்திரர்கள் ஸ்வீகாரஞ்செய்துகொள்ளலாம். (ஷை.)

அ. ஒருவன் தன்னுடைய ஜேஷ்ட சகோதரனுடைய ஏகபுத்தி ரனை ஸ்வீகாரஞ்செய்வது அசாஸ்திரீயமானதால் அவன் தன்னு டைய ஜேஷ்டகநிஷ்ட பிதாக்களில் ஒருவனுடைய கநிஷ்டபுத்திர னை ஸ்வீகரித்துக்கொள்ளலாம். (௧அ௬௭ஞு-நம்-ரு.)

௯. ஒரு ஸ்திரீயானவள் பர்த்தாவினுடைய அநுக்ஞை பெருமலி ருந்தாலுங்கூட அந்தப் பர்த்தா இறந்துபோனபிறகு தகப்பன் சகோதரன் முதலானவர்களுடைய சம்மதத்தின்மேல் அந்த ஸ்தி ரீ தன்னுடைய கநிஷ்ட புத்திரனை ஸ்வீகாரமாகக் கொடுக்கலாம். (ஷை.)

௧௦. மலையாளப்பிரதேசத்தில் நடக்கிறவழக்கப்படி செட்டிஜாதி யில் ஒருவனுக்குப் புத்திரனில்லாதபட்சத்தில் தௌஹித்திரனுக்குப் பாத்தியமுண்டாவதற்கு அந்தத் தௌஹித்திரனை அவன் ஸ்வீகாரஞ் செய்துகொள்ளவேண்டியது அகத்தியம். (௧அ௬௭ஞு-நம்-௧௦.)

௧௧. மகம்மது சாஸ்திரப்படி ஸ்வீகாரம் ஸ்வத்துவபாத்தியத்தைக் கொடுக்கமாட்டாது. (௧அ௬௭ஞு-நம்-௧௨.)

௧௨. கலியாணமான சூத்திரனை ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டால் செல்லாது. (௧அ௨௩ஞு-நம்-௭.)

௧௩. ஹிந்துக்கள் ஸ்வீகாரஞ்செய்துகொள்ளுகிறபட்சத்தில் சகல ரும் அறியப் பிரசித்தமாய்ச் செய்துகொள்ளுவது முக்கியமானத ல்ல. ஆகிலும் பிரசித்தமாய் ஸ்வீகாரஞ் செய்துகொள்வது வழக் கமாயிருக்கிறது. (௧அ௨௪ஞு-நம்-௧௯.)

௧௪. ௨-வது ஸ்வீகாரம் அசாஸ்திரீயமானதல்ல. (௧அ௨௭ஞு-நம்-௧௧.)

௧௫. சூத்திரர்களுக்குள் நடக்கும் ஸ்வீகாரத்தில் ஸ்வீகிருதனு டைய ஜநகமாதாவும் ஸ்வீகாரமாதாவுங்கூட இருக்கவேண்டியதும், தத்தஹோமஞ் செய்யவேண்டியதும், ஸ்வீகர்த்தாவைத்தவிர மற் றவர்கள் மஞ்சள்நீர் குடிக்கவேண்டியதும் அகத்தியமல்ல. (௧அ௩௯ ஞு-நம்-அ.)

௧௯. ஜேஷ்டபுத்திரனை அல்லது ஏகபுத்திரனை ஸ்வீகாரஞ் செய் யக்கூடாது. ஆனால் அந்தப்பிள்ளையை அவனுடைய பிதுருவியர் கள் ஸ்வீகாரஞ்செய்துகொள்ளலாம். அப்படிப்பட்ட விஷயத்தில் அந்த ஸ்வீகிருதன் துவியாமுஷியாயணுகி ஜநக ஸ்வீகாரபிதாக்கள் இருவருக்கும் புத்திரனும் பாத்தியஸ்தனுமாகிறான். (௧அ௪௯ஞு-நம்-௧௧.)

கஎ. ஒருவன் தன்னுடைய சகோதரனை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளக்கூடாது. (க அ௫க௲-நம்-உ௦.)

கஅ. ஸகோத்திரத்தில் பிள்ளைகள் அகப்படாவிட்டால் அந்நிய கோத்திரோத்பன்னனை ஸ்வீகரிக்கலாம். (கஅ௫க௲-நம்-உங.)

கசு. புருஷனுடைய அநுக்ஞைப்படி ஒருவிதவை ஒருபிள்ளையை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளுகிறபட்சத்தில் அந்த உத்தரவு அடங்கிய மரணசாஸநம் எந்தத்தேதியில் எழுதப்பட்டதோ அந்தத்தேதி முதல் அந்த ஸ்வீகாரப்பிள்ளையின் பாத்யம் ஆரம்பிக்கிறபடியால், அதற்குப்பிற்பாடு அந்தஸ்துக்குத்தக்கபடி ஷை விதவை ஜீவநாம்சத்துக்குமட்டும் பாத்தியஸ்தியாயிருக்கிறுள். அவள் ஆஸ்தியை அநுபவிக்கும்படி புருஷனால் எழுதிவைக்கப்பட்ட மரணசாசநஞ் செல்லாது. (ஷை.)

உ௦. ஸ்வீகாரமாதா இஷ்டப்பிரகாரம் தத்தன் நடக்கிறதென்கிற ஏற்பாட்டின்மேல் ஸ்வீகாரம் நடந்திருப்பதாகவும் அந்தப்படி நடக்க ஸ்வீகாரபுத்திரன் தப்பிப்போய்விட்டதால் அவனுடைய பாத்தியத்தை அவன் இழந்துபோய்விட்டதாகவும் ஸ்வீகாரமாதா சொல்லுங்கட்சி உபயோகம் அல்ல. ஔரஸபுத்திரனுடைய ஸ்தானத்தில் ஸ்வீகாரபுத்திரன் இருப்பதால் அவனுடைய ஸ்வீகாரம் சகலவிதத்திலும் பூர்ணமே அல்லாது காரணார்த்தமாயிருக்கக்கூடாது. (கஅ௫ச௲-நம்-கூ.)

உக. தன்னுடைய ஸ்வீகாரபாத்தியம் வேண்டியதில்லையென்று விட்டுவிட யாதொருவனுக்கும் அதிகாரமில்லை. ஆனால் அவனுடைய ஸ்வீகாரமாதாக்கள் அநுபவித்துக்கொள்ளும்படி அவன் ஆஸ்தியை அவர்களுக்குக் கொடுத்துவிடலாம். அதற்குப்பிற்பாடு அவனுடைய சொந்தச்செய்கையை அவனே ஆட்சேபிக்கக்கூடாது. (கஅ௫௫௲-நம்-ங.)

உஉ. ஒரு ஸ்வீகிருதன் அபுத்திரவானுக இறந்துபோனால் அவனுடைய ஸ்வீகாரப்பிதாவின் குடும்பத்தார் அவனுடைய ஸ்வத்துக்களுக்குப் பாத்தியஸ்தர்களேதவிர அவனுடைய ஜநகபிதாவின் குடும்பத்தார் பாத்தியஸ்தர்கள் அல்லர். (கஅ௫௫௲-நம்-ஙசு.)

உங. ஒரு ஸ்வீகாரபுத்திரன் இருக்கும்போது வேறொருவனை ஸ்வீகாரஞ்செய்வது அக்கிரமமானதால், அந்த உ-வது ஸ்வீகாரத்துக்குப்பிற்பாடு முதலாவது ஸ்வீகிருதன் இறந்துபோனாலுங்கூட

அந்த இரண்டாவது ஸ்வீகாரஞ் செல்லமாட்டாது. (கஅருரு ஞூ-நம்-கசஉ.)

உச. ஸ்வீகிருதனுடைய ஜநகமாதாவை ஸ்வீகாரப்பிதா விவாஹஞ் செய்வதற்குத் தடை இல்லாதபக்ஷத்தில் மைத்துனனுடைய ஸ்வீகாரம் சாஸ்திரவிரோதமல்ல. (கஅருசு ஞூ-நம்-கூஎ.)

உரு. ஸ்வீகாரத்துக்கு தஸ்தாவேஜின் ருஜு ஆவசியகம் அல்ல. நம்பிக்கைக்குப் பாத்திரமான வாய்மொழி ருஜுவே போதுமானது. (கஅருஎ ஞூ-நம்-உகூ.)

உசு. ஸ்வீகிருதனுடைய தாயை ஸ்வீகாரப்பிதா விவாஹஞ் செய்யக்கூடாத அதிசமீபமான பாந்தவ்வியம் இருந்தால்மட்டும் அந்த ஸ்வீகாரம் செல்லாதேதவிர அப்படிப்பட்ட பாந்தவ்வியம் இல்லாவிட்டால் அந்த ஸ்வீகாரஞ் செல்லத்தக்கதுதான். அந்தக்கிரமப்படி ஒரு ஸ்திரீதன்புருஷன் உத்தரவுப்படி தன்னுடைய தம்பியை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளலாம். (கஅருஎ ஞூ-நம்-கச-கரு.)

உஎ. வேறொரு குடும்பத்தில் ஸ்வீகாரமாய்ப்போன ஒரு ஹிந்துவுக்கு அவனுடைய ஜநககுடும்பஸ்திதிகளில் யாதொருபாத்தியமும் இல்லை. (கஅருஅ ஞூ-ப-ரு-கஅருகூ ஞூ-ப-அக.)

உஅ. ஒருவன் ஒருத்தியை சாஸ்திரப்படி விவாஹஞ்செய்யக்கூடாமலிருக்கிற தடையை ஸ்வீகாரம் நிவர்த்திசெய்யமாட்டாது. (கஅருஅ ஞூ-நம்-உஎ-ப-ககஎ)

உகூ. சாஸ்திரப்படி ஸ்வீகாரஞ்செல்லுபடியாவதற்கு ஸ்வீகிருதனை ஸ்வீகாரப்பிதா பெறும்படியான முறையிருக்கவேண்டும். (ஷை.)

௩0. ஸ்வீகாரப்பிதா ஒரு அந்நியனுக்கு ஸ்வீகாரம்போயிருந்தாலுங்கூட அவன் தன்னுடைய ஜநகசகோதரனை ஸ்வீகரிக்கக்கூடாது. (ஷை.)

௩க. பிராமணர்களுக்குள் உபநயநஞ்செய்கிறவயதுக்கு முன் நடக்கிற ஸ்வீகாரமட்டுஞ்செல்லும். (கஅருகூ ஞூ-ப-ககஅ.)

௩உ. பிராமணர்களுக்குள் அ வயதுக்குள் உபநயநம் நடக்கவேண்டுமென்று விதியிருந்தபோதிலும் அந்த வயதுக்குப்பிற்பட்டகாலத்தில் நடக்கப்பட்ட உபநயநமும் நிர்தோஷமானதுதான். (ஷை.)

௩௩. பிராமணர்களுக்குள் உபநயநம் நடக்கவேண்டிய கிரமமான வயது தாண்டிப்போயிருந்தாலுங்கூட உபநயநம்மட்டும் நடக்காம

விருந்தால் அப்படிப்பட்ட பிள்ளையை ஸ்வீகாரஞ்செய்துகொள்ளலாம். (ஷை.)

௩௪. ஒரு ஸ்திரீக்கு ஆண்சந்ததி இருக்குமானால் அவியாசந்தான சாஸ்திரப்படி அவள் ஸ்வீகாரஞ்செய்துகொள்ளக்கூடாது. (க௮௫௬ஹு-நம்-க௩௮.)

௩௫. ஒரு ஸ்வீகாரப்பிள்ளை நிஸ்ஸந்ததியாயிறந்தால் அவனுடைய ஆஸ்தி ஸ்வீகாரப்பிதாவினுடைய சொந்தக் குடும்பத்தாரைச்சேரும். (க௮௫௮ஹு-நம்-எக-க௮௫௬-ப-உகூ௫.)

௩௬. ஒருவன் தன் பத்நி கர்ப்பிணியாயிருக்குங்காலத்தில் ஸ்வீகாரஞ்செய்துகொண்டால் செல்லாது. ஸ்வீகாரத்துக்குப் பிற்பாடு அந்தக் கர்ப்பிணிக்குப் பெண்குழந்தை பிரசவமானாலுங்கூட ஷை ஸ்வீகாரஞ்செல்லமாட்டாது. (க௮௫௬ஹு-நம்-உஉ௩-க௮௬௦ஹு-ப-௬௭.)

௩௭. க௮௩௩ம்-வருஷத்தில் நடந்த ஸ்வீகாரத்தை ஆட்சேபித்து க௮௫௦ம்-வருஷத்தில் செய்யப்பட்ட வியாச்சியத்தில் வெகுகாலத்துக்குமுன் நடந்த ஸ்வீகாரத்தை ஆட்சேபிக்கக்கூடாதென்று தீர்மானஞ் செய்யப்பட்டது. (க௮௫எஹு-நம்-௩௬-௪௦-௪உ.)

௩௮. சாஸ்திர விருத்தமான தத்து சாபிபமான புருஷபந்துவினுடைய சம்மதத்தின்மேல் உறுதிப்படும். (க௮௫எஹு-நம்-க௫௬.)

௩௯. சாஸ்திரவிரோதமான ஸ்வீகாரத்துக்கு அநேகவருஷகாலம் எல்லாருஞ் சம்மதித்திருந்து அந்த ஸ்வீகாரத்தின் ஆதாரத்தின்பேரில் ஆஸ்தி விபாகமும் செய்துகொண்டபிறகு அப்படிப்பட்ட ஸ்வீகாரத்தை ரத்துச்செய்யக்கூடாது. (க௮௫௬ஹு-நம்-உ௮-உ௬-௩௦.)

௪௦. குஷ்டவியாதிக்காரனால் செய்துகொள்ளப்பட்ட ஸ்வீகாரஞ்செல்லாது. (க௮௫எஹு-நம்-க௩௩.)

௪க. கஉ-ஹுத்துக்கு மேற்பட்டகாலம்வரையில் ஆட்சேபிக்கப்படாமல் இருந்த ஸ்வீகாரத்தைப் பிற்பாடு ஆட்சேபித்து வியாச்சியஞ்செய்யக்கூடாது. (க௮௫௩ஹு-நம்-௪௬.)

௪உ. தேஹவியோகமாகிற ஒரு ஹிந்துமதஸ்தனுக்குப் புருஷப்பிரஜையிருந்தால் அவன் ஸ்வீகாரத்துக்கு அநுக்ஞைகொடுக்கக்கூடாது. (ஷை.)

௪௩. ஒரு ஹிந்து விதவையின் ஜீவியகாலபரியந்தம் ஆஸ்திகளை அநுபவிக்க அவள் பாத்தியஸ்தியாயிருப்பதால் அவளால் செய்யப்

பட்ட ஸ்வீகாரத்தை ரத்துசெய்யவேண்டுமென்றும் அவள் ஷை ஆஸ்தியை அநுபவிக்கக்கூடாதென்றும் அவள் புருஷனுடைய விபக்த தாயாதியினால் செய்யப்படும் வியாச்சியம் நிருபயோகம். (க௮௪௩ ௵-௩ம்-க௮.)

௪௪. பர்த்தா பிராண அபாவம் அடைந்து கஎ-௵ வரையில் பத்நி புத்திரஸ்வீகாரஞ் செய்யாமலிருந்து பிற்பாடு செய்துகொண்டால் அந்தஸ்வீகாரத்துக்குப் பர்த்தாவினுடைய அநுமதியில்லையென்பது ஸ்பஷ்டம். அவ்வளவுகாலத்துக்குமுன் பர்த்தா அநுமதி கொடுத்தபோது கூட இருந்த சாட்சிகள் இன்றுவென்று பத்நி ஞாபகப்படுத்திச்சொல்வது மஹாதுர்லபமானதால் அந்த விஷயத்தில் அவளுடைய வார்த்தை அப்பிரமாணமென்பது பிரசங்கம். (க௮௬௦ ௵-௩ம்-கக௯எ-கக௯௮-ப-௨௬௬.)

௪௫. ஸ்வீகர்த்தாவுக்கும் ஜநகபிதாவுக்கும் புத்திரனானது வியாமுஷியாயனன் என்பவனுடைய ஸ்வீகாரமானது இந்தக் கலியுக தர்மத்துக்கு ஒத்ததல்ல. (க௮௫௯ ௵-௩ம்-க௫-ப-௮௧.)

| | |
|---|---|
| அங்கீகாரவிபரீதம்-௬-௮-க௦.. ... | பாத்தியம்-௨௦-௪க-௪௯.......... |
| சித்தாந்தமுந் தீர்ப்பும்-௩௨...... | மரணசாஸநம்-க............... |

இவைகளைப்பார்க்க.

---

## க்ஷௌரமிராசு.

க. யாதொரு இடத்தில் வேறொருவரும் க்ஷௌரஞ்செய்யக்கூடாதென்றும் அந்த இடத்தில் எப்போதும் க்ஷௌரஞ்செய்யும்படியான மிராசு பாத்தியம் தனக்குமட்டும் இருப்பதாகவும் ஒருவன் வழக்குச்செய்தால் அந்தவழக்கு செல்லாது. (க௮௪௪ ௵-௩ம்-௬௪.)

---

## தரிசு.

| | |
|---|---|
| பட்டா-க....................... | மிராசுதாரும் புறக்குடியும் - எ - |
| ஜமீன்தார்-௨௪........... ...... | ௨௨-௨௩-௨௬-௩௫.......... ........ |

இவைகளைப்பார்க்க.

---

## தர்மகர்த்தா.

க. சீரங்கம் தர்மகர்த்தாவான முதற்பிரதிவாதி அந்த உத்தியோகத்தைத் தனக்குக் கொடுத்துவிடுவதாகப் பிரதிக்கினை செய்ததாக

வும் கலெக்ட்டரான உ-ம் பிரதிவாதி அதற்கு விக்கிநஞ்செய்வதால் அந்த உத்தியோகங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியஞ்செய்தான். ஷை கோவிலுக்கு ரு-தர்மகர்த்தர்கள் நியமிக்கப்பட்டு அவர்கள் மாறிமாறி வருஷத்துக்கு ஒருவராக வேலை பார்க்கிறதென்றும் அவர்களில் ஒருவருடையவேலை காலியானால் இதர தர்மகர்த்தர்கள் அந்த வேலைக்கு வேறே யாரையாவது நியமகஞ்செய்கிறதென்றும் கலெக்ட்டரால் பிறப்பிக்கப்பட்ட உக்கும்நாமாவில் கண்டிருப்பதால் அதற்கு விரோதமாய் வாதியை முதற்பிரதிவாதிபட்டிம நியமித்தது செல்லாதென்று வாதி வழக்கு திரஸ்கரிக்கப்பட்டது. (க௮௱0ஹூ-நம்-கரு-க௮கூகஹூ-ப-க௨௨.)

௨. கோவிலின் சொத்தைப்பற்றிக் கோவிலின் பாத்தியத்தைக் காட்டித் தர்மகர்த்தா வியாச்சியஞ்செய்யவேண்டுமே அல்லாமல் அந்தச்சொத்து அவனுடைய ஸ்வார்த்தம்போல் பாவனைசெய்து அவன் வழக்காடக்கூடாது. (க௮ருடுஹூ-நம்-ச௮-க௮ருகூஹூ-ப-௨0௬.)

ஆலயம்-க0-௩௬-௩ச-கரு.

இவைகளைப்பார்க்க.

---

## தர்மசத்திரம்.

க. ஒரு மண்டபத்தின் தர்மவிசாரணையை நடத்தும்படி பிரதிவாதியினுடைய சகோதரன் வாதிக்கு அதிகாரப்பத்திரங் கொடுத்ததாகவும் அந்த மண்டபவிசாரணையில் பிரதிவாதி பிரவேசிக்காமலிருக்கும்படி தீர்ப்புச்செய்யவேண்டுமென்றும் வாதிவழக்கிட்டான். ஷை மண்டபம் பிரதிவாதிக்கும் அவனுடைய இறந்துபோன சகோதரனுக்கும் பொதுவான பூர்வீகஸ்திதியானதினாலும் அதற்காக வாதியிடத்தில் பிரதிவாதியினுடைய சகோதரன் யாதொரு தொகையும் பற்றிக்கொள்ளாமல் தர்மவிசாரணை நடப்பிக்கமட்டும் வாதிக்கு அதிகாரங் கொடுத்திருப்பதினாலும் பிரதிவாதியின் சகோதரன் இறந்தபிறகு அந்த அதிகாரப்பத்திரஞ் செல்லாதென்று வாதி வழக்குத் தள்ளப்பட்டது. (க௮௱0ஹூ-நம்-கசுஎ-ப-௨௮ரு.)

தர்மவிஷயம்-௬-ச-சு.

இவைகளைப்பார்க்க.

---

## தர்மசாஸ்திரம்.

க. தர்மசாஸ்திர விஷயத்தைப்பற்றிப் பண்டிதனைக் கேட்கப்பட்ட கேள்வியில் வியாச்சிய விஷயமுழுதும் பூரணமாக அடங்கியிருக்கவேண்டும். (க௲அ௱எ௫-ங்ம்-௲௬எ.)

உ. ஸ்வீகாரமுதலான விஷயங்களில் பண்டிதருடைய அபிப்பிராயத்துக்கு விரோதமாகச் சதர்க்கோர்ட்டாரால் அடியிற்கண்ட நம்பர்களில் தீர்மானிக்கப்பட்டது. (க௲அ௱௫௫-ங்ம்-கசஉ-க௲அ௱௫அ ௫-ங்ம்-௩௩.)

௩. ஹிந்துக்களுடைய வியாச்சியங்களில் தர்மசாஸ்திரத்தைப் பற்றி மகமது சாஸ்திரக்கியனை அபிப்பிராயங் கேட்கக்கூடாது. (க௲அ௱௫௫ ௫-ங்ம்-உஉ.)

௪. சாஸ்திரவிஷய சம்பந்தமான வியாச்சியங்களில், க௲அ௦உ ௫-௩-வது சட்டம் கஎ-வது பிரிவில் சொல்லப்பட்ட மார்க்கத்தைக் கோர்ட்டார் அநுஷ்டித்துச் சாஸ்திரப்பிரதிஷ்டை செய்யவேண்டும். (க௲அ௱௦௫-ங்ம்-௪௩.)

௫. சாஸ்திரத்தைப்பற்றிப் பிரதிவாதி பேசினாலும் பேசாவிட்டாலும் சாஸ்திரப்பிரமாணத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டியது சதர்க்கோர்ட்டாரவர்களுக்குக் கடன். (க௲அ௱௦௫-ங்ம்-௪௪.)

௬. சாஸ்திரத்தைப்பற்றிப் பிரதிவாதி சங்கித்தாலும் சங்கிக்காவிட்டாலும் அந்த விஷயத்தைப்பற்றித் தீர்க்காலோசனைசெய்து பரிஷ்கரிக்கவேண்டியது கோர்ட்டாருடைய கடமை. (க௲அ௱௪௫-ங்ம்-௬௯.)

எ. சென்னபட்டணத்தில் பிரவர்த்தியாயிருக்கிற தர்மசாஸ்திரத்துக்கும் பங்காளதேச சாஸ்திரத்துக்கும் விஸ்தாரம் பேதாபேதம் உண்டாயிருப்பதால் பங்காளதேசத்தின் சாஸ்திரம் சென்னபட்டணத்துக்கு அநுபயோகம். சென்னபட்டணத்தில் எந்த விஷயங்களிலும் சாஸ்திராநுஷ்டான முக்கியமாகவும் பங்காளத்தில் சில பிரகிருதங்களில் சாஸ்திரத்தைவிட தேசாசார அநுஷ்டானம் முக்கியமாகவும் இருக்கின்றது. (க௲அ௬௦ ௫-ங்ம்-௩-ப-௯அ.)

அந்நியமதப்பிரவேசம்-உ......... | கடன்பத்திரம்-எ-உ௩-உ௫-உ௯.
கடன்-உ............................ | கிராம உத்தியோகம்-௪.........
இவைகளைப்பார்க்க.

## தர்மயாத்திரை.

க. தர்மயாத்திரிகன் அவனுடைய வருமானத்துக்காக வியாச்சியஞ் செய்யலாம். (க௮௱௩௫-நம்-க௮.)

---

## தர்மவிஷயம்.

க. யாதொரு தர்மத்தை ஏற்படுத்தினவன் அந்தத் தர்மவிசாரணைக்கர்த்தன் அக்கிரமமாய் நடந்தால் அவன்மேலே கோர்ட்டில் வியாச்சியஞ் செய்யலாம். (க௮௱எ௫-நம்-க௪௦.)

உ. தர்மவிஷயங்களை ஏற்படுத்தினவன் தன்னுடைய பாத்தியஸ்தர்கள் அந்தத் தர்மகாரியங்களை மேல்விசாரணை செய்யலாமென்று உத்தரவு கொடுத்திருந்தால்மட்டும் அவர்கள் மேல்விசாரணை செய்யலாமே அல்லாமல் அப்படிப்பட்ட உத்தரவு இல்லாதவனாயில் அவர்கள் அந்தக்காரியங்களில் பிரவேசிக்கக்கூடாது. (க௮௱௦௫-நம்-௫௦.)

ங. தர்மசத்திரங்களுக்காக வைக்கப்பட்ட நிலத்தில் தன்னுடைய விகிதம் ஆயில் ஒருபங்கு கிடைக்கவேண்டுமென்று வாதி வழக்கிட்டான். தர்மவிஷயத்துக்காக வைக்கப்பட்ட நிலம் பாகயோக்கியமானதல்லவென்றும் ஆனால் அந்தத் தர்மவிஷயத்தில் வாதியின் பாகம், ஈ-ல்-க-க்குள்ள மேல்விசாரணையை அவன் நடப்பிவிக்கலாமென்றும் அசல் அப்பீல்க்கோர்ட்டுகளில் தீர்மானிக்கப்பட்டது. ஷை நிலத்தில் வாதிக்கு எப்படிப் பாகங்கிடைக்கக்கூடாதோ அப்படியே அதின் மேல்விசாரணையிலும் அவனுக்குப் பாகங்கிடைக்கக்கூடாதென்று அவனுடைய வழக்கை முற்றிலும் சதர்க்கோர்ட்டார் தள்ளிவிட்டார்கள். (க௮௬௦-ஸு-நம்-கங௦-ப-உ௬க.)

௪. தர்மசத்திரங்களின் அக்தார்முதலான மிராசு உத்தியோகஸ்தர்கள் இறந்துபோனால் அந்த உத்தியோகங்கள் அவர்களுடைய பாத்தியஸ்தர்களுக்குக் கிடைக்கவேண்டியது நியாயம். (க௮௱௩-௫-நம்-ங௪.)

௫. கோவிலைச்சேர்ந்த அர்ச்சிட்ட மிராசும் புரோகித மிராசும் புருஷப்பிரஜைகள் இல்லாவிட்டால் ஸ்திரீகளைச்சேரும். அவர்கள் வேறொருவனைக்கொண்டு அந்த வேலைகளை நடப்பிக்கலாம். புருஷர்களே நடப்பிக்கவேண்டிய ஆசாரியபுருஷ மிராசு ஸ்திரீகளைச் சேரமாட்டாது. (க௮௱௩-௫-நம்-எ௪.)

சு. சத்திரத்தைச்சேர்ந்த அக்தார்முதலான மிராசு உத்தியோகங்கள் காலியானால் இறந்துபோனவனுடைய பெண்ஜாதிமுதலான ஸ்திரீகளை அந்த உத்தியோகங்களில் நியமிக்கலாம். அந்தஸ்திரீகள் தங்களுக்குப் பதிலா யாரையாவது வைத்து வேலை நடப்பிக்கலாம். (கஅ௫௫௵-நம்-சுஎ.)

---

## தாசி.

ஜீவநாம்சம்-௩எ.................. | பாத்தியம்-சசு..................

இவைகளைப்பார்க்க.

---

## தானம்.

க. ஒருவனுடைய ஜீவகாலபரியந்தம் அவனுக்கு இலவசமாகச் சம்பளம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறபட்சத்தில் அவன் அந்நியனுயிருந்தால் அந்தச்சம்பளங் கொடுக்கிறவன் அதை நிறுத்திவிடலாம். அவன் அதை நிறுத்தாமல் இருந்தாலுங்கூட ஷை சம்பளம் பெறுகிறவன் இறந்துபோனபிற்பாடு அவனுடைய பாத்தியஸ்தர்கள் அந்தச் சம்பளத்தைப்பற்றித் தொடரக்கூடாது. (கஅகச௵ நம்-உச.)

உ. மகம்மது சாஸ்திரப்படி ஒரு சொத்தைத் தானம் பெறுகிறவன் அதைக் கைவசப்படுத்திக்கொண்டால்மட்டும் அந்தத் தானம் பரிபூர்த்தியாகும். (கஅஉ0௵-நம்-க.)

௩. தானம் வாங்கினவனுடைய பாத்தியஸ்தர்களின் பிரஸ்தாபம் தான சாஸநத்தில் இல்லாவிட்டால், தானம் வாங்கினவனுடைய யாவத்ஜீவமட்டும் தானம் வாங்கின ஸ்வத்தை அவன் அநுபவிக்கப் பாத்தியஸ்தனுயிருக்கிறான். (கஅக0௵-நம்-உ.)

ச. தானம் பெற்றவன் அவனுடைய சன்னதை ரெஜிஸ்டர் செய்யாமலிருப்பானுனால் அது அவனுக்கும் கவர்ன்மென்றுக்குஞ் சம்பந்தப்பட்ட விஷயமானதால் அதைக்கொண்டு தானக்கர்த்தா அந்தத் தானத்துக்கு யாதொருதோஷமுஞ் சொல்லக்கூடாது. (கஅகசு ௵-நம்-அ.)

௫. ஒருவனுக்கு ஏற்படுத்தப்பட்ட சம்பளமானது அவனுக்கும் அவனுடைய சந்ததிகளுக்குங் கொடுக்கப்படுமென்று தானசாஸநந்

தில் எழுதப்படாமல் இருந்தால் அவன் இறந்துபோனஉடனே அந்தச்சம்பளம் நின்றுபோகத்தக்கதாயிருக்கின்றது. அவன் இறந்துபோனபின்பு அவனுடைய பெண்சாதிக்கும் புத்திரனுக்கும் சில காலம்வரையில் அந்தச் சம்பளங் கொடுக்கப்பட்டாலுங்கூட அதைக் கொடுக்கிறவனுக்கு இஷ்டம் இல்லாதபோது அதை நிறுத்திவிட அதிகாரமுள்ளவனாயிருக்கிறான். (கஅகஎ ௵-நம்-கஉ.)

சு. ஒருவனுக்கு ஒருபொருளைக் கொடுத்துவிட்டதாகத் தானசாஸனத்தில் கண்டிருந்தாலும், அதை அவன் பெற்றுக்கொள்ளவில்லையென்பதற்கு நிதரிசன சூநியமாயிருந்தாலும், தானசாஸனத்தின் வாசகப்படி அதை அவன் கைவசப்படுத்திக்கொண்டதாகவே நிச்சயிககவேண்டும். (கஅஉ0 ௵-நம்-க.)

எ. ஒருவன் தன்கையில் இருக்கிற சொத்துடனேகூட இல்லாத சொத்தையுங் கலந்து தானஞ்செய்ததைக்கொண்டு அவன்கையில் இருக்கிறசொத்தின் விஷயத்தில் அந்தத் தானத்துக்கு யாதொரு களங்கமும் உண்டாகமாட்டாது. (ஷை.)

அ. லிகித பூர்வமான சாஸனப்படி ஒரு சொத்தை ஒருவனுக்குப் பூரணமாய்த் தானஞ்செய்துவிட்டால் பிற்பாடு அந்தத்தானத்தை மாற்றக்கூடாது. (கஅருஎ ௵-நம்- கஅருஅ ௵-ப-சுக.)

கூ. ஒரு ஸ்திரிக்கு அவளுடைய புருஷன் இடத்தில் கிடைத்த ஜங்கமஸ்திதிகளைப் பாத்தியஸ்தர்களுடைய சம்மதம் இல்லாமல் அவள் யாருக்காவது தானஞ்செய்யலாம். ஆனால் ஸ்தாவரசொத்தைப் பாத்தியஸ்தர்களுடைய சம்மதம் இல்லாமல் அவள் யதேச்சாதானஞ் செய்யக்கூடாது. (கஅருஅ ௵-நம்-கசுக-ப-உஉ0.)

க0. ஒற்றி கிரயமுதலான பராதீநங்கள் செய்யக்கூடாதென்கிற சங்கேதத்துடன் ஒருவன் தன்னுடைய நிலத்தை வேறொருவனுக்குத் தானஞ்செய்கிறபக்ஷத்தில், அந்தத்தானம் வாங்கினவன் நிர்வம்சமானபிற்பாடு தானாதிகாரியின் குடும்பத்தை அந்தநிலம் மறுபடியுஞ் சேரத்தக்கதானபடியால், அதைத் தானம்வாங்கினவன் யதேஷ்டவிநியோகஞ் செய்யக்கூடாது. அவன் பட்ட கடனுக்காகவும் அதைக் கோர்ட்டார் ஏலம்போடக்கூடாது. (கஅசு0 ௵-நம்-சு-ப-கஎகூ.)

கக. அ-என்பவன் அவனுடைய நிலத்தைப்பற்றி வியாச்சியஞ் செய்யவேண்டியதற்காக அந்தநிலத்தை இ-என்பவனுக்கு மேடோ

வர் செய்துக்கொடுத்தான். இ-என்பவன் அதில் பாதியை வைத்துக் கொண்டு மற்றப்பாதியை அ-என்பவனுக்குக் கொடுத்துவிட்டது போலத் தாநப்பத்திரிகை செய்துக்கொடுத்தான். ஷை நிலம் அ-என்பவனுக்கே ஸ்வந்தமானதினுலும் வியாச்சியஞ் செய்வதற்காகமாத்திரம் ஷை நிலம் இ-என்பவனுக்கு மேடோவர் செய்யப்பட்டதினுலும் அந்தநிலத்தைச் சாஸ்திரப்படி அ-என்பவனுடைய ஸ்வாதீநப் படுத்தாமல் தாநசாஸநமட்டும் இ-என்பவன் எழுதிக்கொடுத்திருந்தபோதிலும் அந்தத் தாநம் நிஷ்களங்கமானதென்று ஸ்தாபிக்கப் பட்டது. (கஅருஅ ஷூ-நம்-உச-ப-கூஎ.)

கஉ. தாநஞ் செய்யப்பட்டசொத்தைத் தாநம் வாங்குகிறவன் கேட்கும்போது விடுகிறதென்கிற நிபந்தனையுடன் தாநஞ் செய்யப் பட்டால், அந்தத் தானத்தை நிராகரிக்கும்படியான பாத்தியமும் இருப்பதால் அது கிரமமான தாநம் அல்ல. (கஅருஎ ஷூ-நம்-கஉக-கஅருஅ ஷூ-ப-உச.)

கங. மருமக்கத்தாய சாஸ்திரப்படி தாநஞ்செய்யப்பட்ட சொத்தை உடனே கொடுத்துவிடவேண்டியது தாநபூர்த்திக்கு முக்கியம். (கஅருரு ஷூ-நம்-கஉரு.)

கச. தாநஞ்செய்கிறவனுடைய முக்கியபாகஸதர்களுடைய சம்மதம் இல்லாமல் செய்யப்படுகிற தாநம் மருமக்கத்தாய சாஸ்திரப் படி செல்லாது. (கஅருரு ஷூ-நம்-கருக.)

கரு. தன்னுடைய ஸ்தாவரஸ்வத்தை வேறொருவனுக்குத் தாநஞ்செய்ய விருப்பம் உள்ளவன் தாநசாஸநத்துக்குப்பதிலாய், தொகை பற்றிக்கொண்டதுபோல் தொகை பற்றிக்கொள்ளாமலே கிரய சாஸந வக்கணையாக எழுதிக்கொடுத்தாலும் அந்தத்தாநம் செல்லுமென்று தீர்மானஞ் செய்யப்பட்டது. (கஅருங ஷூ-நம்-ருசு.)

கசு. தாநஞ்செய்யப்பட்ட நிலத்தைத் தாநம்வாங்குகிறவன் வசத்தில் விட்டுவிடாமலும், பிரதி பிரயோஜந நாஸ்தியாகவும், அந்த நிலத்தைத் தாநஞ்செய்வதாகக் கேவலம் வாக்குத்தத்தஞ்செய்வது மட்டும் போதாது. (கஅசுo ஷூ-நம்-ஙசஉ-கஅசுக ஷூ-ப-உச.)

கஎ. சௌக்கியம் ஆகக்கூடாத அசாத்திய ரோகமானது சித்த சலநத்தையும் தேக அஸ்வாதீநத்தையும் உண்டுபண்ணத்தக்கதானதால், அப்படிப்பட்ட ரோகஸ்தனால் செய்யப்பட்ட தாநமாவது அல்லது வேறே யாதொரு ஏற்பாடாவது தர்மசாஸ்திரப்படி செல்லாது. (கஅஙக ஷூ-நம்-சு.)

கஅ. ஒருஸ்திரீ அவளுடைய சொத்தைப் புத்திரிகைக்குக்கொடாமல், புத்திரனுடைய புத்திரிகைக்குத் தாநஞ்செய்தால் அந்தத் தாநம் தோஷாவஹமாகும். (கஅகூக ஹு-நம்-கூ-ப-கசஅ.)

பராதீநம்-க-எ.

இவைகளைப்பார்க்க.

## திருச்சின்னம்.

ஆலயம்-கக-வது விதியைப்பார்க்க.

## தீர்த்தம்.

க. தஞ்சாவூர் ராஜாவிற்ற் கொடுக்கப்பட்ட முதலாவது தீர்த்த மரியாதையைப்பற்றி வாதி செய்தவழக்கை ஸ்தாபித்து அவன்பட்சந் தீர்ப்புச்செய்யப்பட்டது. (கஅ௫ச ஹு-நம்-ருO-ப-சஉ.)

## தீர்ப்புநிறைவேற்றல்.

க. கஅ௫கூ ஹு-அ-வது ஆக்ட்டு உபயோகத்துக்கு வருகிறதற்கு முன்றுவது பின்றுவது செய்யப்பட்ட சகல தீர்ப்புகளும் அந்த ஆக்ட்டின் விதிகளின் பிரகாரம் நிறைவேற்றப்படவேண்டும். (ச-பு-கஅகூO ஹு ஜூலைமீ கரு௳.)

உ. ஒரேசொத்தில் வெவ்வேறுன பாகங்கள் கிடைக்கவேண்டுமென்று ஒரு வியாச்சியத்தில், உ-வாதிகள் தொடர்ந்து, அந்தப்படி தீர்ப்பாருல், ஷை ஆக்ட்டு, உOஎ-வது பிரிவுப்படி ஷை உ-வாதிகளும் அவனவனுடைய பாகம் சம்பந்தப்பட்டவனையில் தீர்ப்பை நிறைவேற்றும்படி தனித்தனியே வெவ்வேருக மனுக்கள் கொடுக்கலாம். (ச-அ-வி.)

ரு. ஒருவன்பட்சம் தீர்ப்பானபிற்பாடு அவன் இறந்துபோனல் சாஸ்திரப்படி அந்தத் தீர்ப்பு அவனுடைய கிரமமான பாத்தியஸ்தனைச்சேரும். ஆனல் கஅகூO ஹு-உஎ-வது ஆக்ட்டுப்படி அந்தப் பாத்தியஸ்தன் ஜில்லாக் கோர்ட்டார் இடத்தில் யோக்கியதாபத்திரிகை பெற்றுக்கொள்ளுகிறவனையில் அவன்பெயரால் தீர்ப்பு நிறைவேற்றக்கூடாது. (ச-பு-கஅகூக ஹு மேமீ கஎ௳.)

ச. எவன்மேல் தீர்ப்பு நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறதோ அவன் தான் பிரதிவாதி அல்லவென்று ஆட்சேபித்தால், எதிரிக்கு நோட்டீசு கொடுத்து அந்த ஆட்சேபனையைப்பற்றிக் கோர்ட்டார் விசாரணைசெய்து ஞாயமான உத்தரவுசெய்ய வேண்டும். அந்த ஆட்சேபனை ஸ்தாபிக்கப்பட்டால் அவன்மேல் தீர்ப்புநிறைவேற்றக்கூடாது. (ச-பு-கஅசுo௵ ஆகஸ்ட்டு௴ கஎஉ.)

ரு. தீர்ப்பு நிறைவேற்றும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறதற்கு முன்னாவது பின்னாவது தீர்ப்பின் தொகையைக் கொடுக்கவேண்டியவர்கள் அந்தத் தொகையைக் கோர்ட்டில் செலுத்தலாம். (ச-அ-வீ.)

சு. தாலூகா முன்சிபு முதலான கீழான அதிகாரிகள் ஜூரர் இல்லாமல் இருந்தாலும், தீர்ப்பிற்கண்ட சொத்து பாரதீனமாகும்படியாயிருந்தாலும், ஷை ஆக்ட்டு ரூசுஉ-வது பிரிவுப்படி, அவர்கள் நிறைவேற்றவேண்டிய தீர்ப்பை நிறைவேற்றவாவது, அல்லது அந்த விஷயத்தில் யாதொரு முயற்சிசெய்யவாவது, சிவில் ஜட்ஜுக்கு அதிகாரம் இல்லை. (ச-பு-கஅசுக௵ மார்ச்சு௴ கஉ.)

எ. ஒரு வியாச்சியக்காரன் கலெக்ட்டர் ஆபிசில் செய்யவேண்டியகாரியத்துக்கு அவனுக்கு உதவிசெய்யவேண்டியது கோர்ட்டாருடைய வேலையல்ல. ஆகையால் தீர்ப்பிற்கண்ட நிலங்களுக்கு வாதிகள் பெயரால் பட்டா பிறப்பிவிக்கும்படி ரிவின்யூ அதிகாரஸ்தர்களைக் கோர்ட்டார் கேட்டுக்கொள்ளவேண்டிய அகத்தியம் இல்லை. (ச-பு-கஅசுo௵ ஆகஸ்ட்டு௴ கஎஉ.)

அ. உப்பளங்கள்-கஅரு௬௵-அ-வது ஆக்ட்டு-உஉரு-வது பிரிவிற்கண்ட சர்க்கார் தீர்வை செலுத்துகிற நிலங்களுக்குச் சம்பந்தப்படாதபடியால், அந்த உப்பளங்களை வெவ்வேறாய்ப் பிரித்து வசப்படுத்தும்படி பிறந்திருக்கிற தீர்ப்புகளைக் கோர்ட்டார் நிறைவேற்றவேண்டியதே அல்லாமல் கலெக்ட்டர் நிறைவேற்றவேண்டியதில்லை. (ச-பு-சஅசுக௵ ஏப்பிரல்௴ கூஉ.)

கூ. தீர்ப்புப்பெற்றவன் வசப்படுத்தவேண்டிய நிலம் இன்னதென்று, தீர்ப்பிற்கண்ட நான்கெல்லைகளைக்கொண்டு நிச்சயிக்கவேண்டுமே அல்லாமல், நிலத்தின் அளவைக்கொண்டு நிச்சயிக்கக்கூடாது.

கo. வாதிக்குச் சொந்தமான நிலத்தில் வெட்டப்பட்டிருக்கிற கிணற்றைப், பிரதிவாதி தூர்க்கவேண்டுமென்று தீர்ப்பிற் கண்டிருக்

கிறபிரகாம், பிரதிவாதி நடக்க நிராகரித்தால் அந்தத்தீர்ப்பை நிறை வேற்றுகிற கோர்ட்டார் ஷை கிணற்றைத் தூர்க்கும்படி செய்வித்து அதனல் நேரிட்ட செலவுகளைப் பிரதிவாதி இடத்தில் வசூல் செய் யலாம். (ச-லெ-கஅருஎ ஹு-ஜநுவரிமீ ரு௳.)

கக. ஸ்தாவர சொத்தைப்பற்றின தீர்ப்பு நிறைவேறுவதை ஒரு வன் தடுத்து, அந்தச்சொத்து தனக்குச் சொந்தமானதென்று வா தித்தால், அவனுடைய பாத்தியம் உண்மையென்று கோர்ட்டாருக் கு ரம்மியமானல்மட்டும், அதை உஉகூ-வது பிரிவுப்படி கிரம வி யாச்சியமாகப் பதிந்துகொள்ளவேண்டியதேதவிர அப்படி இல் லாதவனாயில் அதை ஏற்றுக்கொள்ளவேண்டியது கோர்ட்டாரு டைய கடமையல்ல. (ச-அ-வி.)

கஉ. உ௲ 0-வது பிரிவுப்படி விசாரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ள நிறைவேற்றுகிற வியாச்சியத்தின் கட்சிக்காரர்களுக்குப் பாத்தியம் இல்லை. (ஷை.)

கங. பிரியாதிற்கண்ட நிலமே கிடையாதென்று தீர்ப்பு நிறைவே றுங்காலத்தில் வெளியானல், நூதனவியாச்சியஞ் செய்துகொள் ளும்படி கட்சிக்காரர்களுக்கு உத்தரவு கொடுக்கவேண்டும். (ச-பு- கஅசஅ ஹு ஜநுவரிமீ உரு௳.)

கச. சேவகனை பிரதிவாதி அவனுடைய மாதச்சம்பளத்திலி ருந்து வாதிக்குத் தகுந்த வயது வருகிறவனையில் அவனுக்குச் சில தொகை கொடுக்கிறதென்றும், வாதிக்குத் தகுந்த வயது வந்தவுட னே ஷை சேவகவேலையை அவனுக்குக் கொடுத்துவிடுகிறதென்றும், நிபந்தனைகள் கண்டு ஒரு பத்திரம் பிறந்து, அந்த நிபந்தனைகளின் பிரகாரந் தீர்ப்புச்செய்யப்பட்டது. அந்தத்தீர்ப்பு சுத்த அக்கிரம மானதால் அதை நிறைவேற்றக்கூடாதென்று சதர்க்கோர்ட்டாரால் கண்டிக்கப்பட்டது. (ச-பு-கஅருகூ ஹு அக்டோபர்மீ உச௳.)

கரு. பிரதிவாதியின் ஜாமீன்தாரர்கள் எவ்வளவு தொகைக்கு ஜாமீன் ஒப்புக்கொண்டார்களோ அவ்வளவுவனையில் அவர்கள்மே லே தீர்ப்பு நிறைவேற்றலாம். அதற்காக அவர்கள்மேல் வியாச்சி யஞ் செய்யவேண்டியதில்லை. (ச-பு-கஅசக ஹு அக்டோபர்மீ கஅ௳.)

ககூ. தீர்ப்பு நிறைவேற்றக் கட்டளைபிறந்தவுடனே தீர்ப்பின் தொ கை செலுத்தப்படாவிட்டால், தீர்ப்புப் பெற்றுக்கொண்டவன் உட

னே ப்ரதிவாதியின் ஜாமீன்தாரனைத் தொடரலாம். (ச-பு-கஅசஈ ஞூ ஜூன்மீ கஉஉ.)

கஎ. தீர்ப்பிற்கண்டபிரகாரம் வாதிக்குப் பிரதிவாதி பிரத்தியேகமாய் ஜீவநாம்சம் கொடாமல் அசட்டைசெய்துவந்தால், அவன் இனிமேல் ஜீவநாம்சம் சரியாய்க் கொடுக்கும்பொருட்டு, அவனிடத்தில் கோர்ட்டார் ஜாமீனாவது வாங்கலாம். அல்லது அவனுடைய ஸ்வத்துக்களை ஜப்தியிலாவது வைக்கலாம். (ச-பு-கஅசுக ஞூ மார்ச்சுமீ கஉ.)

கஅ. எந்தச் சொத்திலிருந்து ஜீவநாம்சங் கிடைக்கவேண்டியதோ அந்தச்சொத்தின் ஸ்வான்காரர்கள் தகுந்தவயது வராத பாலர்களாயிருந்தாலுங்கூட அதினால் ஜீவநாம்சத்தீர்ப்பை நிறைவேற்ற யாதொரு அடங்கமுமில்லை. (ச-பு-கஅ௫அ ஞூ மார்ச்சுமீ உஉ.)

கசு. ஜீவநாம்சத் தீர்ப்புக்காக கஅ௫சு ஞூ அ-வது ஆக்ட்டு உஈஎ-வது பிரிவுப்படி சிப்பாயினுடைய சம்பளத்தை ஜப்திசெய்யக்கூடாது. (கஅசுக ஞூ மார்ச்சுமீ கஉ.)

உ௦. கவர்ன்மென்டார் வாங்கிக்கொண்ட நிலத்துக்குப்பதிலாய் ஒரு பாளையக்காரனுக்குக் கொடுக்கப்பட்ட சம்பளப்பணத்தைத் தீர்ப்புக்காக ஜப்திசெய்யக்கூடாது. (ச-பு-கஅசுக ஞூ ஆகஸ்டுமீ உசு.)

உக. பிரவாதி வசத்திலிருந்து அகப்பட்டு உஈஈ-வது பிரிவுப்படி ஜப்திசெய்யப்பட்ட அசையும்பொருள்களை ஜாமீன்தாரனிடத்தில் ஒப்புவிக்கக்கூடாது. அந்தச்சொத்து கோர்ட்டுக்குத் தூரமான இடத்தில் ஜப்திசெய்யப்பட்டு, அதைக் கொண்டுவருவது கஷ்டமாயிருக்குமானால், அதை அமீனாவே அந்த இடத்தில் தன்னுடைய ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டு கோர்ட்டாருக்குத் தெரியப்படுத்தலாம். உசஉ-வது பிரிவுப்படி அதை ஏலம்போடும்படி கோர்ட்டார் உத்தரவு கொடுக்கலாம். (ச-பு-கஅசு௦ ஞூ மார்ச்சுமீ ககூ.)

உஉ. கெட்டுப்போகத்தக்க அசையும்பொருளை ஜப்தி செய்யவேண்டியிருந்தால், உ௫௦-வது பிரிவுப்படி ஜப்திக் கட்டளையும் ஏலக் கட்டளையும் ஒரேகாலத்தில் அனுப்பவேண்டும். (ச-பு-கஅசு௦ ஞூ டிசம்பர்மீ சஉ.)

உ௩. தாலூகா முன்சீபினால் ஜப்தி செய்யப்பட்ட சொத்தைப் பற்றிக் கலெக்ட்டர் யாதொரு பாத்தியத்தையாவது ஆட்சேபனை

யையாவது தெரியப்படுத்தவேண்டியிருந்தால், அந்த முன்சீபுக் கோர்ட்டின் யாதொருவக்கீல்மூலமாகத் தெரிவித்துக்கொள்ளலாம். (ச-பு-கஅகூ0ஹு ஏப்பிரல்மீ ககூஉ.)

உச. உசகூ-வது பிரிவின் முடிவில் பாத்திய மனுக்காரன் கிரமவியாச்சியஞ் செய்யவேண்டிய கால அளவைமட்டுங் காட்டப்பட்டிருக்கிறதே அல்லாமல், அவன் கிரமவியாச்சியஞ் செய்கிறபட்சத்தில், ஜப்திஸ்வத்தை ஏலம்போடாமல் நிறுத்திவைக்கவேண்டுமென்பது ஷை பிரிவின் தாற்பரியமல்ல. பாத்தியமனுவைத்தள்ளிச் செய்யப்பட்ட உத்தரவு முடிவானதால், கோர்ட்டார் யுக்தப்படி ஜப்திஸ்வத்தை ஏலம்போடலாம். (ச-பு-கஅகூ0ஹு மார்ச்சுமீ ககூஉ.)

உரு. சர்க்காருக்குத் தீர்வை கொடுக்கிற நிலங்களைத் தீர்ப்புக்காக ஏலம் போடும்படியான அதிகாரத்தைக் கலெக்டர்களுக்கு கவர்ன்மெண்டார் கொடுக்கிறவரையில், அந்த நிலங்களை, உசஅ-வது பிரிவுப்படி கோர்ட்டாரே அவர்களுடைய உத்தியோகஸ்தர்கள் மூலமாக ஏலம் போடலாம்.

உகூ. சர்க்கார்த்தீர்வைக்கு உட்பட்ட நிலங்களைத் தீர்ப்புக்காக ஜப்திசெய்யும்படி கொடுக்கப்படுகிற விண்ணப்பத்துடனேகூட, ரிவினியூ ரெஜிஸ்டருக்குச் சரியான கையெழுத்து முத்திரை வைக்கப்பட்ட நகல் கொடுக்கப்படாதவரையில், ஷை விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ளக்கூடாது. தற்காலம் நிலத்துக்குச் சொந்தக்காரனாயிருக்கிறவனை அந்த ரெஜிஸ்டர் காட்டாவிட்டபோதிலும், அதற்கு நகல்கொடுக்க ரிவினியூ அதிகாரிகள் ஆட்சேபிக்கக்கூடாது. (ச-பு-கஅகூ0ஹு அக்டோபர்மீ கரு உ.)

உஎ. ஒரு கோர்ட்டாரால் ஜப்தி செய்யப்பட்ட சொத்தைப்பற்றி ஒருவன் கொடுக்கும் பாத்தியமனுவை, சிவில்ஜட்ஜ் வரவழைத்து, வேறொரு கோர்ட்டாருடைய விசாரணைக்கனுப்பும்படி அ-வது ஆக்ட்டில் கண்டிருக்கவில்லை. (ச-பு-கஅகூ0ஹு செப்டம்பர்மீ கஉ.)

உஅ. ராஜதானியின் சிறுவியாச்சியக் கோர்ட்டாருடைய தீர்ப்புகளுக்காக ஸ்தாவரசொத்தை ஜப்திசெய்யக்கூடாது. பிரதிவாதியைக் காவற்கூடத்தில் வைத்தாவது, அல்லது அவனுடைய சரக்குகளையும், சாமான்களையும், ஏலம்போட்டாவது, ஷை தீர்ப்புகளை நிறைவேற்றவேண்டும்.

உகூ. தீர்ப்புக்காக சிப்பாயியின் சம்பளத்தை ஜப்திசெய்யக்கூடாது. ஆனால் அவனைப் பிடித்து சிறைச்சாலையில்வைத்து அவனுடைய சொத்துகளையும் ஜப்திசெய்து ஏலம்போடலாம். (ச-பு-கஅ௬அ ஞ் பிப்பிரவரிமீ உ௬வ.)

௩0. ஒரு விதவை ஜீவனாம்சத்துக்காகப் பாப்பர் வியாச்சியஞ் செய்து, அந்த வியாச்சியத்தொகையில் சிலது அவளுக்குக் கிடைக்கும்படியாகவும், சிலதொகையை நீக்கியும் தீர்ப்பாயிருக்கிற பட்சத்தில், தீர்ப்பாகாமல் நீக்கப்பட்டிருக்கிற தொகைக்குள்ள முத்திரைக்காகிதக் கிரயத்துக்காக அவளுக்குத் தீர்ப்பாயிருக்கிற ஜீவனாம்சத்தை ஜப்திசெய்யக்கூடாது. ஆனால் அவள் பெற்றுக்கொள்ளும்படி தீர்ப்பாயிருக்கிற நகைகளின் கிரயத்தை ஜப்திசெய்யலாம். (ச-பு-கஅ௩அ ஞ் மார்ச்சுமீ கூவ.)

௩க. தீர்ப்புக்காக ஜப்திசெய்யப்பட்டிருக்கிற நிலத்தை ஏலம்போடுகிற விஷயங்களில் எல்லாம், அந்த ஜில்லாக் கலெக்டருக்கு அந்த ஏலத்தைப்பற்றித் தெரியப்படுத்தவேண்டும். (ச-பு-கஅசஎ ஞ் பிப்பிரவரிமீ க௬வ.)

௩உ. தீர்ப்புக்காக நிலங்களை ஏலம்போடுகிறவிஷயத்தில், ரிவினியூ அதிகாரஸ்தர்கள் சொல்லும் ஆட்சேபனைகளைப்பற்றிக் கோர்ட்டார் ஆலோசித்து சாதாரணமான சட்டங்களை அநுசரித்து உத்தரவுசெய்யவேண்டியதே அல்லாமல், தேசவழக்கத்தைக் கோர்ட்டார் யோசிக்கவேண்டியதில்லை. (ச-பு-கஅசஅ ஞ் ஆகஸ்டுமீ அவ.)

௩௩. ஏலத்தை ரத்துசெய்வதற்காக ஒருவன் வியாச்சியஞ்செய்து, அந்தக்காலத்தில் ஏலத்தொகை தீர்ப்புப்பெற்ற கட்சிக்காரனுக்குக் கொடுபடாமல் இருந்தால், அந்த வியாச்சியம் தீருகிறவரையில் அந்தத் தொகையைக் கோர்ட்டு அமானத்தில் வைத்திருக்கவேண்டியது. (ச-பு-கஅ௫எ ஞ் அக்டோபர்மீ ககவ.)

௩ச. தீர்ப்புப்பெற்றவனே சொத்தை ஏலத்தில் எடுத்துக்கொண்டால், அவனுக்குக் கிடைக்கவேண்டிய தொகையைக் குறிக்கப்பட்ட கட்டணத்தொகையாகவும் ஏலத்தொகையாகவும் பாவிக்கலாம்.

௩௫. கோர்ட்டார் உத்தரவுப்படி ஏலத்தில் விற்கப்பட்டசொத்துக்கு நாஜருக்குக் கம்மிசியன் கிடைக்கமாட்டாது. (ச-பு-கஅ௩க ஞ் பிப்பிரவரிமீ உகூவ.)

௩௬. ஏலத்தில் வசூலான தொகை எந்த நிமித்தியத்தைப்பற்றி யாவது கட்சிக்காரனுக்குக் கொடுக்கப்படாமல் இருந்தால், அதை ரிவினியூ கஜானுவுக்கு அனுப்பிவிடவேண்டுமேதவிர நாஜர்வசத்தில் அந்தப்பணத்தை வைக்கக்கூடாது. (ச-பு-கஅசரு ளு பிப்ரவரி௴ அ௳)

௩௭. தீர்ப்பிற்கண்டசொத்தைத் தீர்ப்புப்பெற்றவன் வசப்படுத்திப் பூரணமாய் நிறைவேறினபிற்பாடு, அந்தச்சொத்து தனக்குப் பாத்தியமென்று வேறொருவன் மனுக்கொடுத்தால், அந்த மனுகாலந் தப்பினதாகவும் அப்பிரயோஜநமாகவும் போய்விடும். அந்த மனுவைத்தள்ளிச் செய்யப்பட்ட உத்தரவின்மேல் அப்பீல் இல்லை. ஆனால் அந்த மனுக்காரன் அவனுடைய பாத்தியத்தைப்பற்றிக் கிரமவழக்குச்செய்யலாம்.

௩௮. கடன்கொடுக்கச் சக்தி இல்லாதவர்களுக்காக உண்டாயிருக்கிற ஆக்ட்டின் பிரயோஜநத்தை அடைந்திருக்கிறவன், தீர்ப்பின் தொகைக்காகத் தன்னைப் பிடிக்கக்கூடாதென்று ஆட்சேபித்தால், கடன்கொடுக்க நிர்வாஹம் இல்லாதவர்களுக்காக ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற கோர்ட்டாருடைய சர்டிபிக்கேட்டை அவன் தாக்கல்செய்யவேண்டும். (ச-பு-கஅ௬௦ ௲ ஏப்பிரல்௴ உ௯௳.)

௩௯. ஒருவன் மற்றொருவனுக்கு அநேகந் தீர்ப்புகளின் தொகை கொடுக்கவேண்டியிருந்து, அதற்காக அவனைச் சிறைச்சாலையில்வைத்தால், அவனுடைய போஜனச்செலவுக்காக ஒவ்வொரு தீர்ப்புக்காகவுந் தனித்தனியே படிகொடுக்கவேண்டியதில்லை. (ச-அ-வி.)

௪௦. ஒரு பிரதிவாதியைப் பலவாதிகள் காவற்கூடத்தில் வைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டால், அவனுக்கு ஒவ்வொரு வாதியுந் தனித்தனியே படிகொடுக்கவேண்டும். (ச-பு-கஅ௬உ ௵ மார்ச்சு௴ உச௳.)

௪௧. காவற்கூடத்தில் வைக்கப்பட்ட பிரதிவாதிக்குப் பென்சியன் சம்பளம் வந்தாலுங்கூட, அவனுடைய சாப்பாட்டுக்காக வாதி படிகொடுக்கவேண்டும். (ச-பு-கஅசச ௵ மே௴ ௯௳.)

௪௨. தீர்ப்புக்காக ஒருகோர்ட்டாரால் காராகிரஹத்தில் வைக்கப்பட்டவன், அ-வது-ஆக்ட்டு-உஅ௦-வது பிரிவுப்படி, தன்னை விடுதலைசெய்வதற்காக அந்தக்கோர்ட்டார் பெயருக்கு விண்ணப்பம் எழுதிக்கொள்ளவேண்டும். அந்த விண்ணப்பத்தை ஷை காவற்கூடத்தை விசாரணைசெய்கிற நியாயாதிபதி வாங்கி, அந்த விண்ணப்பம்

அசுத்தியமாயிருந்தால், அதைத் தபாற்கூலி இல்லாமல் ஷை கோர்ட்டார் இடத்துக்கு அனுப்பவேண்டும். (ச-பு-கஅசுoஹு பிப்ரவரிமீ உருவ.)

சங. கஅருஉஹு-ஙங-வது ஆக்டுப்படிமாத்திரம் சுப்பிரீங் கோர்ட்டாருடைய அதிகார எல்லைக்குள் மற்றக்கோர்ட்டாருடைய தீர்ப்புகள் நிறைவேற்றப்படலாம். அந்தப்படி நிறைவேற்றுகிற விஷயத்தில், கஅசுoஹு-உங-வது ஆக்டில் சொல்லப்பட்ட விதிகளை ஆசரிக்கவேண்டும். (ச-பு-கஅசுகஹு பிப்பிரவரிமீ கசவ.)

சச. அ-வது ஆக்டு-உஅச முதலான பிரிவுகளின் பிரகாரம் கோர்ட்டாருக்கு விண்ணப்பஞ் செய்யப்பட்டால்மட்டும் மைசூர் அதிகாரஸ்தர்களுடைய தீர்ப்புகளைக் கோர்ட்டார் நிறைவேற்றலாம். (ச-பு-கஅசுoஹு நவம்பர்மீ உசவ.)

சரு. தீர்ப்பு நிறைவேற்றுகிறதற்காகத் தீர்ப்பு நகலும் நிச்சயப் பத்திரிகையும் எந்தக்கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டிருக்கிறதோ அந்தக்கோர்ட்டாரிடத்தில். அ-வது ஆக்டு-உஅஅ-வது பிரிவுப்படி தீர்ப்புப்பெற்றவன் ஸ்வயமேயாவது வக்கீல் மூலமாயாவது விண்ணப்பம் பண்ணிக்கொள்ளவேண்டும். (ச-அ-வி.)

| | |
|---|---|
| அந்நியராஜாங்கத்தீர்ப்பு-க-ரு ... | சாட்சியம்-ஙள ........ |
| உத்தரவின்பேரில் அப்பீல் - ஙா-ஏ-அ ........ | சித்தாந்தமுந் தீர்ப்பும்-சo-ருள.. |
| கலெக்டர்-ரு ........ | ஜாமீன்-ரு ........ |
| கிராம முன்சீபு-உ-ங-ச ........ | வட்டி கச ........ |

இவைகளைப்பார்க்க.

---

## தீர்வை.

க. தீர்வைப் பாக்கிக்காகக் கிரமப்பிசகாய்ச் செய்யப்பட்ட ஜப்தியினால் நேரிட்ட நஷ்டத்துக்காகச் செய்யப்பட்ட வழக்கில் மானியம் ருசுமு முதலானவைகளின் பாத்தியத்தையுங் கலக்கக்கூடாது. (கஅககஹு-நம்-கo.)

உ. மானியநிலத்தை ஒருபோகமட்டும் சாகுபடிசெய்யவேண்டியவன் எந்த வருஷத்திலாவது இருபோகம் சாகுபடிசெய்தால், அந்த இரண்டாவது போகத்துக்குள்ள தீர்வையை அவன் ஜமீன்தாருக்குச் செலுத்தவேண்டும். (கஅசுoஹு-நம்-ஙoo-கஅசுகஹு-ப-உஉ.)

ங. நிலத்தைப் பக்கத்தில் விக்கிரயஞ்செய்தவர்களே அந்த நிலத்தின்மேல் பாக்கியிருக்கிற சர்க்கார் தீர்வைக்கு உத்தரவாதிகள். (கஅருஅ ஞு-நம்-கஎ.)

ச. சாயவஸ்திரங்களுக்காக ஜமீன்தார் தீர்வை வசூல் செய்யக்கூடாது. (கஅககா ஞு-நம்-க0.)

கலெக்டர்-கஅ................. | முட்டாதார்-க-உ.................
ஜமீன்தார்-உ-ங-உங............ |

இவைகளைப்பார்க்க.

## தென்கலை.

ஆலயம்-கச-வது விதியைப்பார்க்க.

## நம்பிக்கைத் துரோகம்.

க. நம்பிக்கைத் துரோகஞ்செய்தவன்மேல், கஅரு0 ஞு அ-வது ஆக்ட்டுப்படி பிரியூாதுசெய்யாமல் அவன்மேல் சிவில்வழக்குச் செய்யலாம். (கஅருகூ ஞு-நம்-கூஎ-ப-உசருஅ.)

## நிக்ஷேபம்.

க. ஒருவன்கையில் அகப்பட்ட நிக்ஷேபம் அவனுக்குச் சொந்தமாயிராமலும் அதற்கு வேறே சொந்தக்காரர்கள் இராமலும் இருந்தால்மட்டும், அந்த விஷயத்துக்கு, கஅஙஉ ஞு-கக-வது சட்டம் உபயோகப்படும். ஒரு வீட்டின் நான்கெல்லேக்குள்ளாக அகப்பட்ட நிதி, அந்த வீட்டுக்காரனுக்கே சொந்தமானதால், அந்த நிதியில் அவனுடைய பாகஸ்தர்களுக்கும் பாகங் கிடைக்கவேண்டும். (கஅகா0 ஞு-நம்-சாஅ-ப-அஅ)

மோசம்-அ-வது விதியைப்பார்க்க.

## பகுதி.

க. பகுதி எந்த வருஷத்தில் பாக்கிநேரிட்டதோ அந்த வருஷத்தில் அந்தப்பாக்கியைப்பற்றித் தொடர்ந்தால், கஅ0உ ஞு உஎ-வது

சட்டப்படி சூக்ஷ்மவிசாரணைசெய்து தீர்மானஞ்செய்யலாம். அந் தக்காலத்துக்குப் பிற்பாடு கிரமவியாச்சியமூலமாகவே ஷை பாக்கி யைப்பற்றித் தொடரவேண்டும். (ச-பு-கஅ௫௫அ௵ ஏப்பிரல்மீ க௦உ.)

இனும்-எ-கூ..................... | மிராசுதாரும் புறக்குடியும்-கஎ-௯எ.

இவைகளைப்பார்க்க.

---

## பங்காளி.

க. பல பங்காளிகளுக்குப் பொதுவாயிருக்கிற ஸ்திதியில் அவர் களில் ஒருவன்மட்டும் அவனுடைய வீதத்துக்காகத் தனியே வியா ச்சியங் கொண்டுவரக்கூடாது. (கஅ௫உ௵-௩ம்-கக-கஅ௫௩௵-ப-௩௫.)

பிரியாது-ச-வது விதியைப்பார்க்க.

---

## பஞ்சாயத்து.

க. பஞ்சாயத்தாருடைய விசாரணைக்காக அனுப்பப்பட்ட வியாச் சியத்தில் சாட்சி சொல்லவேண்டியவனைப் பஞ்சாயத்தில் ஒருவ னாக நியமிக்கக்கூடாது. (ச-பு-கஅ௩அ௵ பிப்பிரவரிமீ க௩உ.)

உ. ஒரு அதிகாரிக்குட்பட்ட கீழான உத்தியோகஸ்தன் பஞ்சா யத்தில் ஒருவனாக நியமிக்கப்படுகிற பட்சத்தில், அந்த உத்தியோ கஸ்தன் ஆஜராகக்கூடுமான சாவகாசமான தினத்தைத் தெரிவிக் கும்படி, ஷை அதிகாரியைக் கேட்டுக்கொண்டு, அவரால் குறிக்கப் பட்ட தினத்தில் பஞ்சாயத்தார் எல்லாரும் ஆஜராகும்படி கட்டளை அனுப்பவேண்டும். (சதர்-லெட்டர்-கஅஉச௵ அக்டோபர்மீ க௫உ.)

௩. பஞ்சாயத்தார் தீர்மானஞ்செய்வதற்குமுன் அவர்களில் ஒரு வன் தேகவியோகமானால், அந்தப் பஞ்சாயத்து பின்னமடைந்து, அவர்களுடைய தீர்மானப்பிரகாரம் நடப்பதாகப் பிறந்த உடன் படிக்கையும் நிஷ்பலமாய்ப்போகும். அதற்குப் பிற்பாடு கட்சிக்கா ரர்கள் நூதனமாய்ப்பஞ்சாயத்தாரை ஏற்படுத்தும்படி கேட்டுக்கொ ள்ளலாம். அல்லது அவர்கள் வேறே கிரமமான வியாச்சியமாவது

செய்யலாம். நூதன பஞ்சாயத்தில் பழைய பஞ்சாயத்தாரையுஞ் சேர்த்துக்கொள்ளலாம். பழைய பஞ்சாயத்தார் முன்பாக வாங்கப்பட்டுக் கிரமமாய் உறுதிப்படுத்தப்பட்ட வாக்குமூலங்களைப் புதுப்பஞ்சாயத்தாருடைய ஆலோசனைக்காக உபயோகப்படுத்திக் கொள்ளலாம். (ச-பு-௧௮௨௮ ௵ மார்ச்சு௴ ௨௭௳.)

௪. பஞ்சாயத்தாராவது அல்லது அம்பயர் என்கிற பொது மத்தியஸ்தராவது, லஞ்சமுதலான துர்நடக்கைசெய்தார்கள் என்கிற ஆக்ஷேபத்தின்மேல், அவர்களுடைய தீர்மானத்தை ரத்துசெய்யவேண்டுமென்று கட்சிக்காரர்களால் கொடுக்கப்படுகிற மனுவில் குற்றம் இன்னதென்று விவரமாய்க் கண்டிருக்கவேண்டும்.

௫. ௧௮௧௬ ௵ ௫-வது சட்டம் ௧௧-வது பிரிவுப்படி கிராமப் பஞ்சாயத்தாருடைய பட்சபாதத்தைப்பற்றி சபார்டினேட் ஜட்ஜியிடத்திலாவது பிரின்சிப்பால் சதரமீன் இடத்திலாவது கட்சிக்காரர்கள் அப்பீல் செய்யலாம். அந்த அதிகாரிகள் அதைப்பற்றி சிவில்கோர்ட்டாருக்குத் தெரியப்படுத்தவேண்டும். (ச-பு-௧௮௪௪ ௵ மார்ச்சு௴ ௪௳.)

௬. ௧௮௧௬ ௵ ௧௨-வது சட்டப்படி தாலூகாமுன்சிபுகளால் நியமிக்கப்பட்ட பஞ்சாயத்தாருடைய நடவடிக்கைகளில் உள்ள பிசகுகளைத் திருத்தும்படி உத்தரவுசெய்யச் சிவில்கோர்ட்டார் அதிகாரமுள்ளவர்கள். (ச-பு-௧௮௨௮ ௵ பிப்பிரவரி௴ ௨௮௳.)

௭. தாலூகாப் பஞ்சாயத்து மிலிட்டேரிப் பஞ்சாயத்து இவர்களுடைய தீர்மானங்களின்மேல் சிவில் ஜட்ஜியினிடத்தில் அப்பீல் செய்யவேண்டும். (ச-பு-௧௮௪௪ ௵ மார்ச்சு௴ ௪௳.)

௮. ௧௮௦௨ ௵ ௨௧-வது சட்டம் அசல்வியாச்சியத்துக்குமட்டும் உபயோகமானதால், அந்தச் சட்டப்பிரகாரம் அப்பீல்வியாச்சியத்தை அப்பீல்கோர்ட்டார் பஞ்சாயத்தாருடைய தீர்மானத்துக்காக அனுப்பக்கூடாது. (௧௮௫௯ ௵-நம்-௭-ப-௯.)

௯. பஞ்சாயத்தாருடைய தீர்மானத்துக்கு ஒத்துநடப்பதாக உபயத்திராரும் சம்மதித்தபிற்பாடு அந்தத் தீர்மானத்தை அவர்கள் ஆட்சேபிக்கக்கூடாது. (௧௮௫௮ ௵-ப-௬௬.)

௧௦. ௧௮௦௨ ௵ ௨௧-வது சட்டப்பிரகாரம் லஞ்சமும் பட்சபா

தமும் நடந்தால்மட்டும் பஞ்சாயத்தாருடைய தீர்மானத்தை ரத்துச்செய்யலாம். (கஅ௫ங-ஹு-நம்-கூஎ.)

அங்கீகாரம்-கச................... | ராஜிநர்மா-எ-உக.................
பாலன்-ச.......................

இவைகளைப்பார்க்க.

---

பட்டணப்பிரதக்ஷணம்.

கிராமப்பிரதக்ஷணத்தைப்பார்க்க.

---

## பட்டப்பெயர்.

க. கோர்ட்டார் மாஜிஸ்திரேட்டார் முதலிய அதிகாரிகள் கட்சிக்காரர்களுக்கு அனுப்புகிற கட்டளைமுதலாகிய நடவடிக்கைகளில் அவரவர்களுடைய கௌரவத்துக்குத் தக்கப் பட்டப்பெயரைக் கண்டெழுதவேண்டியது கிரமமேதவிர அந்தவிஷயத்தில் லோபத்துவத்தைக் கைக்கொள்ளக்கூடாது. (சில்லரைமனு, கஅ௫ச-ஹு-நம்-௫0க-ஷை-கஅ௫கூ-ஹு-நம்-களச.)

---

## பட்டா.

க. நிலத்தைக் குடிகள் சாகுபடி செய்யாமல் அநேகவருஷம் வரையில் சும்மாபோட்டுவிட்டால், அந்த நிலத்துக்குக் கலெக்டர் வேறே யாருக்காவது பட்டாக்கொடுக்கலாம். அந்த நிலத்தைப்பற்றிப் பழையகுடிகள் தொடரக்கூடாது. (கஅகூக-ஹு-நம்-க0-பக்கங்க.)

உ. கவர்ன்மென்ருருக்குச் சொந்தமாயிராத நிலத்தை அநுபவிக்கிற குடியானவன் பட்டா பெற்றிருந்தாலுங்கூட அவனை அந்த நிலத்திலிருந்து அப்புறப்படுத்தலாம். (கஅ௫௫-ஹு-நம்-ஙஉ.)

ங. லிகிதபூர்வமான விண்ணப்பங் கொடாமல் ஒருவன் பட்டா பெற்றிருந்தாலுங்கூட அந்தப் பட்டாஸ்திரமான்துதான். கலெக்டரிடத்தில் பட்டா பெற்றுக்கொள்ளுகிறவன் தரிசுநிலத்துக்கு ஸ்வதந்திரவானுகிறுன். (கஅ௫அ-ஹு-நம்-சூக.).

ச. பட்டா வாங்கிக்கொள்ளும்படி குடியானவனை ஜமீன்தார் கேட்டுக்கொள்ளாமல் இருந்தாலும், அல்லது பட்டாவேண்டியதில்லையெ

ன்பதற்கு உபயத்திராருடைய பரஸ்பரசம்மதம் இல்லாமல்இருந்தாலும், அந்தக்குடி இடத்தில் வாரம் வசூல்செய்ய ஜமீன்தாருக்கு அதிகாரம் உண்டாகமாட்டாது. (கஅருஎ ௵-நம்-௯0-கஅருசு௵-நம்-ருஅ.)

ரு. பட்டாவிற்கண்ட நான்கெல்லைக்குட்பட்ட நிலத்தை அளந்துபார்க்கும்போது அந்தப்பட்டாவிற்கண்ட நிலத்திற்தொகைக்குமேல் ஜாஸ்தியாயிருந்தாலுங்கூட அந்த நான்கெல்லைக்குட்பட்ட நிலமுழுமையும் சாகுபடிசெய்ய அந்தப்பட்டாதாரன் பாத்தியஸ்தனாயிருக்கிறான். (கஅருய ௵-நம்-௯௨-ம்-கஅசு.)

| | |
|---|---|
| இஜாராதார்-௯ ...... | மிராசுதாரும் பறக்குடியும்-௨-௧-௨௰ ...... |
| கலெக்டர்-௧௫ ...... | |
| ஜமீன்தார்-௧-௨௪ ...... | |

இவைகளைப்பார்க்க.

பஸ்புதர்.

| | |
|---|---|
| சித்தாந்தமுந் திட்டமும்-எ ...... | தர்மசாஸ்திரம்-௧-௨ ...... |

இவைகளைப்பார்க்க.

பந்தகம்.

ஒற்றியைப்பார்க்க.

பராதீநம்.

௧. ராஜாக்கள் முதலானவர்களால் ஒரு விசேஷகாலத்தில் கொடுக்கப்பட்ட தானமானது நிபந்தம் என்று சொல்லப்படுகிறது. அந்தக்காலத்தில் தானம்வாங்கின நிலத்தைப் பராதீநம்செய்கிறவன் தோஷபாதகன் ஆகிறான். ஆனால் அவனால் செய்யப்பட்ட பராதீநம் செல்லத்தக்கதுதான். (கஅகரு ௵-நம்-௪)

௨. ஒரு ஸ்திரியினால் சம்பாதிக்கப்பட்ட மானியத்தை அவள் கிரமமான பாத்தியஸ்தனுக்குக் கொடாமல் வேறே எவ்விதத்திலாவது பராதீநஞ்செய்தால் அவள் தோஷக்கிரஸ்தியாகிறாள். ஆகிலும் சித்தப்பிரமைமுதலான அசக்திக்குட்படாத ஸ்திரீயினால் செய்யப்பட்ட பராதீநம் உறுதியுள்ளதுதான். (கஅகரு ௵-நம்-௪.)

௩. ஒருவன் தன்னுடைய களத்திரத்தின் ஜீவநாம்சத்துக்குத் தகுந்த ஸ்திதிகளை வைத்துக்கொண்டு, அவனுடைய ஸ்வார்ஜித மான கிராமத்தை அந்தப்பெண்ஜாதியின் சம்மதி இல்லாமல் அவ னுடைய சமீபதாயாதிகளில் ஒருவனுக்கு சாசுவதமாய்க் கொடுத்து விடலாம். (க௮உ௮ ஹை-நம்-க௦.)

௪. புருஷப்பிரஜையுள்ள ஒரு ஹிந்து அவனுடைய பூர்வீகஸ்திதி யையாவது ஸ்வார்ஜிதத்தையாவது விசேஷ அவசரமில்லாமல் பரா தீநம் செய்யக்கூடாது. (க௮ரு௮ ஹை-நம்-களசு-ப-௪௦-க௮சு௦ ஹை-நம்-ருஉ-ப-உஉள.)

ரு. ஒரு ஹிந்து பிரஜோற்பத்திக்கு சக்தனாயிருக்கிறவனாயில், அவனுடைய சகல ஸ்திதிகளையும் பராதீநஞ்செய்யக்கூடாது. அவ னுக்கு உண்டாகத்தக்க சந்ததியின் ஜீவநாம்சத்துக்குக் குறைவு செய்யாமல் ஸ்வல்பஸ்திதிகளைமட்டும் அவன் பராதீநஞ்செய்ய லாம். (க௮௪க ஹை-நம்-ரு.)

சு. ஒரு ஹிந்து சாஸ்திரப்படி பராதீநஞ்செய்யக்கூடுமான ஸ்திதி களை அவனுடைய ஜீவியகாலத்தில் அவனுடைய பெண்ஜாதிக்கு அவன் ஸ்திரீதநமாய்க் கொடுத்துவிடலாம். அந்த ஸ்திதியை அநுப விக்கவும் விநியோகஞ்செய்யவும் ஷை ஸ்திரீக்குப் பூரணபாத்தியம் உண்டு. (க௮ருஉ ஹை-நம்-உ௩.)

எ. ஒரு ஹிந்து மதஸ்தன் தனக்குந் தன்னுடைய பாத்தியஸ்தர்க ளுக்கும் ஒன்றும் வைக்காமல் அவனுடைய சகல ஆஸ்திகளையும் பெண்சாதிக்குத் தாநஞ்செய்யக்கூடாது. (க௮ரு௩ ஹை-நம்-உ.)

௮. ஒரு சூத்திரன் அவனுடைய ஸ்வார்ஜித ஸ்திதிகளில் சிலபாக த்தை ஸ்வீகாரபுத்திரனும் மற்றப்பாகத்தைத் தன் பத்நியும் புத் திரிகையும் அநுபவித்துக்கொள்ளும்படி, பாகபத்திரமாவது மரண சாஸநமாவது எழுதிவைத்தால் செல்லாது. ஆனால் மகனுக்குக் கிர மமான அம்சத்தைக்கொடுத்தபிற்பாடு மிச்சம் இருக்கிற ஜங்கம ஸ்திதிகளைத் தன்னுடைய பெண்சாதிக்கும் மகளுக்கும் அபிமான நிமித்தங் கொடுக்கலாம். ஷை சூத்திரனுடைய ஸ்திதி ஸ்வார்ஜிதமா யிருந்தால், ௩-ல்-க-க்கும்-பூர்வார்ஜிதமாயிருந்தால் அதில் சரி பாதி க்கும் புத்திரன் பாத்தியஸ்தன் ஆனதால் அந்தப்படி அவனுக்குப் பாகங் கொடுக்கவேண்டும். (க௮ருஉ ஹை-நம்-கூ)

கூ. அவிபக்த குடும்பஸ்திதிகளைக் குடும்பவியாபகன் கிரயஞ்செ

ய்தால் செல்லாது. ஆனால் குடும்பயோகக்ஷேமத்துக்காகக் கிரயஞ் செய்ததாக ருஜுவானால் செல்லும். (௧௮௫௨ஆ-நம்-௨௧.)

௧௦. சிலகாலமட்டும் ஸ்தானமஸ்திதியை அநுபவிக்கிறவன் அதின் வருமானத்தைப் பராதீநஞ்செய்யக்கூடாது. (௧௮௫௨ஆ-நம்-௬௩.)

௧௧. ஹிந்து விதவை அவளுடைய புருஷனிடத்திலிருந்து கிடைத்த ஜங்கமஸ்திதிகளைப் பராதீநஞ்செய்யலாம். ஸ்தாவரஸ்திதிகளில் அவளுக்கு ஜீவகால பாத்தியமட்டும் இருப்பதால் பாத்தியஸ்தர்களுடைய சம்மதியில்லாமல் அவைகளை அவள் விநியோகஞ் செய்யக் கூடாது. ஆனால் குடும்பக்கடன்களைத் தீர்க்கவேண்டியதற்காகவும், தர்மவிஷயமாகவும், புருஷனுடைய உத்தரகிரியைகளின் செலவுக்காகவும், அவளுடைய அன்னவஸ்திரச்செலவுக்காகவும், ஸ்தாவரத்தை அவள் பராதீநஞ்செய்தால் செல்லும். (௧௮௭௪ஆ-நம்-௬௨-௧௮௪௯ஆ-நம்-௫-௨௩-௧௮௫௨ஆ-நம்-௩௧-௧௮௫௫ஆ-நம்-௧௭௩-௧௮௫௬ஆ-நம்-௧௨௪-௧௮௫௯ஆ-நம்-௧௪௪-௧௮௬௦ஆ-ப-௧௫.)

௧௨. மகமதுசாஸ்திரப்படி ஆண்வழியாய்ப் பாத்தியக்கிரமம் இறங்கும்படியான ஆஸ்தியை அநுபவிக்கிற ஸ்திரீ அதை விநியோகஞ்செய்யக்கூடாது. (௧௮௫௯ஆ-நம்-௯௨-ப-௫௭.)

௧௩. பாகஸ்தர்களில் சிலர் பால அவஸ்தையில் இருக்கும்போது அவர்களைப் போஷிக்கிறவர்களும் குடும்பவியாபகர்களுமான மற்றப் பாகஸ்தர்கள் ஒன்றாய்ச்சேர்ந்து அகத்தியமான குடும்பயோகக்ஷேமச்செலவுக்காகப் பூர்வீகஸ்திதிகளில் சிலதைக் கிரயஞ்செய்யலாம். (௧௮௫௯ஆ-நம்-௭௬-ப-௧௪௨.)

௧௪. அவிபக்த குடும்பஸ்தர்களில் ஒருவன் மற்றப் பாகஸ்தர்களுடைய சம்மதி இல்லாமலும் அவசியம் இல்லாமலும் குடும்பஸ்திதிகளில் சிலதைக் கிரயஞ்செய்தால் செல்லாது. (௧௮௫௯ஆ-நம்-௧௨௩-ப-௨௭௦-௧௮௫௯ஆ-நம்-௧௮௧-௧௮௬௦ஆ-ப-௪௯.)

௧௫. மரணசாஸநத்திற்கண்ட ஈவானது பாத்தியஸ்தர்களுடைய பாத்தியத்தை மாற்றும்படியான பராதீநம் ஆகமாட்டாது. (௧௮௫௯ஆ-ப-௩௫.)

௧௬. ஒருவன் ஸ்வயமே சம்பாதித்த பூஸ்திதியைப் பராதீநஞ்செய்யலாம். அதற்கு அவனுடைய அவிபக்த பாகஸ்தர்களுடைய அநுமதிவேண்டியதில்லை. (௧௮௫௯ஆ-நம்-௧௯௦-௧௮௬௦ஆ-ப-௭.)

௧௭. அவிபக்தர்களில் ஒருவன் அவசரம் இல்லாமலும், அவனு டைய புத்திரர்களுடைய பாகத்தை நீக்காமலும், பெண்சாதி புத்தி ரிகைகளுடைய காலட்சேபத்துக்கு வேண்டியதை வைக்காமலும், பூர்வீகஸ்திதிகளில் அவனுடைய பாகத்துக்குள்ளதைமட்டும் கிர யஞ்செய்தாலும் செல்லாது. (௧௮௫௯ ஹூ-நம்-௧௯௭-௧௮௩-௧௮௯௦ ஹூ-ப-௧௭-௯௭.)

௧௮. மகமதுமதஸ்தர்கள் அவர்களுடைய தகப்பன் இறந்துபோ கும்போது கொடுத்த உத்தரவுப்படி அவர்களுடைய சகோதரியின் மகனுக்குச் சில நிலத்தைக்கொடுத்துவிட்டால், அது மகமது சாஸ் திரப்படி செல்லும். (௧௮௫௯ ஹூ-நம்-௨௨௦-௧௮௯௦ ஹூ-ப-௩௭.)

௧௯. அவிபக்தர்களில் ஒருவனுக்கு மற்றப்பாகஸ்தர்கள் எல்லா ருஞ்சேர்ந்து பூஸ்திதியைக் கிரயஞ்செய்யலாம். அவன் அந்தஸ்திதி யை வேறே யாருக்காவது கிரயஞ்செய்யலாம். (௧௮௬௦ ஹூ-நம்- ௮௮-ப-௨௧௨.)

௨௦. ஒரு ஹிந்துமதஸ்தன் அவனுடைய பத்நியின் அந்நவஸ் திரத்துக்கு மார்க்கஞ்செய்யாமல் அவனுடைய பூர்வீகஸ்திதியைப் பாராதீநஞ்செய்வது செல்லாது. (௧௮௯௦ ஹூ-நம்-௧௧௭-ப-௨௩௦.)

௨௧. ஒரு ஹிந்துமதஸ்திரீ அவளுக்கு எவ்விதமான பாத்தியஸ்தர் களும் இல்லாவிட்டால், அவளுடைய அகத்தியமான செலவுக்காக அவளுடைய பூர்வீக ஜமீன்தாரிமுதலான ஸ்திதிகளைப் பாராதீநஞ் செய்யலாம். அவளுக்குத் தாயாதிபந்துக்கள் இருந்தாலுங்கூட அவர்களுடைய சம்மதியில்லாமலும் விசேஷமான அகத்தியம் இல லாமலும் பூர்வீகஸ்திதியை அவள் பாராதீநஞ் செய்யக்கூடாது. (௧௮௫௭ ஹூ-நம்-௧௦௩-௧௩௯-௧௮௬௦ ஹூ-ப-௨௧௬.)

௨௨. ஆண்சந்ததி இல்லாத ஒரு ஹிந்துமதஸ்தன் அவனுடைய பூர்வீகஸ்திதியைக் கிரயமாயாவது அல்லது தானமாயாவது பாரா தீநஞ்செய்யலாம். அதைப்பற்றி அவனுடைய பந்துக்களில் யா தொருவன் ஆட்சேபிக்கக்கூடாது. (ஷை.)

௨௩. ஒருவனுடைய மகிமையைக் காப்பாற்றும்பொருட்டு அவ னுக்கு யாதொரு நிலத்திலிருந்து ஊதியம் ஏற்படுத்தப்பட்டிருந் தால், அந்த ஊதியத்தை அவன் ஒற்றி கிரயமுதலான விநியோகஞ் செய்யக்கூடாது. அவன் அப்படிச்செய்தாலும் அவனுடைய ஆயு வுக்குப் பிற்பாடு அந்த விநியோகஞ் செல்லாது. (௧௮௬௦ ஹூ-நம்- ௨௩௩-௧௮௬௧ ஹூ-ப-௧௯.)

போதிலும் வாதிகள் அவர்களுடைய பாத்தியத்தை ஸ்திரஸ்தாபகஞ் செய்துகொள்ளவேண்டியதற்காக மூந்தி வியாச்சியஞ் செய்தது கிரமமென்றும், ஆகிலும் முதற்பிரதிவாதியின் மரணத்துக்குப்பின்பு விவாதஸ்திதியை வாதிகளுக்குப் பூர்ண ஸ்வாதீநஞ் செய்யக்கூடாதென்றும் வாதிகள்பட்சம் சதர்க்கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டது. (க௮௬௦ ௵-நம்-எ௩-ப-க௩௦.)

உ௬. ஒரு விபக்தன் வசத்தில் இருக்கிறசொத்து அவனுக்கு ஸ்வந்தமென்று ஊஹிக்கவேண்டியதேதவிர அவனுக்கும் அவனுடைய விபக்த பாகஸ்தர்களுக்கும் அது சமுதாயமென்று மநஸ்கரிக்கக் கூடாது. அந்தச்சொத்தை ஷை விபக்தன் ஸ்வேச்சாவிநியோகஞ் செய்யலாம். (க௮௬௦ ௵-நம்-எ0க-க௮௬க ௵-ப-கச௫.)

| | |
|---|---|
| அங்கீகாரம்-க0 .................. | ஜீவநாம்சம்-உ௮ .................. |
| அநுபவம்-௯-கச .................. | ஸ்திரீதநம்-க .................. |
| ஒற்றி-உஎ-௩உ .................. | பாகம்-உ௮ .................. |
| கிரயம்-உ௮-௩௯ .................. | பாத்தியம்-உ௯-சஉ .................. |
| கிராம உத்தியோகம்-௪-௬ ...... | போஷகன்-௩ .................. |
| ஜமீன்தார்-௮-க௬-க௯-உக-உஉ .. | மரணசாஸநம்-உ-௯-க௫ ...... |

இவைகளைப்பார்க்க.

- - — — —

## பரிவர்த்தனை.

க. உபயவாதிகளும் நிலங்களை ஒருவர்க்கொருவர் பரிவர்த்தனை செய்துகொள்ளுகிறதென்று லிகிதபூர்வமாகச் சங்கற்பஞ்செய்து கொள்ளுகிற பட்சத்தில், வாதி விடவேண்டியநிலத்தை அவன் பிரதிவாதிவசத்தில் விடாமலும், அல்லது அந்தநிலத்தை விடுவிடத் தான் சித்தமாயிருப்பதாகத் தெரிவிக்காமலும், பிரதிவாதி விடவேண்டிய நிலத்தைப்பற்றிமட்டும் வாதி வியாச்சியஞ்செய்தால் செல்லாது. (க௮௫க௯ ௵-நம்-உஉச-ப-உஎ0.)

உ. பரிவர்த்தனையாய் நிலங்கொடுப்பதாகப் பிரதிவாதி சொன்னதை நம்பி அவனுக்குத் தங்களுடைய நிலத்தைக் கொடுத்ததாகவும் பிரதிவாதி தங்களுக்கு நிலம்விடத் தப்பிப்போனதால் தங்களுடைய நிலங் கிடைக்கவேண்டுமென்றும் வாதிகள் விவாதித்தார்கள். பிரதிவாதிக்கு வாதிகள் கொடுத்துவிட்ட நிலத்தைப்பற்றி அவர்கள் தொடர்ந்தது கிரமம் அல்லவென்றும், பிரதிவாதியிடத்தில் வாதி

களுக்குப் பரிவர்த்தனையாய்க் கிடைக்கவேண்டியநிலத்தைப்பற்றி அவர்கள் வேறே வியாச்சியஞ் செய்யலாமென்றும் தீர்மானிக்கப் பட்டது. (௧௮௬௦ ௵-நம்-௨௨௧-௧௮௭௧ ௵-ப-௧௫.)

அபராதம்-௬-வது விதியைப்பார்க்க.

## பலகணி.

௧. யாதொருவன் நூதனமாய்க் கட்டப்பட்ட அவனுடைய மேல்மாளிகையில் வாதாயநம் வைத்துக் கட்டிக்கொள்ளலாம். அந்தப் பலகணியினுல் அடுத்தவீட்டுக்காரனுக்கு அசௌக்கியம் உண்டானாலும் அடுத்தவீடுகளின் அந்தப்புரஸ்திரீகளை அந்தப்பலகணி வழியாய்ப் பார்க்கும்படியாயிருந்தாலுங்கூட, ஒவ்வொருவனும் அவனுடைய மேல்மாளிகையில் பலகணிவைத்துக்கட்டுவதில் ஆக்ஷேபம் இல்லை. (௧௮௬௪ ௵-நம்-௮௦-ப-௮௪.)

## பலவந்தம்.

௧. வாதியினுடைய நிலத்தில் பிரதிவாதி பலாத்காரமாய்ப் பிரவேசித்ததினுல் உண்டான நஷ்டத்தைப்பற்றி வாதி வியாச்சியஞ் செய்கிறபக்ஷத்தில், அந்த நஷ்டம் இன்னதென்று வாதி நிரூபிக்க வேண்டும். அந்தப்படி நிரூபிக்க அவன் தவறிப்போனுல் வாதியின் நிலத்தில் வாஸ்தவமாய்ப் பிரதிவாதி பிரவேசித்திருந்தாலுங் கூட வாதியின் வழக்கைத் தள்ளுபடிசெய்யவேண்டும். (௧௮௬௭ ௵-நம்-௧-௧௮௭௪ ௵-நம்-௧௨.)

௨. சிலருக்குப் பொதுவானநிலத்தில் வேறொருவன் பலவந்தமாய்ப் பிரவேசித்தால், அதனுல் உண்டான நஷ்டத்தைப்பற்றி அவர்களில் ஒருவன்மட்டும் வியாச்சியங் கொண்டுவரலாம். (௧௮௫௮ ௵-ப-௧௦௫.)


| | |
|---|---|
| அநுபவம்-௮ ........................ | சாட்சியம்-௯௦-௯௭ .................. |
| கடன்பத்திரம்-௧௮ ................ | செலவு-௧௯ .......................... |
| கலெக்டர்-௪ ...................... | மிராசுதாரும் புறக்குடியும்-௯௦. |
| கிராமப்பிரதட்சணம்-௨ ........... | |

இவைகளைப்பார்க்க.

## பாகம்.

**௧. பாகம்** பிரியவேண்டுமென்று சமாம்சகர்கள் எப்போது தொடர்ந்தார்களோ அப்போதே பாகஞ் செய்யவேண்டும். (௧௮௧௪ ௵-நம்-எ.)

௨. ௩-பாகஸ்தர்களில் ௨-பாகஸ்தர்கள் மற்றொரு பாகஸ்தனுடைய மாதாவுக்குக் கொடுத்துவிட்ட நிலம் பிற்பாடு அவர்களுடைய பாகத்துக்கு அர்ஹமானதல்ல. (ஷை.)

௩. மருமக்கத்தாய சாஸ்திரமானது குடும்பச்சொத்தைப் பாகிக்கும்படி உத்தரவு கொடுக்கவில்லை. அந்தச் சொத்துக்களின் மேல் விசாரணையைப் புருஷர்களான ஜேஷ்ட பாகஸ்தர்களே நடப்பிக்க வேண்டும். (௧௮௧௪ ௵-நம்-௨-௮-௧௮௫எ ௵-நம்-௪.)

௪. தர்மசாஸ்திரப்படி ஒரு ஜமீன்தாரால் வைக்கப்பட்ட ஜங்கமஸ்திதிகளில் அவனுடைய மகனுக்குப் பாகம் உண்டு. (௧௮௧௬ ௵-நம்-௧௧.)

௫. சமாம்சகர்களில் சிலரால் சம்பாதிக்கப்பட்ட ஸ்திதியில் பாகங் கிடைக்கவேண்டுமென்று தொடருகிறவர்கள் அந்தஸ்திதி பூர்வீகஸ்திதியின் உதவியைக்கொண்டே சம்பாதிக்கப்பட்டதென்று ருஜுப்படுத்தவேண்டும். அப்படி ருஜுப்படுத்தாதவனாயின் அவர்களுக்குப் பாகங் கிடைக்கமாட்டாது. (௧௮௧எ ௵-நம்-௨.)

௬. பல சமாம்சகர்களில் ஒருவன்பாகத்துக்குத் தொடர்ந்தாலும் உடனே பாகம் செய்யப்படவேண்டும். (௧௮௧௮ ௵-நம்-௧௨.)

எ. பாகஸ்தர்களுக்குள் பாகம் நடந்ததாகவாவது அவர்களில் ஒருவன்வசத்திலிருக்கிற ஸ்திதி மற்றவர்களுடைய சகாயம் இல்லாமல் அவனால்மட்டும் சம்பாதிக்கப்பட்டதாகவாவது ருஜுவாகாமற்போனால், எல்லாப்பாகஸ்தர்களுக்கும் பாகங் கிடைக்கவேண்டும். (௧௮௨௩ ௵-நம்-௩.)

**௮.** ஒரு ஸ்திதியை எல்லாரும் பொதுவில் அநுபவித்துவந்தால் அது விபாகத்துக்கு அர்ஹமானதென்பது பிரத்தியட்சமாயிருக்கின்றது. (௧௮௨௫ ௵-நம்-௧.)

௯. ஒரு தகப்பன் தன்னுடைய ஸ்திதியைப் பிள்ளைகளுக்குப் பாகப் பிரிவினைசெய்து, அதின் விசாரணையைத் தன் கையில் வைத்துக் கொண்டிருப்பானானால், அந்த விபாகம் நிறைவேற இல்லையென்பது திருஷ்டாந்தம். (௧௮௨எ ௵-நம்-௧௧.)

கo. விபாகத்துக்காக ஒருவன்மேல் வியாச்சியஞ் செய்யப்பட்டு, அந்த வியாச்சிய முடிவு பெறுகிறதற்குமுன், அவன் இறந்துபோனால், அவன் அவிபக்தன் என்றே நிச்சயிக்கவேண்டியது. (ஷை.)

கக. பாகபத்திரம் பிறந்ததைக்கொண்டுமாத்திரம் பாகமானதாக எண்ணக்கூடாது. பாகஸ்தர்கள் சொத்துக்களை வாஸ்தவமாய்ப் பிரிவினை செய்துகொண்டு, அவரவர்களுடைய பாகஸ்திதிகளையும் தனித்தனியே எடுத்துக்கொண்டால்மட்டும் பாகம் நிறைவேறும். (கஅருஉ வருஷ-நம்-க0-கஅருச வருஷ-நம்-ருஅ-கஅருஎ வருஷ-நம்-ரு-கஅருஅ வருஷ-நம்-கசக-ககஎ-கஅருகூ வருஷ-ப-ககரு0-கஅருகூ வருஷ-நம்-க00-ப-உகூ0.)

கஉ. பாகத்துக்காக வியாச்சியஞ்செய்தவன் அது முடிவாகிறதற்குமுன் இறந்துபோனால் அவனுடைய பெண்ஜாதிக்கு அந்தப் பாகவியாச்சியத்தை நடப்பிக்கப் பாத்தியம் இல்லை. (கஅருஎ வருஷ-நம்-அஈ-கஅருகூ வருஷ-நம்-கஎஅ-ப-உஙங)

கங. ஒரு தகப்பனும் பிள்ளையும் பிரிந்திருப்பதைக்கொண்டு அவர்களுக்குள் விபாகம் ஆகிவிட்டதாக எண்ணக்கூடாது. மகனுடைய சம்மதியில்லாமல் தகப்பன்மட்டும் பூர்வீகஸ்திதியைக் கிரயஞ்செய்யக்கூடாது. (கஅருரு வருஷ-நம்-சஉ.)

கச. பாகத்துக்காகத் தீர்ப்புப்பெற்றுக்கொண்டவன் அந்தத் தீர்ப்பு நிறைவேறுகிறதற்குமுன் இறந்துபோனால், அவன் அவிபக்தன் என்றே எண்ணவேண்டும். அவனுடைய தாய் பெண்சாதி முதலானவர்கள் ஜீவநாம்சத்துக்குமட்டும் பாத்தியஸ்தர்களே தவிர அந்தத் தீர்ப்பிற்கண்ட பாகஸ்திதியைப்பற்றித் தொடரக்கூடாது. (கஅருரு வருஷ-நம்-அஎ)

கரு. ஒருவனுக்கு இரண்டு பத்தினிகள். அவர்களில் மூத்தபத்தினிக்கு ஒரு புத்திரனும் இளையபத்தினிக்குப் பலபுத்திரர்களும் பிறந்தார்கள். பூர்வீகஸ்திதியில் பாதி கிடைக்கவேண்டுமென்று மூத்த பத்தினியின் புத்திரன் வழக்காடினான். பூர்வீகஸ்திதியில் புத்திரர்களுக்கெல்லாம் சமபாகமே அல்லாமல் பத்தினிகளின் எண்ணிக்கைப்படி அதிகங் குறைவாய் விஷமபாகம் செய்யக்கூடாதென்று விதிக்கப்பட்டது. (கஅசஅ வருஷ-நம்-உ0-கஅருரு வருஷ-நம் ககூகூ.)

கசு. ஒருவன் இறந்துபோகும்போது பாகிக்கப்படாமல் இருந்த ஸ்திதியில் அவன் பத்னிக்குப் பாகங் கிடைக்கமாட்டாது. அவள் ஜீவநாம்சத்துக்குமட்டும் பாத்தியஸ்தி. (கஅருரு வருஷ-நம்-க0சு.)

கஎ. ஒரு விதந்துவினுடைய ஜீவநாம்சத்துக்காக அவனுக்குக் குடும்பச்சொத்தில் பாகங்கொடுக்கும்படி தீர்மானஞ் செய்யக்கூடாது. (கஅ௲ரு௵-நம்-கசஅ.)

கஅ. அவிபக்த குடும்பத்தின் ஜங்கமஸ்திதிகள் பாகத்துக்கு யோக்கியமானவைகளே. (கஅசஅ௵-நம்-கூச.)

கசு. ௩00-வருஷகாலம் ஜேஷ்டபுத்திரக் கிரமமாக அநுபவிக்கப்பட்ட பூஸ்திதி மற்றவர்களுடைய பாகத்துக்கு அர்ஹமானதல்ல. (ஷை நம்பர்.)

உ0. ஒருவன் தன்னுடைய தாயின் சகோதரி விவாஹமான குடும்பத்திற் சேர்ந்திருந்ததைக்கொண்டு அவனுக்கு அந்தக் குடும்பஸ்திதியில் அம்சம் கிடைக்கமாட்டாது. (கஅருஅ௵-நம்-க0க-ப-உ0ச.)

உக. ஒரு குடும்பத்தில் அவிபக்தர்கள் இல்லாவிட்டால் அந்தக் குடும்பச்சொத்து விபக்தர்களைச் சேரும். (கஅருஅ௵-நம்-கஙகூ-கஅருகூ௵-ப-௩ரு.)

உஉ. ஒரு வியாஜியத்தில் தான் விபக்தனென்று கட்சிபேசின ஒருவன் பிற்பாடு அவிபக்தனென்று சம்வாதிக்கக்கூடாது. (கஅருகூ௵-நம்-கஎ-ப-எரு.)

உ௩. ஒருவன் தர்மசாஸ்திரப்படி அதிகபாகம் பெற்றுக்கொள்ளப் பாத்தியஸ்தனாயிருந்தபோதிலும், அவன் அதற்குமுன்பு நடந்த பாகத்தை ஆட்சேபிக்காமல் கசு-வருஷகாலம் சும்மா இருந்துவிட்டதினால் அவன் அந்தப்பாகத்துக்குச் சம்மதித்து இருந்துவிட்டதாக நிச்சயிக்கப்பட்டது. (கஅருகூ௵-நம்-ச௰-ப-அச.)

உச. ஒரு ஹிந்துமதஸ்தன் ஆஸ்தி சம்பாதித்துக்கொண்டு அவன் தம்பியுடன் சேர்ந்து சிலரிடத்திற் கடன்வாங்கி வியாபாரஞ் செய்துவந்ததினாலும், அந்த வியாபாரகாரியங்களை முக்கியமாகத் தம்பி நடத்திவந்ததினாலும், அந்த வியாபாரஸ்திதியில் சரிபாதிக்கு அந்தத் தம்பியும் பாத்தியஸ்தனென்றும், அவர்கள் சாஸ்திரந் தெரியாத ஞானசூநியர்களா இருந்தாலுங்கூட அந்தப்படிக்கே பாகித்துக்கொள்ளவேண்டுமென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (கஅருஅ௵-நம்-கஅஎ-கஅருகூ௵-ப-கசுரு.)

உரு- குடும்பஸ்திதிகள் குடும்ப வியாபகன்கையில் இருக்கும்போது, தகுமான வயதில்லாத ஒரு சமாம்சகனுடைய பாத்திய

விஷயத்தில் யாதொரு மோசமுதலான செய்கைகள் நடந்தால்மட்டும், அவன் போஷகர்கள்மூலமாக அவனுடைய பாகத்துக்காக வியாச்சியம் பண்ணலாம். அப்படி மோசம்நடவாதவரையில் அவன் வியாச்சியந் தொடரக்கூடாது. (௧௮௫௯ ஷூ-நம்-௧௪ அ-ப-௨௬௫.)

௨௬. ஹிந்துக்களின் குடும்பத்தில் விபக்தவிஷயம் ருஜுவாகவேண்டியது முக்கியம். அந்தவிஷயம் ருஜுவாகிறவரையில் அவிபக்தர்களென்றே ஊஹிக்கவேண்டியது கிரமம். (௧௮௫௯ ஷூ-நம்-௧௨ அ-௧௮௬௦ ஷூ-ப-௧.)

௨௭. பூர்வீகஸ்திதியில் ஒருவன் பாகத்துக்காகத் தொடர்ந்து மற்றப் பாகஸ்தர்கள் துராட்சேபனை செய்வார்களானால், அவன் எந்தத்தேதியில் விபாகத்துக்காகத் தொடர்ந்தானோ அந்தத்தேதி முதல் அவனுடைய பாகஸ்திதியின் வருமானத்தையும் பெற்றுக்கொள்ளப் பாத்தியஸ்தனாயிருக்கிறான். (௧௮௫௯ ஷூ-நம்-௧௩௦-௧௮௬௦ ஷூ-ப-௪௨.)

௨௮. அ-என்பவன் இறந்துபோகிறதற்குமுன் அவனுடைய ஸ்திதிகளில் சிலதுக்கு அவனுடைய தருமானவயதில்லாத தாயாதியான இ-என்பவனையும் மற்ற ஸ்திதிகளுக்கு அந்நியனான உ-என்பவனையும் பாத்தியப்படுத்தி ஆதரவு எழுதிவைத்தான். அந்த ஆதரவு பாகபத்திரத்துக்கு சமானமானதென்றும். இ-என்பவனுடைய பாகத்துக்குக் கிடைக்கவேண்டிய ஸ்திதிக்குமேல் அதிகஸ்திதி அவனுக்கு வைக்கப்பட்டிருப்பதால் அநுபோக மிச்ச ஸ்திதியை அ-என்பவன் உ-என்பவனுக்குக் கொடுத்தது செல்லுமென்றுந் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௯ ஷூ-நம்-௯௫-௧௮௬௦ ஷூ-ப-௧௧௫.)

௨௯. சகோதரர்கள் ஒவ்வொருவன் பெயராலும் வெவ்வேறே நிலத்துக்குத் தனித்தனியே மிராசு தாக்கலாயிருப்பதைக்கொண்டு விபாகமாகிவிட்டதாக எண்ணக்கூடாது. (௧௮௫௭ ஷூ-நம்-௧௭௧.)

௩௰. பாகஸ்தர்களுடைய சம்மதத்தின்மேல் அவர்கள் சமபாகம் இல்லாமல் அதிகம் குறைவாய்ப் பாகித்துக்கொள்ளலாம். (௧௮௫௯ ஷூ-நம்-௪௭.)

௩௧. பாகஸ்தர்கள் சில ஸ்திதிகளைமட்டும் பாகித்துக்கொண்டு மற்றஸ்திதிகளைப் பிரிக்காமல் பொதுவில்வைத்திருந்தார்கள். அந்த ஆதி விபாகம் நடந்து, ௨௰-வருஷங்களுக்குப்பின்புகூட ஷை பொதுவில்

வைக்கப்பட்ட ஸ்திதியில் பாகங்கிடைக்கவேண்டியதற்காக டி சமாம்சகர்கள் வியாச்சியஞ் செய்யலாமென்று அநுக்கிரகிக்கப்பட்டது. (கஅருஅ ஹூ-நம்-சுந.)

நஉ. குடும்பப்பொதுவில் ஒருவன் ஸ்திதிகளைச் சம்பாதித்தால் அப்படிச் சம்பாதித்தவனுக்கு மற்றவர்களைப்பார்க்கிலும் அதிகபாகம் உண்டு. (கஅகச ஹூ-நம்-எ.)

நந. ஒரு குடும்பத்தினுடைய கல்யாணியத்தையும் கௌரவத்தையும் காப்பாற்றும்பொருட்டுக் கொடுக்கப்பட்ட கிராமமானது விபாகயோக்கியமானதல்ல. ஆனால் பாகஸ்தர்களுக்குள் விரோதம் நேரிட்டால் அந்தக் கிராமத்தின் வருமானத்தை அவர்கள் பாகித்துக்கொள்ளலாம். (கஅரு0 ஹூ-நம்-ரு.)

நச. அவிபக்த குடும்பத்தின் பாகஸ்தர்களுக்குள் கலகம்நேரிட்டுத் தகுமானவயதுவராத பாகஸ்தர்களுடைய பாக்கியத்துக்கு அபாயம்நேரிட்டால்மட்டும் கோர்ட்டார் பிரவேசித்து அந்தப் பாலர்களுடைய பாகத்தை ஸ்தாபிக்கலாம். (கஅரு0 ஹூ-நம்-சக.)

நரு. இறந்துபோன சகோதரனுடைய ஸ்திதியில் பாகங்கிடைக்கவேண்டுமென்று தொடருகிறவன் அந்தஸ்திதி பிதுரார்ஜிதமாயிராதபட்சத்தில், அது தன்னாலும் இறந்துபோனவனாலும் பொதுவில் சம்பாதிக்கப்பட்டதென்று ருஜுப்படுத்தவேண்டும். (கஅகச ஹூ-நம்-கஎ.)

நசா. குடும்பஸ்திதியில் பாகங்கிடைக்கவேண்டுமென்று பாகஸ்தர்கள் மேல்வியாசியஞ் செய்கிறவன் ஒரே வியாச்சியஞ் செய்யவேண்டுமே அல்லாமல் பலயேரிடத்தில் சொத்துக்கள் இருக்கிற அம்பதத்தினால் தனித்தனியே வெவ்வேறு வியாச்சியங்கள் செய்யக்கூடாது. (கஅசா0 ஹூ-நம்-ருஉ-ப-கஎரு.)

நஎ. சகோதரர்கள் கிரமப்படி பாகித்துக்கொள்ளாமலும், அவர்களில் ஒருவன் இறந்துபோய், ரு-வருஷகாலம்வரையில் அவர்கள் ஒரே யோகக்ஷேமமாகவும் இருந்தபடியால், அவர்களால் செய்யப்பட்ட வியாபாரம் உபயத்திராளுக்கும் பொதுவானதென்று நிச்சயிக்கப்பட்டது. (கஅஉந ஹூ-நம்-ந.)

நஅ. உ-பாகஸ்தர்களுக்குச் சொந்தமான நிலத்தை ஒரு பாகஸ்தன் பக்கத்தில் விக்கிரயஞ்செய்து அதைப்பற்றி மற்றொருபாகஸ்தன் ஆட்சேபிக்காமல், கஅ ஹூ-வரையில் மௌனமாயிருந்துவிட்

டால் பிற்பாடு ஷை நிலத்தில் தன் பாகத்தைப்பற்றி அவன் தொடரக்கூடாது. (க௮௬0 ஞூ-நம்-௬௨-௬௩-க௮௬க ஞூ-ப-௩௭-௩௮.)

௩௯. பாகஸ்திதிகளைச் சமாம்சகர்கள் பூரணமாய்ப் பிரித்துக்கொள்ளாமலும், அந்த விபஜனை பூர்த்தி ஆகாமலும் இருக்கும்போது, அவர்களில் ஒருவன் இறந்துபோனால் அவனுடைய பாகஸ்திதியைப்பற்றி அவன் பெண்சாதி தொடரக்கூடாது. (க௮௬க ஞூ-நம்-௬-ப-௬௮.)

௪0. ஒருவனுக்குப் பாகத்தில் கிடைக்கவேண்டிய சகல ஸ்திதிகளையும் கண்டு அவன் ஒரே வியாச்சியம் செய்யவேண்டும். பாகத்துக்காக அவனால் செய்யப்பட்ட வியாச்சியந் தீர்ப்பானபிற்பாடு பின்னும் சில பாகஸ்திதிகள் கிடைக்கவேண்டுமென்று அவன் மறுபடியும் வியாச்சியஞ்செய்தால் செல்லாது. (க௮௬0 ஞூ-நம்-கக-க௮௬க ஞூ-ப-௮௬.)

௪க. பாகஸ்தர்கள் வெவ்வேறே யோகக்ஷேமமாயிருந்துகொண்டு தனித்தனியே வியாபாரஞ்செய்வதைக்கொண்டு அவர்களுக்குள் பாகமாய்விட்டதாக எண்ணக்கூடாது. (க௮௫௫ ஞூ - நம் - ௬௫- க௮௬0 ஞூ-நம்-க௪-க௮௬க ஞூ-ப-க0௯.)

௪௨. குடும்ப பாகஸ்தர்களில் கனிஷ்டன்பெயரால் வாங்கப்பட்ட ஸ்திதியில் பாகங் கிடைக்கவேண்டுமென்று வியாச்சியஞ் செய்கிறவன், அந்த ஸ்திதி குடும்ப திரவியத்தைக்கொண்டே ஆர்ஜிக்கப்பட்டதென்று நிரூபிக்கவேண்டும். அது ஸ்வார்ஜிதமென்று கட்சிசொல்லுகிறவன் அந்தப்படி நிரூபிக்கக்கடமைப்பட்டவன் அல்ல. (க௮௬0 ஞூ-நம்-௫க௬-க௮௬க ஞூ-ப-ககஎ.)

௪௩. தானும் தன் சகோதரனும் விபக்தர்களென்று ஒருவன் அசல்பிரியாதில் சொல்லிப் பிற்பாடு தாங்கள் அவிபக்தர்களென்று அவன் திருத்தி வேறே பிரியாது கொடுத்தால், அந்தக்கட்சி சமுசயாஸ்பதமாகும். (க௮௬0 ஞூ-நம்-௨௫-க௮௬க ஞூ-ப-க௩௬.)

௪௪. தானும் தன் சகோதரனும் ஜங்கமஸ்திதிகளைப் பூரணமாகவும் ஸ்தாவரத்தில் சில ஸ்திதிகளையும் விபஜனை செய்துகொண்டதாக ஒருவன் ஒப்புக்கொண்டால், அந்தக்குடும்பம் விபக்த குடும்பமென்றே நிச்சயிக்கவேண்டும். (ஷை.)

௪௫. சாஸ்திரப்படி பந்துவாயிராத ஒருவன் யாதொரு ஸ்திதியும் இல்லாமல் வேறொரு குடும்பத்தைச் சேர்ந்திருந்ததைக்கொண்டு

அவன் அந்தக் குடும்ப பாகஸ்தன் ஆகமாட்டான். (க அ௫ ௩ ௵- ௩ம்-கஎ.)

சசு. ஒரு ஜமீன்தாருடைய ராஜதுரோகத்தினால் பூர்வீகஜமீனைச் சேர்ந்த சில ஸ்திதியை அவன் இழந்துபோய் அது கவர்ன்மெண்டா ரால் சன்மார்க்க நடக்கையுள்ள வேறொரு ஜமீன்தாருக்குத் தானஞ் செய்யப்பட்டிருந்தால் அந்த ஸ்திதி பாக யோக்கியமானதல்ல. (க அ௫எ ௵-௩ம்-க0உ.)

சஎ. பாகவியாச்சியத்தில் பிரதிவாதி வசத்திலிருக்கிற ஆஸ்திகளு க்கு விவரங்கண்டு அவன் பிரமாணபூர்வமாக ஒரு ஜாபிதா கோர் ட்டில் கொடுக்கவேண்டும். அது அபத்தமாயிருந்தால் அந்தப்பிர காரம் வாதி சாட்சிகளைக்கொண்டு நிரூபிக்கலாம். (க அகசு ௵-௩ம்-கக-க அகஎ ௵-௩ம்-கச.)

சஅ. உபயவாதிகளும் மத்தியஸ்தர்களை நியமித்துக்கொண்டு அவர்கள்முன்பாகக் கிரமப்படி ஆஸ்தி விபாகஞ்செய்துகொண்ட பிற்பாடு, பின்னும் சிலஸ்திதி பாகிக்கப்படாமலிருப்பதாக அவர்க ளில் ஒருவன் வியாச்சியங் கொண்டுவந்தால் அந்தவியாச்சியம் அச த்தியம் என்பது பிரகாசம். (ச அசு0 ௵-௩ம்-க௩எ-ப-உகூ ...)

சகூ. சமாம்சகர்களான உபயவாதிகளும் ஒருதரம் விபாகஞ்செய் துகொண்ட சொத்துகளல்லாமல் பாகிக்கப்படாமல் பிரதிவாதிவசத் தில் இருக்கிறசொத்தின் விவரங்கண்டு ஷை பாககாலத்தில் ஜாபிதா பிறந்திருந்தால் பிற்பாடு அந்த ஜாபிதாவிற்கண்ட சொத்தின் வாதி யின் வீதத்தைப்பற்றி அவன் வியாச்சியஞ்செய்யலாம். (க அ௫ ... ௵-௩ம்-௫0-ப-கசஉ.)

௫0. நீண்டகாலமாய்ப் பாகவிஷயத்தில் தகராறுண்டாயிருந்து பி ற்பாடு மத்தியஸ்தர்கள் முன்னிலையில் பாகம் பூரணமானதாகக் கட் சிசொல்லுகிறவன், வியவஸ்தாபத்திரமூலமாக அந்த விஷயத்தை நிரூபிக்கவேண்டும். லிர்லிகிதமான அவனுடைய வாய்வார்த்தை நி ருபயோகம். (க அ௫கூ ௵-௩ம்-க அஅ-க அசு0 ௵-ப-எச.)

௫க. பாகவியாச்சியத்தில் குடும்பக்கடன்களைத் தான் ஸ்வயமே தீர்த்ததாகப் பிரதிவாதி வாதித்தால் தீர்ந்துபோன கடன்பத்திரங் களை அவன் தாக்கல்செய்யவேண்டும். அப்படிச்செய்யாவிட்டால் அவனுடைய வார்த்தை நம்பிக்கைக்கு அநர்ஹம். (ஷை.)

ச. உ-பாகஸ்தர்களில் ஒருவன் புருஷப்பிரஜை இல்லாமல் நிரியாணமானால், அவர்களுக்குச் சொந்தமான பூர்வீகஸ்திதி ஜீவந்தனாயிருக்கிற பாகஸ்தனுக்குக் கிடைக்குமே அல்லாமல், இறந்துபோனவனுடைய பத்நிக்காவது மகளுக்காவது கிடைக்கமாட்டாது (கஅஉச ௵-நம்-கச.)

ரு. அவிபக்த சகோதரர்களில் ஒருவன் இறந்துபோனால் அவனுடைய ஸ்திதி ஜீவந்தனாயிருக்கிற அவனுடைய சகோதரனைச்சேருமே அல்லாமல் இறந்துபோனவனுடைய பெண்சாதியைச் சேரமாட்டாது. (கஅஉஎ௵-நம்-கக-கஅருஅ௵-ப-கஉரு.)

சா. ஆண்சந்ததியாவது பெண்சந்ததியாவது தௌஹித்திரனாவது இல்லாமல் இறந்துபோன ஒரு சூத்திரனுடைய ஸ்திதி அவனுடைய வைப்பாட்டியின் பிள்ளையைச்சேரும். ஆனால் அந்த வைப்பாட்டிபுத்திரன் சூத்திரனாயிராமல் மற்ற எந்தவர்ணத்தையாவது சேர்ந்தவனாயிருந்தால் அவனுக்குப்பாத்தியம் இல்லை. (கஅஉசா௵-நம்-ரு-கஅசஅ௵-நம்-நசா.)

எ. ஒருவன் ஜீவந்தனாயிருக்கும்போது தன்னுடைய ஸ்திதிகளை மூன்றுபாகஞ்செய்து, தன்னுடைய இரண்டு புத்திரர்களுக்கு இரண்டுபாகமும், தனக்கும் தன் பெண்சாதிக்கும் புத்திரிகைகளுக்கும் ஒருபாகமும் ஏற்படுத்தி வைத்திருப்பானானால், அவன் இறந்தபின்பு அவனுடைய பாகம் அவனுடைய பெண்சாதியையும் புத்திரிகைகளையுஞ் சேருமே அல்லாமல் அவனுடைய புத்திரர்களைச் சேரமாட்டாது. (கஅஉகூ௵-நம்-ந.)

அ. ஒரு ஜமீன்தாரியை ஒருவனுக்குப் பின் ஒருவனாக அநுபவித்த இரண்டு அவிபக்த சகோதரர்களும் ஆண்சந்ததியில்லாமல் இறந்துபோனால் கடையில் இறந்துபோனவனுடைய ஜேஷ்டபத்நியே ஷை ஸ்திதிக்குப் பாத்தியஸ்தி ஆகிறாள். ஆதியில் இறந்த ஜேஷ்ட சகோதரனுடைய பத்நி ஜீவநாம்சத்துக்குமட்டும் பாத்தியஸ்தி. (கஅநரு௵-நம்-க.)

கூ. சந்ததி இல்லாமல் இறந்துபோகிற ஒரு ஹிந்துமதஸ்தனுக்குப் பலபத்நிகள் இருக்கிறபட்சத்தில் அவனுடைய ஸ்திதி ஜேஷ்டபத்நியைச்சேரும். மற்றப்பத்நிகள் ஜீவநாம்சத்துக்குப் பாத்தியஸ்தர்கள். ஜேஷ்டபத்நி இறந்தால் அந்தஸ்திதி உ-வது பத்நியைச்சேரும். உ-வது பத்நியைத்தவிர வேறே யாரையாவது

ஷ ஸ்திரீக்குப் பாத்தியப்படுத்தி ஜேஷ்டபத்நி ஆதரவு எழுதி வைத்தால் செல்லாது. (க௮உச ௵-நம்-௫.)

க௦. ஆண் சந்ததியில்லாமல் இறந்துபோகிறவனுடைய ஸ்திரீக்கு அவள் பெண்சாதி பாத்தியஸ்திரீயேதவிர மகள் பாத்தியஸ்திரீ அல்ல. (ச-பு-க௮௩௩ ௵ ஜநவரி கஉ ச-தி-க௮௩க ௵-நம்-௯.)

கக. தாம சாஸ்திரப்படி வைப்பாட்டி பிள்ளைகள் இருவரில் ஒருவன் இறந்துபோனால், அவனுடைய ஸ்திரீக்கு அவனுடைய வைப்பாட்டி பிள்ளைகள் பாத்தியஸ்தர்களேதவிர அவனுடைய சகோதரனுடைய சொந்தப்பத்நியின் புத்திரர்கள் பாத்தியஸ்தர்கள் அல்ல. (க௮௭௮ ௵-நம்-௩க.)

கஉ. ஒரு சூத்திரன் ஒரு நீச ஸ்திரீயுடன் தேகசம்பந்தப்பட்டு ஜாதிப் பிரஷ்டத்துவத்தை அடைந்தால், அவனுடைய பிதுரார்ஜித பாத்தியத்தை இழந்துபோகிறான். (க௮௭௫ ௵-நம்-கக.)

க௩. ஒரு ஸ்திரீயினுடைய சொந்தச்சொத்தானது அவளுடைய பாத்தியஸ்தர்களைச் சேருமே அல்லாமல் அவள் புருஷனுடைய பாத்தியஸ்தர்களைச் சேரமாட்டாது. (ச-பு-க௮௩க ௵ மேமீ க௮ம.)

கச. புத்திரிகைகளைத்தவிர வேறே பாத்தியஸ்தர்கள் இல்லாமல் இறந்துபோனவனுடைய ஸ்திரீக்கு சந்ததியில்லாத புத்திரியைப் பார்க்கிலும் ஆண்சந்ததியுள்ள புத்திரி விசேஷபாத்தியம் உள்ளவள். ஆகிலும் ஷ சந்ததியில்லாத புத்திரிக்கு ஜீவனாம்சத்துக்கு மார்க்கஞ் செய்யவேண்டும். (க௮௫க ௵-நம்-உ௫-க௮௫எ ௵-நம்-கஎஎ.)

க௫. ஒருவன் சந்நியாசி ஆனபிற்பாடு சம்பாதித்தசொத்து அவனுடைய சிஷ்யனைச் சேருமே அல்லாமல் அவனுடைய பத்நியைச் சேரமாட்டாது. (ச-டை-க௮௬௦ ௵ நவம்பர்மீ சஉ.)

கசு. கிறீஸ்துமதப் பிரவேசியான ஒரு ஸ்திரீ ஹிந்துமதத்தில் இருக்கும்போது சம்பாதித்த ஸ்திதி அவளுடைய ஹிந்துமதப் பாத்தியஸ்தர்களையும் கிறீஸ்துமதத்தில் சேர்ந்தபிற்பாடு அவளால் சம்பாதிக்கப்பட்ட ஸ்திதி அவளால் வார்ஸுகளாக நியமிக்கப்பட்டவர்களையும் சேரும். (ச-பு-க௮ச௩ ௵ பிப்பிரவரிமீ உ௦உ.)

கஎ. தர்மசாஸ்திரப்படி வளர்ப்புப்புத்திரனுக்கு ஸ்வத்துவபாத்தியம் இல்லை. (க௮௫க ௵-நம்-எச-க௮௯௦ ௵-நம்-௯உ௫-க௮௯க ௵-ப-கஉச.)

௧௮. அ-என்பவளும் க-என்பவளும் இரண்டு அவிபக்த சகோதரர்களுடைய பத்நிகள். அ-என்பவளுடைய புருஷன் ஆதியில் இறந்தான். அவனுக்குக் கலியாணமான ஒரு குமாரத்தி இருக்கிறாள். பிற்பாடு க-என்பவளுடைய புருஷன் அப்பிராஜ்ஞனாயிறந்தான். அதற்குப்பின்பு அ-என்பவளும் கடையில் க-என்பவளும் இறந்தார்கள். அந்தத்தில் சொத்துக்குப் பாத்தியஸ்தனாக இருந்த க-என்பவளுடைய புருஷனுக்குச் சந்ததியாவது வேறே நேரான பாத்தியஸ்தர்களாவது இல்லாமற்போய்விட்டதால் அவனுடைய ஸ்திதி அவனுடைய விபக்த தாயாதிகளை அடையுமே அல்லாமல் ஆதியில் இறந்த சகோதரனுடைய குமாரத்தியை அடையாதென்று தீர்மானஞ் செய்யப்பட்டது. (௧௮௫௪ ௵-நம்-௫.)

௧௯. ஒரு ஸ்திரீயினுடைய கல்யாணகாலத்தில் அவளுக்கு அவள் தாயாரால் கொடுக்கப்பட்ட ஸ்வத்துக்கு அவள் இறந்துபோனபின்பு அவளுடைய சகோதரி சாஸ்திரப்படி பாத்தியஸ்தி அல்ல. (௧௮௫௫ ௵-நம்-௯௨.)

௨௦. ஒருதாசி ஒரு பெண்குழந்தையைத் தனக்குப் புத்திரியாக எடுத்து வளர்த்துக்கொள்வதே அந்தப் பெண்குழந்தைக்குப் பாத்தியத்தை உண்டுபண்ணுவதற்குப் போதுமானதாயிருக்கின்றது. அந்தத் தாசி கிரமப்படி ஸ்வீகாரமுதலான கிரியைகள் செய்யவேண்டிய அகத்தியம் இல்லை. (௧௮௫௯ ௵-நம்-௭.)

௨௧. கோவில் குருக்களான அ-என்பவனுக்கு இ, உ, எ, என்கிற ௩-புத்திரர்கள். அவர்களில் எ-என்பவனை அ-என்பவனுடைய விபக்த தாயாதி ஸ்வீகாரம் பண்ணிக்கொண்டான். அ-என்பவன் சந்ததியுடனேயும் இ, உ, என்பவர்கள் சந்ததி இல்லாமலும் இறந்தார்கள். எ-என்பவனுடைய ஸ்வீகாரத்தகப்பன் அ-என்பவனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவனானதால் அவன் எ-என்பவனை ஸ்வீகாரஞ் செய்ததைக்கொண்டு அந்த எ-என்பவன் குருக்கள் வேலை செய்யும்படியான பாத்தியத்தை இழந்துபோக இல்லை என்றும் அவனே அந்த வேலைக்குப் பாத்தியஸ்தன் என்றும் இ, உ, என்பவர்களுடைய பத்நிகள் அந்த அலுவலின் வருமானத்தில் ஜீவனாம்சம் பெற்றுக்கொள்ளப் பாத்தியஸ்தர்களென்றும் விதாயகஞ் செய்யப்பட்டது. (௧௮௫௯ ௵-நம்-௧௦௮.)

௨௨. அவிபக்த குடும்பத்தில் ஒருவனுக்கு எந்த நிமிஷத்தில் குஷ்டவியாதி உண்டாகிறதோ அந்த நிமிஷத்தில் அவனுடைய

பாகத்தை இழந்துபோகிறான். ஆனால் அவன் இறந்துபோகும் போது குஷ்டரோகம் இல்லாமல் இருந்தால் அவனுடைய பாகம் அவனுடைய புத்திரனுக்குக் கிடைக்கும். (௧௮௯௭ ஹை-நம்-௧௩௩.)

உ௩. பூர்விகமான ஸ்திதி ஒருவனுக்குப் பிதுரார்ஜிதமாய்க் கிடைத்ததைக்கொண்டு அதற்குப் பிற்பாடு அவனால் ஆர்ஜிக்கப்பட்ட ஸ்தாவர ஜங்கமஸ்திதிகளையும் பூர்விகஸ்திதியென்றே எண்ணக் கூடாது. (௧௮௯௨ ஹை-நம்-௯.)

உ௪. மகமது சாஸ்திரப்படி பாத்தியம் ஆண்வழியா யிறங்குகின்றது. (௧௮௯௬ ஹை-ப-௯௭.)

உ௫. ஒருவன் தன் தகப்பனுடைய பெரியதாயின் ஸ்திதிக்குப் பாத்தியஸ்தன் ஆகமாட்டான். (௧௮௬0 ஹை-நம்-௩-௪-ப-௧௨௬.)

உ௬. ஒருவன் அவனுடைய தாயின் சகோதரியினுடைய ஸ்திதிக்கு அபாத்தியஸ்தன். (௧௮௬0 ஹை-நம்-௮௪-ப-௨௪௯.)

உ௭. ஒருவன் புத்திரஹீனனாய் அவனுடைய பாகஸ்தர்களுக்கு முன் இறந்துபோனாலும் அவன் ஸ்திதி அந்தப் பாகஸ்தர்களையே சேரும்; அவனுடைய புத்திரி ஜீவனாம்சத்துக்குமட்டும் பாத்தியஸ்தி. (௧௮௬0 ஹை-நம்-௩-ப-௧00.)

உ௮. புத்திரன் இல்லாமல் இறந்துபோன அப்பம்பெருமாளுடைய ஸ்திதிக்கு அவனுடைய மகள் தங்கம் பாத்தியஸ்தி ஆனாள். அவளுடைய மகனும் அந்த மகனுடைய ஸ்வீகாரபுத்திரனும் சந்ததி இல்லாமல் இறந்துபோனபிறகும், ஷை சொத்து மறுபடியும் ஷை தங்கத்தைச் சேருமே அல்லாமல் அவளுடைய மகனுடைய ஸ்வீகாரபுத்திரன் பெண்சாதியைச் சேராதென்றும், ஷை தங்கம் இறந்துபோனபிற்பாடு அவளுடைய தகப்பனுடைய சகோதரன் மகன் பாத்தியஸ்தனென்றும் சித்தாந்தஞ் செய்யப்பட்டது. (௧௮௯௬ ஹை-நம்-௧௪-௧௮௬0 ஹை-ப-௯.)

உ௯. புத்திரன் முன்னும் தகப்பன் பின்னுமாக இறந்துபோய் மாமியாரும் மருமகளும் ஜீவந்திகளா யிருக்கிறபக்ஷத்தில், சொத்துக்கு மாமியார் பாத்தியஸ்தியாகவும் மருமகள் ஜீவனாம்சத்துக்கு மட்டும் பாத்தியஸ்தியாகவும் இருக்கிறாள். ஆனால் மாமியாருடைய நிரியாணத்துக்குப் பின்பு தர்மசாஸ்திரப்படி அந்தச் சொத்து மருமகளைச் சேரவேண்டியதானதால் அதை மாமியார் யதேச்சா விநியோகஞ் செய்யக்கூடாது. புருஷனுடைய கடன்களைத் தீர்ப்பது

முதலான தகுந்த ஹேதுக்களினால் டீ விநியோகஞ் செய்யப்பட் டிருந்தால் செல்லும். (கஅகூ0 ஹு-நம்-ரு0கூ-கஅகூக ஹு-ப-ருரு.)

கூ0. இறந்துபோன சூத்திரனுடைய ஸ்திரிக்கு அவனுடைய வைப்பாட்டி புத்திரன் பாத்தியஸ்தனைதவிர இறந்துபோனவனு டைய விபக்த பித்ர்வ்வியர்களின் பௌத்திரர்கள் பாத்தியஸ்தர் கள் அல்ல. (கஅகூ0 ஹு-நம்-கூருஉ-கஅகூக ஹு-ப-கஉச.)

கூக. அ-என்கிற மகமதுமதஸ்திரி இறந்துபோய் அவளுக்கு உ-சகோதரர்களும் ஒரு சகோதரியும் இருந்தால் அந்த ஒவ்வொரு சகோதரனுக்கும் அ-என்பவளுடைய ஸ்திரியில் ரு-ல் உ-பங்கு விகிதம் ச-பங்கும் சகோதரிக்கு ரு-ல் ஒருபங்கும் கிடைக்கும். (கஅகூ0 ஹு-நம்-உஉ. கஅகூக ஹு-ப-ககூஉ.)

கூஉ. மகமது சாஸ்திரப்படி ஸ்திரியினுடைய சொத்துக்கு அவ ளுடைய தௌஹித்திரர்கள் பாத்தியஸ்தர்கள் அல்ல. (கஅகூ0 ஹு) நம்-உஉ-கஅகூக ஹு-ப-ககூஉ.)

கூகூ. ஒருஸ்திரீ ஜீவஸ்திதியிலிருக்கும்போது அவளுடைய பிதா வின்சொத்தில் அவளுடைய புத்திரர்களுக்குப் பாத்தியம் இல்லை. அவர்கள் அதைப்பற்றி வியாச்சியஞ்செய்தால் செல்லாது. (கஅகூ0 ஹு-நம்-கூகூகூ-கஅகூக ஹு-ப-ககூஎ.)

கூச. ஒருவன் சாஸ்திரப்படி ஜமீன்தாரிக்குப் பாத்தியஸ்தனு யிருந்தாலுங்கூட, வேறொருவனாவது அல்லது அவனுடைய ஸ்வீகா ரபுத்திரனாவது அவனுடைய ஜமீன்தாரியை அநுபவித்துக்கொள் ளும்படி அவன் புத்தி பூர்வமாக ஆதரவு எழுதிக்கொடுத்துவிட் டால் பிற்பாடு அந்த ஸ்திதியைப்பற்றி அவன் தொடரக்கூடாது. (கஅகூகூ ஹு-நம்-க.)

கூரு. ஒருவன் ஒரு ஆதரவின்படி தன்னுடைய தகப்பன் ஸ்தி தியில் பாதி கிடைக்கவேண்டுமென்று வியாச்சியஞ் செய்து அந்த ஆதரவு கற்பனையென்று ஸ்தாபிக்கப்பட்டால், அவன் புத்திரன் என்கிற ஸ்வபாவ பாந்தவியத்தைக்காட்டி வேறே வியாச்சியஞ் செய்யலாம். (கஅஉகூ ஹு-நம்-கக.)

* கூகூ. முன்னதாக மகனும் பிற்பாடு பிதாவும் இறந்துபோய்ப் பி தாவின் புத்திரியும் மகனுடைய புத்திரியும ஜீவந்திகளாயிருக்கிற பட்சத்தில் பிதுரு திரவியத்துக்குப் பிதாவின் குமாரத்தியே முக் கிய பாத்தியஸ்தி. (கஅருஉ ஹு-நம்-கஎஎ.)

௩௭. ஒரு விபக்தனும் அவனுடைய ஸ்திரீயும் இறந்துபோய் அவர்களுடைய புத்திரி அங்கவீனமாயிருந்தாலுங்கூட அவளே பிதாவின் சொத்துக்குப் பாத்தியஸ்தி. (௧௮௫௪வரு-நம்-௫.)

௩௮. விபக்த குடும்பத்தில் ஒரு விதவை இறந்துபோய் அவள் புருஷனுடைய வேறொரு தாரத்தின் புத்திரியிருந்தாலுங்கூட அவளைப் பிதிர் திரவியஞ்சேரும். ஆனால் அந்தப்புத்திரியின் விபக்த பிதிர்த்திரவியமானால் அவளுடைய பத்தியும் பிரஜாஹீனர்களாயிறந்து போனபக்ஷத்தில் அவர்களுடைய ஸ்திதி விபக்த தாயாதிகளைச் சேருமேதவிர ஷை புத்திரியைச் சேராது. (௧௮௫௬வரு நம்-௧௪௦.)

௩௯. ஒரு வைசியனுடைய ஸ்திதி அவளுடைய போகஸ்திரீ புத்திரனைச் சேரமாட்டாது. (௧௮௭௬வரு-நம்-௫.)

௪௦. தர்மசாஸ்திரத்துக்கனுகுணமாய்ப் பூர்வீகமான பாவனைப் பட்டிகளின் பாத்தியக்கிரமம் நிச்சயிக்கப்படவேண்டும். (௧௮௫௯வரு-நட-௩௪.)

௪௧. அபுத்திரவந்தர்களாயிறந்துபோன அவிபக்த சோதரர்களின் பெண்ஜாதிகளான இரண்டு விதவைகள் சொத்தைச் சமபாகஞ்செய்துகொண்டு தனிப்பட்டபின்பு அவர்களில் ஒருத்தி ஒரு பிள்ளையை ஸ்வீகரித்துக்கொண்டு பிற்பாடு சரீரவியோகமானால் அவளுடைய பாகஸ்திதி அந்த ஸ்வீகிருதனை அடையுமே அல்லாமல் மற்றொரு விதவையைச் சேராது. (௧௮௫௫வரு-நம்-௧௨௫.)

௪௨. ஒருவன் தன்னுடைய பாத்தியமும் தன்னுடைய ஜேஷ்ட புத்திரன் பாத்தியமும் வேண்டியதில்லையென்று அதாவமூலமாகப் பரித்தியாகஞ்செய்தால் அவனுடைய பெண்ஜாதியும் புத்திரனும் சம்பந்தப்படாதவரையில் அந்தப் பரித்தியாகம் அநர்த்தமாய்விடும். (௧௮௫௧வரு-நட-௫௨.)

௪௩. குஷ்டவியாதியானது ஆரோக்கியமாகக்கூடாத தீர்க்கரோகமாயிருந்தால்மட்டும் ஒருவனுக்கு நிரம்சகத்துவத்தை உண்டுபண்ணும். ஸ்வஸ்தமாகும்படியான சாத்தியரோகத்தை உடையவன் பிதுரார்ஜித பாத்தியத்தை இழந்துபோகமாட்டான். (௧௮௯௦வரு-நம்-௧௩௮-ப-௨௩௯.)

௪௪. ஒரு ஸ்திரீயினுடைய சொத்து அவளுடைய ஸ்திரீபிரஜையையேசேரும். (௧௮௫௮வரு-நம்-௨௪-ப-௫௯.)

சடு. மகமது மதஸ்தர்களுக்குள் ஒரு கோரினை ஸ்வதந்தரிக்க பெண்சந்ததியைப்பார்க்கிலும் புருஷ சந்ததிக்கு விசேஷபாத்தியம். (கஅடுகூ ஹூ-நம்-கூஉ-ப-டுஅ.)

சகூ. லீலேமிராசுக்கு ஒரு ஸ்திரீ ஸ்வதந்தனைதான். அவள் குமாஸ்தாமூலமாக அந்த வேலேயை நடப்பிக்கலாம். (கஅடுஅ ஹூ-நம்-கூO-ப-ககூ.)

சஎ. யாதொரு தேச வழக்கமானது சர்வத்திரசாதாரணமான நியாயசாஸ்திரத்துக்குக் கிரம்பட்டதானபடியால், மலேயாளப்பிரதேசத்தில் பாத்தியக்கிரமவிஷயத்தில் யாதொரு சாம்பிரதாய அநுஷ்டானம் இல்லாத குடும்பத்தில் ஒருவனுடைய சொத்துக்கு அவனுடைய புத்திரர்கள் பாத்தியஸ்தர்களேதவிர அவனுடைய சோதரன் புத்திரர்கள் பாத்தியஸ்தர்கள் அல்ல. (கஅOகூ ஹூ-நம்-டு.)

சஅ. ஒரு விதந்துவினுடைய சொத்தை அபாத்தியஸ்தியான அவளுடைய மகள் ஆக்கிரமித்துக்கொண்டிருந்தாள். அந்தச்சொத்தில் சிலபாகத்தைத் தனக்குக் கொடுத்துவிட்டால் இதரசொத்துக்களையெல்லாம் புத்திரி எடுத்துக்கொள்ளலாமென்று அவளுக்கு ஷ விதவை ஒரு கரார்நாமா எழுதிக்கொடுத்தாள். யாதொரு பிரதிபிரயோஜநம் இல்லாமல் மௌட்டியமாகவும் அபுத்தி பூர்வமாகவும் ஷ விதவை ஷ கரார்நாமாவை எழுதிக்கொடுத்திருப்பதால் அந்த அஞ்ஞானக்கிருதம் செல்லாதென்றும் சகல ஸ்திதிகளுக்கும் ஷ விதந்துவே ஸ்வதந்தனையென்றும் நிர்மாணிக்கப்பட்டது. (கஅகூக ஹூ-நம்-எ.)

சகூ. வாதியும் பிரதிவாதி புருஷனும் பசசையப்பமுதலியினுடைய தௌஹித்திரர்களென்றும் ஷ பச்சையப்பமுதலியும் பிரதிவாதியின் புருஷனும் நிஸ்ஸந்ததியாயிருந்துபோய்விட்டதால் ஷ பசசைப்பமுதலியின் ஸ்திதிக்குத் தான் பாத்தியஸ்தனென்றும் வாதி வழக்கிட்டான். தன் புருஷனைப் பச்சையப்பமுதலி ஸ்வீகரித்துக்கொண்டதால் தன் புருஷனுடைய மரணத்துக்குப் பின்பு தான் ஸ்வதந்தனையென்று பிரதிவாதி பிரதியுத்தரஞ்சொன்னாள். அசல் அப்பீல்க்கோர்ட்டாரால் வாதி வழக்குத் தள்ளப்பட்டது. வாதி செய்துகொண்ட விசேஷ அப்பீல் முடிவாகிறதற்குமுன் பிரதிவாதியின் ஆயுசு முடிந்து அவள் பரலோகயாத்திரையாய்ப் புருஷனைப் பின்சென்றாள். அவளுடைய சோதரன் அவளுக்குத் தான் பாத்தியஸ்தனென்று தீட்சித்துக்கொண்டு வெளிப்பட்டான். பிரதிவாதியின் பார்த்

தாவினுடைய ஸ்வீகாரம் நிஜமாயிருந்தாலுங்கூட அவன் அப்பிரஜனாயிறந்தபின்பு அவனுடைய ஸ்வீகாரப்பிதாவினுடையவும் ஜநகபிதாவினுடையவும் ஏகவம்சஸ்தரான வாதியையே ஸ்வத்துவம்சேருமென்று சதர்க்கோர்ட்டார் வாதியினுடைய இஷ்டபூர்த்திசெய்தார்கள். (௧௮௫௮ ஷ்ரீ-நம்-௰௩-௧௮௫ ஷ்ரீ-ப-உ௬௫.)

௫௦. தாயின் சோதரியினுடைய மகன் பந்துவானதால் நிஸ்ஸந்ததியாயிறந்துபோன விதுரனுடைய ஸ்வத்துக்கு அவனுடைய தாயின் சோதரியினுடைய புத்திரன் பாத்தியஸ்தனேதவிர ஷை விதுரனுடைய சகோதரன் புத்திரி பாத்தியஸ்தி அல்ல. (௧௮௫௩ ஷ்ரீ-நம்-௧௨௨-ப-௩௩௪.)

௫௧. பிராணப்ரேதம் அடைந்த ஒரு க்ஷத்திரியனுக்கு ஒரு ஸ்வஸ்திரீ புத்திரனும் ஒரு வைப்பாட்டி புத்திரனும் இருக்கிறபக்ஷத்தில், வைப்பாட்டி புத்திரனுக்குச் சாஸ்திரப்படி ஆஸ்தியில்-௪-ல்-ஒரு பாகம் கிடைக்கும். (௧௮௫ ஷ்ரீ-நம்-௧௩௩-௧௮ ஷ்ரீ-ப-௧௧.)



இவைகளைப்பார்க்க.

---

## பாப்பர் அல்லது எளியவாதி.

௧. தன்வசத்திலிருக்கிற ஆஸ்தியை மனப்பூர்வமாய் அப்புறப்படுத்துகிறவனையும் தனக்குக் கிடைக்கவேண்டிய சொத்தைக் கைவசப்படுத்திக்கொள்ளாமல் இருக்கிறவனையும் எளியவாதியா யேற்றுக்கொள்ளக்கூடாது. (௪-பு-௧௮௨௩ ஷ்ரீ மார்ச்சு ௧௩௨.)

௨. பர்த்தா ஆஸ்திவந்தனாயிருந்தாலும் பத்நியை ஏழை வாதியா யேற்றுக்கொள்ளலாம்.

௩. தகப்பன் ஸ்திதிவந்தனாயிருந்தபோதிலும் தகப்பன்மேல் மகன் வியாச்சியஞ் செய்யவேண்டியிருந்தால் அந்த மகனை எளியவாதியா யேற்றுக்கொள்ளலாம்.

ச. ஒரு குழந்தையைப் பரிபாலிக்கிற போஷகன் திரவியவானாயிருந்தாலும் அவன் அந்தக் குழந்தைக்காகத் தரித்திரவியாச்சியஞ் செய்யலாம்.

ரு. ஒரு தரித்திரவியாச்சியத்தில் வாதி இறந்துபோய் அவனுடைய பாத்தியஸ்தனும் ஆதுலன் என்று ருஜுவானால் அவன் பெயரால் அந்த வியாச்சியம் நடத்தப்படலாம்.

சு. தரித்திரவியாச்சியத்தில் நூதனமாய்ச் சேர்க்கப்படுகிற பிரதிவாதிகள் வாதி தனவான் என்பதற்கு ருஜுக்கொடுக்கலாம்.

எ. தரித்திரவியாச்சியத்தின் மத்தியகாலத்தில் வாதிக்கு ஆஸ்தி உண்டானால் அவன் முத்திரைக்காகிதங்கள் வாங்கிக்கொடுக்கும்படி உத்தரவுகொடுத்து அந்தப்படி அவன் கொடுக்காவிட்டால் அவனுக்கு விரோதமாய்க் கோர்ட்டார் தீர்ப்புச்செய்யலாம்.

அ. செலவுகளை எளியவாதி கொடுக்கும்படி அவனுக்கு விரோதமாய்த் தீர்ப்புச்செய்யப்பட்டு அந்தச் செலவுகளையெல்லாம் வசூல் செய்யப் போதுமான ஆஸ்தி அவனிடத்தில் இல்லாமற்போனால் முந்தி வக்கில்பீசு கொடுத்துப் பிற்பாடு கவர்ன்மெண்டுச் செலவுகளைக் கொடுக்கவேண்டும்.

கூ. எளியவாதிகள் கையெழுத்து முத்திரையுடன் தீர்ப்புநகல்கள் வாங்கிக்கொள்ளுகிற விஷயத்தில் மற்றக் கட்சிக்காரர்கள்போலவே முத்திரைக்காகிதமுதலான செலவுகளுக்கு அவர்களும் பாத்தியப்படவேண்டும். (ச-பு-கஅகூ0ஸ்ரீ நவம்பர்மீ கப...)

க0. மற்றக் கட்சிக்காரர்கள்போலவே தரித்திரவாதிகளும் அவர்களுடைய சாட்சிகளுக்குச் சம்மன் அனுப்புகிறதற்கு முன் அந்தச் சாட்சிகளின்படிச் செலவைக் கோர்ட்டில் கொடுக்கவேண்டும். (ச-பு-கஅகூ0ஸ்ரீ ஏப்பிரல்மீ ககூ...)

செலவு-கஎ.......................... | வக்கில்-ரு ரு ..................................

தீர்ப்பு நிறைவேற்றல்-ரு0....... |

இவைகளைப்பார்க்க.

## பாலன்.

க. ஒருவனுக்கு கஅ-வயது பூரணமானால் அதுமுதல் அவன் பாகத்துக்குத் தொடரப் பாத்தியஸ்தனாயிருக்கிறான். அவனுக்குப் போஷகனிருந்தால் கஅ-வயதுக்கு முன்னமேயும் அவன் பாகத்துக்காகத் தொடரலாம். (கஅகச-ஸ்ரீ-ரும்-எ.)

௨. தகுமான வயதில்லாத பிள்ளையைப் போஷிக்கிற மாதாவிடத்தில் கொடுக்கப்பட்ட தொகையானது அந்தப் பிள்ளையின் விஷயமாக உபயோகப்படாமலிருந்தால் அவனுக்குத் தகுந்த வயது வந்தபின்பு அந்தத் தொகைக்கு அவன் உத்தரவாதி யாகமாட்டான். (௧௮௫௫ ஹை-நம்-௨.)

௩. ஒருவன் தகுந்த வயதுள்ளவனா அல்லவாவென்பதை அறிய வேண்டியதற்காக அவனைக் கோர்ட்டார் நேராய்ப் பார்வையிட்டுத் தீர்மானிக்கலாம். (௧௮௫௩ ஹை-நம்-௨௩௩-௧௮௬௦ ஹை-ப-௮௭)

௪. பஞ்சாயத்தார்முன்பாக நடந்த வழக்கில் தகுதியானவயதில்லாத பிரதிவாதிக்காக அவனுடைய சிறியதகப்பன் எதிர்வழக்காடி அதை மற்றக் குடும்பஸ்தர்கள் ஆட்சேபிக்காமல் இருந்ததினால் ஷை வியாஜ்ஜியம் நடந்தகாலத்தில் பிரதிவாதி அசக்தனாயிருந்தபோதிலும் பஞ்சாயத்தாருடைய தீர்ப்புக்கு அவன் பாத்தியப்படவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. (௧௮௬௦ ஹை-நம்-௬௦-ப-௨௪௫.)

௫. பிள்ளைகளுக்குத் தகுதியானவயதில்லாதகாலத்தில் நடந்த கிரமமான வியாஜ்ஜியங்களை அவர்களுக்குத் தகுந்தவயது வந்தவுடனே அவர்களுக்கெதிராய் அவர்கள் பேரால் செய்யாமல் இருந்தால் நடத்தியிருந்த கோர்ட்டாருடைய கடமை. அவர்கள் பாலகர்களாயிருந்தபோது அவர்களுக்காக அவர்களுடைய போஷகர்கள் முன்னிலையில் நிர்வந்தமாய் நடந்த வியாஜ்ஜியங்களுக்கும் அவர்கள் உட்படவேண்டும். (௧௮௫௦ ஹை-நம்-௧௬.)

௬. வாதிக்குத் தகுதியான வயதில்லாதகாலத்தில் அவனுக்காக அவனுடைய மாதாவும் அவனுடைய பாகஸ்தர்களான பிரதிவாதிகளும் பிதிர்ஸ்திதியைப் பாகித்துக்கொண்டதில் பிரதிவாதிகள் தர்மவிரோதமாக உபயோகப்படுத்தியபடி வாதியினுடைய பாகத்துக்கு மேல் அதிகமாக அவர்களுக்கு வாதியினுடைய மாதாவால் நிலங் கொடுக்கப்பட்டிருந்தது என்று சொல்லி வாதி வழக்கிட்டான். ஷை வியாஜ்ஜியம் வாதிக்குப் பிரயோஜனகரமாயிராதபடியால் தர்மவிஷயத்துக்காகப் பிரதிவாதிகள் எடுத்துக்கொண்ட நிலத்தில் வாதியின் விதம் அவனுக்குக் கிடைக்கும்படித் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௮ ஹை-நம் ௩௨-ப-௨௫௨.)

௭. போஷகனால் வாங்கப்பட்ட ஞாயமான கடன்களுக்குத் தகு

மானவயதில்லாத பிள்ளைகள் பாத்தியப்படவேண்டும். (௧௮௯௪ ஹூ-நம்-௧௬-உ0-உ௧.)

அ தன்னுடைய தகப்பன் எழுதிவைத்த மரணசாஸனப்படி தன்னுடைய பாலகனுக்குச் சில பூஸ்திதி கிடைக்கவேண்டுமென்று வாதி வியாச்சிய யுத்தந்தொடுத்தான். ஷை மரணசாஸனம் பொய்யென்றும் வாதி தகப்பனிடத்தில் விவாதநிலத்தைத் தாங்கள் கிரயம் வாங்கினதாகவும் பிரதிவாதிகள் எதிர்கட்சிபேசிறார்கள். விவாத நிலத்தைப் பிரதிவாதிகளுக்கு வாதி விட்டுவிடுகிறதென்று உபய வாதிகளும் தாசில்தார்முன்பாக ராஜிநாமா செய்துகொண்டு பிரதிவாதிகள் பெயரால் மிராசும் பதியவைத்துவிட்டதால் அதற்குப் பிற்பாடு வாதிசெய்த வியாச்சியம் ஆபாசமென்றும் அவருடைய புத்திரனுக்குத் தகுந்தவயது வந்தபிற்பாடு அவனுக்கு இஷ்டம் உண்டானல் அவன் விவாதநிலத்தைப்பற்றி நூதநவியாச்சியஞ் செய்யவேண்டுமென்றும் வாதி வழக்குத் தள்ளப்பட்டது. (௧௮௭௧ ஹூ-நம்-எ0-ப-௧௫௧.)

| | |
|---|---|
| அங்கீகாரம்-உ-௧௮............... | ஜாமீன்தார்-உ0................. |
| அப்பீல்-உஎ..................... | தீர்ப்பு நிறைவேற்றல்-௧௮...... |
| அவதிக்கிரயம்-௪.................. | பராதீநம்-உ௪..................... |
| கடன்பத்திரம்-௬-உ௪........... | பாகம்-௨.௫-௩௪................ |
| காலநிர்ணயம்-௧0-௧௩-உ0-உ௪-௪0-௪௧-௫0...... | பாப்பர்-௪.......................... |

இவைகளைப்பார்க்க.

---

## பிணை.

ஜாமீனைப்பார்க்க.

---

## பிரதமக்கிரயபாத்தியம்.

௧. ஒருவனுடைய நிலமுதலான ஸ்திதிகளை முந்தி வாங்கும்படியான பிரதமக்கிரய பாத்தியம் ஹிந்துக்களுக்குக் கிடையாது. ஆனல் ஒருவனுக்கு நிலத்தை முந்தி விக்கிரயஞ்செய்கிறதென்று ஏற்பாடு நடந்திருந்தாலும் அல்லது அப்படிப்பட்ட தேசவழக்கம் உண்டாயிருந்தாலும் பிரதமக்கிரய பாத்தியத்தைக் கோர்ட்டார் ஸ்தாபிக்கலாம். (௧௮௪௬ ஹூ-நம்-௮-ப-௧௨௫.)

௨. அ-என்பவனுடைய நிலத்தை இ-என்பவன் கிரயம் வாங்கின காலத்தில் இ-என்பவன் அந்த நிலத்தை விக்கிரயஞ்செய்ய வேண்டியிருந்தால் மறுபடியும் அ-என்பவனுக்கே கிரயஞ்செய்கிறதென்று ஏற்பாடுநடந்தது. அந்த ஏற்பாட்டுக்கு விரோதமாக இ-என்பவன் ஷை நிலத்தை இதராளருக்கு விக்கிரயஞ்செய்தபடியால் அ-என்பவன் கிரயத்தொகையைக்கொடுத்து ஷை நிலத்தை மறுபடியும்பெற்றுக்கொள்ளலாமென்று நிர்த்தாரணஞ்செய்யப்பட்டது. (௧௮௫௩ ௵-நம்-௮௭-௧௮௫௪ ௵-ப-௩.)

௩. உபயவாதிகளும் ஸ்வத்துக்களைப் பாகித்துக்கொண்டபோது அந்த ஸ்வத்துக்களை விற்கவேண்டியிருந்தால், ஒருவர்க்கொருவர் விற்கிறதென்று சங்கேதம் நடந்திருந்தால், அந்தப்பிரகாரமே அவர்கள் நடக்கவேண்டும். அவர்களில் ஒருவன் அந்தச்சொத்தைக் கிரயம்வாங்க அப்பிரியனாயிருந்தால்மட்டும், அதை மற்றொருவன் வேறெ யாருக்காவது கிரயஞ்செய்யலாம். (௧௮௫௯ ௵ - நம்-௧௱௱-௧௮௬௰ ௵-ப-௨௰.)

---

## பிரதமதாம்பூலம்.

௧. உபயவாதிகளும் மேளவாத்தியக்காரர்கள் கலியாணமுதலிய விசேஷ தினங்களில் கட்டளைகளான பிரதிவாதிகளுக்குத் தாம்பூலங்கொடுக்குமுன் கைக்காரர்களாகிய தங்களுக்குப் பிரதம தாம்பூலம் கிடைக்கும்படியான ஸ்வதந்தரத்தை ஸ்தாபிக்கவேண்டியதற்காக வாதிகள் வழக்குத்தொடுத்தார்கள். ஜாதியைச் சேர்ந்த பிரதமசம்மானத்தைப்பற்றி வாதிகள் வியாச்சியஞ்செய்தது செல்லாதென்று நிராகரிக்கப்பட்டது. (௧௮௬௰ ௵-நம்-௧௬௬-௪௮௬௧ ௵-ப-௯.)

---

## பிரமாணம்.

௧. யாதொரு கட்சிக்காரன் பிரமாணத்துக்குச் சம்மதிக்காமற் போனதைக்கொண்டு அவனுக்கு விரோதமாகத் தீர்ப்புச்செய்யக் கூடாது. (௧௮௫௰ ௵-நம்-௧௪-௧௮௫௫ ௵-நம்-௪௩-௧௮௫௭ ௵-நம்-௧௰௯.)

௨. ஒரு கட்சிக்காரன் பிரமாணஞ்செய்ய நிராகரிப்பதைக்கொண்டு அவனுடைய கட்சியைப்பற்றிச் சந்தேகிக்கக்கூடாது. (௧௮௫௫ ௵-நம்-௪௩.)

ங. ஒரு கட்சிக்காரனுடைய பிரமாணத்தைக்கொண்டு ஒரு ஆதரவின் உண்மையைப்பற்றித் தீர்மானிக்கவேண்டுமென்று உபயவாதிகளும் ஒப்புக்கொண்டு, அந்தப்பிரகாரம் ஒரு கட்சிக்காரன் பிரமாணஞ் செய்தபிற்பாடு அடி ஆதரவின் விஷயத்தில் கோர்ட்டார் சாட்சி ருஜுவை அபேட்சிக்கக்கூடாது. (கஅ௫அ௵-நம் சக ப-கசஉ.)

ச. வாதியினுடைய பிரமாணத்துக்குப் பிரதிவாதி சம்மதித்து அந்தப்படி வாதியும் பிரமாணஞ் செய்கிறபட்சத்தில், அந்தப் பிரமாணம் வியாசியத்தின் மற்ற ருஜுக்களுக்கு விரோதமாயிருந்தாலுங்கூட அந்தப் பிரமாணப்படியே கோர்ட்டார் தீர்ப்புசெய்ய வேண்டும். (கஅ௫கூ௵-நம்-சOக-ப-கள0 )

௫. வாதி பிரமாணஞ்செய்தால் தன் கட்சியை விட்டுவிடுவதாகப் பிரதிவாதி வக்கீல் ஒப்புக்கொண்டு அந்தப்படி வாதியும் பிரமாணஞ் செய்தான். பிரதிவாதியினுடைய அநுமதியின்பேரில் அவனுடைய வக்கீல் வாதியின் பிரமாணத்துக்குச் சம்மதித்ததாக விதமானதால், பிரதிவாதி அந்தப்பிரமாணத்துக்குப் பாத்தியப்படவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅ௫கூ௵-நம்-கஙள-கஙஅ-ப-உள௫-உளசு.)

சு. ஒரு சாட்சிக்காரனுடைய பிரமாணத்தின்பேல் தாங்கள் ஒழிந்துபோவதாக ஒப்புக்கொண்ட கட்சிக்காரர்கள் அந்தப்படியே ஒழிந்துபோகவேண்டும். (கஅ௫அ௵-நம்-கபகூ.)

எ. பிரமாணத்துக்குக் கட்சிக்காரர்கள் ஸ்வேச்சையாய்ச் சம்மதிக்கவேண்டுமேதவிரப் பிரமாணஞ் செய்யும்படி அவர்களுக்குக் கோர்ட்டார் உத்தரவுகொடுக்கக்கூடாது. கோர்ட்டார் உத்தரவின்பேல் செய்யப்பட்ட பிரமாணம் விருதா. (கஅ௫கூ௵ விசேஷ அப்பீல் பிட்டீஷன் ஙஙO.)

அ. தான் சொல்லுகிற கிரமப்படி வாதி பிரமாணஞ்செய்தால் அவனுடைய தாவாவுக்குத் தான் பாத்தியப்படுவதாகப் பிரதிவாதி ஒப்புக்கொள்ளுகிறபட்சத்தில், பிரதிவாதி சொல்லுகிறபிரகாரம் வாதியிடத்திற் பிரமாணம் வாங்கவேண்டுமேதவிரக் கேவலம் ஒரு சாட்சியைப்போலே வாதியை விசாரிக்கக்கூடாது. (கஅ௫கூ௵ நம்-கள.)

௩. பிரமாணத்துக்கு உபயவாதிகளும் சம்மதிக்கிறபட்சத்தில் அவர்களுடைய சம்மதம் லிகிதரூபமாக இருக்கவேண்டியதுந்தவி ரப் பிரமாணத்தின் தன்மையைப்பற்றி அவர்களுக்கு நன்முயெச் சரிக்கவும் வேண்டும். (ஷை.)

---

## பிராமணன்.

௧. நிஷ்பிரஜனாய் மரணயோகத்தை அடைகிற பிராமணனுடைய ஸ்திதி தர்மசாஸ்திரப்படி ராஜாக்களைச் சேரமாட்டாது. (௧அ௫௭ ஞூ-நம்-௧0௩-௧௩௯-௧அ௫அஞூ-ப-௯௯.)

ஸ்வீகாரம்-எ-௩௨.

இவைகளைப்பார்க்க.

---

## பிரியாது.

௧. பாகவியாஜியத்தில் அவிபக்த மீமாம்சகர்களில் ஒருவன் பிரதி வாதியாய்ச் சேர்க்கப்படாமற்போனால் அந்த வியாஜியம் தோஷக் கிரஸ்தமாகும். (௧அ௧௨ஞூ-நம்-௪.)

௨. விவாதஸ்வத்துக்குப் பிரியாதில் குறைவான பெறுமானங் கட் டப்பட்டிருந்தால் அந்தப் பிரியாதைத் திருத்தித் தகுந்த பெறுமா னம் கட்டும்படி கோர்ட்டார் உத்தரவு கொடுக்கவேண்டுமேதவிர அந்தப் பிரியாதைத் தள்ளிவிடக்கூடாது. (௧அ௫அஞூ-நம்-அ-ப-௧௪.)

௩. சம்பந்தப்பட்டவர்களை வியாஜியத்தில் சேர்க்கப்படாமல் இரு ந்தால், அதற்காகப் பிரியாதைத் தள்ளக்கூடாது. அவர்களைக் கோ ர்ட்டார் அந்த வியாஜியத்தில் பிரதிவாதிகளாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். (௧அ௫அஞூ-நம்-௨௩-ப-௪௫.)

௪. கிராமசமுதாய நிலத்தைப்பற்றின வியாச்சியத்தில் கிராமப் பங்காளிகளையெல்லாம் பிரியாதில் சேர்க்காமல் விட்டுவிட்டால், அ தைக்கொண்டு அந்த வியாச்சியத்துக்கு ஹானி உண்டாகமாட்டாது. (௧அ௫அஞூ-நம்-௨௫ ப-௧0௫.)

௫. விவாதஸ்திதிக்கு-ந-வது மநுஷன் பாத்தியஸ்தனென்று பிரதிவாதி அவனுடைய விவரப்பத்திரிகையிற் பேசினால், அந்த ந-வது மநுஷனையும் பிரதிவாதியாகக் கோர்ட்டார் சேர்த்துக்கொள்ளவேண்டும். (கஅ௫அஹு-நம்-கச௫-ப-ககூகூ.)

௬. நிலமுதலான ஸ்திதிகளைப்பற்றின வழக்கில் சிலது பிரியாதில் சேர்க்கப்படாமல் விட்டுப்போனால், அது அந்தஸ்திதியைச் சேர்ந்ததல்லவென்று அநுமானப்பிரமாணத்தின்மேல் நிச்சயிக்கப்படும். (கஅ௫கூஹு-நம்-கந-ப-கூ௫.)

எ. வியாஜியத்தில் சம்பந்தம் இல்லாத ஒருவனை வாதியாகவாவது பிரதிவாதியாகவாவது சேர்த்திருப்பதைக்கொண்டு அந்த வியாஜியத்துக்குத் தோஷம் ஆரோபிக்கக்கூடாது. நிஸ்ஸம்பந்தமானவர்களைத் தீர்ப்பில் சேர்க்காமல் நீக்கிவிடலாம். (கஅ௫அஹு-நம்-எஅ-கஅ௫கூஹு-ப-கச.)

அ. வியாஜியவிஷயத்தில் ஸ்வார்த்தசம்பந்தம் இல்லாதவன் அந்த விஷயத்தைப்பற்றி வியாஜிக்கக்கூடாது. (கஅ௫கூஹு-ப-க௦எ.)

கூ. வியாபாரிகள் சரக்குகள் வைக்கப்பட்ட பேட்டையின் காவலுக்காக அவர்கள் தேசாயி ஆகிய தனக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட ருசும் கிடைக்கவேண்டுமென்று வாதிவழக்குச்செய்தான். அந்த ருசும் கஅகஉஹு-க-வது சட்டம் உச-வது பிரிவினால் நிஷேதிக்கப்பட்டதென்று வாதி வழக்குத் தள்ளப்பட்டது. (கஅசசஹு-நம்-ச.)

க௦. நிலத்துக்காகவும் வருமானத்துக்காகவும் ஒரே வியாஜியம் செய்யவேண்டுமே அல்லாது வெவ்வேறு வியாஜியங்கள் செய்யக்கூடாது. (கஅ௫அஹு-நம்-கஉகூ-கஅ௫கூஹு-ப-உகூ.)

கக. ஆசாரியபுருஷ மிராசைப்பற்றி வாதிசெய்த வியாஜியத்தில் அகோபிலமடத்து ஸ்வாமி அந்த உத்தியோகத்துக்குத் தன்னை நியமித்திருப்பதாகப் பிரதிவாதி சொன்னால் அந்த அகோபிலமடத்து ஸ்வாமியையும் அந்த வழக்கில் பிரதிவாதியாகச் சேர்க்கவேண்டும். (கஅகூ௦ஹு-நம்-கஉகூ-ப-உநக.)

கஉ. கோனையின் அத்தியக்ஷ குருவினால் நியமிக்கப்பட்ட குருவசத்திலிருக்கிற கோயில் முதலான ஸ்திதிகளைப்பற்றி வேறொரு

குரு வியாஜியம் செய்தால் அந்த வியாஜியத்தில் ஷெ அத்தியக்ஷ குருவையும் பிரதிவாதியாகச் சேர்க்கவேண்டும். (௧௮௫௨ ஸூ-நம்-௫௮.)



இவைகளைப்பார்க்க.

## பிளீடர்.

வக்கீலைப்பார்க்க.

## புநர்விமரிசை.

௧. தீர்ப்பிலெழுதப்பட்ட செலவு தொகையின் ஜாபிதாவில் யாதொரு பிசகு நேரிட்டால் கோர்ட்டாருடைய உத்தரவுப்படி பிர

தாக உத்தியோகஸ்தன் அந்தப் பிசகைத் திருத்தலாம். அதற்கா கப் புனர்விமரிசை செய்யவேண்டிய அகத்தியம் இல்லை. (ச-அ-வி-ப-ச அ.)

௨. யாதொரு பிசகைத் திருத்துவதனால் உபயவாதிகளுக்கும் நஷ்டம் இல்லாமல் இருக்கிறபட்சத்தில், கட்சிக்காரர் கேட்டுக்கொள்ளாமல் தீர்ப்புச்செய்த கோர்ட்டாரே புனர்விமரிசை செய்து அந்தப்பிசகைத் திருத்திக்கொள்ளலாம். (ச-பு-க அ௬0 ௵ மார்ச்சு௴ ௨௧ வ.)

௩. கட்சிக்காரன் நேராயாவது அல்லது அவனுக்காக முன்னமே வக்கிலாயிருந்தவராவது புனர்விமரிசைக்காக மனுக்கொடுக்க வேண்டும். அவர்களால் கொடுக்கப்படாதவனாயில் அந்த மனுவை அங்கிகரிக்கக்கூடாது. (ச-அ-வி-ப-ச அ.)

௪. ஆதியில் கட்சிக்காரனுக்கு வக்கில் இல்லாமல் அவன் ஸ்வயமே வியாஜியத்தை நடத்தியிருந்தால் புனர்விமரிசைக்காக வக்கில் மனுக்கொடுத்துப் பேசக்கூடாது. (ஷை.)

௫. புனர்விமரிசைக்காக மனுக்கொடுக்கப்பட்ட மறு கோர்ட்டில் அதைப்பற்றி விசாரணைசெய்யவேண்டும். புனர்விமரிசை செய்யப் போதுமான ஆதாரம் இல்லாவிட்டால் அந்த மனுவை உடனே தள்ளிவிடவேண்டும். தகுந்த ஆதாரம் இருந்தால் ஒரு கெடுவு நிஷ்கரிஷைசெய்து எதிரிக்கு நோட்டீசு அனுப்பி அந்தக் கெடுவில் முடிவான உத்தரவு செய்யவேண்டும். ஷை நோட்டீசின் செலவைப் புனர்விமரிசை மனுக்காரன் கொடுக்கவேண்டும். (ச-பு-க அ௬0 ௵ செப்டெம்பர்௴ ௬வ.)

௬. கிரமமான அப்பீல் வியாச்சியத்தில் சாஸ்திரமுதலான விஷயங்களைப்பற்றி எதிர் கட்சிக்காரனால் சொல்லப்பட்ட நியாயங்களுக்கு உத்தரவுசொல்ல வக்கில் பூர்ண ஆயத்தமாயிருக்கவில்லை யென்கிற ஆதாரத்தின்மேல் புனர்விமரிசையை ஏற்றுக்கொள்ளாக் கூடாது. (ச-பு-க அ௫அ ௵ டிசம்பர்௴ க௮வ.)

௭. கோர்ட்டாரால் ஆதியில் ஏற்படுத்தப்பட்ட விதியை யோசித்துத் தீர்ப்புச்செய்யப்படுமானால் அந்தத் தீர்ப்பு அந்த விதிக்கு விரோதமாயிருந்தாலுங்கூட அது புனர்விமரிசைக்கு ஆதாரமாக மாட்டாது. (ஷை.)

௮. அப்பீல்வியாச்சியம் கோர்ட்டாருடைய ஆலோசனையிலிருக்கும்போது கோர்ட்டில் ஆஜராகத் தப்பிப்போன கட்சிக்காரன் அப்பீல்த் தீர்ப்பினால் பிரதிகூலத்தை அடைந்தாலுங்கூட அவன் புனர்விமரிசைக்காக மனுக்கொடுக்கக்கூடாது. (ச-பு-க௮௱௯௰ டிசம்பர்மீ ௨௪வ.)

௯. விசேஷ அப்பீலைத்தள்ளிச் செய்யப்பட்ட உத்தரவைப் புனர்விமரிசை செய்யவேண்டுமென்று கொடுக்கப்பட்ட மனுவில் அசல்க்கோர்ட்டில் பேசப்படாத சம்வாதங்களை எடுத்துப்பேசக்கூடாது. (க௮௱௮௰-ப-க௯௮.)

௧௦. புனர்விமரிசைக்காகக் கொடுக்கப்பட்ட மனுவை விசாரித்துத் தள்ளினபிற்பாடு அந்தக் கட்சிக்காரனே மறுபடியும் புனர்விமரிசைக்காக மனுக் கொடுக்கக்கூடாது. (ச-அ-வி-ப-௪௮.)

௧௧. கோர்ட்டாருடைய உத்தரவுகளைப் புனர்விமரிசை செய்வதற்காகக் கொடுக்கப்படும் மனுக்களைக் கோர்ட்டார் அங்கீகரித்துக்கொண்டு எதிரிக்கு நோட்டீசு அனுப்பிய பிற்பாடு அந்த உத்தரவிலுள்ள யாதொரு பிரத்தியட்சமான பிசகைக் கோர்ட்டார் பரிஹரிக்கலாம்.

௧௨. தீர்ப்பு நிறைவேற்றுவதற்காகக் கொடுக்கப்பட்ட மனுவுக்குக் கோர்ட்டார் உத்தரவு செய்தபிற்பாடு அந்த விஷயத்தைப் புனர்விமரிசை செய்யவும் முந்தின உத்தரவுக்கு முழுவிரோதமான உத்தரவைச்செய்யவும் கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லை. (ச-பு-க௮௭௧௰ ஏப்பிரல்மீ ௨௪வ.)

௧௩. கவனக்குறைவினாலாவது கைப்பிசகினாலாவது நேரிட்ட பிழைகளைத் திருத்திக்கொள்வதற்குமட்டும் நியாயாதிபதிக்கு அதிகாரமேதவிர, தான்செய்த உத்தரவைத் தானே மாற்றிக்கொள்ளக்கூடாது. (ஷை.)

உத்தரவின்மேல் அப்பீல்-௧௦-௧௧. | வக்கீல்-௧௯............ ........

இவைகளைப்பார்க்க.

---

## புரோஹிதன்.

௧. புரோஹித ஸ்வதந்த்ரங்களைப்பற்றி வியாஜியம் தொடரலாம். (க௮௱௩௰-ஙம்-க௮.)

---

## பூர்வார்ஜிதம்.

க. ஒருவன் குடும்பத்தைச்சேர்ந்த ஸ்வத்துக்களைத் திருடினால் தர்மசாஸ்திரப்படி அந்தக் குடும்பஸ்திதியின் சகலபாத்தியத்தை யும் அவன் இழந்துபோகிறான். (கஅ௫௬ஹ)-பு-ககஅ.)

உ. அவிபக்த குடும்பத்தில் ஒரு பாகஸ்தன் அசந்ததியாயிறந்து போனால், அவனுடைய பாகம் தர்ம சாஸ்திரப்படி அவனுடைய சகோதரர்களைச் சேருமே அல்லாமல் அவனுடைய பெண்ஜாதியை ச்சேராது. (கஅ௫அஹ)-ப-கஉ௫.)

௩. மருமக்கத்தாயவிதியை அநுஷ்டிக்கிற குடும்பத்தில் ஒரு பாகஸ்தனால் ஆர்ஜிக்கப்பட்ட நிலம், எல்லாப்பாகஸ்தர்களுக்கும் சமுதாயகமாகிறபடியால், அதைச் சம்பாதித்தவன்மட்டும் அதைப் பராதீநம் செய்யக்கூடாது. (கஅ௫௬ஹ) - நம்-அஅ - ப - உஉ௬- கஅ௬0ஹ)-நம்-அ௫-ப-க௩௩.)

௪. பூர்வீகஸ்திதியை மேல்விசாரணைசெய்கிற பாகஸ்தனால் சம் பாதிக்கப்பட்ட நிலம் அந்தப் பூர்வீகஸ்திதியைக்கொண்டே சம்பா திக்கப்பட்டதென்று ஊஹிப்பது சஹஜம். அப்படியில்லாதவனா யில் அவனுடைய ஸ்வார்ஜிதமென்று ருஜுப்படுத்தவேண்டியது அவனுடைய கடமை. (கஅ௫௬ஹ)-நம்-௫௪-கஅ௬0ஹ)-ப-அ)

௫. ஒரு ஹிந்து குடும்பத்தின் பூர்வீகஸ்திதியை ஒரு பாகஸ்தன் பட்ட கடனுக்குமட்டும் பாத்தியப்படுத்தக்கூடாது. ஆனால் குடும் பயோகக்ஷேமச் செலவுக்காக அந்தக் கடன் வாங்கப்பட்டிருந்தால் அதற்கு ஷை ஸ்திதியைப் பாத்தியப்படுத்தலாம். (கஅ௬0ஹ)-நம்-க0௩-ப-உ௩௬.)

௬. ஒரு அவிபக்தனால் வாங்கப்பட்ட நிலம் குடும்ப திரவியத்தை க்கொண்டு வாங்கப்படாவிட்டால் அந்த நிலம் குடும்பத்தைச்சேர்ந் ததல்ல. (கஅ௫௩ஹ)-நம்.உஉ.)

| | |
|---|---|
| கடன்-அ........................ | பராதீநம்-உ0-உக-உஉ........... |
| கிரயம்-அ........................ | |

இவைகளைப்பார்க்க.

---

## பொதுவிஷயம்.

க. பொதுவிஷயத்துக்காக வைக்கப்பட்ட நிலம் பொதுவிஷயத் துக்காகவே உபயோகப்படவேண்டியதற்காக அதில் சம்பந்தப்ப

ட்ட எல்லாரும் சேராமல் அவர்களில் ஒருவன்மட்டும் ஏகதேசத்தில் வியாஜியம் செய்யலாம். (கஅ௬௯ரு-௩ம்-௬௫-ப-௬௬.)

## யோக்கியம்.

ஒற்றியைப்பார்க்க.

## போஷகன்.

க. சாஸ்திரப்படி மகனுக்குத் தகப்பன் போஷகனேதவிர அவனுடைய இறந்துபோன பெண்ஜாதியின் பந்துக்கள் போஷகர்கள் அல்ல. (கஅ௬௯ரு-ப-௪௦௦.)

உ. தருமான வயதில்லாத பிள்ளையைப் போஷிக்கிறதற்கு அவனுடைய அம்மானைப்பார்க்கிலும் அவனுடைய பிதிர்வழியின் சபிண்டதாயாதி விசேஷ பாத்தியமுள்ளவனயிருக்கிறான். (கஅ௬௯ரு-௩ம்-௪௬அ.)

௩. பாலனுடைய ஸ்திதியைப் போஷகன் அக்கிரம விநியோகம் செய்து, அந்த விநியோகத்தைப் பாலனுக்குத் தகுந்த பருவம் வந்தபின்பு அவன் ஆட்சேபித்தால் அந்த விநியோகம் நிஷ்பலமாய்ப் போகும். (ச-பு-கஅஉஉ௫ நவம்பர்மீ எ௨.)

| | |
|---|---|
| கிரயம்-௯.......................... | விசாரணைக்கர்த்தன்-உ-௩......... |
| ஜமீன்தார்-உ௦.......................... | |

இவைகளைப்பார்க்க.

## மகமதுசாஸ்திரம்.

| | |
|---|---|
| உண்டி-க.......................... | ஸ்வீகாரம்-கக.......................... |
| கடன்-கஉ.......................... | தானம்-உ.......................... |
| கடன்பத்திரம்-உஉ.......................... | பராதீனம்-கஉ-கஅ.......................... |
| காஜிமுறைமையும்.......................... | பாத்தியம்-உச-௩க-௩உ-சரு... |
| ஜாமீன்-உ.......................... | மரணசாஸனம்-௬.......................... |
| ஜீவநாம்சம்-கஉ-க௩-கச-உ௯... | |

இவைகளைப்பார்க்க.

# மகாராஜாத்தி அப்பீல்.

க. சதர்க்கோர்ட்டாருடைய தீர்ப்பின்மேல் மஹாராஜாத்தி சமூகத்திற்கு அப்பீல்செய்ய இஷ்டமுள்ள கட்சிக்காரன், அப்பீல் பிரதிவாதிக்கு நேரிடும் செலவுக்காக ரூ-௪000-மும், வியாச்சியலிகிதங்களைச் சித்தஞ் செய்யவேண்டிய செலவுக்காக ரூ-௪00-ம் அல்லது அதற்குமேல் வேண்டிய தொகையும் சதர்க்கோர்ட்டாரால் குறிக்கப்பட்ட கெடுவுக்குள் செலுத்தவேண்டும். அந்தத்தொகைகளைச் செலுத்தாதவரையில் மகாராஜாத்தியின் அப்பீல் விண்ணப்பம் அங்கிகரிக்கப்படமாட்டாது. (ச-அ-வி-ப-டு.)

உ. அப்பீல் பிரதிவாதிக்கு நேரிடும் செலவுக்காகக் கட்டப்பட்ட ஷை தொகை போதாமல் இருந்தால் அப்பீல் வாதியிடத்தில் அதிகத்தொகை வாங்கவேண்டுமென்று அப்பீல் பிரதிவாதி கேட்டுக்கொள்ளலாம். இன்னும் இவ்வளவு தொகை அதிகமாக அப்பீல் வாதி கட்டவேண்டியதென்று ரொஜிஸ்டர் என்னும் உத்தியோகஸ்தர் நிச்சயம் செய்யவேண்டும். ஆனால் எந்த விஷயத்திலும் ரூ-க0000-க்குமேல் அதிகத்தொகை அப்பீல் வாதி யிடத்தில் வாங்கக்கூடாது. (ஷை.)

௩. மேற்கண்டபடி அதிகத் தொகை செலுத்தும்படி அப்பீல் வாதி நோட்டீசு பெற்றுக்கொண்ட தேதிமுதல் ௬-வாரத்துக்குள்ளாக அவன் செலுத்தத் தப்பிப்போனால் அவனுடைய அப்பீல் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. (ஷை.)

௪. குறைந்தபக்ஷம் விவாதஸ்திதியின் மதிப்புக்கிரயம் ரூ-க0000 பெறத்தக்கதாயிருந்தால்மட்டும் மஹாராஜாத்தி சமூகத்திற்கு அப்பீல் உண்டு. (ச-பு-கஅருகூஙு) நவம்பர்மீ உகூவ.)

௫. விவாத ஸ்திதி ரூ-க0000, பெறத்தக்கதா அல்லவா என்பதைப்பற்றி சந்தேகம் உண்டானால் அதைப்பற்றி விசாரித்துத் தெரிவிக்கும்படி கிழ்க்கோர்ட்டாருக்கு உத்தரவு கொடுக்கலாம். (ஷை.)

௬. சதர்க்கோர்ட்டாருடைய சித்தாந்தத்தின் தேதியில் தீர்ப்பின் தொகை அசலும் வட்டியுஞ் சேர்ந்து ரூ-க0000 ஆனாலுங்கூட அந்தவிஷயத்தில் மஹாராஜாத்தி சமூகத்திற்கு அப்பீல் உண்டு. ஆனால் தீர்ப்பின்தேதியில் ரூ-க0000-க்குக் குறைந்து அந்தத் தேதிக்குப் பின்புள்ள வட்டியுஞ் சேர்ந்து ரூ-க0000-க்குச் சரிக்கட்டினால் அந்த விஷயத்தில் மஹாராஜாத்தியின் அப்பீலை அங்கிகரிப்பதும் த

ன்றாவதும் சதர்க்கோர்ட்டாருடைய யுக்தாநுசாரமா யிருக்கின்றது. (பிரதான ஆலோசனை சபையின் சித்தாந்தம், ௧௮௯௦ௗ ஜூன் ௴ ௧௫௳.)

௭. சதர்க்கோர்ட்டாருடைய சித்தாந்தத்துக்கு நகல் கொடுப்பதிலும் புனர்விமரிசை மனுவைப்பற்றி உத்தரவு செய்வதிலும் கோர்ட்டாரால் தாமசமான நாள்களை அப்பீல்கெடுவில் சேர்க்காமல் கட்சிக்காரனுக்கு அநுகூலஞ் செய்யப்படும்.

௮. வியாஜிய சாதனங்களை அல்லது நடவடிக்கைகளை இங்கிலாந்துக்கு அனுப்புகிறதற்கு முன் கட்சிக்காரர்களாற் கொடுக்கப்பட்ட ராஜிநாமாவைச் சதர்க்கோர்ட்டார் அங்கீகரிக்கலாம். (மூர் ரிப்போர்ட்டு, ௧-வது, பு-ப-௧.) அதற்குப் பிறபாடு கொடுக்கப்பட்ட ராஜிநாமா இங்கிலீஷில் மொழிபெயர்க்கப்பட்டு இங்கிலாந்துக்கு அனுப்பப்படவேண்டும். (ஷ-அ-வி.)

௯. மகாராஜாத்தின் முகத்திரமாய்ச் செய்யப்பட்ட அப்பீல் முடிவாகிறவரையில் வியாஜ்யத்தை அநுபவிக்கிற கட்சிக்காரன் இடத்தில் அதிலுடைய வருஷாந்தர வருமானத்தில் சர்க்காரத் திர்வை நீங்கலாகப் பாக்கி யிருக்கும் தொகைக்குச் சரியான ஜாமின் வாங்கப்படும். அந்த அப்பீல் முடிவாகிறவரையில் ஒவ்வொரு வருஷத்து ஆரம்பத்திலும் ஷை ஜாமின் கேட்கப்படும். (ஷை.)

## மக்கான்.

௧. மக்கானுடைய செலவுக்காகவாவது அதன் விசாரணைக் கர்த்தரால் வாங்கப்பட்ட கடன்களுக்குமட்டும் மக்கான் வருமானங்கள் பாத்தியப்படுமே அல்லாமல், ஷை விசாரணைக்கர்த்தனுடைய ஸ்வந்த உபயோகத்துக்காக வாங்கப்பட்ட கடன்களுக்கு ஷை மக்கான் வருமானங்களைப் பாத்தியப்படுத்தக்கூடாது. (௧௮௫௮ௗ-நம்-௧௯௧-௫௧௮.)

## மடம்.

௧. ஒரு மடத்தின் ஸ்வாமி மாரகதசையிலிருக்கும்போது தனக்குப்பதிலாக ஒருவனை நியமிக்கும்படி வாய்மொழியாக உத்தரவு கொடுத்தாலும் போதும். (௧௮௪௯ௗ-நம்-௫௯-௫௯.)

பிரியாது-௧௧..................... | வழிப்பாதை-௩....................

இவைகளைப்பார்க்க.

## மயானம்.

௧. மயான ஸ்தானமாக ஒருதரம் உபயோகப்படுத்தப்பட்ட நிலம் அந்த விஷயத்துக்கே எப்போதும் உபயோகப்படவேண்டியதாயிருக்கின்றது. அந்த நிலம் கோவிலுக்குச் சொந்தமாயிருந்தாலுங்கூட அதிற் கோயிலார் பிரவேசிக்கக்கூடாது. (௧௮௫௩ ௵-நம்-௭௨-௧௮௫௪ ௵-ப-௫.)

---

## மரணசாஸநம்.

௧. ஸ்வீகாரத்தகப்பன் எழுதிவைத்த மரணசாஸநப்பிரகாரம் ஸ்வீகாரப்பிள்ளைக்குக் கிடைத்த ஸ்வத்துக்கு அந்த ஸ்வீகார புத்திரனே பாத்தியஸ்தன். (௧௮௧௭ ௵-நம்-௫.)

௨. ஒருவன் அவனுடைய ஜீவியகாலத்தில் வேறே யாதொரு ஆதாரவுமூலமாகப் பராதீநம் செய்யும்படியான ஸ்திதியைத் தர்மசாஸ்திரப்படி மரணசாஸநமூலமாகவும் அவன் பராதீநம் செய்யலாம். (௧௮௨௪ ௵-நம்-௩.)

௩. ஹிந்து தர்மசாஸ்திரவிதிக்கு ஒத்திராத மரணசாஸநம் அபார்த்தம். (௧௮௨௫ ௵-நம்-௧-நம்-௫.)

௪. பிதாவினுடைய மரணசாஸநத்தில் ஸ்வத்துக்களைப் புத்திரர்கள் ஒன்றாக அனுபவிக்கவேண்டுமென்று கண்டிருந்தபோதிலும் பிதா இறந்தபிற்பாடு அந்த ஸ்வத்துக்களில் பாகம் கிடைக்கவேண்டியதற்காக எந்தப்புத்திரனாவது வியாஜ்யம் செய்யலாம். (௧௮௨௫ ௵-நம்-௧.)

௫. பத்நிக்கு யாதொன்றும் கொடாமல் ஸ்வத்துக்களெல்லாம் ஒரு அந்நியனைப் பாத்தியப்படுத்திப் புருஷன் எழுதிவைத்த உயில் செல்லாது. (௧௮௪௪ ௵-நம்-௬௫.)

௬. பாத்தியஸ்தர்களுடைய சம்மதம் இல்லாமல் அவர்களில் ஒருவன்மட்டும் யாதொரு ஸ்திதியை எடுத்துக்கொள்ளும்படி மகமது மதஸ்தன் மரணசாஸநம் எழுதிவைத்தால் செல்லாது. (௧௮௨௦ ௵-நம்-௧.)

௭. மரணசாஸநமானது தர்மசாஸ்திரத்தின் ஒரு பாகமான மருமக்கத்தாய சாஸ்திரப்படிக்கும் எவ்வளவும் செல்லாது. (௧௮௫௫ ௵-நம்-௧௨௫.)

௮. பாத்தியஸ்தர்களுடைய சம்மதியுடன் பிறந்த மரணசாஸநம் உறுதியுள்ளதுதான். அதை எழுதிவைத்தவன் இறந்தபிறகு பாத்தியஸ்தர்களுக்குச் சம்மதம் இல்லாமல் இருந்தாலுங்கூட, அவர்களுடைய அபிப்பிராயத்துடன் அந்த மரணசாஸநம் பிறந்தபடியால் அதைப்பற்றி விவாதமாக அவர்கள் பிற்பாடு சொல்லும் ஆக்ஷேபம் செல்லாது. (௧௮௫௦ வரு-நம்-௨௫.)

௯. ஆண்சந்ததி இல்லாத ஹிந்துபுருஷன் அவனுடைய பத்தினி முதலானவர்களுக்கு அன்னவஸ்திரத்துக்கு மார்க்கஞ்செய்தபிறகு அவனுடைய ஆஸ்திகளை மரணசாஸநமூலமாகப் பராதீநம் செய்யலாம். (௧௮௪௬ வரு-நம்-௬௯.)

௰. தர்மசாஸ்திரப்படி மரணசாஸநம் செல்லாது. (௧௮௫௮ வரு-நம்-[illegible]-௧௮௫௫ வரு-ப-௨௫-௧௮௫௬ வரு-நம்-௧௦௭-ப-௨௪௯.)

௧௧. மரணசாஸநம் தர்மசாஸ்திரத்திற்கு எவ்வளவு ஒத்திருக்கின்றதோ அவ்வளவுவரையில் அதனிடத்தில் அநுஷ்டிக்கலாம். ([illegible] வரு-நம்-[illegible].)

௧௨. ஒரு மரணசாஸநத்துக்கு அர்த்தஞ்செய்வதில், அதில் பிரயோகிக்கப்பட்டிருக்கிற வார்த்தைகளின் சரியான தாற்பரியத்தைக் கொண்டு, அதை எழுதிக்கொடுத்தவனுடைய மனோரதம் இன்னதென்பதைக் கோர்ட்டார் நிதானிக்கவேண்டும். (௧௮௨௪ வரு-நம்-௯.)

௧௩. மரணம் அடைந்த ஒரு ஹிந்துவின் புத்திரிகைகளும் பாரியையும் அவனுடைய ஸ்வத்துக்கு வேறொருவனைப் பாத்தியப்படுத்தி அவன் மரணசாஸநஞ்செய்வதற்குச் சம்மதித்திருந்தார்களென்னும் அந்தமரணசாஸநத்திலும் அவர்கள் ஸஹாயபரர்களாயிருந்தார்களென்னும் திருப்திகரமாய் ருஜுவானால், பிற்பாடு அவர்கள் சொல்லும் ஆக்ஷேபம் நிஷ்பிரயோஜநம். (௧௮௫௦ வரு-நம்-௨௫.)

௧௪. ஒரு மரணசாஸநமானது சாஸ்திரத்துக்கும் தேசவழக்கத்துக்கும் அதை எழுதிவைத்தவனுடைய குடும்பவழக்கத்துக்கும் விரோதமாயிருக்குமானால் அது தோஷாரூடமாகும். (௧௮௨௫ வரு-நம்-௫)

கரு. விதவையான ருக்குமணி அம்மாளுடைய மகன் இறந்துபோய் அவனுடைய பத்நி ஜீவித்திருக்கும்போது, ஷெ ருக்குமணி அம்மாள் அவளுடைய ஆஸ்தியை அவளின் புருஷனுடைய சகோதரன் புத்திரனுக்குப் பாத்தியப்படுத்தி மரணசாஸநம் எழுதிவைத்தால் செல்லாது. (க௮௬௰ஞூ-நம்-௩௫௨-க௮௬௬கஞூ-ப-௬௭.)

கசு. மரணசாஸநத்தை நடப்பிக்கிற எக்ஸக்கியூட்டரானவன் கிரமமானபாத்தியஸ்தன் அநுபவிக்கிற ஸ்வத்தை அவனைவிட்டு அப்புறப்படுத்தக்கூடாது. (க௮௫௭ஞூ-நம்-௫௩.)

கஎ. கூட இருந்து வேலை பார்க்கவேண்டியதற்காக, இ-என்பவனை நியமித்துக்கொள்ளும்படி, அ-என்பவன் அவனுடைய புத்திரிகைக்குப் புத்திபோதனைசெய்ததைக்கொண்டு, இ-என்பவன்-எக்ஸக்கியூட்டராக நியமிக்கப்பட்டதாக எண்ணக்கூடாது. (க௮௫௭ஞூ-நம்-௬௰.)

க௮. லோகாந்தர பிராப்தியாகிற ஒருவன் அவனுடைய அத்தியந்த ஆப்தநாயகிக்கு அநுகூலமாக வேறொருவன் பெயரால் மரணசாஸநம்எழுதிவைத்தால்செல்லாது. (க௮௬கஞூ-நம்-௩-ப-கசஎ.)

| | |
|---|---|
| கிரயம்-௬ ........................ | பராதீநம்-க௫ .................... |
| ஸ்வீகாரம்-கக ................ | பாத்தியம்-௩ .................... |

இவைகளைப்பார்க்க.

---

## மருத்துவமிராசு.

க. தன்னைத்தவிர வேறொருவரும் மருத்துவம் பார்க்கக்கூடாதென்று ஒரு மருத்துவஸ்திரியினால் சொல்லப்பட்ட மருத்துவமிராசு பாத்தியத்தைக் கோர்ட்டார் ஸ்தாபிக்கக்கூடாது. (க௮௫௪ஞூ-நம்-எக.)

## மருமக்கத்தாயம்.

| | |
|---|---|
| அங்கீகாரம்-க௦ .................. | தானம்-க௩-கச .................. |
| அங்கீகாரவிபரீதம்-கச ........... | பராதீநம்-உஎ ..................... |
| ஒற்றி-௮-க௨-க௮-கக-௨௩-௪௮ | பாகம்-௩ ......................... |
| கடன்-௩௦ .......................... | பாத்தியம்-௩-௪எ ................ |
| கடன்பத்திரம்-௪௪ .............. | பூர்வார்ஜிதம்-௩ .................. |
| கிரயம்-௬எ ....................... | மரணசாஸநம்-எ ............... |
| ஸ்வீகாரம்-க௦ .................. | மிராசுதாரும் புறக்குடியும்-கச.. |

இவைகளைப்பார்க்க.

---

## மறுவிசாரணை.

௧. வாதிகள்பட்சம் சிவில்க்கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்ட வியாச்சியத்தைப் பிரதிவாதிகளின் ஆதரவுகளை யோசிக்கும்படிமட்டும் சதர்க்கோர்ட்டார் சிவில்க்கோர்ட்டாருக்கு மறுவிசாரணைக்கு அனுப்பினார்கள். அந்த ஆதரவு பிரதிவாதிகளுக்கு நிஷ்பிரயோஜநமென்றும் ஆகிலும் சதர்க்கோர்ட்டார் உத்தரவுப்படி அந்த ஆதரவுகளை ஸ்தாபித்திருப்பதாகவுஞ் சொல்லி சிவில் ஜட்ஜ் வாதிவழக்கைத் தள்ளுபடிசெய்தார். ஷை ஆதரவுகளைப்பற்றி யோசிக்கும்படி மட்டும் அந்த வியாஜியம் மறுவிசாரணைக்கனுப்பப்பட்டதேதவிர அவைகளை ஸ்தாபிக்கவேண்டுமென்பது தங்களுடைய மனோபாவம் அல்லவென்றும், தங்களுடைய அபீஷ்டம் அப்படி இருக்குமானால் தாங்களே அந்த ஆதரவுகளை ஸ்தாபித்துத் தீர்மானம செய்திருக்கலாமென்றும் சொல்லிச் சதர்க்கோர்ட்டார் வாதிபட்சம் தீர்ப்புச் செய்தார்கள். (௧௮௬0 ௵-நம்-௫௯௪-௧௮௬௧ ௵-ப-௧௧௬.)

| | |
|---|---|
| அப்பீல்-௩௬-௫௪-௫௭-௫௮.... | சித்தாந்தமுந் தீர்ப்பும்-௧0-௧௨... |
| கோர்ட்டுகள்-௫-௬.................. | செலவு-௧௧-௧௮.................... |
| சாட்சிய நிர்வாகம்-௪............ | ஜிவனாம்சம்-௧௫-௩௧......... ......... |

இவைகளைப்பார்க்க.

---

## மாஜிஸ்திரேட்டார்.

௧. ஜனங்களுக்குள் கலகம் உண்டாகாமல் இருக்கவேண்டியதற்காக வீதி சுற்றிவரும்போது கொடிகள் பிடிக்கக்கூடாதென்று மாஜிஸ்திரேட்டார் உத்தரவு கொடுத்திருந்தால் அந்த உத்தரவு பிரசித்தமாயிருக்கிறவரையில் கொடி பிடிக்கும்படியான பாத்தியங்களைப்பற்றிக் கோர்ட்டார் வியாஜியம் வாங்கக்கூடாது. (௧௮௫௮ ௵-நம்-௧0௨-ப-௨௧௪.)

௨. ஒரு மாஜிஸ்திரேட்டினுடைய அதிகாரச் செய்கையைப்பற்றிச் செய்யப்பட்டவழக்கில் அந்தச் செய்கை கிரமமானதா அல்லவா என்பதைக் கோர்ட்டாரே யோசித்து நிச்சயிக்கவேண்டுமே அல்லாமல் ஷை மாஜிஸ்திரேட்டினுடைய சிரேஷ்ட அதிகாரிகளின் அபிப்பிராயத்தையும் உத்தரவையும் கோர்ட்டார் மதிக்கவேண்டியதில்லை. (௪-பு-௧௮௩0 ௵ செப்டெம்பர்மீ ௨௯.)

அபராதம்-௮-வது விதியைப்பார்க்க.

---

## மாநநஷ்டம்.

௧. தன்மேல் பிரதிவாதியினால் சொல்லப்பட்ட அபவாதத்துக்காக மாநநஷ்டம் கிடைக்கவேண்டுமென்று வியாச்சியம் கொண்டுவந்த வாதி காலஞ்சென்றுபோனால், அவனுடைய பாத்தியஸ்தனை அந்த வியாச்சியத்தில் வாதியாக ஏற்றுக்கொள்ளக்கூடாது. ஆனால் அந்த அபவாதம் அந்தப்பாத்தியஸ்தனையும் சேர்ந்து அவனுக்கும் யாதொரு குறைவை உண்டுபண்ணத்தக்கதாயிருந்தால் அந்தப் பாத்தியஸ்தனும் ஷை மாநநஷ்ட வழக்கை நடத்த ஸ்வாதந்தரியமுள்ளவன்தான். (௧௮௨௪ஹு-நட-௪௫.)

௨. ௧௮௨௨ஹு-௬-வது சட்டப்படி வஞ்சகவிஷயமாகச் செய்யப்பட்ட பொய்ப் பிரியாதினால் துன்பத்தை அடைந்தவன் அந்தப் பொய்ப்பிரியாது கொடுத்தவன்மேல் மாநநஷ்டத்துக்காகத் தொடரலாம். ஆனால் அந்தப் பொய்ப் பிரியாதுக்காகச் சாட்சி சொன்னவனைத் தொடரக்கூடாது. (௧௮௩௯ஹு-நம்-௧௨)

௩. மேற்கண்டபடி மாநநஷ்டத்துக்காகத் தொடருகிறவன் தன்மேலே சாட்டப்பட்ட குற்றம் நிவர்த்தியானதையும் பாத்தியதினால் அகாரணமாய் ஷை பிரியாது செய்யப்பட்டதையும் அதனால் நேரிட்ட நஷ்டத்தையும் பரிஷ்காரமாய் ருசுசெய்யவேண்டும். (ஷை.)

௪. கன்னியக்குறைவுக்காக ஒருவன் நஷ்டம் கிடைக்கவேண்டுமென்று வியாச்சியம் செய்யலாம். (௧௮௫௧ஹு-நம்-௧௩௩.)

௫. தன்னோடுகூட இருந்து போஜனஞ்செய்யமாட்டோமென்று முதலாவது பிரதிவாதி மற்றப் பிரதிவாதிகளுக்குச் சொன்னதினால், அவர்கள் தன்னைப் போஜனமுதலான காரியங்களுக்காக அவர்களுடைய கிரஹங்களுக்கு வரவழைக்கிறதில்லையென்றும், அப்படிப்பட்ட ஜாதிப் பிரஷ்டத்துவத்தினால் தனக்கு நேரிட்ட நஷ்டம் கிடைக்கவேண்டுமென்றும், வாதி வியாஜியம் செய்தான். ஒருவரோடு சேரமாட்டோமென்று சொன்னவர்கள்மேல் அவன் மாநநஷ்டத்துக்காகத் தொடரக்கூடாதென்று வாதி வழக்குத் தள்ளப்பட்டது. (௧௮௫௭ஹு-நம்-௧00.)

௬. ஒருவன் பட்டணப்பிரவேசம் ஆகும்போது கூடக்கொண்டு போகப்பட்ட கொடிகளை வேறொருவன் தடுத்தால் அவன்மேல் நஷ்டத்துக்காகத் தொடரலாம். (௧௮௫௮ஹு-ப-௨௧௪.)

எ. ஒருவன் மற்றொருவனோடு பந்திபோஜநஞ் செய்யமாட்டே னென்று சொன்னால் அதற்காக மாநநஷ்டவழக்குத் தொடரக்கூடாது. (௧௮௫௮ ஹை-நம்-௧௧௨-௧௮௫௯ ஹை-ப-௬௦.)

அ. பந்தல் அலங்காரஞ்செய்கிறது முதலான ஜாதிவழக்கத்தைப் பற்றிப் பிறந்த உடன்படிக்கையை ஒருவன் மீறினால் அதற்காக மாநநஷ்டவழக்குத் தொடரக்கூடாது. (௧௮௫௯ ஹை-நம்-௨௧-ப-௭௬.)

௯. ஷேத்திரத்தில் ஒருவன்மேல் களவுமுதலான குற்றத்தைச் சாட்டிப் பொய்ப் பிரியாதுகொடுக்கிறவன் நஷ்டவழக்குக்குப் பாத்தியப்படவேண்டியவனாயிருக்கிறான். அப் பொய்ப் பிரியாதினால் கண்ணியக்குறைவுமுதலான மாநபங்கம் நேரிடாமலிருந்தாலுங்கூட அந்தப் பொய்ப் பிரியாதுகொடுத்தவன் நஷ்டத்துக்குப் பாத்தியப்படவேண்டும். (௧௮௬௦ ஹை-நம்-௮௦-ப-௨௦௫.)

௧௦. ஒரு வியாஜியத்தில் கொடுக்கப்பட்ட வியவகாரப்பத்திரிகையில் ஒருவனை அநாவசியகமாய்த் தூஷித்துப் பேசினால் அது மாநநஷ்டவழக்குக்கு ஆஸ்பதமாகும். ஒருவன் வைப்பாட்டி புத்திரனு அல்லது தன் பத்தினி புத்திரனு என்பதை நிச்சயிக்கவேண்டியது வியாஜியத்தின் முக்கிய சாராம்சமாயிருந்தால், அந்த வியாஜியத்தில் அவனை வைப்பாட்டி புத்திரனென்று விபக்ஷிகள் கட்சிபேசலாம். அதற்காக மாநநஷ்டவழக்குத் தொடரக்கூடாது. (௧௮௬௦-ஹை-நம்-௧௬௦-ப-௨௬௮.)

௧௧. தாசில்தாரான பிரதிவாதி தனக்கு அனுப்பின அறிக்கையில் தன்பெயரைத் தம்பிரானென்று எழுதாமல் ராஜாவென்று கண்டிருந்ததால் தனக்குக் கௌரவஹாநி உண்டாயிருப்பதாகவும் அதற்காக நஷ்டங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாச்சியம் செய்தான். ஒருவனுடைய செய்கையானது மற்றொருவனுக்கு மநஸ்தாபத்தை உண்டுபண்ணத்தக்கதாயிருந்தாலும், ஒருவனுடைய பட்டப்பெயர் முதலானவைகளை வழக்கத்துக்கு விரோதமாய்ப் பேதித்து எழுதினாலும் அது மாநநஷ்ட வழக்குக்கு ஆதாரமாகமாட்டாதென்று நிர்த்தாரணஞ் செய்யப்பட்டது. (௧௮௫௮ ஹை-நம்-௧௮௦-௧௮௫௯ ஹை-ப-௧௦௬.)

௧௨. வாதி அடித்ததாக அவன்பேரில் பிரதிவாதி மாஜிஸ்திரேட்டில் கொடுத்த பிரியாது தள்ளப்பட்டதாகவும், அதனால் நேரிட்ட மாநநஷ்டங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாஜியந்தொடர்ந்

தான். வாதிக்கு உண்டான வாஸ்தவமான நஷ்டத்தை அவன் நிரூபிக்கத்தப்பிப்போனதாலும் வாதிபேரில் பிரதிவாதிசெய்த மாஜஸ்திரேட்டுப் பிரியாதுக்குச் சில தகுந்த கார்ணம் இருந்ததினாலும் வாதிக்கு மாநஷ்டம் கிடைக்கத்தக்கதில்லையென்று தீர்மானிக்கப்பட்டது. (க௮ருச ஹை-நம்-உச.)

கிராமப்பிரதட்சணம்-க-உ...... | கிராம முன்சீபு-க................

இவைகளைப்பார்க்க.

---

## மிராசுதாரும் புறக்குடியும்.

க. நிலத்தைக் குத்தகை ஒப்புக்கொண்டவன் வாரத்தைக்கொடுக்கத் தப்பிப்போனால் மிராசுதார நிலத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளுகிறதென்று குத்தகைச்சீட்டில் கண்டிருக்கிற நிபந்தனையானது அதற்குப்பின்பு வரவேண்டிய எதிர் காலவாரத்தைப்பற்றினதேயல்லாமல் அந்தச் சீட்டுக்கு முந்தின பழைய நிலுவைகளுக்குச் சம்பந்தப்பட்டதல்லவென்று தீர்மானிக்கப்பட்டது. (க௮ரு௮ ஹை-ப-௩க.)

உ. நிலத்தை விட்டுவிட்டுப்போய்விட்ட புறக்குடியானவன் அநேகவருஷங்களுக்குப் பிற்பாடு மறுபடியும் நிலம் கிடைக்கவேண்டுமென்று தொடர்ந்தான். நிலத்தில் மறுபடியும் பிரவேசிக்கும்படியான பாத்தியத்தை அவன் ஏற்படுத்திக்கொள்ளாமல் போய்விட்டதால் அவனுடைய வழக்குச் செல்லாதென்று தள்ளப்பட்டது. (க௮ருஎ ஹை-நம்-கசுரு-க௮ரு௮ ஹை-ப-ச௩.)

௩. சாசுவதமான குத்தகையென்று ஊஹிக்கும்படியான வார்த்தைகள் குத்தகைச்சீட்டில் இல்லாதபடியால் அந்தக்குத்தகை ஒரு வருஷத்துக்குமாத்திரமென்றும், அந்த ஒரு வருஷத்துக்குப் பின்பு மிராசுதாரின் இஷ்டப்படி அந்தக் குத்தகை முடிந்துபோகத்தக்கதென்றும் தீர்மானிக்கப்பட்டது. (க௮ரு௮ ஹை-ப-கசுஉ.)

ச. குத்தகைச்சீட்டி னிபந்தனைப்படி சரியாய் நடந்துவருகிற புறக்குடியை அநியாயமாய் மிராசுதார் அப்புறப்படுத்தக்கூடாது. (க௮ரு௮ ஹை-நம்-கசக-க௮ருகூ ஹை-ப-உஉ.)

ரு. புறக்குடி அல்லது குத்தகைக்காரன் வேறொருவனுக்கு நிலத்தை உட்குத்தகைக்கு விடக்கூடாதென்று குத்தகைச்சீட்டில் ஸ்பஷ்டமாய் நிபந்தனை இல்லாதபட்சத்தில், அவன் நிராடங்கமாய்

வேறே யாருக்காவது அந்த நிலத்தை உட்குத்தகைக்கு விடலாம். (கஅ௫கூ௵-ப-கூக.)

கூ. ஒரு ஜமீன்தார் தன்னுடைய நிலங்களைக் குத்தகை ஒப்புக்கொள்ளும்படி முதலில் மிராசுதாரைக் கேட்காமல் வேறொருவனுக்குக் குத்தகைக்கு விடக்கூடாது. மிராசுதார் வேண்டியதில்லையென்று சொன்னால்மாத்திரம் ஒருவருஷத்துக்காவது அல்லது அநேகவருஷங்களுக்காவது ஜமீன்தார் வேறொருவனுக்குக் குத்தகை கொடுக்கலாம். அந்தக் குத்தகைக்கெடுவு முடிந்தபிற்பாடு குத்தகை ஒப்புக்கொள்ளும்படி. மறுபடியும் ஜமீன்தார் மிராசுதாரைக் கேட்க வேண்டும். (கஅ௫கூ௵-ப-கO.)

எ. சில நிலம் சாகுபடியில்லாமலிருந்தாலும் நிலம் விளைந்தாலும் விளையாவிட்டாலும் ஜமீன்தாருக்குக் கொடுக்கவேண்டிய வாரம் முழுதும் மிராசுக்குடியானவன் கொடுக்கவேண்டும். ஜமீன்தார் யாதொரு தொகையைத்தள்ளிக் கொடுக்கவேண்டியதில்லை. மிராசுதாருக்குச் சாகுபடிசெய்ய விருப்பம் இல்லாவிட்டால் பசலி அந்தத்தில் நிலத்தை விட்டுவிடவேண்டும். (கஅ௫கூ௵-நம்-உ௩-ப-கஅ௫.)

அ. சாசுவதக்குத்தகை பெற்ற புறக்குடிபேரில் வாரம் பாக்கி விழுந்தாலுங்கூட அந்தக் குத்தகை ரத்தாகமாட்டாது. ஆனால் ரத்தாகும்படியான நிபந்தனை குத்தகைச்சீட்டில் வியக்தமாய்க் கண்டிருந்தால் அந்த நிபந்தனை ஊர்ஜிதப்படவேண்டியதுதான். (கஅ௫கூ௵-நம்-க௩கூ-ப-உஎக.)

கூ. ஒருவன்பெயரால் குத்தகை கொடுக்கப்பட்டிருந்தபோதிலும் வேறொருவன் தான் யதார்த்தமான குத்தகைக்காரனென்று ஒப்புக்கொண்டால் அவன் குத்தகைத்தொகைக்குப் பாத்தியப்படவேண்டும். (கஅ௫கூ௵-நம்-கூஎ-ப-க௪அ.)

கO. பூஸ்திதியைச் சிலரிடத்தில் தான் குத்தகை ஒப்புக்கொண்டதாகக் கண்டு ஆதாரவு எழுதிக்கொடுத்த ஒருவன், பிற்பாடு அவர்கள் இடத்தில் தான் குத்தகைவாங்க இல்லையென்றும் வேறே சிலரிடத்தில் குத்தகைவாங்கினதாகவும் சொன்னால் அதைக் கோர்ட்டார் ஒப்புக்கொள்ளக்கூடாது. (கஅ௫கூ௵-நம்-க௩௫-கஅகூO௵-ப-உ.)

கக. அ-என்பவன் அவனுடைய நிலத்தை இ-என்பவனுக்குக் கொடுத்துவிட்டான். அந்த நிலத்தை அ-என்பவனிடத்தில் ஆகி

யில் குத்தகை ஒப்புக்கொண்டிருந்த உ-என்பவன் இ-என்பவனை அந்தநிலத்தின் ஸ்வான்காரனுகப் பாவித்து அவனிடத்தில் சில காலம் வாரமும் செலுத்திவந்ததினுல் அதற்குப்பிற்பாடு இ-என்பவனுடைய ஸ்வான் பாத்தியத்தை உ-என்பவன் ஆட்சேபிக்கக் கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅருகூ வரு - நம் - கoஈ-கஅசுo வரு-ப-கஅ.)

கஉ. குத்தகைப் புறக்குடி மிராசுதாருடைய பாத்தியத்தை ஆட்சேபிக்கக்கூடாது. (ஷை.)

கஈ. மிராசுதாருடைய நிலத்தில் இருக்கிற மரங்களைப் புறக்குடிகள் பிரசித்தமாகவும் நீண்டகாலமாகவும் அநுபவித்துவருவார்களானுல் மிராசுதாருடைய உத்தரவின்பிரகாரம் கிரமமான பாத்தியத்தின்மேல் அவர்கள் அநுபவித்துவருவதாக எண்ணவேண்டும். (கஅருகூ வரு-நம்-கoஅ-கஅசுo வரு-ப-உகூ.)

கச. மலையாளதேசத்தில் புறக்குடியினுல் வைக்கப்பட்ட பல விருட்சங்களுடைய கிரயத்தையுமற்றச் செய்நேத்திமுதலான செலவுகளையும் குத்தகை முடிவானவுடனே அந்தப் புறக்குடிக்குக் கொடுக்க மிராசுதார் பாத்தியப்பட்டிருக்கிறுன். (ஷை.)

கரு. மிராசுதாருடைய மனையில் வீடுகட்டிக் குடியிருக்கிற காசாவர்க்கக்குடியை மிராசுதார் அப்புறப்படுத்துகிறதாயிருந்தால், அவனுல் கட்டப்பட்ட வீடுமுதலான கட்டடங்களின் கிரயத்தை அவனுக்கு மிராசுதார் கொடுக்கவேண்டும். (கஅருகூ வரு-நம்-கஅசு-கஅசுo வரு-ப-சக.)

கசு. கன்னடதேசத்தில் மிராசுதாருக்குப் பகுதிகொடுத்துக் கொண்டு நிலத்தை அநுபவிக்கிற புறக்குடி அந்த நிலத்தை விட்டுவிடவேண்டியிருந்தால் அவன்செய்த செய்நேத்திச் செலவுகளையெல்லாம் அவனுக்கு மிராசுதார் கொடுக்கவேண்டும். (கஅசுo வரு-நம்-சுரு-ப-சரு.)

கஎ. ஒரு கட்சிக்காரன் யாருக்குத் தானுந் தன்னுடைய முன்னேர்களும் பகுதி செலுத்திவந்ததாக ஒப்புக்கொள்ளுகிறுனே அவனுடைய மிராசு பாத்தியத்தைப்பற்றி அந்தக் கட்சிக்காரனே ஆட்சேபிக்கக்கூடாது. (ஷை.)

கஅ. தனக்குச் சாசுவதமான புறக்குடி பாத்தியம் இருக்கிறதாகக் கட்சிபேசுகிறவன், அந்த விஷயத்தை ருஜுப்படுத்தத் தப்பிப்

போனால், அவன் ௧௫-வருஷகாலமாய் நிலத்தை அநுபவித்துவந்தாலுங்கூட அவன் மிராசுதாருடைய இஷ்டப்படி அந்தநிலத்தை விட்டுவிடவேண்டியவனா யிருக்கிறான். (௧அ௫௯௵-நம்-உ௦௬-௧அ௬௦௵-ப-௬௪.)

௧௯. ஒரு கோரிக்கு ஸ்வந்தமான நிலத்தைப் பிரதிவாதி சாகுபடிக்கு ஒப்புக்கொண்டு அந்தக்கோரியின் விசாரணைக்கர்த்தனுக்குப் பகுதிகொடுக்கிறதென்று பிரதிவாதி உடன்படிக்கை எழுதிக்கொடுத்தான். அந்த உடன்படிக்கையில் வாதியின் பெயரைக்காணாமல் இருந்தபோதிலும் அதைப் பிரதிவாதியிடத்தில் வாதி பெற்றுக்கொண்டதாக ருஜுவானதினால் வாதியே ஷை கோரியின் விசாரணைக்கர்த்தனென்றும் அவனுடைய வியாச்சியப்படி பிரதிவாதி ஷை நிலத்தை விட்டுவிடவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. (௧அ௬௦௵-நம்-௪௯-ப-௧அ௨.)

உ௦. ஒருவன் தான் சாசுவத புறக்குடியென்று கட்சிபேசினால் அந்தப்படி அவன் ரூபிக்கவேண்டும். அப்படிப்பட்ட ருஜு இல்லாவிட்டால் அவனுடைய நெடுங்கால அநுபோகம்மட்டுமே அந்த விஷயத்துக்கு ஸாட்சியமாகமாட்டாது. (௧அ௬௦௵-நம்-௪௪-ப-௧அ௭.)

உ௧. மிராசுதார்கள் அவர்களுடைய நிலங்களைச் சாகுபடிசெய்யாமல் அநேகவருஷகாலம் சும்மா போட்டுவிட்டால் அந்த நிலங்களுக்கு அவர்களைத்தவிர வேறே மநுஷாள்பெயருக்குப் பட்டாப் பிறப்பிக்கக் கலெக்ட்டர்முதலான கவர்ன்மென்று உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரம் இல்லை. (௧அ௪௯௵-நம்-௧௪.)

உஉ. அநாதித்தரிசு நிலங்களை மிராசுதார்களும் சாகுபடி செய்யாமல் வேறே யாரைக்கொண்டாவது சாகுபடியும் செய்விக்காமல் சும்மா இருந்துவிட்டால், சர்க்காரார் பிரசித்தப் பத்திரிகைமூலமாய்ச் சாகுபடிசெய்ய இஷ்டமுள்ளவர்களைத் தேடி அவர்கள் வசத்தில் ஷை நிலத்தை விட்டுவிட அதிகார துரந்தரர்களாயிருக்கிறார்கள். (௧அ௫௧௵-நம்-௩௦.)

உ௩. அநாதித் தரிசுமுதலான மிராசு நிலங்களைக் கிராமத்து மிராசுதார்கள் பிரிவினை செய்துகொள்ளாமல் பொதுவாக அநுபவிக்கிறபட்சத்தில், அவர்களில் ஒருவன்மட்டும் அந்த நிலத்தில் அவனுடைய வீதமிராசு ஸ்வதந்தரத்தைப்பற்றித் தனியே வழக்குச்செய்யக்கூடாது. (௧அ௫௧௵-நம்-உ௯-௩௦.)

௨௪. மிராசுதாரன் அவனுடைய நிலத்தைச் சாகுபடிசெய்யாமல் விட்டுவிட்டாலும் அல்லது சாகுபடிசெய்ய நிராகரித்தாலும் அந்த நிலத்தின் வருமானத்தில் குடிவாரம் அவனுக்குக் கிடைக்கமாட்டாது. ஆனால் அவன் குடிவார பாத்தியத்தை இழந்துபோவதைக் கொண்டு அந்த நிலத்தின் மிராசு ஸ்வதந்தரங்களையும் இழந்துபோகமாட்டான். (௧௮௧௯௵-நம்-௧.)

௨௫. பிரதிவாதி நீண்டகாலமாய் அநுபவிக்கிற நிலங் கிடைக்கவேண்டுமென்று வியாச்சியந் தொடருகிற வாதியானவன் அந்தப்பிரதிவாதி தன்னுடைய புறக்குடியென்றும் அவன் தன்னுடைய பாத்தியத்தை ௧௨-வருஷத்துக்குள் ஒப்புக்கொண்டதாகவும் ருஜுப்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறான். பிரதிவாதியின் அநுபோகமே போதுமான சாட்சியமாயிருப்பதால் அவனுடைய பாத்தியத்தைப்பற்றி அவன் ருஜுப்படுத்தவேண்டியதில்லை. (௧௮௫௯௵-நம்-௬௬-ப-௧௪௭.)

௨௬. சாகுபடியில்லாமல் பாழாய்க்கிடக்கிற நிலத்தைச் சாகுபடி செய்யும்படி அதை ஆதியில் அநுபவித்தவனைக் கேட்டுக்கொள்ளாமலும் அவனுடைய சம்மதியைப் பெற்றுக்கொள்ளாமலும் அந்த நிலத்துக்கு வேறொருவன் பெயரால் பட்டாக் கொடுக்கக்கலெக்டருக்கு அதிகாரம் இல்லை. (௧௮௫௬௵-ப-௨௧.)

௨௭. மிராசுதாருடைய அநுமதிப்பிரகாரம் நிலத்தை அநுபவிக்கிறவன் அந்த மிராசுதாருக்கு வாரங் கொடுக்கவேண்டியவனாயிருக்கிறான். (௧௮௫௮௵-ப-௮௧.)

௨௮. வேறொருவனுடைய நிலத்தைத் துராகிருதமாக அநுபவிக்கிறவன் ஸ்வாமிக்குப் பகுதி அல்லது வாரங் கொடுக்கவேண்டும். (௧௮௫௯௵-ப-௧௧௬.)

௨௯. ஞாபகத்துக்கு எட்டாத அநேக வருஷகாலம் கோயில்நிலங்களை அநுபவித்துக்கொண்டு கோயிலுக்கு மேல்வாரமட்டுங் கொடுத்துக்கொண்டு கோயிலின் விசாரணைக் கர்த்தர்களுடைய அநுமதி இல்லாமல் அந்த நிலத்தை விக்கிரயம் பந்தகமுதலான பராதீநங்கள் செய்துவருகிற புறக்குடிகளே அந்த நிலங்களைச் சதா சாகுபடிசெய்து அநுபவிக்கப் பாத்தியம் உள்ளவர்கள். ஷை நிலங்கள் கிடைக்கவேண்டுமென்று வழக்குச்செய்கிற கோயில் ஆதீனக்கர்த்தர்கள் ஷை புறக்குடிகளை அப்புறப்படுத்தும்படியான பாத்தியம் தங்

களுக்கு உண்டாயிருப்பதாக நிரூபிதம்செய்யவேண்டும். (க௮௫௯ ஹு-நம்-க௯௩-க௮௬௦ஹு-ப-௬௦.)

௩௦. ஒருவனுக்குச் சொந்தமான நிலம் வேறொருவனுடைய கைவசத்தில் இருக்கிறபட்சத்தில் அவனுடைய சம்மதத்தின்மேலாவது அல்லது வியாஜியமூலமாயாவது அந்தநிலத்தை ஸ்வான்காரன் பெற்றுக்கொள்ளவேண்டுமேதவிரப் பலவந்தமாய்ப் பிடுங்கிக்கொள்ளக்கூடாது. அப்படிப் பலவந்தமாய்ப் பிடுங்கிக்கொள்வானுனல், அவனுடைய ஸ்வான் பாத்தியம் ஸ்தாபிக்கப்படுகிறவரையில் அந்த நிலத்தை அநுபோகக்காரன் வசப்படுத்தக் கோர்ட்டார் பாத்தியப்பட்டிருக்கிறார்கள். (க௮௫௯ஹு-நம்-உ௦௭-க௮௬௦ஹு-ப-௭௬.)

௩௧. தன்னுடைய நிலத்தை முதற்பிரதிவாதி குத்தகை ஒப்புக்கொண்டு அவனுல் எழுதிக்கொடுக்கப்பட்ட குத்தகை எதிர்நடைச்சீட்டுப்படி நிலங் கிடைக்கவேடுமென்று வாதி வழக்கிட்டான். அந்த நிலம் உ-ம் பிரதிவாதிக்குச் சொந்தமென்றும் அவனிடத்தில் தன்னுடைய தகப்பன் போக்கியம் பெற்றதாகவும் முதற்பிரதிவாதி எதிர்கட்சிபேசினுன். வாதியின் குத்தகை எதிர்நடைச் சீட்டு ருஜுவாகாதபடியால் வாதியின்வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டதுந்தவிர அந்தவழக்கு அநுபோகவிஷயத்துக்குமட்டும் சம்பந்தப்பட்டதானதால் வாதியினுடைய ஸ்வான் பாத்தியத்தைப்பற்றி அவன் வேறே வியாஜியம் செய்யலாமென்றும் உத்தரவு செய்யப்பட்டது. (க௮௬௦ஹு-நம்-௬௮-ப-உ௦௪.)

௩௨. ஒரு பூஸ்திதியை முன்னோர்கள் நாள்முதல் அநுபவிக்கிற பிரதிவாதிகளை அப்புறப்படுத்தவேண்டுமென்று வியாச்சியங்கொண்டுவருகிற வாதியானவன் தன்னுடைய பாத்தியத்தையும் பிரதிவாதிகள் அந்தநிலத்தைத் தன்னிடத்தில் பெற்றுக்கொண்டதையும் ருசுப்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறுன். பிரதிவாதிகள் முன்னோர்கள் காலமுதல் அநுபவிப்பதாக ருஜுவாகிறபட்சத்தில் அந்தப் பிரதிவாதிகளில் ஒருவன் அந்த நிலத்தைப்பற்றி வாதிக்குக் குத்தகைச்சீட்டு எழுதிக் கொடுத்திருப்பதாக நிரூபிக்கப்பட்டாலுங்கூட அது வாதியின் கட்சியை ஸ்தாபிக்கப் போதுமானதல்ல. (க௮௬௦ஹு-நம்-க௬௫-ப-உ௮௪.)

௩௩. அ-என்பவன் கவர்ன்மென்றாரிடத்தில் சில நிலத்தைச் சாகுபடி செய்வதாக ஒப்புக்கொண்டு சிலகாலம் அநுபவித்துப் பிற்பா

டு விட்டுவிட்டான். அதை ரிவினியூ அதிகாரஸ்தர்களால் க-என்பவனுக்குக் கொடுக்கப்பட்டபிற்பாடு, அ-என்பவனுக்கு அந்த நிலத்தில் யாதொரு பாத்தியமும் இல்லை. அவன் அந்த நிலத்தை அநுபவித்தகாலத்தில் அதைப் பந்தகமாய் வைத்துக் கடன்வாங்கி யிருந்தாலுங்கூட அந்தக் கடனுக்கு ஷை நிலம் பாத்தியப்படமாட்டாது. (கஅருஅ௵-நம்-ருரு-சுகூ-கஅசு௦௵-நம்-௩எ-ப-உ௦௦.)

௩ச. ௩௵-காலம் ஒரு நிலத்தைப் பயிரிட்டு அநுபவிக்கிற குடியானவனை ரிவினியூ அதிகாரஸ்தர்கள் அந்த நிலத்தைவிட்டு அப்புறப்படுத்தக்கூடாது. அவனை அப்புறப்படுத்தவேண்டுமென்று விரும்புகிற கட்சிக்காரன் அவன்மேல் கிரம வியாச்சியம் செய்யவேண்டும். (கஅசு௦௵-நம்-ருகூ-ப-உக௦.)

௩ரு. ஒரு குடியானவன் அவனுடைய நிலத்தை அநேக௵-காலம் சாகுபடிசெய்யாமல் போட்டுவிட்டால் கலெக்டருடைய யுக்தப்படி அந்த நிலத்தை அவனுக்காவது அல்லது வேறேயாருக்காவது கொடுத்துவிடலாம். (கஅசு௦௵-நம்-கூசு-ப-உ௩ரு.)

௩சு. பிரதிவாதிகள் ஒவ்வொருவனும் வெவ்வேறே பாத்தியங்களின்மேல் தனித்தனியே அநுபவிக்கிற நிலங்களைப்பற்றித் தனித்தனியே வாதி வியாச்சியம் செய்யவேண்டுமே அல்லாமல் அவர்களெல்லாரையுஞ் சேர்த்து ஒரே வியாச்சியம் செய்யக்கூடாது. (கஅருரு௵-நம்-கச௩-கஅருசு௵-நம்-கசக.)

௩எ. மிராசுதாருக்குக் கொடுக்கவேண்டிய பகுதியைக் கொடுக்கத்தப்பிப்போகிற புறக்குடி அவன் குடியிருக்கிற மனையைவிட்டுவிடவேண்டும். (கஅருச௵-நம்-௩உ.)

௩அ. மிராசுதாருக்கு மனையைவிட்டுவிடுகிற குடியானவன் அதின்மேல் அவன் கட்டியிருக்கிற வீட்டினுடைய தளவாடசாமான்களை யெடுத்துக்கொள்ளலாம். (கஅருச௵-நம்-௩௩.)

௩கூ. குத்தகைச் சீட்டில் குத்தகையின் கால நிஷ்கரிஷை இல்லாமல் வருஷாந்தரப்பகுதியை நாலுகெடுவில்கொடுக்கிறதென்று நிபந்தனைகண்டிருந்தவிஷயத்தில், மிராசுதாருக்கு இஷ்டம் உள்ளமட்டும் அந்தக்குத்தகை நிலைத்திருக்கத்தக்கதென்றும் அவனுக்கு இஷ்டம் இல்லாதவனாயில் அந்தக் குத்தகை நிஷ்பலிதமாகத்தக்கதென்றும் நிச்சயிக்கப்பட்டது. (கஅருச௵-நம்-சக.)

௪0. புறக்குடிமேல் மிராசுதாரால் செய்யப்பட்ட வழக்கில் புறக்குடியானவன், ௩-வது மநுஷனுடைய பாத்தியத்தைப்பற்றிப் பேசக்கூடாது. (௧௮௫௪ஞ-௩ம்-௬௧.)

௪௧. மிராசுதாருடைய புறக்குடியிடத்தில் உட்குத்தகை ஒப்புக்கொண்டவனை மிராசுதார் அப்புறப்படுத்தலாம். (௧௮௫௮ஞு-௩ம்-௧௨.)

௪௨. மிராசு நிலத்தைக் கிரயம் வாங்கினவன் காசாவர்க்கக்குடியை அஸ்வாதினப்படுத்தி அவன் வசத்திலிருக்கிற நிலத்தை ஸ்வாதினப்படுத்திக்கொள்ளலாம். (௧௮௫௮ஞு-௩ம்-௬0.)

௪௩. மிராசுதார்மட்டும் நிலத்தை அநுபவிக்கிற புறக்குடியை அப்புறப்படுத்தலாமே அல்லாமல் ஒரு புறக்குடி அவனுக்குச் சமானமான மற்றொரு புறக்குடியை அப்புறப்படுத்தக்கூடாது. (௧௮௫௫ஞு-௩ம்-௧௪௫.)

௪௪. மிராசுதார்களில் சிலர் மற்றவர்களுடைய சம்மதம் இல்லாமல் சாருபடிக்காக நிலங்களை ஒப்புக்கொள்ளலாம். (௧௮௫௯ஞு-௩ம்-௪.)

௪௫. ஒரு புறக்குடியிடத்தில் உட்குத்தகை ஒப்புக்கொண்டவன் அந்தப் புறக்குடிக்குமட்டும் உத்தரவாதியேதவிர மிராசுதாருக்கு உத்தரவாதியல்ல. (௧௮௫0ஞு-௩ம் - ௨௪ - ௧௮௫௪ஞு-௩ம்-௫௯-௧௮௫௮ஞு-௩ம்-௪௭.)

௪௬. விவாதநிலத்தின் குடிவாரபாத்தியம் தங்களுக்குச் சொந்தமென்றும் மேல்வாரபாத்தியமட்டும் பிரதிவாதிகளுக்குச் சொந்தமென்றும் வாதிகள்செய்தவழக்கை ஸ்தாபித்துத் தீர்மானஞ்செய்யப்பட்டது. (௧௮௬0ஞு-௩ம்-௫௬௪-௧௮௬௧ஞு-ப-௧௧௯.)

௪௭. சாசுவதக் குத்தகை எழுத்துமூலமாக இருக்கவேண்டும். (௧௮௫௩ஞு-௩ம்-௧0௨.)

௪௮. கிராமத்தின் சகல மிராசு ஸ்வதந்தரங்களைப்பற்றி ஒரு மிராசுதார்மட்டும் வியாச்சியம் செய்யக்கூடாது. (௧௮௧௯ஞு-௩ம்-௩.)

௪௯. நிலத்தின்பேரில் யாதொருவனுக்கு ஏற்பட்டிருக்கிற மிராசு ஹஜொன்கிறவருமானத்தைத் தள்ளுபடிசெய்யக் கவரன்மென்றுருக்கு அதிகாரம் இல்லை. (௧௮௫௫ஞு-௩ம்-௯௫.)

௫௦. தன்னிடத்தில் நிலத்தைக்குத்தகைவாங்கி அநுபவிக்கிற புற க்குடியை அப்புறப்படுத்தி நிலத்தைத் தன்னுடைய ஸ்வாதீநப்படு த்தவேண்டுமென்று மிராசுதார் வியாஜியஞ்செய்து அந்தப்படி மெய்ப்பித்தால், அவன் பட்சம் கோர்ட்டார் தீர்ப்புச்செய்யவேண் டுமேதவிர அந்த நிலத்துக்கு, ௩-வது மநுஷன் பாத்தியஸ்தனுவெ ன்பதைப்பற்றி அந்த வியாஜியத்தில் விமரிசைசெய்யவேண்டியதி ல்லை. அந்த வியாஜியத்தில் ஷை ௩-வது மநுஷன் பிரதிவாதியாயி ருந்தாலுங்கூட அவனுடைய பாத்தியத்துக்கு வாதிபட்சம் செய்ய ப்பட்ட தீர்ப்பினுல் பாதகம் இல்லை. அவனுடைய பாத்தியத்தைப் பற்றி அவன் வேறே வியாச்சியம் செய்துகொள்ளலாம். (க௮௫௮ ௵-நம்-க௦௦-ப - உகஉ - க௮௫௯௵ - நம்-க௦௩-க௮௬௦௵ - நம்- க௩உ-க௮௬௦௵-ப-க௮-க௩உ.)

௫க. கலெக்டரிடத்தில் நிலத்தைச் சாகுபடிக்காகப் பலபேர் ஒப்புக்கொண்டு பிற்பாடு அவர்களிற் சிலர்மட்டும் அந்த நிலத் தைவிட்டுவிடுகிறபட்சத்தில் அதனுல் மற்றவர்களுடைய பாத்தியத் துக்கு ஹாநியில்லை. (க௮௫௮௵-நம்-கஉ௦.)

| | |
|---|---|
| அநுபவம்-௫-கஉ.................. | பகுதி-க.......................... |
| காசாவர்க்கம்-க-உ.............. | வட்டி-க௯......................... |
| கால நிர்ணயம்-எ-௪௮........... | |

இவைகளைப்பார்க்க.

---

## மிராசுபதிவு.

க. சர்க்காருக்குத் தீர்வைகொடுக்கிற நிலத்திற்குக் கிரயம்வாங்கி னவன் பெயரால் மிராசு தாக்கலாகாமலிருந்தாலுங்கூட அந்தக் கிர யத்துக்குப் பங்கம் உண்டாகமாட்டாது. (௪-பு-க௮௩உ௵ செப் டெம்பர்மீ௴ கஎ௨.)

உ. மிராசுபதிவைக்கொண்டுமட்டும் ஒருவனுடைய பாத்திய த்துக்குச் ஸாதகமாவது பாதகமாவது உண்டாகமாட்டாது. (க௮௫௪௵-நம்-க௩.)

௩. ஒருவன் அநேகவருஷமாக அநுபவித்துவருகிற நிலத்துக்கு வேறொரு அந்நியன்பெயரால் மிராசு தாக்கலாயிருக்கிற ஏக ஆதா ரத்தைக்கொண்டு அந்த அந்நியன்பட்சம் கோர்ட்டார் தீர்ப்புச் செய்யக்கூடாது. (க௮௫௯௵-நம்-க௦எ.)

௪. மிராசுபதிவுமட்டும் ஜமீன் பாத்தியத்தை ஸ்தாபிக்கிறதற்கு எவ்வளவும் போதாது. (க௮௨௭௵-நம்-௨.)

௫. ஒருவன்பெயரால் நிலத்துக்கு மிராசு பதியப்பட்டிருந்தபோதிலும், அந்தப்படி நாமமாத்திரமாகப் பதியப்பட்டிருப்பதாகவும் அவன் யதார்த்தமான ஸ்வான் அல்லவென்றும் வாசாசாட்சியத்தைக்கொண்டும் இதரமான ஹேதுக்களைக்கொண்டும் கோர்ட்டார் சித்தாந்தநிர்ணயம் செய்யலாம். கிஸ்தி பாக்கிக்காகச் சர்க்காரால் வரவழைக்கப்படும்படியான சங்கட நிவாரணார்த்தமாக ஸ்வான்காரன் வேறொருவன்பெயரால் வியாஜத்துக்கு மிராசு பதியவைப்பது சஹஜமானதால் பாத்தியநிதரிசந விஷயத்தில் மிராசுபதிவு கேவலம் அசாதகம். (க௮௫௮௵ - நம் - க௫௯- க௮௫௯௵-ப-௨௨௯.)

| | |
|---|---|
| அநுபவம்-௩௩.................... | பாகம்-௨௯.................. |
| காலநிர்ணயம்-௩௭................ | |

இவைகளைப்பார்க்க.

## முட்டா.

க. யதார்த்தமான மிராசுதாருக்கும் புறக்குடிக்கும் உண்டாகிற வியாஜியத்தைமட்டும் க௮௨௨௵ ௫-வது சட்டப்படி ரிவினியூ அதிகாரஸ்தர்கள் அங்கீகரிக்கலாமேதவிர, அந்த மிராசுதாரின் பாத்தியமாவது புறக்குடியின் பாத்தியமாவது ஆட்சேபாருடமாயிருந்தால் அப்பேர்ப்பட்டவழக்குக் கிரமமான கோர்ட்டுகளில் தாக்கல் செய்யப்படவேண்டும். ஒரு புறக்குடியின் பாத்தியத்தை முட்டாதார் அங்கீகரிக்காமல் இருந்தால் அந்த முட்டாதாரிடத்தில் தனக்குப் பட்டா கிடைக்கவேண்டுமென்று அந்தப்புறக்குடி ஷை சட்டப்படி ரிவினியூ அதிகாரஸ்தர்களிடத்தில் வியாச்சியம் செய்யக்கூடாது. (க௮௬௦௵-நம்-௫௪௯- க௮௬க௵-ப-௯௮.)

௨. முட்டா பூர்வீக ஜமீன்தாரியா யிராதபடியால் முட்டா பாகயோக்கியமானது தான். (க௮௫௨௵-நம்-௪௪.)

௩. ஜமீன்தார் கிரயத்துக்குவாங்கின முட்டா பாகார்ஹமானது தான். (க௮௪௬௵ - நம்-௨௦-க௮௪௮௵-நம்-௪௮-க௮௫௭௵-நம்-க௦௨.)

௪. முட்டாவைச் சேர்ந்த நிலம் தோட்டமாக உபயோகப்படுமானால் ௧௮௦௨௵ ௩௦-வது சட்டம் ௧௫-வது பிரிவுப்படி நடப்பிக்கப்படவேண்டுமே அல்லாமல் அந்த நிலத்தைப் புஞ்சையாக எண்ணக்கூடாது.

சாட்சியம்-௮.................... | ஜமீன்தார்-௧௭..................

இவைகளைப்பார்க்க.

---

## முட்டாதார்.

௧. தன்னுடைய முட்டாவுக்குட்பட்ட நிலத்துக்குத் தீர்வை ஏற்படுத்த முட்டாதார் நிஸ்ஸந்தேஹமான பாத்தியத்தைக் கொண்டிருக்கிறான். (௧௮௫௮௵-நம்-௧௮௯-ப-௨௪௭.)

௨. எந்த நிலத்தின் தீர்வையானது கவர்ன்மெண்டு அதிகாரஸ்தர்களின் கர்த்தவ்வியத்துக்கு உட்பட்டிருக்கின்றதோ அந்த நிலத்தின் தீர்வை ஏற்பாட்டைப்பற்றி ரிவினியூபோர்டாருடைய உத்தரவின் மேற்பிறந்த உக்கும் நாமாவானது முட்டாதாரைப் பந்தப்படுத்த மாட்டாதானதால் அந்த உக்கும் நாமாவின் நிபந்தனையை முட்டாதார் லட்சியஞ் செய்யவேண்டியதில்லை. (௧௮௫௮௵-நம்-௧௭௪-௧௮௫௯௵-ப-௩௮.)

---

## முத்திரைக்கடிதம்.

௧. அந்நியராஜாங்கத்திற் பிறந்த ஆதாரவுகளுக்கு முத்திரையைப் பற்றின சட்டங்கள் உபயோகம் அல்ல. (௧௮௨௮௵-நம்-௩.)

௨. பூர்வார்ஜிதத்தில் தன் பாகத்துக்காக வியாஜியஞ் செய்தபிறகு பாகஸ்தர்களில் ஒருவன் இறந்துபோய் வாதிக்கு அதிகபாகம் கிடைக்கவேண்டியிருந்தால், அந்த வியாஜியத்திலே அவன் ஜாஸ்தியான முத்திரைக்காகிதம் தாக்கல்செய்யும்படி கோர்ட்டார் உத்தரவு கொடுக்கவேண்டுமே அல்லாமல் அந்த நிமித்தத்தைக் கொண்டு அவனுடைய வியாச்சியத்தைத் தள்ளக்கூடாது. (௧௮௫௮௵-நம்-௧௮-ப-௧௦௩.)

௩. வாதியினுடைய தாவாவுக்குச் சரிக்கட்டி வியாஜியத்தின் பெறுமானம் நிஷ்கரிஷை செய்யப்படவேண்டியதேயல்லாமல், பிரதிவாதியின் தஸ்தாவேஜுகள் நிஷ்பலமாய்ப்போனால் வாதி எவ்வள

வுக்குப் பாத்தியஸ்தனுவானே அதின்பேரில் பெறுமானம் ஏற்ப டுத்தக்கூடாது. (கஅருஅஹு-நம்-கௗo-ப-ககூச.)

ச. வாதி போதுமான முத்திரைக்காகிதம் கொடுக்காவிட்டால் அந்தக்குறைவைப் பூரணஞ் செய்யும்படி அவனுக்குக் கோர்ட் டார் உத்தரவு கொடுக்கவேண்டியதே அல்லாமல், அதற்காக அவ னுடைய வியாஜியத்தைத் தள்ளக்கூடாது. எந்த ஸ்வத்து கிடை க்கவேண்டுமென்று வாதி தொடருகிருனே அந்த ஸ்வத்துக்குமட் டும் அவன் பெறுமானங்கட்டி முத்திரைக்கடிதங் கொடுக்கவேண் டும். (கஅருஅஹு-நம்-கௗஅ-ப-களஉ.)

| | |
|---|---|
| அப்பீல்-ரு-கo-கௗ-கச.......... | பாப்பர்-கூ...................... |
| காஜி-ச........................ | |

இவைகளைப்பார்க்க.

---

## மௌளவாத்தியம்.

கிராமப்பிரதட்சணம் ச-வது விதியைப்பார்க்க.

---

## மேன்காவல்.

க. மேன்காவல் வேலைபார்க்கிறவனைத் தள்ளுபடிசெய்ய ஜமீன் தாருக்கு அதிகாரம் உண்டு. ஆனுல் அந்தவேலைக்கு ஜமீன்தார் வேறொருவனை நியமிக்கவேண்டுமே அல்லாது அவரே அந்த வே லையை நடப்பிக்கக்கூடாது. (கஅககஹு-நம்-கo.)

## மோசம்.

க. பிரதிவாதிகளுடைய தகப்பனுல் எழுதிக்கொடுக்கப்பட்ட பந்தக பத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று வாதி தொ டர்ந்தான். ஷை பத்திரத்தின் உண்மையை ஒப்புக்கொண்டு முதற் பிரதிவாதியும் அதை ஆட்சேபித்து உ-ம் பிரதிவாதியும் எதிர்வ ழக்காடினுர்கள். ஷை பத்திரம் அநிஜமென்றும் வாதியு முதற்பிர திவாதியும் சபட்சமாயிருப்பதாகவும் ருஜுவானபடியால் அந்தப் பொய்யான பத்திரத்தை ஒப்புக்கொள்ளுகிற முதற் பிரதிவாதி யைக்கூட அதின் தொகைக்கு உத்தரவாதப்படுத்தக்கூடாதென்று வாதியின் வழக்கு அடியோடே தள்ளப்பட்டது. (கஅருகூஹு-நம்-கருகௗ-கஅகூoஹு-ப-கூ.)

உ. உ-ம் பிரதிவாதிக்கு ஸ்வந்தமான பண்டகசாலையை ஈடுகாட்டி அவன் தனக்குப் பந்தகபத்திரம் எழுதிக்கொடுத்திருப்பதாகவும், அந்தப் பண்டகசாலையை முதற்பிரதிவாதிக்குக் கிடைக்கவேண்டிய தீர்ப்பின் தொகைக்காக ஜப்தி செய்யப்பட்டிருப்பதினாலே அந்தப் பண்டகசாலையின்பேரில் தனக்குத் தொகை கிடைக்கவேண்டுமென்றும் வாதி வியாஜியம்செய்தான். தன்னுடைய தீர்ப்பின் தொகையை மோசஞ்செய்வதற்காக வாதியும் உ-ம் பிரதிவாதியும் ஒன்றுசேர்ந்து விவாதபத்திரத்தைக் கற்பித்திருப்பதாக முதற் பிரதிவாதி வியவகரித்தான். உ-ம் பிரதிவாதி விவாதபத்திரத்தின் உண்மையை ஒப்புக்கொண்டான். முதற்பிரதிவாதியையும் பண்டகசாலையையும் நீக்கி உ-ம் பிரதிவாதியைமட்டும் வாதி வழக்குக்குப் பாத்தியப்படுத்தி அசல்த்தீர்ப்பு செய்யப்பட்டது. அதன்பேரில் வாதி அப்பீல் செய்துகொண்டான். விவாதபத்திரம் பொய்யானதென்று ருஜுவாயிருப்பதால் அதன் உண்மையை ஒப்புக்கொள்ளுகிற உ-ம் பிரதிவாதியைக்கூட அதின் தொகைக்குப் பாத்தியப்படுத்தக்கூடாதென்று அப்பீல்க்கோர்ட்டார் வாதியினுடைய வழக்கை அடியோடே தள்ளினார்கள். வாதிசெய்த அப்பீலில் ஷை பத்திரத்தின் உண்மையைப்பற்றி விவாதம் இல்லாமல் இருந்தபோதிலும் கற்பனையென்று ஸ்தாபிக்கப்பட்ட ஷை பத்திரத்தை ஒரு விதத்திலும் உறுதிப்படுத்தக்கூடாதென்று அப்பீல்க்கோர்ட்டார் செய்த தீர்மானம் சரியானதென்று வாதியின் விசேஷ அப்பீலைச் சதர்க்கோர்ட்டார் தள்ளுபடிசெய்தார்கள். (௧௮ரு௯ (ஸ்ரீ)-ங ம்-௧௮உ-௧௮௬௦(ஸ்ரீ)-ப-௧௪.)

௩. பிரதிவாதிகள் எழுதிக்கொடுத்த பந்தகப்பத்திரப்படி தொகை கிடைக்கவேண்டுமென்று வாதிசெய்தவழக்கில் ௧-௨-௩-௪ பிரதிவாதிகள் எதிர்வழக்காடாமல் சும்மா இருந்துவிட்டார்கள். தன்னுடைய நிலத்தை அபஹரிக்கவேண்டியதற்காக வாதியும் ௧-௨-௩-௪ பிரதிவாதிகளும் ஒன்றுசேர்ந்து விவாதபத்திரத்தை அபாண்டமாய்ச் சிருஷ்டித்திருப்பதாக ௫-ம் பிரதிவாதி அநுவாதித்தான். வாதிபட்சத்தில் அசல்த்தீர்ப்புச் செய்யப்பட்டது. ௫-ம் பிரதிவாதி செய்த அப்பீலில் வாதிவழக்கு அப்பீல்க்கோர்ட்டாரால் தள்ளப்பட்டது. ௫-ம் பிரதிவாதியைத்தவிர மற்றப் பிரதிவாதிகள் அப்பீல் செய்யாவிட்டபோதிலும், விவாதபத்திரம் அகாத கற்பிதமென்று ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் அதின் தொகைக்கு அப்பீல்

செய்யாத பிரதிவாதிகளைக்கூட உத்தரவாதப்படுத்தக்கூடாதென்று அப்பீல்க்கோர்ட்டார் கொண்ட அபிப்பிராயம் சரியானதென்று சதர்க்கோர்ட்டார் அவர்களால் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௬ ௵)-நம்-௧எ௮-௧௮௬0௵)-ப-௩௨.)

௪. வாதிவழக்குக்கு ஆதாரமான பத்திரம் சந்தேஹாஸ்பதமானதென்று கோர்ட்டாருக்கு அபிப்பிராயமாகிறபட்சத்தில் எதிர் வழக்காடாமல் இருந்துவிட்ட பிரதிவாதிகளைக்கூட அந்தப் பத்திரத்தின் தொகைக்குப் பாதியப்படுத்தித் தீர்ப்புச்செய்யக்கூடாது. (௧௮௬0௵)-நம்-௧௮-ப-௧௧௪.)

௫. ஒரு பத்திரம் கபடமாய்ப் பிறந்ததாக ருஜூவானால் அது முத்திரைக்காகிதத்தின்மேல் எழுதப்பட்டு ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருந்தாலுங்கூட அந்தப்பத்திரத்தைக் கோர்ட்டார் ஊர்ஜிதப்படுத்தக்கூடாது. (௧௮௬0௵)-ப-௨௫௫.)

௬. பிரதிவாதியை ௩-வது மனுஷன் மோசஞ்செய்தான் என்கிற காரணத்தினால் வாதி வழக்குக்குத் தோஷாரோபணம் செய்யக்கூடாது. (௧௮௫௮௵)-நம்-௧௫௫-௧௮௫௬௵)-ப-௨௬.)

எ. எந்த மனுஷனை மோசஞ்செய்வதற்காக வாதியின் வழக்கு வஞ்சகமாய்ச் செய்யப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறதோ அந்தமனுஷனே அந்தவழக்கில் சாட்சியாய் விசாரிக்கப்பட்டு வாதி வழக்கைப்பற்றி அவன் யாதொரு ஆட்சேபமுஞ் சொல்லாமல் இருந்தால், கோர்ட்டார் அந்த வியாஜியத்தைப்பற்றி ஆட்சேபிக்கக் கூடாது. அந்த வியாஜியத்தில் உபயவாதிகளுக்கும் உண்டாயிருக்கிற வியவகார விஷயங்களைப்பற்றிமட்டும் கோர்ட்டார் விசாரணை செய்து தீர்மானம் செய்யவேண்டும். (௧௮௫௮௵)-நம்-௧௮௨-ப-௨௪௧.)

௮. வாதியின் பாகஸ்தனை ௩-ம் பிரதிவாதிக்குப் புதையல் அகப்பட்டு அதை அவன் மற்றொரு பாகஸ்தனை முதற்பிரதிவாதியிடத்திற் கொடுத்ததாகவும் அதில் தன்னுடைய அம்சங் கிடைக்கவேண்டுமென்றும் வாதி தொடர்ந்தான். வாதியின் தாவா முதலாவது பிரதிவாதியால் நிராகரிக்கப்பட்டது. வாதி பிரியாதிற்கண்ட சங்கதிகளை ௩-ம் பிரதிவாதி பூரணமா யொப்புக்கொண்டான். வாதியும் ௩-ம் பிரதிவாதியும் ஏகத்துவமாய்க்கூடித் துர்வியாஜியம் செய்திருப்பதாகப் பிரத்தியட்சமாய் வெளிப்பட்டபடியால் வாதி

யின் தாவாவை ஒப்புக்கொள்ளுகிற ௩-ம் பிரதிவாதியைக்கூடப் பாத்தியப்படுத்தக்கூடாதென்று வாதிவழக்கு ஸர்வ பிரதிகூலஞ் செய்யப்பட்டது. (௧௮௯0 ஹை-நம்-௧௨௪-ப-௧௯0)

காலநிர்ணயம் ௬௨-வது விதியைப்பார்க்க.

---

## யானை.

௧. யானையானது யாருடைய நிலத்தில் பிடிக்கப்பட்டதோ அவனுக்கு ஸ்வந்தமே அல்லாமல் அதை எவன் பிடித்தானோ அவனுக்கு அந்த யானை ஸ்வந்தமாகமாட்டாது. (௧௮௬௮ ஹை-நம்-௧௫௬-௧௮௫0 ஹை-ப-௧௭-௧௮௫௭ ஹை-நம்-௧௭௬-௧௮௫௮ ஹை-ப-௧௨௯.)

---

## யுத்தப்பிரமாணசட்டம்.

௧. யுத்தப்பிரமாணசட்டம் எந்த இடத்தில் பிரசுரஞ்செய்யப்படுகிறதோ அந்த இடத்தில் வேறே யாதொரு கோர்ட்டாருடைய அதிகாரமும் செல்லாது. அந்தச்சட்டம் ஊர்ஜிதமாயிருக்கிறகாலத்தில் அந்தச்சட்டப்படி தகுந்த அதிகாரம்பெற்ற அதிகாரியினால் நடத்தப்பட்ட செய்கைகளைப்பற்றிக் கோர்ட்டுகளில் வியாஜியம் வாங்கக்கூடாது. (௧௮0௭ ஹை-நம்-௧.)

---

## யூரோசியன்.

௧. ஒரு ஈரோப்பியனுக்கும் ஹிந்துமத ஸ்திரிக்கும் விவாஹம் இல்லாமல் பிறந்த புத்திரர்கள் தாயினுடைய மதாநுசாரிகளாக இருந்தால் அவர்கள் ஹிந்து தர்மசாஸ்திர விதிக்குட்பட்டவர்களே. தகப்பனுடைய மரணசாஸநமூலமாக அவர்களுக்குக் கிடைத்த ஸ்திதி பொதுவான ஸ்திதியாயிருக்கின்றது. அவர்களில் ஒருவன் இறந்துபோனால் ஷை ஸ்திதி மற்றச்சகோதரர்களைச்சேருமே அல்லாது இறந்தவனுடைய பத்நியைச் சேராது. (௧௮௬௯ ஹை-நம்-௯-௧௮௫௯ ஹை-நம்-௧௬௯-௧௮௫௮ ஹை-நம்-௧௩.)

௨. யூரோசியருக்குப் பிரத்தியேகமான நியாயப்பிரமாண சாஸ்திரம் இல்லை. அவர்களுடைய சாதாரண வழக்கங்களையாவது அல்லது வியாச்சியத்துக்கு வருகிறவர்களுடைய குடும்ப வழக்கங்களையாவது சாட்சிகளால் அறிந்துகொண்டு அந்தப்பிரகாரம் தீர்மானஞ் செய்யவேண்டும். (௧௮௫௮ ஹை-நம்-௧௮௭-௧௮௫௯ ஹை-ப-௧௧௫.)

௩. நிஸ்ஸங்கலிதமான சுத்த ஹிந்துக்கள் வஸ்திரம் நடைபாவனை முதலான விஷயங்களில் யூரோசியர்களுடைய ஜாதி ஒழுங்குகளை ஆசரித்தாலுங்கூடப் பாத்தியக் கிரமவிஷயங்களில் அவர்கள் ஹிந்து சாஸ்திரவிதிக்கு உட்பட்டவர்களே. (ஷை-நம்.)

---

## ராஜஸ்வதந்தரம்.

௧. ஜமீன்தாரிமுதலான பூஸ்திதிகள் ஒற்றிபெற்றவன் அநுபோகத்தில் இருக்கும்போது ஒற்றிவைத்தவனும் அவனுடைய பாத்தியஸ்தர்களும் இறந்துபோனால் ஒற்றித்தொகையைக்கொடுத்து ஷை நிலத்தை மீட்டுக்கொள்ள ராஜாக்களுக்குப் பாத்தியம் இல்லை. (க௮௫எ௵-நம் க0௩-க௩௬-க௮௬0௵-ப-உக௬.)

௨. ஒருவனுடைய சொத்து வேறொருவனுடைய அடைக்கலத்தில் இருக்கும்போது அந்தச சொத்துக்குப் பாத்தியஸ்தன் இறந்துபோனால் அந்தச் சொத்தின்மேல் ராஜாக்களுக்குப் பாத்தியம் இல்லை. (ஷை.)

௩. தாயாதிகள் முதலான பந்துக்களுடைய சம்மதம் இல்லாமல் ஒரு விதந்து பூஸ்திதியைப் பராதீனம் செய்யக்கூடாதென்று தர்ம சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருந்தபோதிலும், ராஜாங்கத்தார் ஷை விதந்துவுக்குப் பந்துவாயிராதபடியால் ஷை பராதீனத்தைப்பற்றி ஆட்சேபிக்கவும் அந்த ஸ்வத்துக்குப பாத்தியங்கொண்டாடவும ராஜாங்கத்தாருக்குச் சாஸ்திரப்படி அதிகாரம் இல்லை. (ஷை.)

௪. கன்னடதேசத்தில் தரிசு நிலங்களும் நிர்வம்சமாயிறந்துபோனவர்களுடைய ஸ்திதிகளும் கவர்ன்மென்டாருக்குப் பாத்தியமே தவிர வேறே நிலம் பாத்தியம இல்லை. (க௮௩க௵-நம்-௬.)

---

## ராஜிநாமா.

௧. கட்சிக்காரர்கள் வியாஜியவிஷயத்தைப்பற்றிச் சமாதானமாக யாதொரு கிரமமான ஏற்பாடுசெய்துகொண்டால், அதைக் கோர்ட்டார் தடுக்கக்கூடாது. கட்சிக்காரர்கள் ஒரு வியாஜியத்தைச் சமாதானமாய்த் தீர்த்துக்கொள்ள விரும்பினால் அந்த வியாஜியத்தில் சமாதானமில்லாமல் நடவடிக்கை நடப்பிக்கும்படி அவர்களைக் கோர்ட்டார் பலவந்தம் பண்ணக்கூடாது. (ச-பு-க௮௩௩௵-ஆகஸ்டுமீ௳ களவ.)

உ. ஒரு வியாஜியத்தில் வாதியும் சில பிரதிவாதிகளுமட்டும் ராஜியாய்ப்போகலாம். மற்றப் பிரதிவாதிகள் சம்பந்தப்பட்டவரையில் அந்த வியாஜியத்தைக் கோர்ட்டார் விசாரித்துத் தீர்மானம் செய்யலாம். (ச-பு-கஅஉஎ௵-ஜூலைமீ கOவ, கஅருக௵-ச-தி-ப-க.)

ங. கட்சிக்காரர்களாவது அவர்களுடைய வக்கீல்களாவது ராஜிநாமாவைக் கோர்ட்டில் கொடுத்து அது தங்களுடைய பூர்ணசம்மதத்துடன் பிறந்ததென்று தெரியப்படுத்திக்கொண்டால்மட்டும் அந்த ராஜிநாமாவைக் கோர்ட்டார் அங்கீகரித்துத் தாக்கல் செய்துகொள்ளலாம். (கஅஙஅ௵-நம்-ச.)

ச. கடனைப்பற்றிப் பிறக்கப்பட்ட ராஜிநாமாவானது கோர்ட்டாருடைய தீர்ப்புக்குச் சமானமாயிருப்பதால் அந்த ராஜிநாமா தாககலானபிற்பாடு ஷை கடனைப்பற்றிக் கோர்ட்டார் சந்தேஹிக்கக்கூடாது. (ச-பு-கஅருச௵-ஏப்பிரல்மீ கOவ.)

ரு. ஒரு வியாஜியத்தில் தீர்ப்பானபிற்பாடு அந்த வியாஜியத்தை வாதி தள்ளிக்கொள்ளக்கூடாது. ஆனால் தீர்ப்பானபிறகு கட்சிக்காரர்கள் ராஜிநாமா தாக்கல் செய்யலாம். (கஅருச௵-நம்-சஎ-ப-சாக.)

சா. எந்தக் கோர்ட்டில் வியாஜியம் நடக்கிறதோ அந்தக் கோர்ட்டில் ராஜிநாமா தாக்கலாகவேண்டும். (ச-பு-கஅசசா௵-செப்டெம்பர்மீ உவ.)

எ. கஅகசா௵-கஉ-வது சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட பஞ்சாயத்தார் முன்பாக நடக்கிறவழக்கில் கட்சிக்காரர்கள் ராஜிநாமா கொடுக்கலாம். (ச-பு-கஅஉஅ௵-பிப்பிரவரிமீ உஅவ.)

அ. நிறைவேற்றுங்காலத்தில் சந்தேஹிக்கும்படியான விதமாய் விவரமில்லாமல் எழுதப்பட்டிருக்கிற ராஜிநாமாவைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது. (ச-பு-கஅசங௵-ஜூன்மீ கஉவ.)

கூ. வியாஜியத்திற்குச் சம்பந்தப்படாத நாதநபாத்தியத்தைக் கண்டெழுதப்பட்டிருக்கிற ராஜிநாமாவைக் கோர்ட்டார் ஏற்றுக் கொள்ளக்கூடாது. (சதர் லெற்றர். கஅஙசா௵-மார்ச்சுமீ ஙகவ.)

கO. வியாஜியத்தில் கட்சிக்காரனுயிராதவனால் செய்துகொடுக்கப்பட்ட ராஜிநாமாவை ஏற்றுக்கொள்ளக்கூடாது. (கஅருக௵-ப-ககஎ.)

கக. கட்சிக்காரர்களால் செய்துகொள்ளப்பட்ட ராஜிநாமா நியாயவிரோதமாயிருப்பதாகப் பிரத்தியட்சமாய்த் தெரியவந்தால் கோர்ட்டார் அதை ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிடலாம். (ச-பு-கஅகூச ஞு-நவம்பர்மீ கஉஉ.)

கஉ. கவர்ன்மென்டுக்குத் தீர்வை செலுத்தவேண்டியதற்கும், நிலத்தைச் சிலகாலம் அநுபவிக்கவேண்டியதற்கும், ராஜிநாமாவில் நிபந்தனைகள் கண்டிருந்தால், அந்த நிபந்தனைகளை நிறைவேற்றுவது கோர்ட்டாருக்கு அசக்கியமானதால் அந்த நிபந்தனைகள் அடங்கிய ராஜிநாமாவைக் கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளக்கூடாது. (ச-பு-கஅகூரு ஞு-நவம்பர்மீ கசூஉ.)

கங. ஒரு வியாஜ்ஜியத்தில் ஸ்வத்தை அடையவேண்டிய வாதி ஒருவனாயிருக்க அவனை அல்லாமல் மற்றொரு வாதியினால் செய்துகொள்ளப்பட்ட ராஜிநாமா வியர்த்தமே. (கஅருகூ ஞு-நம்-அக-ப-கசுங.)

கச. ஒரு ராஜிநாமா கோர்ட்டில் தாக்கலான பிற்பாடு கட்சிக்காரர்களில் ஒருவன் புத்திக்குறைவினால் அதற்குத் தான் சம்மதித்ததாக ஆட்சேபித்தால் அந்த நிமித்தியத்தைக்கொண்டு கோர்ட்டார் ஷை ராஜிநாமாவை ரத்துச் செய்யக்கூடாது. (ச-பு-கஅசகூ ஞு-ஆகஸ்டுமீ உஎஉ.)

கரு. ஒரு ராஜிநாமா மோசமாய்ப் பிறந்ததாகத் தீர்க்கமாய் நிதரிசனமானால்மட்டும் அதை ரத்துச்செய்யலாமேதவிர கேவலம் சந்தேகத்தின்மேல் அதை ரத்துச்செய்யக்கூடாது. (கஅசச ஞு-நம்-அஎ.)

கசூ. கோர்ட்டில் தாக்கலான ராஜிநாமாவின் நிபந்தனைகளை வேறுபடுத்தவேண்டுமென்று உபயகட்சிக்காரர்களும் அபேட்சித்தாலுங்கூடக் கோர்ட்டாருடைய உத்தரவை முந்தி அவர்கள் பெற்றுக்கொள்ளாமல் ஷை நிபந்தனைகளை வேறுபடுத்தக்கூடாது. (ச-பு-கஅசகூ ஞு-பிப்பிரவரிமீ உகூஉ.)

கஎ. ஒரு ராஜிநாமாவின் தாற்பரியத்தைப்பற்றிக் கட்சிக்காரர்களுக்குள் விவாதம் உண்டானால் கோர்ட்டார் அவர்களை வரவழைத்து விசாரணைசெய்து அந்த ராஜிநாமாவினுடைய உண்மையான அர்த்தம் இன்னதென்று நிச்சயிக்கலாம். (ச-பு-கஅசஅ ஞு செப்டெம்பர்மீ கஅஉ)

க௯. நிறைவேற்றும்படி கேட்டுக்கொள்ளப்பட்ட ராஜிநாமாவில் சொத்தின்விவரமும் மதிப்பும் சொத்து இன்னார் வசத்தில் இருக்கிறதென்பதும் தெளிவாய்ச் சொல்லப்படாமல் இருந்தால் அந்த விஷயங்களைப்பற்றிக் கோர்ட்டார் ருஜுவிளங்கலாம். (ச-பு-க௮௲ச ௵-அக்டோபர்மீ உ௦ வ.)

கக. கோர்ட்டில் கிரமமாய்த் தாக்கலான ராஜிநாமாவை ரத்துச் செய்யவேண்டியதற்காக வியாஜியம் வந்திருக்கிறபட்சத்தில், அந்த ராஜிநாமாவை நிறைவேற்றும்படி கேட்டுக்கொள்ளுகிற கட்சிக்காரனிடத்தில் கோர்ட்டார் ஜாமீன்வாங்கிக்கொண்டு அந்த ராஜிநாமாவை நிறைவேற்றலாம். (ச-பு-க௮௲௦௵ அக்டோபர்மீ உச வ.)

உ௦. ஒரு வியாஜியத்தின் கட்சிக்காரர்களில் சிலரால்மட்டும் செய்துகொள்ளப்பட்ட ராஜிநாமாவிற் சேராத கட்சிக்காரன் அந்த விவாத ஸ்திதியைப்பற்றி நூதனவியாஜியம் செய்துகொள்ளலாம். (க௮௫க௵-நம்-௫௲-க௮௲௦௵-ப-க௦ச.)

உக. யாதொரு சட்டப்பிரகாரம் நியமிக்கப்படாத பஞ்சாயத்தார் முன்பாகக் கொடுக்கப்படுகிற ராஜிநாமா செல்லாது. ஆனால் அதில் சொல்லப்படுகிற சங்கதிகளைக் கட்சிக்காரர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதிகளாக எண்ணவேண்டும். (க௮௲௦௵-நம்-க௩ச-ப-க௲௮.)

உஉ. ராஜிநாமா செய்துகொண்ட கட்சிக்காரர்கள் அதனிபந்தனைப்பிரகாரம் நடக்கப் பாத்தியப்பட்டிருக்கிறார்கள். (க௮௫௮௵-நம்-கக௩-ப-உச௩.)

உ௩. சொத்து விவரம் இல்லாத முந்தின ராஜிநாமாவைப்பார்க்கிலும் சொத்து விவரங்கண்ட பிந்தின ராஜிநாமா உத்கிருஷ்டமாகவும் அநுஷ்டிக்கப்படவேண்டியதாகவும் இருக்கின்றது. (க௮௫க௵-நம்-ச௩௲.)

உச. ஒரு வியாஜியத்தில் வாதியும் முதற்பிரதிவாதியுமட்டும் ராஜிநாமா செய்துகொண்டபிற்பாடு அந்த ராஜிநாமாவை முதற்பிரதிவாதி ஆட்சேபித்தால், அந்த ராஜிநாமா உண்மையானதென்றும் உ-ம் பிரதிவாதியின் சம்மதத்தின்மேல் அது பிறந்ததாகவும் பூரணமாய் ருஜுவாகிறபட்சத்தில், அந்த ராஜிநாமாவினிபந்தனைப் பிர

காரம் அந்த வியாஜ்யத்தில் கோர்ட்டார் தீர்ப்புச்செய்யலாம். (௧௮௫௬௵-நம்-௬௯-ப-௧எ௯.)

உ௫. ஒருவன் கட்சிக்காரனாயிராத வியாஜ்யத்திற் பிறந்த ராஜிநாமாவினால் அவனுக்குப் பாதகம் உண்டாகமாட்டாது. (௧௮௬௧௵-நம்-௯-ப-௧௪௮.)

அநங்கீகார விபரீதம்-உ௧......... | சித்தாந்தமுந் தீர்ப்பும்-௪௮......
சாட்சியம்-௫-௯௮...............

இவைகளைப்பார்க்க.

---

## ருஜு.

சாட்சியத்தைப்பார்க்க.

---

## ரெஜிஸ்டர்.

௧. ரெஜிஸ்டர் செய்யப்பட்ட ஆதரவின் உண்மை கோர்ட்டாருக்குத் திருப்தியாகும்படி ஸ்தாபிக்கப்பட்டால்மட்டும் அந்த ஆதரவை ரெஜிஸ்டர் செய்யப்படாத ஆதரவைப்பார்க்கிலும் விசேஷமாக எண்ணலாம். (௧௮௫௬௵-நம-உஉ௮-௧௮௬௦௵-ப-எ௦.)

உ. ௧௮௪௩௵ ௧௰-வது ஆக்ட்டுப்படி ரெஜிஸ்டர் செய்யப்படாத ஒப்பிபத்திரமானது அதற்குப்பிற்பாடு பிறந்த கிரயசாஸநத்தினால் ரத்தாகமாட்டாது. (௧௮௫௦௵-நம்-௩௦)

௩. ௧௮௦உ௵ ௩௧-வது சட்டம ௧௯-வது பிரகரணப்படி ரெஜிஸ்டர் செய்யப்படாத இனாம் சன்னது எவ்வளவும் செல்லாது. அது ஒரு கோர்ட்டாரால ஸ்தாபிக்கப்பட்டிருந்தாலுங்கூட இதர கோர்ட்டார் அதை அபதார்த்தமென்றே நிர்ஷ்டம் செய்யவேண்டும். (௧௮௫௯௵-நம-௯௯.)

சாட்சியம்-௪௦-வது விதியைப்பார்க்க.

---

## லஞ்சம்.

௧. ஒரு கோர்ட்டில் நடக்கிற வியாஜியவிஷயத்திலாவது அல்லது தீர்மானிக்கப்பட்ட வியாஜியத்திலாவது அந்தக்கோர்ட்டி னியாயாதிபதி லஞ்சம்வாங்கினாலும், அல்லது அவருடைய உத்தியோக

பலத்தினால் அக்கிரமமான பிரயோஜனங்களைச் சம்பாதித்தாலும், கஅ௦உ௵ கூ-வது சட்டம் அ-வது பிரிவு உபயோகமேதவிர, அந்த நியாயாதிபதி ஒரு ராஜாவுக்குப் பட்டமாகிறவிஷயத்தில் வேண்டிய கிருஷிகளைச் செய்தால் அந்த விஷயத்துக்கு ஷை சட்டம் உபயுக்தம் அல்ல. (கஅகக௵-நம்-கக.)

| | |
|---|---|
| கடன்பத்திரம்-கக.............. | பஞ்சாயத்து-ச-க௦.............. |
| காரியஸ்தன்-எ.................... | மாநஷ்டம்-உ...................... |

இவைகளைப்பார்க்க.

---

## வக்கீல்கள்.

க. கவர்ன்மென்று வக்கீலைத்தவிர மற்றவக்கீல்கள் வகாலத்து தாக்கல் செய்யாமல் யாதொரு வியாஜியம் முதலான எந்த விஷயங்களிலாவது பேசக்கூடாது.

உ. தகுந்த அதிகாரம்பெற்ற வக்கீல் என்கிற சப்தத்துக்குக் கிரமமாய் நியமிக்கப்பட்ட வக்கீல் என்று அர்த்தமாகிறது. அந்த வக்கீலைத்தவிர முக்தியார்நாமாமூலமாய் வியாஜியம் நடப்பிக்கக்கூடாது. (கஅ௫அ௵-நம்-கச-பா அ௦.)

ங. ஒரு கட்சிக்காரன் ஒன்றுக்கொன்று சம்பந்தமான பல வியாஜியங்களில் ஒரேவக்கீலை நியமித்துக்கொண்டபோதிலும் ஒவ்வொரு வியாஜியத்திலும் அந்த வக்கீலுக்குத் தனித்தனியே வகாலத்துநாமா கொடுக்கவேண்டும்.

ச. ஒவ்வொரு வகாலத்துநாமாவும் கட்சிக்காரன்பெயரால் எழுதப்பட்டு ஒரு சிவில் அதிகாரியின் முன்பாக அதில் அந்தக்கட்சிக்காரன் கையெழுத்துவைத்து அந்த அதிகாரியினால் உறுதிப்படுத்தப்படவேண்டும்.

௫. கட்சிக்காரன் வியாதிமுதலான காரணங்களால் கோர்ட்டுக்கு வரக்கூடாமலிருக்கும்போது வகாலத்துநாமாவில் சாட்சி போட்டவர்கள் சிவில் அதிகாரிமுன்பாக ஆஜராகி அதைப்பற்றி ருஜுச் சொல்லவேண்டும். (ச-பு-கஅ௫அ௵ டிசம்பர்மீ கவ.)

கூ. வக்கீலின் பெயரை வகாலத்தில் எழுதப்படாமலிருந்தால் அந்த வகாலத்துநாமாவை யாதொரு அதிகாரியும் உறுதிப்படுத்தக்கூடாது. (ஷை.)

எ. வகாலத்துநாமாவை அங்கீகரித்துக்கொண்டதாக வக்கீலின் ஸ்வஹஸ்தலிகிதமாக அதின்மேல் எழுதியிருந்தால்மட்டும் அதைக் கோர்ட்டார் அங்கீகரித்துத் தாக்கல்செய்துகொள்ளலாம்.

அ. கட்சிக்காரன் ஒரு வக்கீலை நியமித்துக்கொண்டபிற்பாடு இன்னமும் அதிகவக்கீல்களை வைத்துக்கொள்ளவேண்டியிருந்தால் முந்தின வகாலத்துநாமாவுக்குப் பதிலாய் எல்லா வக்கீல்கள் பெயருக்கும் ஒரே வகாலத்துநாமா எழுதிக்கொடுக்கலாம். அல்லது அதிகமாய் நியமிக்கப்படுகிற வக்கீலவருக்கு அந்தக் கட்சிக்காரன் தனிமையில் ஒரு வகாலத்துநாமாவாவது எழுதிக்கொடுக்கலாம். (ச-பு-க௮௬க ஹ ஜூலை மீ உ௪ ௳.)

௯. ஒரு கட்சிக்காரன் தனக்காகப் பணம்வாங்கவேண்டியதற்காக ஒரு வக்கீலுக்கு வகாலத்துக் கொடுக்கவேண்டியிருந்தால் அந்த விவரத்தை வெளிப்படையாய்க்கண்டு வகாலத்துநாமாக் கொடுக்கவேண்டும். (ச-பு-க௮௬௬ ஹ ஜூன் மீ உ௫ ௳.)

க௦. ஒரு வியாஜியத்தில் ஒரு கட்சிக்காரன் இடத்தில் வகாலத்துப்பெற்ற வக்கீல் பிற்பாடு அதேவிஷயம் விசாரணைக்கு வருமானல் ஷை கட்சிக்காரனுடைய எதிரியிடத்திலும் ஷை வக்கீல் வகாலத்துநாமா பெற்றுக்கொள்ளத் தடையில்லை. (ச-பு-க௮௬௯ ஹ நவம்பர் மீ ௫ ௳.)

கக. ஒரு வியாஜியத்தில் ஒரு கட்சிக்காரனுக்காக ஒருவன் வக்கீலாயிருந்தபோதிலும் அந்த வியாஜியத் தீர்ப்பானபிற்பாடு நிறைவேற்றுகிறவிஷயத்தில் செய்யப்பட்ட உத்தரவின்மேல் அப்பீல் செய்யப்படுமானல் அந்த அப்பீலில் புதிதாய் வகாலத்துநாமா தாக்கல்செய்யாமல் அந்த வக்கீல் ஷை கட்சிக்காரனுக்காகப் பேசக்கூடாது. (ச-பு-க௮௯௦ ஹ ஆகஸ்டு மீ கஎ ௳.)

கஉ. பிரதிவாதியினுடைய வக்கீல் உத்தரவு வாங்கிக்கொண்டு ஆஜர் இல்லாமல் இருக்குங்காலத்தில் வியாச்சியத்தை ஒரு கட்சியாய்க் கோர்ட்டார் தீர்மானிக்கக்கூடாது. (க௮௬க ஹ-ம்-ச௫-ப-கஉஎ.)

க௩. முக்கிய காரணங்கள் இருக்குமானல் ஒரு கட்சிக்காரனுடைய வக்கீல் வேறொரு வக்கீலினுடைய ஸஹாயத்தைப் பெற்றுக்கொள்ளும்படி கோர்ட்டார் உத்தரவுகொடுக்கலாம். அப்படிப்பட்ட விஷயத்தில் கோர்ட்டாருடைய யுக்தப்படி ஷை உ-வக்கீல்

களும் பேசவேண்டியவர்களே தவிரக் கட்சிக்காரனுடைய வக்கீ லுக்குப்பதிலாய் மற்றொரு வக்கீல்மட்டும் பேசக்கூடாது.

௧௪. சதர்க்கோர்ட்டு வக்கீல்களுக்குக் கீழ்க்கோர்ட்டில் பேசப் பாத்தியமில்லை. கீழ்க்கோர்ட்டு ஜட்ஜ் உத்தரவு கொடுத்தால்மட்டும் அவர்கள் அந்தக்கோர்ட்டில் பேசலாம். (ச-பு-௧௮௫௬ௗ மார்ச் ௬ மீ ௩௨)

௧௫. சிவில்க்கோர்ட்டு வக்கீல்கள் அந்தக்கோர்ட்டுக்குக் கீழ்ப் பட்ட சபார்டினேட் ஜட்ஜ் பிரின்சிப்பால் சதரமீன் சதரமீன் இவர் களுடைய கோர்ட்டுகளிலும் பேசலாம். (ச-பு-௧௮௪௩ௗ ஆக ஸ்டு மீ உ௧௨.)

௧௬. ஒரு வியாஜியத்தில் ஒரு கட்சிக்காரனால் நியமிக்கப்பட்ட வக்கீலினுடைய கடமை அந்த வியாஜியந் தீர்ப்பானவுடனே முடி ந்துபோய்விடும். பிற்பாடு அந்தக் கட்சிக்காரனுடைய உத்தரவு இல் லாமல் புநர் விமரிசைக்காக மனுக்கொடுத்துப் பேசவேண்டியது அந்த வக்கீலின் கடமையல்ல. ஆனால் அந்த வக்கீலுக்கு இஷ்ட மிருந்தால் நூதனமான வகாலத்துநாமா இல்லாமலே அவர் பேச லாம். புநர் விமர்சைக்காக யாதொரு முயற்சிசெய்த வக்கீல் அந்த வியாஜியத்தின் விசாரணைக்காலத்திலும் கூடஇருக்கவேண்டியது. அவருடைய கடமையாயிருக்கின்றது.

௧௭. ஆறுவாரத்துக்கு அதிகமாக யாதொரு வக்கீல் உத்தரவு பெற்றுக்கொண்டால் அவர் இல்லாதகாலத்தில் விசாரணையாகத் தக்க வியாஜியங்களில் பேசவேண்டியதற்காகக் கட்சிக்காரர்கள் வேறே வக்கில்களை நியமித்துக்கொள்ளும்படி அந்தவக்கீல் ஜாக்கி ரதைச் செய்யவேண்டும்.

௧௮. வியாஜியங்களின் அசல் ஆடிக்குகளை வக்கீல்கள் வாசித் துப்பார்க்கும்படி கோர்ட்டார் இடங்கொடுக்கக்கூடாது. ஆனால் வேண்டிய தஸ்தவேஜுகளுக்கு அவர்கள் நகல்பெற்றுக்கொள்ள லாம்.

௧௯. விசாரணைக்காலத்தில் வக்கீல் பேசவேண்டிய விஷயங்களை யெல்லாம் அவர் கோர்ட்டாருக்குச் சொல்லவேண்டுமேயல்லாமல் எதிர்கட்சி வக்கீலுக்குச் சொல்லக்கூடாது.

௨௦. உபயவாதிகளுக்கும் வக்கீல்கள் இருக்கிறபட்சத்தில் வாதி அல்லது அப்பீல் வாதியினுடைய வக்கீல் முந்திக் கட்சிப்பேசவே

ண்டும். அசல் பிரதிவாதி அல்லது அப்பீல் பிரதிவாதியின் வக்கீல் அதற்கு மறுமொழி சொல்லவேண்டும். பிற்பாடு அசல்வாதி அல்லது அப்பீல்வாதியின் வக்கீல் அதற்குப் பிரதி உத்தரஞ் சொல்லலாம்.

௨௧. உபயவாதிகளுடைய வக்கீல்களும் பேசினபிற்பாடு கோர்ட்டாரால் கேட்கப்பட்ட கேள்விகளுக்குமட்டும் அவர்கள் உத்தரவு சொல்லவேண்டியதேதவிர வேறே யாதொரு வார்த்தைகளையும் பேசக்கூடாது. தீர்ப்பானபிற்பாடு எந்த நிமித்தத்தைப்பற்றியும் தீர்ப்புச்செய்யப்பட்ட விஷயத்தைப்பற்றி ஒரு வக்கீலும் பேசக்கூடாது.

௨௨. வக்கீலை நியமித்துக்கொண்ட கட்சிக்காரன் அந்த வகாலத்தைத் தள்ளிக்கொள்ளாதவரையில் அவன் ஸ்வயமாய்க் கோர்ட்டில் பேசக்கூடாது. (௪-பு-௧௮௨௧௵ மார்ச்சு௴ ௧௫ௗ.)

௨௩. கட்சிக்காரனுக்கு இஷ்டம் இல்லாதபோது வக்கீல் வேண்டியதில்லையென்று தள்ளிக்கொள்ளலாம். அப்படித் தள்ளிக்கொள்வதற்குக் கட்சிக்காரன் காரணம் சொல்லவேண்டியதில்லை. (௪-பு-௧௮௪௩௵ நவம்பர்௴ ௧௩ௗ.)

௨௪. வகாலத்துக்கொடுத்த கட்சிக்காரன் இறந்துபோனால் உடனே அந்த வகாலத்து ரத்தாய்விடும். (௪-பு-௧௮0௮௵ மார்ச்சு௴ ௨௨ௗ.)

௨௫. சட்டத்தில் விதிக்கப்பட்ட கிரமமான பீசுக்குமேல் அதிகப்பீசு கொடுக்கும்படி கோர்ட்டார் உத்தரவு கொடுக்கக்கூடாது. ஆனால் அந்த அதிகப்பீசைப்பற்றிக் கட்சிக்காரனுக்கும் வக்கீலுக்கும் உடன்படிக்கை நடந்திருந்தால் அதைப்பற்றி வக்கீல் கிரமவியாஜியம் செய்துகொள்ளலாம். (௪தர்-லெற்றர்-௧௮௪௭௵-ஜநுவரி௴ ௭ௗ. ௪-பு-௧௮௪௮௵ நவம்பர்௴ ௨0ௗ.)

௨௬. வக்கீலின் பீசைப்பற்றிக் கட்சிக்காரன் செய்யும் உடன்படிக்கை லிகிதரூபமாயிருக்கவேண்டியது அகத்தியம் அல்ல. (௧௮௯0௵-நம்-௧0௭-ப-௧௮௯.)

௨௭. எதிர்கட்சிக்காரனுடைய விவரபத்திரிகைகள் கொடுக்கப்படுகிறதற்குமுன் வாதி தன்னுடைய வியாஜியத்தைத் தள்ளிக்கொண்டாலுங்கூட வாதியினுடைய விவரபத்திரிகைகளைத் தாக்கல்

செய்த வக்கீலுக்குச் சட்டப்படி பாதிப்பீசு கிடைக்கவேண்டும். (௧௮௫௮௵-நம்-௧௫௪-௧௮௫௬௵-ப-உ௪.)

உ௮. வக்கீலின் அசட்டையினாலே கட்சிக்காரனுக்கு நேரிட்ட நஷ்டத்தைக்குறித்து அவன் கிரமவழக்குச் செய்துகொள்ளலாம். (சதர்-லெற்றர்-௧௮௫௦௵ மார்ச்சுமீ௳ ௪௨.)

உ௯. வக்கீல்களின் பெரிதான அஜாக்கிரதைக்காக அவர்கள்மேல் கட்சிக்காரன் வியாஜியஞ்செய்யலாம். (௧௮௩௭௵ - நம் - ௩-ப-௧௫௦.)

௩௦. வியாஜியங்களை நடப்பிக்கமாட்டேனென்று வக்கீல்கள் நிராகரித்ததைப்பற்றியும் அவர்கள் மனப்பூர்வமாய்க் காலதாமசஞ் செய்ததைப்பற்றியும் துர் அபிப்பிராயஞ்சொல்லி மோசஞ்செய்த தைப்பற்றியும் கட்சிக்காரர்கள் மனுமூலமாகக் கோர்ட்டாருக்குத் தெரியப்படுத்திக்கொள்ளலாம். ஆனால் கிரமவியாஜியஞ் செய்யாதவரையில் அவர்களுக்கு நஷ்டம் கிடைக்கமாட்டாது. (௪-பு-௧௮௪௦௵ நவம்பர்மீ௳ ௧௬௨.)

௩௧. ௧௮௧௬௵-௧௪-வது சட்டம் ௧௦-வது பிரிவு முதலாவது உட்பிரிவுப்படி சதர்க்கோர்ட்டாருக்குத் தெரியப்படுத்தாமல் வக்கிலை அந்த உத்தியோகத்தில் இருந்து சிவில் ஜட்ஜு தள்ளிவிடலாம். (௪-பு-௧௮௫௧௵-மார்ச்சுமீ௳ ௧௨௨.)

௩௨. தாழ்ந்த கோர்ட்டாரால் தள்ளப்பட்ட வக்கில்கள் செய்து கொள்ளும் அப்பீல்கள் சிவில் ஜட்ஜ் மூலமாக அனுப்பப்படவேண்டும். கோர்ட்டில் பிரசித்தமாக யாதொரு விசாரணையும் இல்லாமல் சதர்க்கோர்ட்டார் அந்த அப்பீல்களின்மேல் கிரமமான உத்தரவு செய்வார்கள். (௪-பு-௧௮௫௮௵ ஜூன்மீ௳ ௬௨.)

௩௩. பாப்பர் வாதிகூட வக்கீலுக்குத் தகுந்த முத்திரைக்காகிதத்தின்மேல் வகாலத்துநாமாக் கொடுக்கவேண்டியது அவசரம். வகாலத்துநாமா பெறாத வக்கீலுக்கு ௧௮௧௬௵ ௧௪-வது சட்டம் உ௫-வது பிரிவுப்படி பீசு கிடைக்கமாட்டாது. (௧௮௫௨௵-நம்-௧௨.)

௩௪. ஜீவநாம்ச வியாஜியங்களில் வாதி கேட்கப்பட்ட ஒரு வருஷத்திய ஜீவநாம்சத்தின்மேல் வக்கீல்பீசு நிஷ்கர்ஷை செய்யவேண்டும். (௧௮௫௧௵-நம்-௮௧.)

௩௫. ௧௮௧௮௵ ௭-வது சட்டப்படி அபிப்பிராயமட்டுங் கொடுத்த வக்கீலுக்கு, ௧௮௧௬௵ ௧௪-வது சட்டம் உ௦-வது பிரிவிற்

கண்ட பிரதிபலன்மட்டும் கிடைக்குமேதவிர அதற்குமேல் அதிகத் தொகை கிடைக்கமாட்டாது. (௧௮௫௨௵-நம்-௧௨.)

௯௬. ௧௮௪௯௵ ௧-வது ஆக்ட்டு உண்டாகிறதற்குமுன் பீசைப் பற்றி வக்கீலும் கட்சிக்காரனும் அந்தரங்கத்தில் ஏற்பாடு செய்து கொள்ளக்கூடாதானபடியால் அந்த ஏற்பாட்டின் ஆதாரத்தினால் வக்கீல் செய்யும் வியாஜியம் செல்லாது. (௧௮௫௨௵-நம்-௧௨.)

௯௭. பிரதிவாதி செய்யவேண்டியிருந்த சில வியாச்சியங்களின் செலவுகளுக்காக அவன் தன்னிடத்தில் கடன்வாங்கினதாகவும் அந்தத் தொகையும் வட்டியும் கிடைக்கவேண்டுமென்றும் வாதி வழக்கிட்டான். விவாத பத்திரங் கற்பனையென்று பிரதிவாதியால் ஆட்சேபிக்கப்பட்டது. வாதியின் மைத்துனனுடைய கோர்ட்டு வக்கீல் முன்பாக, ஷை பத்திரம் பிறந்ததாகவும் உடனே வியாச்சியங்கள் செய்யவேண்டியதற்காக ஷை வக்கீலுக்குப் பிரதிவாதி வகாலத்து நாமா கொடுத்ததாகவும் ருஜுவானதுந்தவிர அந்த வியாஜியங்களில் பிரதிவாதிக்குக் கிடைக்கும்படியிருப்பாகிற தொகையைக்கொண்டு வாதியின் கடனைப் பிரதிவாதி கொடுக்கிறதென்றும் இனிமேலும் பிரதிவாதி வேறே வியாஜியங்கள் செய்யவேண்டியிருந்தால் அதற்காகவும் வாதியிடத்தில் அவன் கடன்வாங்கிக்கொண்டு அந்த வியாஜியங்களையும் வாதிமூலமாகவே செய்கிறதென்றும் விவாத பத்திரத்தில் நிபந்தனை கண்டெழுதப்பட்டிருந்தது. வாதியின் மைத்துனனை ஷை வக்கீலுக்கு சஹாயஞ்செய்யவேண்டியதற்காகப் பிரதிவாதிக்கு வாதி மேலேகண்டபடி கடன்கொடுத்ததாகப் பிரகாசமானபடியாலும் கடன்கொடுக்கிறவனும் கோர்ட்டு வக்கீலும் சேர்ந்து வியாஜியக்காரர்களுக்கு உதவிசெய்வது இங்கிலீஷ் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட மெயின்டினான்ஸ் என்கிற வியாஜிய ஸஹாய தோஷத்துக்குட்பட்டதானதாலும் வாதிவழக்குச்செல்லாதென்று தள்ளப்பட்டது. (௧௮௫௬௵-நம்-௧௨௯.)

௯௮. ஒரு தினத்தில் விசாரணைக்காகக் குறிக்கப்பட்ட வியாஜியங்களில் பாரிஸ்டர்கள் அட்டார்னிகள் சம்பந்தப்பட்ட விஷயங்களை ஆரம்பத்திலும் அதற்குப்பிற்பாடு வக்கீல்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் அதற்குப்பிற்பாடு வக்கீல்கள் இல்லாமல்

கட்சிக்காரர்கள் ஸ்வயமே சம்பந்தப்பட்ட விஷயங்களையும் விசாரணை செய்யவேண்டும். ஆனால் அந்தத்தினத்துக்கு முன்னமே விசாரணையாகாமல் நிறுத்தப்பட்டிருக்கிற பியாஜியங்கள் இருந்தால் அவைகளை மற்றவேலை துவக்குகிறதற்குமுன் விசாரிக்கவேண்டும்.

௩௯. தாழ்ந்த கோர்ட்டில் பேசுகிற சதர்க்கோர்ட்டு வக்கீல் தேசபாஷை தெரிந்தவராகவும் எதிர்கட்சி வக்கீல் இங்கிலீஷ் தெரியாதவராகவும் இருந்தால் அந்தச் சதர்க்கோர்ட்டு வக்கீல் கோர்ட்டாருடைய பகிரங்கமான உத்தரவில்லாமல் இங்கிலீஷ்பாஷையில் பேசக்கூடாது. (ச-பு-க௮௫௮௵-ஏப்பிரல்மீ உகவ.)

௪௦. கீழ்க்கோர்ட்டு நியாயாதிபதியின் ஸ்வபாஷை இங்கிலீஷ் பாஷையாயிருந்தால் அந்தப்பாஷையில் அந்தக்கோர்ட்டார் இடத்தில் பாரிஸ்டர்களும் அட்டார்னிகளும் பேசலாம். எதிர்கட்சி வக்கீல் இங்கிலீஷ் தெரியாதவராயிருந்தால் அவருக்கு ஷை இங்கிலீஷ் நியாயவாதத்தை வியாக்கியானஞ்செய்யும்படி நியாயாதிபதி திட்டம் செய்யவேண்டும். (ச-பு-க௮௫௮௵ ஜூலைமீ உஉவ.)

௪க. வக்கீல்கள் அவர்களுடைய கட்சிக்காரர்கள் பட்சமாக வாக்குதாட்டியாய்ப் பேசினால் அவர்கள் அப்படிப்பேசக்கூடாதென்று கோர்ட்டார் அநியாயமாக அவர்களைக் கண்டிக்கக்கூடாது. (ச-பு-க௮௬கக௵ நவம்பர்மீ ௪வ.)

௪உ. வக்கீல்கள் தகுந்த யோக்கியர்களைத் தங்கள் குமாஸ்தாக்களாக நியமித்துக்கொண்டு அந்தக்குமாஸ்தாக்கள் கட்சிக்காரர்களிடத்தில் பணம் பறிக்காதபடி வக்கீல்கள் அவர்களாற் கூடிய உபாயங்களைச் செய்யவேண்டும்.

௪௩. வக்கீலின் குமாஸ்தா எந்த நிமித்தத்தைப்பற்றியும் கோர்ட்டைத்தவிர வேறே எந்த அறையிலும் நுழையக்கூடாது. அந்தக் குமாஸ்தா கோர்ட்டில் வக்கீலினுடைய மேஜைக்குச் சமீபமாகவும் நெருங்கிவரக்கூடாது. ஆனால் வக்கீல் கூப்பிட்டாலும் அல்லது வக்கீல் இடத்தில் தஸ்தாவேஜுகள் கொடுக்கவேண்டியிருந்தாலும் அப்போதுமட்டும் ஷை குமாஸ்தா வக்கீலிடத்தில் வரலாம்.

௪௪. பிசுக்காக வியாச்சியஞ்செய்த வக்கீல் அந்தப்பிசு கிடைக்க

வேண்டியதை ருஜூப்படுத்தவேண்டுமேதவிர அந்தப்பீசு செல்லாய்விட்டதாகப் பிரதிவாதி ருஜூப்பிக்கத் தப்பிப்போனதைக்கொண்டு ஷை வக்கீல் கட்சிக்கு யாதொருசாதகமும் உண்டாகமாட்டாது. (க௮௫௯ஹு-ச-தீ-ப-௪௩.)

| | |
|---|---|
| கட்சி-௫ | செலவு-௯-௧௨-௧௩-௧௪-௧௫-௧௬-௧௭-௧௮ |
| கவர்ன்மென்று வக்கீல்-௩ | பாப்பர்-௮ |
| சாம்பர்ட்டி-௫ | புநர்விமரிசை-௪ |

இவைகளைப்பார்க்க.

## வடகலை.

ஆலயம் ௪-வது விதியைப்பார்க்க.

## வட்டி.

க. ஒருவன் ஒற்றிவாங்கி அநுபவிக்கிற ஸ்வத்தின் வருமானம் கிரமமான வட்டிக்குக் குறைவாயிருந்தால் அந்த வருமானத்தில் அசல்த்தொகையைக் கழிக்கக்கூடாது. வட்டிக்குப்பதிலாய் நிலத்தின் வருமானத்தை அநுபவிக்கிறவன் அந்த வருமானம் கிரமமானவட்டிக்குக் குறைந்திருந்தாலுங்கூட, அந்த வருமானத்துக்கு மேல் அதிகவட்டி கிடைக்கவேண்டுமென்று தொடரக்கூடாது. (க௮௭ஹு-நம்-௯௦.)

உ. பத்திரத்தின்தொகையைக்கொடுக்கும்படி பிரதிவாதியை வாதி கேட்கவில்லை என்கிறநிமித்தியத்தினால் பத்திரத்திற்கண்ட வட்டியை நீக்கித் தீர்ப்புச்செய்வது நிஷ்கிரமம். (க௮௪௮ஹு-நம்-௪௪.)

௩. பத்திரத்தில் வட்டிகாணாமல் இருந்தபோதிலும், க௮௩௯ஹு ௩௨-வது ஆக்ட்டுப்படி வட்டி கொடுக்கும்படியாவது அல்லது வட்டியைத் தள்ளியாவது கோர்ட்டார் யுக்தப்பிரகாரம் தீர்ப்புச்செய்யலாம். (க௮௫கஹு-நம்-௮௩-க௮௫உஹு-நம்-க.)

௪. வட்டிசேர்ந்து அசலானதொகைக்குப் புதுப்பத்திரம் பிறந்திருந்தால் அந்தத்தொகைக்கு வட்டி கிடைக்கவேண்டியதுதான்.

(௧௮௨௪௵-நம்-௨ - ௧௮௫௨௵-நம்-௧ - ௧௮௫௩௵ - நம்-௫௩ - ௧௮௯௦௵-நம்-௭௧௫-௧௮௬௧௵-ப-௯௭.)

௫. வாதி பிரியாதில் வட்டிகேட்காமலே பிசகாய் விட்டுவிட்டான். பிரியாதின் தலைக்காகிதக்கிரயம் அசலுக்கும் வட்டிக்கும் சரிக்கட்டியிருந்ததால் வாதிக்கு வட்டியும் கிடைக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௩௵-நம்-௯௦)

௬. அ-என்பவன் இ-என்பவனுக்குக் கொடுக்கவேண்டியகடனை உ-என்பவனுடைய தடையினால் கொடுக்கத் தாமசப்பட்டபடியால் உ-என்பவன் இ-என்பவனுக்கு வட்டி கொடுக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. (௧௮௨௫௵-நம்-௮.)

௭. வட்டிக்குவட்டி கொடுக்கும்படி தீர்மானிக்கக் கூடாது. (௧௮௫௮௵-நம்-௬௮.)

௮. வட்டிகண்ட பத்திரத்திற்காகச் செலுத்தப்படும் தொகைகள், வரவேண்டிய வட்டிக்குமேல் அதிகப்படாமல் இருந்தால், அந்தத் தொகைகளை வட்டிக்காக வரவுவைக்கவேண்டுமே அல்லாமல் அசலுக்காக வரவுவைக்கக்கூடாது. ஆனால் பத்திரத்தில் அசலுக்காகவே வரவுவைக்கிறதென்று நிபந்தனை கண்டிருந்தால் அந்தப்படி அநுஷ்டானம் செய்யவேண்டும். (௧௮௨௮௵-நம்-௨-௧௮௪௮௵-நம்-௧௮.)

௯. வட்டிசெல்லாமல் பாக்கியிருந்தால்மட்டும் அசலுக்கு மேற்பட்ட வட்டி கொடுக்கும்படி தீர்ப்புச்செய்யக்கூடாது. ஆனால் வட்டிக்காகத் தொகை செல்லாயிருந்தால் அந்தச் செல்லானதொகைக்குமேல் அதிகமாக அசலுக்குச் சரியானவட்டி கொடுக்கும்படி தீர்மானிக்கலாம். (௧௮௪௮௵-நம்-௧௮.)

௧௦. வியாஜியாரம்பகாலம்வரையில் தனது திருணத்துக்குமேல் வட்டி கொடுக்கக்கூடாதென்றும், வியாஜியத்தேதிக்குப் பிற்பாடு அசலுக்குமட்டும் வட்டி கொடுக்கும்படியாகவும் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௮௵-நம்-௧௭௨.)

௧௧. அ-என்பவன் செய்த வியாஜிய நிமித்தம் இ-என்பவன் உ-என்பவனுக்குக் கொடுக்கவேண்டியகடன் செலுத்தப்படாமல் தாமசப்பட்டபோதிலும் அப்படித் தாமசப்பட்டகாலத்துக்குள்ள வட்டிக்கு அ-என்பவனைப் பாத்தியப்படுத்தக்கூடாது. (௧௮௫௮௵-ப-௯௭.)

கஉ. தனது விகுணத்திற்குமேல் வட்டி கொடுக்கக்கூடாதென்கிற விதி கூட்டுவியாபாரத்தில் நேரிட்ட கடன்களுக்குக்கூட உபயோகமானதுதான். (க௮ரு௦ ஷூ-நம்-ச௦.)

கங. அநுபோக ஒற்றிக்காரனுக்குக் கிடைக்கப்பட்ட வருமானம் பத்திரத்திற்கண்ட கிரமமான வட்டிக்குக் குறைவாயிருந்தால் அந்த வருமானத்தை வட்டிக்காகமட்டும் வரவுவைக்கவேண்டும். அந்த வருமானத்துக்கு எதிர்வட்டியும் இல்லை. கிரமமானவட்டிக்குமேல் அதிகவருமானம் ஒற்றிக்காரனுக்குக் கிடைத்தால்மட்டும் அதை அசலுக்காகவும் வரவுவைக்கலாம். (க௮சஎ ஷூ-நம்-கூக.)

கச. வாதி ஒருதீர்ப்பைக் கிரயம்வாங்கி அதை நிறைவேற்றும்படி. விண்ணப்பம்பண்ணிக்கொண்டான். அந்தத்தீர்ப்பின்தொகை முன்னமே சென்றுபோனதாகப் பிரதிவாதிகள்சொன்ன ஆட்சேபம் பொய்யானதென்று நிஷித்தம் செய்யப்பட்டது. பிரதிவாதிகளுடைய துராட்சேபனையினால் நேரிட்ட காலதாமசத்திற்கு வட்டி கிடைக்கவேண்டுமென்று வாதி வியாஜியம்செய்தான். வாதி எந்தத்தீர்ப்பைக் கிரயம்வாங்கினாரோ அந்தத்தீர்ப்பில் வட்டிகாணுமல் இருந்தபோதிலும் பிரதிவாதிகளுடைய விருதா ஆட்சேபனையினால் தீர்ப்பு நிறைவேறத் தாமசப்பட்டகாலத்திற்கு அவர்கள் வாதிக்கு வட்டி கொடுக்கும்படி. நிர்மானிக்கப்பட்டது. (க௮கூ௦ ஷூ-நம்-ருங-ப-க௮ங.)

கரு. கோர்ட்டார் யுக்தப்படி வட்டி கொடுக்கும்படி தீர்ப்புச் செய்யவும் அல்லது வட்டியைத் தள்ளிவிடவும் அவர்களுக்கு அதிகாரம் உண்டாயிருப்பதால் அந்தவிஷயத்தில் ஒரு கோர்ட்டார் செய்த தீர்மானத்தை விசேஷ அப்பீலில் மாற்றக்கூடாது. (க௮கூ௦ ஷூ-நம்-கஉ௦-ப-உஉ௮.)

கசு. மிராசுதார்களுக்குக் கிடைக்கவேண்டிய வாரம் பகுதிமுதலான வருமானங்களின் பாக்கிக்கு வட்டி கிடைக்கவேண்டியது நியாயந்தான். (க௮சகூ ஷூ-நம்-க.)

கஎ. பத்திரத்திற்கண்ட குறைவானவட்டி கெடுவின்காலம்வரையில்மாத்திரம் உபயோகமானதால், கெடுவில் வாதிக்குப் பிரதிவாதி தொகை செலுத்தத்தப்பிப்போகிறபட்சத்தில், வழக்கப்படி கிரமமானவட்டி வாதிக்குக் கிடைக்கவேண்டியது நியாயம். (க௮கூக ஷூ-நம்-கூ-ப-கஙச.)

கஅ. வட்டியைப்பற்றி உபயவாதிகளும் ஏற்பாடுசெய்துகொள்ளாமல் இருந்தபோதிலும் கஅருரு௵ உஅ-வது ஆக்ட்டு உ-வது பிரிவுப்படி வாதிக்குப் பிரதிவாதி வட்டி கொடுக்கும்படி கோட்டார் தீர்மானம்செய்யலாம். (கஅருகூ௵-நம்-அக-ப-ககூங.)

ஜீவநாம்சம் ச-வது விதியைப்பார்க்க.

---

## வலங்கை இடங்கை.

ஜாதி க-வது விதியைப்பார்க்க.

---

## வழக்கு.

பிரியாதைப்பார்க்க.

---

## வழிப்பாதை.

க. நடக்கிற வழிப்பாதையை அடைத்தவன்மேல் அதனால் அசௌக்கியத்தை அடைந்தவன் வியாஜியம் செய்யலாம். (கஅருஅ௵-ப-கருரு.)

உ. கூ0-வருஷகாலம் சகலஜனங்களுக்கும் வழிப்பாதையாக உபயோகப்படுகிறநிலம் தனக்குப் பூர்வீகமென்று எவனாவது வியாஜியம்செய்தால் செல்லாது. (கஅருசா௵-நம்-கஙங-ப-உகூஉ.)

ங. ஒருவன் சங்கீதமேளவாத்திய கோலாஹலனாய், சிஷியகோஷ்டிசமேதனாய், வாகனாரூடனாய்த் தெருவீதியில் போவதற்கு யாதொரு ஆடங்கம் இல்லை. அவன் சில வருஷகாலம் ஒரு தெருவீதி வழியாய்ப் போகாவிட்டபோதிலும் அவனுக்கு இஷ்டமானபோது நிர்விக்நமாய் அவன் அந்தவீதிவழியாய்ச் சாரிபோகலாம். (கஅருஎ௵-நம்-கசக.)

ச. பொதுவான சந்தின் பாத்தியத்தை ஸ்தாபித்துக்கொள்ள வேண்டியதற்காக நிராடங்கமாக யாதொருவன் வியாஜியம் கொண்டுவரலாம். (ஷை.)

---

## வளர்ப்புப்புத்திரன்.

பாத்தியம் கஎ-வது விதியைப்பார்க்க.

---

## வாதம்.

கூட்சியைப்பார்க்க.

---

## வாய்க்கால்.

௧. பிரதிவாதியின் வாய்க்கால் மண்ணை அவன் வாதி வாய்க்காலில் போடாதபடி தடைசெய்யவேண்டுமென்று வாதி வழக்கிட்டான். தன்னுடைய வாய்க்கால் ஓரமாக வாதி வாய்க்கால் வெட்டியிருப்பதால் அவனுடைய வாய்க்காலில் தன்னுடைய வாய்க்கால் மண்ணைக்கொட்டும்படி சம்பவித்திருப்பதாகவும் மண்கொட்ட அதைத்தவிர வேறே ஸ்தாநம் இல்லையென்றும் பிரதிவாதி சம்வாதித்தான். அந்தக்கட்சி துர்க்கட்சியென்றும் பிரதிவாதி அவனுடைய வாய்க்காலில் மண்ணைக் கொட்டிக்கொள்ளவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. (௧௮௫௮ ஸூ-நம்-௧௦௬-ப-உ௩௭.)

அப்பீல்-௫௫-வது விதியைப்பார்க்க.

---

## விசாரணைக்கர்த்தன்.

௧. ஜமீன்தாரி முதலான ஸ்திதிகளை மேல்விசாரணைசெய்கிறவன் அந்த ஸ்திதிகளின்மேல் பொறுத்திருக்கிற நியாயமான கடன்களை ஒப்புக்கொண்டு தொகை செலுத்தினால்மட்டும் செல்லுமேதவிரக் காலாதிக் கிரமணதோஷத்தினால் பிடிக்கப்பட்டு ஜீவலயமாய்ப் போன கடன்களுக்காக ஷை விசாரணைக்கர்த்தன் தொகைசெலுத்தி அவைகள் உஜ்ஜீவிக்கும்படிசெய்ய அவனுக்கு அதிகாரம் இல்லை. அவனுடைய அவ்விதமான செய்கையினால் ஷை கடன்களுக்குப் புநர்ஜீவம் உண்டாகமாட்டாது. (௧௮௫௪ ஸூ-நம்-௬௧.)

௨. தருமான வயதில்லாத பாலனுடைய ஸ்வத்தை மேல் விசாரணைசெய்கிறவன் அந்த ஸ்வத்தின் வருமானத்துக்குள்ளடங்கிச் செலவுசெய்யவேண்டும். (௧௮௪௭ ஸூ-நம்-௫௬.)

௩. விசாரணைக்கர்த்தன் பாலனுடைய ஸ்வத்தை விருதாவாய் விநியோகம் செய்தாலும் அல்லது அந்தப்பாலன் வியர்த்தச்செலவு செய்யும்படி விசாரணைக்கர்த்தன் இடங்கொடுத்தாலும், அதுமூல

மாக விசாரணைக்கர்த்தனுக்கு நேரிட்ட செலவு தொகை மறுபடியும் அவனுக்குக் கிடைக்கமாட்டாது. (௧௮௪௭ ௵-நம்-௫௯.)

குடும்பவிசாரணை-௪.............. | சாட்சியம்-௪௯.................

இவைகளைப்பார்க்க.

---

## விசேஷ அப்பீல்.

௧. விவாத நிலம் இநாம் நிலமானதால் அது கோர்ட்டாருடைய அதிகாரத்துக்கு உட்பட்டதல்லவென்று விசேஷ அப்பீல் மநுவில் பிரதிவாதிகள் ஆட்சேபித்தார்கள். அந்த ஆட்சேபணை தாழ்ந்தகோர்ட்டுகளில் சொல்லப்படாதபடியாலும் சவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட்ட இநாம் என்பதை வாதி ஒப்புக்கொள்ளாதபடியாலும் பிரதிவாதிகளின் ஷை ஆட்சேபம் செல்லாதென்று நிக்கிரகிக்கப்பட்டது. (௧௮௫௯ ௵-நம்-௧௯௦-௧௮௬௦ ௵-ப-௪௨.)

௨. ஒருதரம் பாகம் நடந்து ரத்தாய்ப்போனதால் அவிபக்த குடும்பஸ்திதியில் பாகம் கிடைக்கவேண்டுமென்று வாதி செய்த வியாச்சியத்தில் அவன் கேட்டுக்கொள்ளுகிறபடி பூரணபாகம் கிடைக்கத்தக்கதில்லையென்று கீழான கோர்ட்டுகளில் நிர்மாணிக்கப்பட்டபின்பு, ஒருதரம் நடந்து ரத்தாய்ப்போனதாக வாதி பிரியாதிருக்கண்ட பாகவிதாயகப்படி ஸ்திதி கிடைக்கவேண்டுமென்று அவன் விசேஷ அப்பீலில் பேசக்கூடாது. (௧௮௫௬ ௵-நம்-௫௬-௧௮௯௦ ௵-ப-௫௪.)

௩. அசல் அப்பீல்க்கோர்ட்டுகளில் பேசப்படாததும் அந்தக் கோர்ட்டுகளில் கொடுக்கப்பட்ட வியவகாரப்பத்திரிகைகளுக்கு நேர் விரோதமுமான கட்சியை விசேஷ அப்பீலில் சொல்லக்கூடாது. (௧௮௯௦ ௵-நம்-௩௧-௪௦-௫௦-௭௨-ப-௧௨௩-௧௨௩-௧௩௮-௨௦௧.)

௪. வாதி கட்சியை ருஜுப்படுத்தும்படி அசல்க்கோர்ட்டார் அவனுக்குப் பைண்டு கொடுக்கவில்லையென்பதை அவன் அப்பீல்க் கோர்ட்டில் விக்ஞாபிக்கவேண்டும். அப்பீல்க்கோர்ட்டில் அவன் தெரியப்படுத்தத்தப்பிப்போனால் விசேஷ அப்பீலில் ஷை ஆட்சேபணையை வாதி தெரியப்படுத்தக்கூடாது. (௧௮௯௦ ௵-நம்-௩௧-ப-௧௨௩.)

௫. வேறொரு வியாஜியத்தில் தாக்கலாயிருக்கிற தஸ்தாவேஜின் ஆதாரத்தைக்கொண்டு அசல்க்கோர்ட்டார் ஒரு வியாஜியத்தில் தீர்

மானம் செய்திருந்து அதைப்பற்றிப் பிரதிவாதி அப்பீல்க்கோர்ட்டில் ஆட்சேபிக்கத் தப்பிப்போய்விட்டால் அந்த ஆட்சேபனையை விசேஷ அப்பீலில் அங்கீகரிக்கக்கூடாது. (கஅகூ௦௵-௩ம்-௧௦௫-ப-கசக.)

௯. பிரதிவாதிகளில் ஒருவனைப் பாத்தியப்படுத்தாமல் அசல்க்கோர்ட்டார் நீக்கிவிட்டதைப்பற்றி வாதி அப்பீலில் ஆட்சேபிக்கத் தப்பிப்போனால், விசேஷ அப்பீலில் அவன் அந்த ஆட்சேபனையைச் சொல்லக்கூடாது. (கஅகூ௦௵-௩ம்-௧உஎ-ப-ககூ௦.)

| | |
|---|---|
| அபராதம்-உ-அ.................. | செலவு-உஎ.................... |
| அப்பீல்-௩........................ | புநர்விமரிசை-கூ................ |
| கிரயம்-கஉ....................... | வட்டி-க௫...................... |

இவைகளைப்பார்க்க.

---

## விபக்தர்கள்.

| | |
|---|---|
| கடன்-க௫........................ | ஜீவநாம்சம்-உஉ................ |
| கடன் பத்திரம்-௩க.............. | |

இவைகளைப்பார்க்க.

---

## விபாகம்.

பாகத்தைப்பார்க்க.

---

## வியவகாரபாத்திய விக்கிரயதோஷம்.

சாம்பர்ட்டியைப்பார்க்க.

---

## வியாயம்.

பிரியாதைப்பார்க்க.

---

## விவாஹம்.

க. ஒரு சூத்திரன் கல்லியாணம் செய்துகொள்ளுகிற ஸ்திரீயினுடைய மாதா பிதாக்களுக்கு யாதொன்றும் கொடாமல் அவன்

பிராம்மியவிவாஹம் செய்துகொள்ளலாம். (கஅ௫அ ஹ - நம்-கக௯-கஅ௫க௯ஹ-ப-௪௪.)

௨. சூத்திரர்களுக்குள் நடக்கிற விவாஹங்கள் ஆசுரவிவாஹங்கள் அல்லவென்று ஸ்தாபிக்கப்படுகிறவரையில் அவைகள் ஆசுரவிவாஹங்களென்றே ஊஹிக்கப்படவேண்டும். (கஅ௫க௯ஹ-நம்-க௪அ.)

௩. புருஷனுடைய சபிண்டாள் பத்தினிக்கும் சபிண்டாளாயிருக்கிறார்கள். (ஷை.)

௪. முதற்பிரதிவாதியின் மகளை வாதிக்கு விவாஹம்செய்வதாக முதற்பிரதிவாதி வாக்குதத்தம்செய்ததனால் முதற்பிரதிவாதிக்குத் தான் சில பெருமதிகள் கொடுத்ததாகவும் பிற்பாடு முதற்பிரதிவாதி அவனுடையமகளை ௪-ம் பிரதிவாதிக்கு விவாஹம்செய்துவிட்டதால் ஷை பெருமதிகளின் கிரயம்கிடைக்கவேண்டுமென்றும் வாதிவழக்கிட்டான். முகூர்த்ததினத்தில் கல்லியாணவீட்டுக்கு வாதிபோகாமல் இருந்துவிட்டதாகவும் அதனால் ஷை நிச்சிதார்த்தம் தவறிப்போனதாகவும் ருஜுவானதால் வாதிக்கு ஷை தொகை கிடைக்கமாட்டாதென்று தீர்மானிக்கப்பட்டது. (கஅ௬௰ஹ.)

ஹிந்துக்கள்.

அந்நிய மதப்பிரவேசம்-௨...... | குடும்பவிசாரணை-௫.............

இவைகளைப்பார்க்க.

---

முற்றிற்று.